

'முத்தமிழ்க் கலா வித்துவரத்தினம்'

அமரர் அவ்வை சண்முகம் அவர்கள் நினைவாக
மதுரை காமராஜ் பல்கலைக் கழகத்துக்கு
அன்புடன் அளிக்கப்பட்டது.

**27-1-1979**

# ஹோமியோபதி
# சிகிச்சைக் களஞ்சியம்

(முதற் பாகம் — உறுப்பியல்)





ஆசிரியர்
டாக்டர் V. R. மூர்த்தி





இந்தியன் ஹோமியோபதி இன்ஸ்டிடியூட்
கும்பகோணம் மதராஸ்



[விலை ரூ. 10.

# முகவுரை

நமது தேசத்தில் ஹோமியோபதி வைத்திய முறை நாளுக்குநாள் விருத்தியடைந்துகொண்டு வருகிறது. முக்கிய மாக நமது தமிழ் நாட்டில் சென்ற 20 வருடங்களாக இவ் வைத்தியமுறை நகரங்களில் மாத்திரமின்றி, நாட்டுப்புறங் களிலுள்ள மூலை முடுக்குகளுக்கும் பரவி விட்டதென்றே சொல்லலாம். இவ் வைத்திய முறையின் நன்மைகளை நகரங் களிலுள்ளவர்களைவிட நாட்டுப்புறங்களிலுள்ளவர்களே இன்று நன்கு அறிந்திருக்கின்றனர். நகர மக்களுக்குப் பற்பல வைத்திய முறையிலுள்ள வைத்திய வசதிகள் கிடைக்கின்றன. ஆனால் நாட்டுப்புறங்களிலோ இன்று வேறு வைத்திய முறை களைக் கையாளுபவர்கள் மிகவும் குறைவாகவே உள்ளனர் என்னும் காரணத்தால், அனேகர் இவ்வைத்திய முறைகளைக் கற்று, அங்கு தொண்டாற்றி வருகின்றனர். இவ்வாறு நமது கிராம மக்களுக்கு ஹோமியோபதித் தொண்டாற்றி வரும் அனேகர் தமிழிலேயே இவ்வைத்திய முறையைக் கற்றவர் களாவர். இவர்களில் பலரின் ஆங்கில அறிவு மிகச் சொற்பமே.

இவ்வாறு தொழில் நடத்திவரும் வைத்திய அன்பர் களுக்கு உபயோகமாக இருக்கும்பொருட்டு சுமார் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன் நம்மால் ஒரு "ஹோமியோபதி மெட்டீரியா மெடிகா" இரண்டு பாகங்களில் வெளியிடப் பட்டு, இன்று அந்த நூலின் மூன்று பதிப்புக்கள் செலவழிந்து விட்டன. இதுவே நம் தமிழ் நாட்டில் ஹோமியோபதிக்கு எவ்வளவு ஆதரவு இருக்கிறது என்பதற்கும், அவசியம் இருக்கிறது என்பதற்கும் தகுந்த அத்தாக்ஷியாகும். 'மெட்டீரியா மெடிகா' என்பது ஔஷத குண பாடமாகும். இதில் ஒவ் வொரு ஔஷதத்தின் முக்கிய குணங் குறிகள் தெளிவாகத் தெரிவிக்கப்படுகின்றன. 'மெட்டீரியா மெடிகா'வின் ஞானம் ஒரு வைத்தியருக்கு இன்றியமையாததே ஆகும். இந்த அடிப்

படை அறிவு இல்லாமல் ஒருவர் வைத்தியத்தைக் கையாள முடியாது. ஆனால் அவசரமான சமயங்களில் ஒரு குறிப்பிட்ட வியாதியஸ்தருக்கு உள்ள குறிகளைக் கொண்டு, உடனே மெட்டீரியா மெடிகாவின் உதவியால் ஒரு ஔஷதத்தைக் கண்டுபிடித்துவிட முடியாது. இதற்கு அந்த மெட்டீரியா மெடிகாவிற்கு ஒரு 'அகராதி' தேவை. இந்த எங்கள் தற்சமய முயற்சி, 'ஹோமியோபதி மெட்டீரியா மெடிக்கா'விற்கு ஒரு அகராதியாகவே தயார் செய்யப்பட்டிருக்கிறது. இவ்வாறு தயார் செய்யப்பட்டிருக்கும் நூலில் இது முதற் பாகமாகிய 'உறுப்பியல்' ஆகும். இப்பாகத்தில் ஒவ்வொரு சரீர உறுப்பையும் எடுத்துக்கொண்டு, அவைகளில் ஏற்படும் குறிகளில் எந்தெந்த ஔஷதங்கள் எவ்வாறு வேலை செய்கின்றன வென்பதைக் குறிப்பிடப்பட்டிருக்கின்றது. ஆகவே வியாதியஸ்தனின் முக்கிய உபாதி சரீரத்தின் எந்தப் பாகத்தில் இருக்கிறதென்பதை ஆதாரமாகக்கொண்டு, அந்தத் தலைப்பில் உள்ள ஔஷதங்களில் எது மற்றக் குறிகளுக்கும் ஒத்ததாக இருக்கிறது என்பதையும் கொண்டு ஔஷதத்தை நிர்ணயம் செய்வதில் இந்நூல் உபயோகமாக இருக்கும் என்பதே எமது நம்பிக்கை. இந்த நூலின் இரண்டாவது பாகத்தில் உபாதிகளை ஆதாரமாகக்கொண்டு. இவ்வாறே அவைகளில் உபயோகமாக இருக்கும் ஔஷதங்களைக் குறிப்பிடப்படுகிறது.

இப்புத்தகத்தைத் தயார் செய்ய ஆரம்பிக்கும் காலையில் இந்த முதற்பாகம் மாத்திரமே இவ்வளவு பெரியதாக ஆகிவிடும் என்று நாமே எதிர்பார்க்கவில்லை. ஆனால், இது உண்மையிலேயே உபயோககரமாக இருக்க வேண்டுமாயின், இதில் தற்சமயம் சேர்க்கப்பட்டிருக்கும் விஷயங்களில் யாதொரு பகுதியையும் குறைக்க முடியாது என்பது எங்கள் அபிப்பிராயம். ஆகவேதான் இது "ஹோமியோபதி சிகிச்சை களஞ்சியம்" ஆகிறது.

இப்புத்தகத்தில் ஆங்காங்கு சிற்சில தவறுகள் இருக்கக்கூடும். எங்களுக்குத் தெரிந்த அளவில் அவைகளை அடுத்த பதிப்பில் திருத்தி வைக்கிறோம். இதைக்கண்ணுறும் அன்பர்

கள், தவறுகள் ஏதாவது இருப்பதாக எங்களுக்கு அறிவித்தாலும் அவைகளை நன்றியறிதலுடன் ஏற்றுத் திருத்திக் கொள்ளுகிறோம். தமிழ்நாட்டு ஹோமியோபதியர்களுக்குப் பெரிதும் உபயோககரமாக இருக்குமென்னும் நோக்கத்துடனேயே இப்புத்தகத்தை வெளியிட முன் வந்தோம். இப் புத்தகத்திற்கும், எங்கள் 'மெட்டீரியா மெடிகா'விற்கு அளித்த வரவேற்பை அளித்துத் தமிழ் நாட்டு ஹோமியோபதியர்கள் எங்களை இம்மாதிரியான முயற்சியில் மேலும் மேலும் ஊக்குவிப்பார்கள் என நம்புகிறோம்.

இப்புத்தகம் தயாரிப்பதில் நமக்கு மிகவும் உதவியாக இருந்தவர் குணமங்கலம் டாக்டர் N. R. தக்ஷிணாமூர்த்தி அவர்கள். அன்னவருக்கும் நாம் மிகவும் கடமைப்பட்டிருக்கிறோம்.

கும்பகோணம்
*1—10—1953*

V. R. மூர்த்தி



# ஹோமியோபதி சிகிச்சைக் களஞ்சியம்

## முதற்பாகம் — உறுப்பியல்

---

## இந்நூலில் விவரிக்கப்பட்டுள்ள ஔடதங்களின்

# அட்டவணை

---

எக்விஸிடம்
எதூஸா ஸைஞபியம்
எரிகரான்
ஐயோடியம்
ஐரிஸ் வர்ஸிகொலர்
ஒலியாண்டர்
ஓனோஸ்மோடியம்
ஓபியம்
ஓஸிமம் ஸாங்டம்
கந்தாரிஸ்
கம்போகியா
கல்கேரியா அஸடிகா
,, ஆர்ஸனிக்
,, ஐயோடைட்
,, கார்பானிகா
,, பாஸ்பாரிகா
,, ப்ளோரிகா
,, ஸல்ப்யூரிகா
,, ஹைபோபாஸ்
கன்வலேரியா
கன்னபிஸ் இண்டிகா
,, ஸடீவா
காக்குலஸ்
காக்டஸ் க்ராண்டிப்ளோரஸ்
காட்மியம் ஸல்ப்
காபியா க்ரூடா
காப்ஸிகம்
காமொமில்லா (சாமொமில்லா)
காம்பொரா
கார்டூஸ் மரியேனஸ்
கார்பன் ஸல்ப்
கார்போ அனிமாலிஸ்
கார்போ வெஜிடாபிலிஸ்
காலண்டுலா
காலாடியம்
காலின்ஸோனியா
காலீ ஆர்ஸனிகம்
,, ஐயோடேடம்
,, கார்பானிகம்
,, க்ளோரிகம்
,, நைட்ரிகம்
,, பாஸ்பாரிகம்
,, பைக்குரோமிகம்
,, ப்ரொமேடம்
,, மூரியாடிகம்
,, ஸல்ப்யூரிகம்
கலோட்ரோபிஸ்
கலோபில்லம்
காலோஸிந்திஸ்
கால்மியா
காஸிபியம்
காஸ்டிகம்
குப்ரம் ஆர்ஸனிகம்
,, மெடாலிகம்
குர்ச்சி
கொரல்லியம் ருப்ரம்
கோக்கஸ் காக்டி
கோபைவா
கோல்சிகம்
கோனியம்
க்ராபைடிஸ்
க்ரிடேஜஸ்
க்ரிண்டிலியா ரோபஸ்டா
க்ரிஸோட்
க்ரோகஸ் ஸடீவா
க்ரோடன் டிக்லியம்
க்ரோடேலஸ் ஹாரிடஸ்
க்வாய்கம்

க்ளமேடிஸ் எரெக்டா
க்ளோனுயின்
சிமாபிலா
சின்னினம் ஆர்ஸனிகம்
சின்னினம் ஸல்ப்யூரிகம்
செலிடோனியம் (கெலி
டோனியம்)
செனபோடியம்
சைனு
டபாகம்
டயஸ்கோரியா
டல்கமாரா
டாரண்டுலா ஹிஸ்பானியா
,, குபான்ஸிஸ்
டிஜிடாலிஸ்
டுக்ரியம்
டெல்லூரியம்
ட்யூபர் குலினம்
ட்ரில்லியம்
டிரொஸிரா
தராக்ஸகம்
தலப்ஸி புர்ஸா பெஸ்டோரிஸ்
தாலியம்
தூஜா
தெரிடியன்
தெரிபிந்த்
நக்ஸ் மாஸ்சாடா
நக்ஸ் வாமிகா
நாப்தலேன்
நாஜா த்ருபூடியன்ஸ்
நேட்ரம் ஆர்ஸனிகம்
,, கார்பானிகம்
,, பாஸ்பாரிகம்
,, மூரியாடிகம்
நேட்ரம் ஸல்ப்யூரிகம்
,, ஸாலிஸிலிகம்
நைக்டாந்தஸ்
பரீராப்ரவா
பல்லாடியம்
பல்ஸடில்லா
பாடியாகா
பாப்டீஷியா
பாரிடா கார்ப்
,, மூரியாடிகா
பாரிஸ் க்வாட்ரி போலியா
பாஸிலினம்
பாஸிப்ளோரா இன்கார்நேடா
பாஸ்பரஸ்
பிஸ்மத்
புபோ
பெட்ரோலியம்
பெட்ரோஸெலினம்
பெர்பெரீஸ் அக்யூபோலியம்
,, வல்கேரிஸ்
பெர்ரம் ஐயோடேட்டம்
,, பாஸ்பாரிகம்
,, பிக்ரிகம்
,, மெடாலிகம்
பெல்லடொன்னு
பெல்லாண்ட்ரியம்
பேயோனியா
பைடொலக்கா
பைரோஜீனியம்
போடோபில்லம்
போரக்ஸ்
போவிஸ்டா
பிரையோனியா
ப்ரோமியம்

ப்ளமபம்

ப்ளாடா ஓரியண்டாலிஸ்

ப்ளாட்டினு

பிளாண்டாகோ

மங்கானம்

மில்லிபோலியம்

மூரக்ஸ்

மெக்னீஷியா கார்பானிகா

,, பாஸ்பாரிகா

,, மூரியாடிகா

,, ஸல்ப்யூரிகம்

மெடோரினம்

மெபைடிஸ்

மெர்க்கூரியஸ் ஐயோடேடஸ்

ப்ளேவஸ்

,, ,, ரூபர்

,, கரோஸிவஸ்

,, டல்ஸிஸ்

,, ஸல்பேட்

,, சொலுபுலீஸ்

மெலிலோடஸ்

மெஸிரியம்

மேனியாந்தஸ்

மைகேல்

மைரிகா

மைர்டஸ் கம்யூனிஸ்

மோஸ்சஸ்

யூபடோரியம் பர்பூரியம்

யூபடோரியம் பர்போலியேடம்

யூபரேஷியா

யூரேனியம் நைட்ரிகம்

யூர்டிகா யூரன்ஸ்

யூவா உர்ஸி

யூஸ்டிலாகோ

ரடானியா

ரஸ் டாக்ஸிகோடண்ட்ரன்

ராபேனஸ்

ரானங்குலஸ்

ரிஸினஸ்

ரீயம்

ரூடா

ரூமக்ஸ் க்ரிஸ்பஸ்

ரோடோடெண்ட்ரன்

ரோபினு

ரோஹிடாக்

லாக்கானினம்

லாக்கெஸிஸ் (லாச்சஸிஸ்)

லாக் டிப்ளோரேடம்

லாக் பெல்

லாபிஸ் ஆல்பஸ்

லாரோஸிராஸஸ்

லிதியம் கார்ப்

லில்லியம் டிக்ரினம்

லெப்டாண்டிரா

லேடம் பாலஸ்திரி

லைகோபஸ் வர்ஜினியா

லைகொபோடியம்

லொபீலியா இன்ப்ளேட்டா

வலேரியானு

வாரியோலினம்

வெராட்ரம் ஆல்பம்

வெராட்ரம் விரைட்

வைதியா

வைபுர்னம் ஓபுலஸ்

ஜட்ரோபா

ஜலபா

ஜஸ்டிஷியா ஆடாதொடா

ஜெல்ஸிமியம்

ஸபடில்லா
ஸபீனு
ஸரகா இண்டிகா
ஸரஸபரில்லா
ஸல்பர்
ஸாங்வினேரியா
,, நைட்ரிகா
ஸாம்புகஸ்
ஸானிகுலா
ஸிகூடா விரோஸா
ஸிங்கம் பாஸ்
,, பிக்ரேட்
,, மெடாலிகம்
,, வெலீரினு
,, ஸல்ப்
ஸிஞ்ஜிபர்
ஸிபிலினம்
ஸிம்பைடம்
ஸிலிகா
ஸினேபிஸ் நைக்ரா
ஸிஸ்டஸ்
ஸீகேல் கார்நூட்டம்
ஸீட்ரான்
ஸீமெக்ஸ்
ஸீயனோதஸ் அமெரிகேனஸ்
ஸீனு
ஸெபீயா
ஸெலீனியம்
ஸெனகா
ஸெனஸியா
ஸைக்ளமென்
ஸைஸிஜியம் ஜம்போலனம்
ஸோரினம்
ஸோலிடாகோ
ஸ்க்வில்லா
ஸ்டாபிஸாக்ரியா
ஸ்டானம்
ஸ்டிக்டா
ஸ்டில்லிங்கியா
ஸ்ட்ரமோனியம்
ஸ்ட்ரோண்டியா கார்ப்
ஸ்ட்ரோபாந்தஸ்
ஸ்பாஞ்ஜியா
ஸ்பைஜீலியா
ஹமாமலிஸ்
ஹயாஸ்யாமஸ்
ஹீபர் ஸல்பர்
ஹெலோனியாஸ்
ஹைட்ராஸ்டிஸ்
ஹைட்ரோகொடைல் ஏஷ்யாடிகா
ஹைபெரிகம்

# ஹோமியோபதி சிகிச்சைக் களஞ்சியம்

## மனம்

**அகேரிகஸ் :** தப்பாக எழுதுதல், கோபம், இரவில் அதிக உற்சாகம், பகலில் மனச்சோர்வு. காலத்திற்கேற்ற வார்த்தைகள் சொல்வதற்கு முடியாமையும், ஞாபக மின்மையும். கேட்ட கேள்விகளுக்குப் பதில் சொல்லாமல் எப்போதும் பேசிக்கொண்டும், பாடிக்கொண்டும் இருத்தல், மயக்கம், சரீரக் களைப்பு, பாட்டுகளைப் புதிதாகப் பாடுதல். அதிகப் படிப்பு, மன உழைப்பால் ஏற்படும் உபாதிகள், படுக்கையை விட்டு எழுந்திருத்தல், தவறான வார்த்தைகளை உபயோகித்தல், எந்தக் காரியத்திலும் அலக்ஷ்யம், அகங்காரம், பிடிவாதம், தன்னிச்சைப்படி நடத்தல்.

**அகோனைட் :** சந்தோஷமும் துக்கமும் மாறிமாறி வருதல். பேய், பிசாசு, மரணம், பைத்தியம் பிடித்தல் இவைகளைப் பற்றிய பயம். மரணக்காலத்தைக் குறிப்பிடல், அமைதியும் பொறுமையும் இன்மை, புலம்பல், சிறு விஷயங்களுக்கும் பிறரைக் கோபித்தல்.

**அக்டியா ரஸிமோஸா :** மனக் கலக்கம், மன நிலைமையும் சரீர நிலைமையும் மாறி மாறி வருதல். கேட்டால் பதில் சொல்லாமை, வாயாடித்தனம், வருத்தம், மனநோய், அழுவது போலிருத்தல். மன வெழுச்சியால் உபாதி அதிகப்படல், சந்தேகம், அமைதி இன்மை, முனகுதல், பேச்சில் விஷயங்கள் மாறுதல், ஒரு இடத்தில் உட்கார முடியாமை, உட்கார்ந்தால் மூர்க்க குணம்.

**அக்டியா ஸ்பைகாடா :** கடுமையான மயக்கம்.

**அக்னஸ் காஸ்டஸ் :** மெய்மறதி, மரணக்காலம் குறுகியதாக பயம், தூக்கிட்டுக் கொள்ள நினைத்தல், கவலை, கோபம், ஞாபகம் இழத்தல், துக்கம், பயம்.

**அபீஸ் கனடேன்ஸிஸ் ;** கோபம், வெடுவெடுப்பு.

**அபிஸ் நைக்ரா:** உற்சாகமின்மை.

**அபிஸ் மெல்லிபிகா:** கவலை, பிரக்ஞை இன்மை, அழுகை, சந்தோஷத் தோற்றம். போர்வையை எறிதல், திடீரென்று அலறுதல் (வீறிட்டு), கைகளைத் தலைக்குக் கொண்டு செல்லுதல்; பற்களை நறநற வென்று கடித்தல் )

**அபிஸிந்தியம்:** முட்டாள்தனம், மறதி, பைத்தியம், பிறர் தன்னைத் தந்திரமாகக் கொன்றுவிடுவார்கள் என்று பயம், பிரக்ஞை இல்லாத இழுப்பு.

**அபொஸினம் கனுபினம்:** மனத்தடுமாற்றம், சோர்வு, வருத்தம் எப்போதும் அழுதுகொண்டே இருத்தல், அழுவதைத் தவிர தான் வேறொன்றும் செய்யமுடியாது போல் எண்ணுதல்.

**அப்ரோடேனம்:** சோர்வு, வெடுவெடுப்பு, கவலை, குழந்தைகளுக்கு முரண்டு பிடிக்கும் சுபாவம்.

**அமோனியம் கார்ப்:** பிறரைக் காணவும் வெறுப்பு, ஏக்கம், அழுகை, கோபம், மயக்கம் தரும் வலிப்பு, ஹிஸ்டீரியா, அசைவால் களைப்பு, மூடிய அறைகளில் உபாதிகள் அதிகரித்தல், பேசுதலிலும் எழுதுதலிலும் தவறுதல். மறதி. வேலை செய்வதில் வெறுப்பு. அசைய முடியாமை, அசைந்தால் உபாதி அதிகம். மனச்சோர்வு, குளிர்ந்த உணர்ச்சி, வருத்தம்.

**அமோனியம் மூரியாடிகம்:** பேசாதிருத்தல், கதறுதல், பயம், மனக் கவலை, கோபம், மனதிற்குள் வருத்தப்படுதல்.

**அம்ப்ரா க்ரீஸீயா:** ஞாபகமின்மை, விஷயத்தை மாறி மாறிப் பேசுதல். கேட்ட கேள்விக்கு விடையை எதிர்பார்க்காமல் மற்றொரு கேள்வி கேட்டல், படிப்பது மனதில் பதியாமை, பலமுறை படித்தால்தான் விஷயம் மனதில் பதிதல். கனவிலிருப்பது போலிருத்தல், மனச்சோர்வு, ஏக்கம், வயோதிக காலம், கிழவன் போல் கோபம், உற்சாகக் குறைவு, தூக்கமின்மை, ஓயாமல் பேசுங்குணம், பழைய தீய விஷயங்களை இரவில் நினைத்தல், புத்தி மாறுட்டம் வந்துவிடும் என்ற பயம், காலையில் புது விஷயங்களைக் கிரகிக்கவும் யோசனை செய்யவும் கஷ்டப்படுதல். தனியாக

இருப்பதில் பிரியம், பிறருடன் பேசுவதாலும், பிறர் தன் முன் இருப்பதனுலும் உபாதிகள் அதிகமாதல். பிறரெதிரில் மலப்ரவர்த்தி செய்ய முடியாமை, பைத்தியம் பிடித்துவிடும் என்ற பயம்.

**அயிலாந்தஸ்:** ஞாபகம் இழத்தல், நடந்த காரியங்களை மறந்துவிடுதல். படிப்படியாக வரும் மயக்கம், அடிக்கடி பிதற்றலுடன் மயக்கம், தூக்கமின்மை, அமைதியின்மை, கனவில் இருப்பதுபோலிருத்தல், விருப்பு வெறுப்பற்ற அலக்ஷ்ய குணம். பிறர் பேசுவதை அறிந்துகொள்ள முடியாமை, கவலை.

**அர்ஜண்டம் நைட்ரிகம்:** ஞாபக சக்தியை இழத்தல். மூடத்தனமான காரியங்களைச் செய்தல். பகுத்தறியும் உணர்ச்சி குறைதல். சமயங்களுக்குத் தக்கவார்த்தை ஞாபகத்திற்கு வராமை. காலம் மிகவும் மெதுவாகச் செல்லல். அடிக்கடி நடையை வேகப்படுத்தி நடத்தல். சீக்கிரத்தில் கோபம் வருதல். கோபமாயிருக்கும்போது இருமல். தலையிலும் மார்பிலும் பிடிப்பு வலி. அறையின் ஜன்னல் வழியாக வெளியே குதிக்க வேண்டும் என்ற மனத்தூண்டுதல். ஒவ்வொரு நாள் கழிவதும் யுகம்போல் தோன்றுதல். எப்போதும் அவசரம்; வெளியூர், கோயில், கூட்டங்கள் முதலியவைகளுக்குப் போகத் தயாராக இருக்கும்போது வயிற்றுப் போக்கு உண்டாதல். (நினைப்பு, பேசுதல், பயம் இவைகளையும் பார்க்கவும்.)

**அர்ஜண்டம் மெடாலிகம்:** சரீரத் தளர்ச்சி. ஞாபக சக்தி, பகுத்தறிவு அழிதல். (பேசுதலில் பார்க்கவும்.)

**அலுமின:** (பேசுதல், நினைத்தல், பயம் இவைகளிலும் பார்க்கவும்.) எப்போதும் அவசரப்படுதல். பொழுது மெதுவாகச் செல்வதுபோல் தோன்றுதல், ஏக்கம், தன் விருப்பதற்கு விரோதமாகவே கதறுதல், முனகுதல், தூங்கியெழுந்தவுடன் மனக்குறிகள் அதிகமாதல்:

**அல்லியம் ஸீபா:** கவலை.

**அவின ஸடீவா:** ஒரே தொழிலைக் கடைப்பிடிப்பதால் மனக் கவலை.

**அஸபோட்டிடா:** கவலை, கோபம் வருதல், வருத்தம், சங்கா தோஷ சம்பந்தமாக அடிக்கடி மயக்கம்.

**அஸ்குலஸ்ஹிபோகாஸ்டானம் :** உற்சாகக் குறைவு, ஒரே விஷயத்தில் கவனம் செலுத்த இயலாமை, மனத்தடுமாற்றம், கோபம் வரும் குணம்.

**அனகார்டியம் ஓரியண்டேல் :** ஞாபக சக்தியை இழத்தல், குரூர மனம், தனக்கு இரு மனதுகள் இருப்பதாகவும் ஒன்று அவனை வெளியே போகச்சொல்லிக் கொண்டும், மற்றொன்று தடுத்துக்கொண்டும் இருக்கும் உணர்ச்சி; அல்லது சரீரத்தில் ஒரு பாகத்தில் சுற்றிலும் நாடா போட்டிருப்பது போல் தோன்றுதல். நடந்த சமாசாரங்களை ஞாபகத்துக்குக் கொண்டுவர மிகவும் சிரமப்படுதல், பகுத்தறிவுக்கும் தன் எண்ணத்துக்கும் நேர் விரோதம். மிகவும் சந்தேகம். (விருப்பு, வெறுப்பு, நினைப்பு, உணர்ச்சியில் பார்க்க.)

**ஆண்டிமோனியம் க்ரூடம் :** டைபாய்டு ஜுரத்தில் தன் உயிரின் மேல் வெறுப்பு வருதல். விவரிக்க முடியாத வருத்தம், சந்திர வெளிச்சத்தில் குதூகல உணர்ச்சி, அதிக காம இச்சை, (குழந்தைகளின் மனம் : குளிர்ந்த தண்ணீரில் குளித்தால் அழுதல், கோபம், வெடுவெடுப்பு, பிறர் தன்னைத் தொடுவதோ உற்றுப் பார்ப்பதோ சகிக்காமை, ஒருவருடனும் பேசாமை.)

**ஆண்டிமோனியம் டார்ட்டாரிகம் :** பிறர் தன்னைத் தொடுவது, பேசுவது, பார்ப்பதில் வெறுப்பு, பிறர் தன்னைப் பார்த்தால் சிணுங்குதல், கதறுதல், சந்தோஷமின்மை, பயம், சந்தேகம், அமைதியின்மை, தான் தனியாக விருக்கும் போது பயம், மாலை நேரங்களில் சந்தோஷமாக இருத்தல்.

**ஆரம் ட்ரிபில்லம் :** மெதுவாக முனகுதல், மயக்கம், மூக்கை நோண்டுதல், உதடுகளைப் பிடித்திழுத்தல், டைபாய்டு ஜுரத்தில் கூக்குரலிடுதலும், மூக்கு, தொண்டை, வாய் குறிகளிருத்தலும்.

**ஆரம் ம்யூரியாடிகம் :** மனக் கிளர்ச்சி அல்லது தளர்ச்சி; வேலை செய்ய வெறுப்பு, தன் உயிரில் வெறுப்பு, தூக்கிட்டுச் சாகலாம் என்ற எண்ணம்; சோம்பல், தூக்கம், அழுதல், கெட்ட காலம் நேரிடப்போவதென்று பயப்படுதல். ஞாபக சக்தி பலவீனம்.

**ஆரம் மெடாலிகம் :** தூக்கிட்டுக் கொள்ளும் மனோநிலை, ஞாபகக் குறைவு, மனப்பைத்தியம், பயம், கவலை, வருத்தம், அழுதல்

தன்னைத்தானே நிந்தித்துக் கொள்ளுதல், பழித்தல், அதிக வலியால் ஜன்னல் வழியாக வெளியே குதித்து விடுதல். ஒரு சமயம் சந்தோஷமாகவும் மறுசமயம் கோபமாகவும் மாறிக்கொண்டே இருக்கும் குணம்; அதிகக் கோபம், அற்ப விஷயங்களிலும் கவலை, சண்டை போடுதல், கல்யாண விஷயங்களில் ஏமாற்றம், பிறர் தன்னை எதிர்த்துப் பேசியதால் கோபம்; அதனால் ஏற்படும் உபாதிகள், மனக்கிளர்ச்சி, மாலையில் உயிருடனிருப்பதில் வெறுப்பு.

**ஆர்சனிகம் ஆல்பம்:** குழப்பம் அமைதியின்மை, (நினைப்பில் பார்க்க) படுக்கைத் துணிகளைப் பிடித்திழுத்தல், பயம், உன்மத்தம் அதிக விசாரம், கவலை எப்போதும் வருத்தமாகவும் கண்ணீர்விட்டுக்கொண்டும் இருத்தல். பலமாக முனகுதல்.

**ஆர்னிகா:** (பிரக்ஞை, பயத்தில் பார்க்க) இரவில் உற்சாக மின்மை, பகலில் கருப்பைக் குறிகள், எங்கும் இசிவு, படுக்கை கடினமாக இருத்தல். பிரக்ஞையற்ற மயக்கத்தில் கேள்விக்குப் பதில் கொடுத்தல். பிறர் தன்னைத் தொட்டு விடுவார்களோ என்ற பயம்.

**ஆலோ சொகோட்ரினா:** இடம் விட்டு இடம் அசைவதற்கு மனமின்மை, உயிருடனிருப்பது பெரும் சுமையாகத் தோன்றல், பிறரிடம் வெறுப்பு, கவலை, கோபகுணம், தான் இன்னும் ஒரு வாரத்துக்குள் இறந்து போவோம் என்று நினைத்தல்.

**ஆஸிட் அஸடிக்:** மயக்கமும் சித்தப்ரமையும் மாறிமாறி வருதல், மூளைக்கலக்கம், பிடிவாத மலச்சிக்கலுடன் அடிவயிறு வீங்குதல். இவைகளுடன் கடுமையான சித்தப்ரமை, மந்த குணம், வருத்தம், கவலை, குழந்தைகளின் தேக அசௌக்யத்திற்காக வருந்துதல், தன்னுடைய குழந்தைகளை அடையாளம் கண்டுகொள்ள இயலாமை, சீக்கிரத்தில் கோபம்.

**ஆஸிட் ஆக்ஸாலிக்:** ஒரு விஷயத்திலும் கவனம் செலுத்த இயலாமை, ஒருவருடனும் பேசாமல் மந்தமாக இருத்தல்.

**ஆஸிட் நைட்ரிக்:** அற்ப விஷயங்கட்கும் மனமுடைந்து விடுதல் பலவீன ஞாபகம், மனஉழைப்பு ஒத்துக்கொள்ளாமை,

வாழ்க்கையில் வெறுப்பு, வருத்தம், பிடிவாதம், தனக்குச் சௌகரியம் ஆகாதென்ற எண்ணம், கவலை, கோபம், தான் செய்த தவறுக்கும் கோபம் ஏற்படுதல். (பயத்தில் பார்க்க) மனக்குறிகள் வண்டியில் பிரயாணம் செய்த பின் சமனப்பட்டிருத்தல்.

**ஆஸிட் பாஸ்பாரிகம் :** மயக்கம், சோர்வு, தன்னைக் கிள்ளினாலும் அதைப் பொருட்படுத்தாமை, ஞாபக மறதி, பெயர்களையும் மறந்து விடுதல். காலைகளில் ஒன்றுமே யோசனை செய்யமுடிவதில்லை. கேட்பதற்குப் பதில் சொல்ல இஷ்டப் படுவதில்லை. பிறர் தன்னிடம் பேசுவதே பிடிப்பதில்லை. இஷ்டமில்லாமல் பதில் சொல்லுதல், மனவருத்தம், கஷ்டம், காதல் பலியாமை; முதலியவைகளால் ஏற்பட்ட கோளாறுகள்.

**ஆஸிட் பிக்ரிக் :** படிக்க, வேலை செய்ய, முடியாமை. வேலை செய்ய இஷ்டமின்மை, மந்த குணம், ஒரே இடத்தில் அசையாமல் உட்கார்ந்திருத்தல். புத்தியை உபயோகிக்க முடியாமை.

**ஆஸிட் பென்ஸாயிக் :** பழைய காலத்தில் ஏற்பட்ட மனச் சந்துஷ்டியற்ற விஷயங்களையே நினைத்துக் கொண்டிருத்தல்- எழுதிக்கொண்டிருக்கும்போது நடுவில் வார்த்தைகளை விட்டுவிடுதல், உற்சாகக் குறைவு.

**ஆஸிட் ப்ளுவாரிக் :** அதிக உழைப்பால் களைப்பு, அசதி, ஏற்கனவே அதிக அன்பு பூண்டிருந்தவர்களிடம் அதிக வெறுப்பு, புதிய மனிதர்களிடம் விசுவாசம்: பேசப் பிரியம், அதிக மனசந்துஷ்டி.

**ஆஸிட் முரியாடிகம் :** பிரக்ஞை இன்மை, சத்தத்துடன் முனகல்.

**ஆஸிட் ஸல்பியூரிக் :** முரட்டுத்தனம், பொறுமையின்மை, எதையும் அவசரமாகச் செய்தல், கேள்விகளுக்குப் பதில் சொல்வதில் வெறுப்பு.

**இக்னேஷியா :** ஞாபகக் குறைவு, பிறரைக் கேள்விகள் கேட்டுவிட்டு பதில் எதிர்பாராமலேயே சென்று விடுதல். தனியாக இருக்கப் பிரியம், அடிக்கடி மாறிக்கொண்டே இருக்கும் குணம். ஒரு சமயம் கேலி செய்து கொண்டும் சிரித்துக்கொண்டுமிருத்தல். திடீரென்று வருத்தம்

கண்ணீர்விட்டு அழுதல், அதிகவருத்தம், மனம் விட்டுப் பேசாமை, தான் பிரியம் வைத்திருக்கும் மனிதர்கள் இறந்துவிட்டதால் அதிக சோகத்தை அடைதல், குழந்தைகளை கண்டிப்பதால் ஏற்படும் வலிப்புகள், சோகத்தால் ஏற்பட்ட உபாதிகள் தனக்குள்ளேயே வருத்தத்தை அடக்கிக் கொள்ளல், கெட்ட சமாசாரம் வந்ததும் மனமுடைந்து போதல், பெருமை, நிறைவேருத காதல், அதியுணர்ச்சி, பொறுமையின்மை, சண்டை போடும் குணம், கோபம், வெகு சுலபமாகப் பயப்படுதல், பிறர் எதிர்த்துப் பேசினல் சகிக்கமுடியாமை.

**இபிகாக்உன:** கோபம், பொறுமையின்மை, சப்தம் சகிக்க முடியாமை.

**எதூஸா ஸைனுபியம்:** புத்திமாருட்டம், மயக்கமாகப் படுத்திருத்தல், அகன்ற கருமணிகள், குத்திட்ட கண்கள் மனக் குழப்பம், அதிகக் கவலை, வலி.

**ஐயோடியம்:** அமைதியின்மை, இரவு பகல் ஓயாமல் அசைந்து கொண்டும் நடந்துகொண்டுமிருத்தல். கொலை செய்யவும் துணியும் மனக் கோளாறு. அதிக சோகம், உற்சாகக் குறைவு, வாத ரோகத்தில் யார் அருகில் வந்தாலும் பயப்படுதல், உடம்பை ஒடுக்கிக்கொள்ளுதல்.

**ஓலியாண்டர்:** ஞாபக சக்திக் குறைவு, கவனக் குறைவு, விஷயங்களைச் சீக்கிரம் கிரஹிக்க இயலாமை, சிரமப்பட்டுக் கிரஹித்தல். பிறர் தன்னை எதிர்த்துப் பேசுவதை விரும்பாமை. படிக்கும்போது குழப்பம்.

**ஓபியம்.** பிரக்ஞை இன்மை, இளைப்பு, நடுக்கம், முனகுதல், உஷ்ணத்தால் அதிகமாதல். ஆழ்ந்த மயக்கம் (பார்வையில் பார்க்கவும்) மயக்கத்தில் பிதற்றல்கள், சாவு நெருங்கியதாக பயம், அதிக சந்தோஷம், பயம் முதலியவைகளால் ஏற்பட்ட உபாதிகள். ஒளி, ஒலி, வாசனையில் அதியுணர்ச்சி அல்லது உணர்ச்சியின்மை. மந்த குணம் உணர்ச்சி மாருட்டம், கவலையுடன் கூடிய சுவாசத்துடன் துணிமூட்டைபோல் உட்கார்ந்துவிடல்.

**சுந்தாரிஸ்:** திடீரென்று பிரக்ஞை இழத்தல், சிவந்த முகம், மனக் கலக்கம், எண்ணத்தை ஒரே இடத்தில் நிலைநிறுத்த

இயலாமை, உரக்கமான மயக்கம், கடும் சினம் ஏற்படுதல், காம விகாரம், காமாந்தகாரமான பாட்டுக்களைப் பாடுதல், மும்முரமான கோபம். அடித்தல், அழுதல், குரைத்தல், இக்குறிகள் பிரகாச வஸ்துக்களைப் பார்க்கும்போதும் நெஞ்சைத் தொடும்போதும் தண்ணீர் குடிக்க எத்தனிக்கும்போதும் திரும்பிவருதல். பிற்பகலில் இறுமாப்பான குணமும் அதற்கு நேரிடையான பணிவான குணமும் மாறி வருதல். தண்ணீர், திரவ பதார்த்தங்கள், பளபளப்பான வஸ்துக்களைக் கண்டாலும் பயம், கடுமையான புணர்ச்சி இச்சையுடன் கூடிய பைத்தியக் கோளாறுகள்.

**கல்கேரியா ஆர்சனிக்:** மன சரீர பலவீனம், மாலையில் கவலை கோபம், ஏக்கம், பிறர் தனக்குத் துணையாக இருக்க வேண்டுமென்று பிரியப்படுதல், வருங்காலத்தைப் பற்றிப் பயம், இறந்த மனிதர்களைப் பார்ப்பதுபோன்ற பிரமை; கண்களை மூடியதும் நெருப்புப் பிடித்தெரியும் காக்ஷிகள் தோன்றும். தனக்கு மோக்ஷம் கிடைக்காதென்று அழுதல். வாழ்க்கையில் வெறுப்பு, பைத்தியம், தீர்மான மின்மை, ஞாபகமறதி, பிடிவாதம்.

**கல்கேரியா கார்பானிகா:** சோம்பலுக்கு நேர் எதிராக எப்போதும் வேலை செய்துகொண்டே இருத்தல், பைத்தியம், தன் பின்னால் யாரோ ஒருவர் நடந்து வருவதாக பிரமை. தனக்கு ஏதோ ஒரு துரதிர்ஷ்டம் நேரப்போவதாகப் பயம். தன்னுடைய பகுத்தறிவை இழப்போமென்ற பயம். ஜன்னல் வழியாகக் கீழே குதிக்கப் போவது போலவும் பறக்கப்போவதுபோலவும் நினைத்தல், நெருப்பு, கொலை, எலிகள் இவைகளைப் பற்றி மயக்கத்துடன் கூடிய பேச்சு, தன்னைச் சுற்றி நாய்கள் இருப்பதாகவும் அவைகளுடன் தான் சண்டையிட முயற்சிப்பதாகவும் சொல்லுதல். கவலையும் இருதயத் துடிப்பும், வாழ்க்கையில் வெறுப்பு, விம்மி அழுதல், அதிக யோசனை சிறிய விஷயங்களைப் பற்றிப் பேசுதல், ஞாபக மறதி, மந்த குணம்.

**கல்கேரியா பாஸ்:** ஞாபக மறதி, தவறான வார்த்தைகளை உபயோகித்தல். கோப குணம், மூளைக் களைப்பு, சரீரம் முழுவதும் தளர்ச்சி.

**கல்கேரியா ப்ளோரிகா:** மனச் சோர்வு, தான் ஏழையாகப் போய் விடுவோமென்ற பயம்.

**கல்கேரியா ஹைபோபாஸ்:** அறையின் கதவுகளைத் திறந்துவைக்க விரும்புதல்.

**கன்னபிஸ் இண்டிகா:** நேரம் அளவைப் பற்றிய பிரமை, அதிக சந்தோஷம், உற்சாகம். அதிக ஞாபக மறதி. ஒரு வார்த்தை பேசி முடிப்பதற்குள் தான் சொல்ல விரும்பியதை மறந்துவிடுதல். ஒரு விஷயத்திலும் ஸ்திரமாக மனதைச் செலுத்த முடியாமை, கடகடவென்று சிரித்தல் அதிகச் சிரிப்பு, தான் இரண்டு மனிதர்களாக இருக்கும் உணர்ச்சி, பயம், நினைப்பு, பேசுதல், (மூளை, மயக்கம், இவைகளில் பார்க்க கோபம், வேடிக்கை, விஷமத்தனம், நிறைந்த குணம், யாரோ பாடுவதுபோல் தோன்றுதல்.

**கன்னபிஸ் ஸடீவா:** சொல்ல வேண்டுமென்றவிஷயத்தைவிட்டு சொல்ல வேண்டாமென்ற விஷயத்தைச் சொல்லுதல், முற்பகலில் வருத்தம், பிற்பகலில் சந்தோஷம், எழுதும் போது பிழை செய்தல்.

**காக்குலஸ்:** விஷயங்களை மெதுவாகக் கிரகிக்கும் தன்மை, தன் எண்ணத்தை வெளியிடப் பொருத்தமான வார்த்தைகள் ஞாபகத்துக்கு வராமை, நோயாளியை இரவும் பகலும் கவனித்துவந்த கவலையிலும் அதிக களைப்பிலும் ஏற்பட்ட உபாதிகள். நொந்து கொள்வதனுலும், தூக்கமின்மையாலும் ஏற்பட்ட உபாதிகள். பொழுது வெகு சீக்கிரமாகப் போவதுபோல் தோன்றுதல். துக்ககரமான விஷயங்களிலேயே மனது பதிந்திருத்தல், அதனுல் மற்ற விஷயங்களைப் பொருட்படுத்தாமை, எப்படிப் பேசினுலும் பிறர் தன்னை அவமானப்படுத்துவதாக நினைத்தல், அற்ப விஷயங்கட்கெல்லாம் வருத்தம், வெகு சுலபமாகத் திடுக்கிடல்.

**காக்டஸ்:** வருத்தம், கோபம், கதறுதல், பிறர் ஆறுதல் சொன்னுல், குறிகள் அதிகமாதல், சிடுசிடுத்த குணம் பதில் சொல்லாமை. சாவு பயமும் தன் வியாதி குணமாகாதென்றும் நினைத்தல், கவலைக்குறி இல்லை.

**காட்மியம் ஸல்ப்:** கவலை, களைப்பு, அமைதி, சுரத்தில் அமைதியின்மையிலும் அசையாமை, சாப்பிடாமை.

**காபியா க்ரூடா:** மனமும் சரீரமும் வழக்கத்துக்கு விரோதமாக நள்ளிரவு வரை சுறுசுறுப்புடன் வேலை செய்ததால் ஏற்பட்ட தலைவலி, தூக்கம் கெடுதல் ஆவேசமுற்ற அல்லது மிகுந்த சந்தோஷமுள்ள மனோநிலைமை, யோசனைகள் நிறைந்திருத்தல் அந்த யோசனைகளை நிறைவேற்ற அவசரப்படுதல் மனத்தாலும் சரீரத்தாலும் வழக்கத்திற்கு எதிரிடையாக வேலை செய்தல். இதனாலும் மனவெழுச்சியாலும் தூக்கமின்மை. அமித மன எழுச்சியால் ஏற்படும் வலிப்புகள். எல்லா உணர்ச்சி அவயவங்களிலும் அதியுணர்ச்சி. குழந்தைகள் வெகு சுலபமாக அழுதல், சிரித்தல். அழுது கொண்டிருக்கும்போதே நடுவில் சிரித்தல். திடீரென்று ஏற்படும் சந்தோஷ சமாசாரங்களால் உண்டாகும் உபாதிகள் தீக்ஷண்யமான ஞாபகசக்தி.

**காப்ஸிகம்:** சொந்த ஊருக்குப் போக வேண்டும் என்ற ஏக்கத்தால் ஏற்பட்ட உபாதிகள். தூக்குப்போட்டுக் கொள்ளப் பிரியம். வெடுவெடுப்பு, கோபம் ஏற்படுதல், எதிலும் குற்றம் கண்டுபிடிக்கும் குணம், சந்தேகம், பிடிவாதம், பயத்துடனும், கூக்குரலுடனும், விழித்துக் கொள்ளுதல். குடிமயக்கம்.

**காமோமில்லா:** மனவெழுச்சி, கோபம், பொறுமையின்மை, தன்னைப் பற்றிப் பிறர் பேசுவது அல்லது தான் பேசும் போது மற்றவர் குறுக்கிடுவது சகிக்காமை. எப்போதும் தன் உபாதிகளைப்பற்றி சொல்லிக் கொண்டேயிருத்தல். கோபத்தாலும் தன்னை நொந்துக் கொண்டதாலும் ஏற்பட்ட கோளாறுகள்.

**(குழந்தைகள்):** தனக்கு வேண்டுமென்று பல வஸ்துக்களைக் கேட்டல். கொடுத்தால் வாங்க மறுத்தல் தனக்கு வேண்டுவது கிடைக்காததால் பரிதாபமாக முனகுதல். குழந்தையைத் தட்டிக் கொடுத்து தூக்கிக் கொண்டால் தான் சமாதானமாகும்.

**காம்போரா:** ஞாபக சக்தி இழத்தல், படிப்படியாக சரீரத் தளர்ச்சி இருதயத் துடிப்புடன் கவலை. மனவெழுச்சியால் பிரக்ஞை தப்புதல் சில்லிப்பு சில்லிப்பு இருக்கும் போதும் போர்த்திக் கொள்ள விரும்பாமை கவலை,

அமைதி இன்மை. இருட்டில் தனிமையாக இருக்கப் பயம். கடுங்கோபம், மன வேதனை.

**கார்டுஸ் மரியேனஸ்:** வருத்தம்

**கார்பன் ஸல்ப்:** கலக்கம், கவலை. காலையில் தூங்கியெழுந்ததும் சுய ஞாபகமிழத்தல், இரவில் மனவெழுச்சியுடன் பலவித தோற்றங்கள் காணுதல், பொய்த் தோற்றங்கள், ஞாபக மறதி, அழுகை, காலையில் அபானவாயு கழிந்தபின் சிரித்த முகத்துடன் இருத்தல். கடுங்கோபம், ஞாபகமிழத்தல், அதியுணர்ச்சி, பாரிசவாயு, நடுக்கம் முதலியன ஏற்படுதல். மனத்திலும் உருவத்திலும் சிறுத்திருத்தல், மயக்கம்.

**கார்போ அனிமாலிஸ்:** கலக்கம். தான் தூங்குகிறோமா அல்லது விழித்துக் கொண்டிருக்கிறோமா என்பது தெரியாது. வருத்தம், மௌனமாயிருத்தல், பிறரிடம் பேசுவதற்கோ, பிறர் தம்மைப் பற்றிப் பேசுவதோ பிடிக்காமை. தனியாக இருக்க அவா. பிறருடன் பேசாதிருக்க வழி தேடுதல்.

**கார்போ வெஜி:** இருட்டைக் கண்டால் வெறுப்பு, பிசாசுகளைப் பற்றிய பயம், திடீரென்று ஞாபக சக்தியை இழத்தல்.

**காலாடியம்:** சுருட்டுக் குடிப்பவர்களின் மனோநிலை. மிகவும் அதிகமான ஞாபக மறதி. நடந்த விஷயங்களில் ஒன்று கூட ஞாபகமிருப்பதில்லை.

**காலி ஐயோடேட்டம்:** கவலை, வருத்தம், அதிகக் கோபம், பிறரைத் துன்புறுத்துவதில் இஷ்டம்.

**காலி கார்ப்:** அதைரியம். மாறிக்கொண்டேயிருக்கும் குணம், அதிகக் கோபம், அதிக பயம், வயிற்றைப் பற்றிய கவலை, படுக்கை கீழே அமுங்குவதுபோன்ற உணர்ச்சி, எப்போதும் தனியாக இருப்பதில் வெறுப்பு. ஒருபோதும் திருப்தியின்மை. சும்மா இருக்கமுடியாத குணம் பிடிவாதம். தொடுதல், சப்தம், வலி இவைகளில் அதியுணர்ச்சி.

**காலீ பாஸ்:** வருத்தம், சோம்பல், பிறரைப் பார்க்கப் பிரியமின்மை, மன உற்சாகம் குறைதல், திடுக்கிடுதல், சங்கா தோஷம், மூளை உபாதிகள், ஞாபகமிழத்தல், சிறு காரியமும் மலைபோல் தோன்றுதல். சங்கோஜம், பிறரிடம் சம்பாஷிக்காமை.

**காலீ ப்ரோமேடம்:** அதிகச் சோர்வு, மனக் கலக்கம், மன வெழுச்சி, அடிக்கடி சுறுசுறுப்பாகவிருத்தல், பயந்த சுபாவம், சந்தேகிக்கும் குணம். தலை நடுக்கத்துடன் தூக்கிட்டுக்கொள்ளும் எண்ணம். (கர்ப்பத்தில் பார்க்க)

**காலீ மூர்:** தான் பட்டினியாகவிருக்கவேண்டுமென்று நினைத்தல்.

**காலோபில்லம்:** களைப்பு, கோபகுணம்.

**காலோஸிந்திஸ்:** வெகு சீக்கிரமாகக் கோபம் வருதல், கேள்வி கேட்டால் கோபமடைதல், மனம் நொந்திருத்தல், சோம்பல் குணமுள்ள ஸ்திரீகள்.

**காஸ்டிகம்:** குழந்தைகள் தனியே படுக்கச் செல்லவிரும்பாமை. சிறு விஷயத்திற்கும் கதற ஆரம்பித்தல், வருத்தம், தன் நம்பிக்கையை இழத்தல், நீடித்த ஏக்கம், திடீரென்று ஏற்படும் மனவெழுச்சியால் உபாதிகள், உபாதிகளை, முக்யமாக மூலங்களை, நினைத்தால் அவை அதிகமாதல்.

**குப்ரம் மெடாலிகம்:** தீர்க்கமான யோசனைகள், கெட்ட எண்ணங்கள், வருத்தம், பேசவேண்டும் என்று நினைக்காத வார்த்தைகளைப் பேசுதல், பயங்காளித்தனம்.

**கோக்கஸ் காக்டி:** அதிகாலையில் அல்லது பிற்பகலில் வருத்தம்.

**கோல்சிகம்:** புத்தி மழுங்கிவிட்டபோதிலும் கேட்ட கேள்விகளுக்குச் சரியான பதில்களையே அளித்தல். படிக்க முடிந்தாலும் படித்ததன் சாராம்சத்தை கிரகிக்க முடியாமை.

**கோனியம்:** மனமும் சரீரமும் பலஹீனமடைதல், மன வெழுச்சியால் மனச் சோர்வடைதல், பயந்த சுபாவம், பிறருடன் சேர வெறுப்பு, படிப்பதிலும் வேலை செய்வதிலும் வெறுப்பு, தனியே இருக்கப் பயம். ஞாபக சக்திக் குறைவு. மன உழைப்பு முடியாமை. எந்த விஷயத்திலும் சிரத்தையின்மை.

**க்ராபைடிஸ்:** வெளியே புறப்பட அதிகப் பிரயத்தனம். பயந்த சுபாவம் ஒரு முடிவு செய்ய இயலாமை. வேலை செய்ய மனம் வராமை. வேலை செய்ய உட்கார்ந்திருக்கும்போது

மறுத்தல். சங்கீதம் கேட்டால் அழுகை வருதல். குறும்புக் குணமுள்ள சிறுவர்கள், கண்டித்தால் சிரித்தல்.

**க்ரீடேஜஸ் :** அறையின் காற்றுப் போதாதென்று காற்றுக்காக ஜன்னலோரம் வந்து நிற்றல்.

**க்ரீஸோட் :** சங்கீதம் கேட்டால் அழுகை, நெஞ்சிடிப்பு, வருதல்.

**க்ரோகஸ் ஸடீவா :** சங்காதோஷத்தில் அடிக்கடி மனக் குறிகள் மாறிக்கொண்டே யிருத்தல், அதாவது ஒரு சமயம் சந்தோஷம் மறுசமயம் வருத்தம். சந்தோஷமான சமயத்தில் ஆடுதல், பாடுதல், சிரித்தல், குதித்தல், எல்லோரையும் முத்தமிடுதல், வருத்த சமயத்தில் அதிக கோபம். சிநேகிதர்களைத் திட்டுதல்.

**க்ரோடேலஸ் ஹாரிடஸ் :** முனகுதல், வருத்தம், மயக்கம்.

**க்வாய்கம் :** ஞாபகமறதி (முக்யமாக சாமான்கள், மனிதர்களின் பெயர்களை மறந்துவிடுதல்) கவனக் குறைவு, உற்சாகக் குறைவு, வருத்தம், பிடிவாதம், கோபகுணம், சரீரத்தை சிறிதளவு அசைக்கவும் பயம்.

**க்ளமேடிஸ் எரெக்டா :** தனியே இருக்கப் பயம், சொந்த ஊருக்குப் போகவேண்டும் என்ற ஆசை அதே நினைவாக இருத்தல், இதனுல் ஏற்பட்ட உபாதிகள், வருத்தம், குறைவான ஞாபகசக்தி.

**க்ளோனுயின் :** திடீரென்று உண்டாகும் பிரக்ஞையின்மை, உணர்ச்சியின்மை, வாயாடித்தனம். துரிதமான தெளிவற்ற யோசனைகள் செய்தல், தான் எவ்விடத்தில் இருக்கிருேமென்பது தெரியாது. அழுதல் தோள்களைக் குலுக்கிக்கொள்ளுதல், தலைவலி இருப்பின் ஜன்னல் வழியாக வெளியே குதிக்க முயற்சித்தல் மனவெழுச்சி.

**சைனு :** உணர்ச்சியின்மை, அலக்ஷ்ய மனேபாவம், பணிவின்மை, மௌனம், மனத்தளர்ச்சி, பிறர்மனதைப் புண்படுத்தும் சுபாவம் அதிக யோசனைகளால் தூக்கம் வராமை.

**டபாகம் :** ஞாபகமறதி, மெதுவாக விஷயங்களைக் கிரகித்தல், காக்கைவலிப்பில் மந்தபுத்தி, சந்தோஷம் அல்லது

வருத்தம், ஏக்கம், அழுகை, திடீரென்ற கவலை, அங்குமிங்கும் பாய்தல், மார்பில் அமுக்க உணர்ச்சி.

**டயஸ்கோரியா:** அதிக ஞாபகமறதி.

**டல்கமாரா:** மனக்குழப்பம்.

**டாரண்டுலா ஹிஸ்பானியா:** திடீரென்று மாறுங்குணம், பிறருக்குத் தீங்கு செய்தல், நல்லொழுக்கத்தைக் கைவிடுதல், எப்போதும் ஏதாவது செய்துகொண்டோ அல்லது நடந்துகொண்டோ இருத்தல், சங்கீதம் கேட்கச் சகிக்காமை, பிறர் தன்னுடன் இருக்க சகிக்காமை, நன்றி மறத்தல், ஒன்றிலும் திருப்தியின்மை, தன் மனதிற்குத் தோன்றியபடியெல்லாம் செய்தல்.

**டிஜிடாலிஸ்:** அதிகக் கவலை, பிற்காலத்தைப்பற்றிய பயம்.

**டுக்ரியம்:** எப்போதும் ஏதாவது பாடிக்கொண்டேயிருத்தல்.

**டெல்லூரியம்:** அதிக ஞாபகமறதியால் தான் செய்யவேண்டிய காரியங்களைச் சரிவரச் செய்யாமை.

**ட்யூபர்குலீனம்:** சிடுமூஞ்சித்தனம், மூர்க்ககுணம், (இது முக்கியமாகத் தூங்கியெழுந்தவுடன்) நாய்களிடத்தும் மற்ற பிராணிகளிடத்தும் பயம். அடிக்கடி கோபமூண்டு கத்துதல், நம்பிக்கையிழத்தல், சுரத்தில் இடைவிடாது பேசிக்கொண்டேயிருத்தல், அடிக்கடி பிரயாணம் செய்யப் பிரியம்.

**தூஜா:** தன் பக்கத்தில் ஓர் புதிய மனிதர் இருப்பதுபோன்ற உணர்ச்சி, தன்னுடைய சரீரமும் ஆத்மாவும் தனித்தனியாய்ப் பிரிந்திருப்பது போன்ற பிரமை. தன் வயிற்றினுள் ஏதோ உயிருள்ள வஸ்து இருப்பது போன்ற ப்ரமை. சங்கீதம் கேட்டால் உடனே சரீரம் நடுங்குதலும் அழுதலும்.

**தெரிடியன்:** அமைதியின்மை. உலகத்தில் எதுவும் மனச்சாந்தியை உண்டுபண்ணுமை, காலம் அதிசீக்கிரம் செல்லுதல்.

**நக்ஸ் மாஸ்சாடா:** அதிக மயக்கம். அடக்க முடியாத தூக்கம், எழுப்பினுல் ஒரே கலக்கம், படித்துக்கொண்டிருக்கும்

போதே படித்தவைகளை மறந்துவிடுதல், உடனே தூங்கி விடுதல், விழித்துக் கொண்டிருக்கும்போதும் ஏதோ தூக்கத்தில் இருப்பதுபோன்ற தோற்றம், குணம் அடிக் கடி மாறுதல், தான் என்ன செய்துகொண்டிருந்தோ மென்பதோ என்ன பேசிக்கொண்டிருந்தோ மென்பதோ உடனே ஞாபகம் இருப்பதில்லை. பழைய விஷயங்கள் ஞாபகத்துக்கு வராமை, ஞாபக மறதி.

**நக்ஸ் வாமிகா :** சிடுமூஞ்சித்தனம் அடிக்கடி ஏதாவது கோபித் துக்கொண்டே இருக்கும் குணம், பிறரிடம் எதற்கும் குற்றம் சொல்லிக்கொண்டே இருத்தல், சற்று எதிர்த் துப் பேசினாலும் உடனே ஆத்திரம் வருதல், அற்ப விஷயங்கட்கெல்லாம் கவலைப்படுதல். சமயம் வாய்த்தால் பிறருக்குக் கெடுதல்செய்ய அஞ்சுவதில்லை, தன் விஷயங் களைபற்றி அதிக ஜாக்கிரதை.

**நாஜா:** தற்கொலை செய்துகொள்ள நினைத்தல், மழையில் பயம்.

**நேட்ரம் ஆர்ஸனிகம் :** நரம்பு சம்பந்த அமைதியின்மை, ஒரு விஷயத்தில் கூர்ந்து மனம்செலுத்த முடியாமை, தன் இஷ்டத்திற்கு விரோதமாகப் பிறர்சொல்வது சகிக்க முடி யாமை, தன் தொழிலைக் கவனிக்கவும், மனதால் வேலை செய்யவும் இஷ்டமின்மை, காரணமில்லாதவைகட் கெல்லாம் பயப்படுதல்.

**நேட்ரம் கார்ப் :** சங்கீதம் கேட்டால் உடனே தற்கொலை செய்து கொள்ள வேண்டுமென்ற எண்ணமுண்டாதல், யோசனை கள் செய்யவும், மற்றும் மனத்தால் எந்த வேலைகள் செய்யவும் சக்தியற்றிருத்தல், விஷயங்களைக் கேட்டாலும் படித்தாலும் அவைகளை மனதில் கிரகிக்க சக்தியின்மை, மற்ற மனிதர்களுடன் பழக விருப்பமின்மை, கவலை, பேராசை, சிடுமூஞ்சித்தனம், அதிக கோபம், வலிவரும் போது கவலை, நடுக்கம், வியர்வை.

**நேட்ரம் பாஸ் :** பயம், ஞாபகமறதி.

**நேட்ரம்மூர் :** ஒரு காரியத்தையும் யோசனை செய்ய முடியாமை, ஞாபகமும் மன உறுதியும் பலஹீனப்பட்டிருத்தல், எப் போதும் கவலையோடிருத்தல், அதிகமாக அழுதல், தைரி யம் சொன்னால் கவலையும் அழுகையும் மேலும் அதிக

மாதல், வாழ்க்கையில் வெறுப்பு, அற்பவிஷயங்கட்கும் கோபம் ஏற்படுதல், பிறரை வெறுக்கும் குணம், பழிக்குப் பழி வாங்கவேண்டும் என்ற எண்ணம், மூளைக்குழப்பம், ஒரு காரியத்திலும் மனதைச் செலுத்த இயலாமை, மன வெழுச்சி நிறைவேறாத காதல், வெளிக் காற்றால் சமனம்.

**நேட்ரம் ஸல்ப்:** காலை நேரங்களில் வருத்தமாக விருத்தல், அழுதல், சங்கீதம் கேட்டால் வருத்தமுண்டாதல், மலம் வெளியேறியபின் சந்தோஷம், அவநம்பிக்கை, தலையில் அதிக ரத்தத்திரட்சியால் பிதற்றல்கள்.

**பல்ஸடில்லா:** சாந்தம். அமெரிக்கை, சொன்ன வார்த்தைகளைக் கேழ்க்கும் குணம். சிறு விஷயங்கட்கும் அழுதல். வெகு சீக்கிரம் அழுகை வருதல், கோபமின்மை. (நினைப்பில் பார்க்க) பெண்களுக்கு ஆண்களிடம் வெறுப்பு. ஆண் களுக்கு பெண்களிடம் வெறுப்பு. எல்லா விஷயங்களிலும் வெறுப்பு. மாதவிடாய் வெளிப்படாமல் அமுக்கப்பட்ட தால் ஏற்பட்ட சங்காதோஷம். கடவுளைப்பற்றிய பிதற் றல்கள். இலகுவாக சிரிக்கும்படியாகவோ அழும்படி யாகவோ செய்துவிடலாம் சிலசமயங்களில் ஒருவருடனும் பேசாமலிருத்தல். தன்னைப் பிறர் மதிக்கவில்லை என்ற எண்ணம். வீட்டு வேலைகள் செய்வதில் கவனக் குறைவு. சமாதானம் செய்தால் அழுகை சமனம் எல்லோரையும் திருப்தி செய்விக்க வேண்டும் என்ற எண்ணம்.

**பாப்டீஷியா:** தான் இரு மனிதர்களாயிருப்பது போலவும் தன் னுடன் படுக்கையில் மற்றொரு மனிதன் படுத்திருப்பது போல் பிரமை மயக்கம். ஒரு கேள்விக்குப் பதில் சொல் லிக்கொண்டிருக்கும்போதே தூங்கிவிடுதல். பிதற்றல்கள். தன் கைகால்கள் தனித்தனியே பிரிந்து கிடப்பது போல வும் தான் அவைகளை ஒன்று சேர்ப்பது போலவும் பிரமை. ஒரு கேள்விக்கு பதில் சொல்லிக் கொண்டிருக்கும்போதே மயங்கிவிடுதல். எழுப்பினால் நல்ல ஞாபகத்துடனே பேசு தல், விஷயங்கள் குழப்பமாகவிருத்தல் குடிகாரனைப்போல் மனக்குழப்பம் மனத்தை ஒரு விஷயத்தில் நிலைநிறுத்த முடியாமை. பல விஷயங்களும் ஒன்றின்மேலொன்றாகத் தோன்றிக் கொண்டேயிருத்தல், மன பலஹீனம்

கை விரல்கள் தனித்தனியே படுக்கையில் பிரிந்து சிதறிக் கிடப்பது போன்ற பிரமை, இதற்காக கைகால்களை அடித்துக்கொள்ளல் இதை ஒன்று சேர்க்க முடியாததால் தூக்கம் வராமை. எப்போதும் பிதற்றல்கள் முக்கியமாக இரவுகளில் அதிகம்.

**பாரிடா கார்ப் :** சரீரமும் மனமும் சரியான வளர்ச்சியடையாமை, மட்டித்தனம்; சரியான புத்தியின்மை. சங்கோஜம், ஞாபகக் குறைவு. சிறுவர்கட்குப் படிப்பு ஏறாமை. படித்தவை ஞாபகத்திலிராமை கவனக்குறைவு. சாதாரணமாகப் பழக்கமுள்ள வார்த்தைகளைக்கூட சமயம் வரும்போது உபயோகிக்க முடியாமை. மனமும் சரீரமும் பலஹீனம். வயதானவர்கள்கூட குழந்தைகளைப்போல் நடந்து கொள்ளுதல். அகாலத்தில் கிழடுதட்டுதல் குழந்தைகளுக்கு விளையாடுவதில் பிரியமின்மை. ஆனால் ஒரு மூலையில் ஒன்றும் செய்யாமல் உட்கார்ந்திருக்கும் or தன் நகங்களைக் கிள்ளிக் கொண்டிருத்தல். புதிய மனிதர்கள் வீட டிற்கு வந்தால் கைகளால் முகத்தை மூடிக் கொள்ளுதல். அல்லது மேஜை நாற்காலிகளுக்கு இடுக்கில் ஒளிந்து கொள்ளுதல். வருத்தம் எதிர்காலத்தைப்பற்றிய கவலை. எப்போதும் சிணுங்கிகொண்டே இருத்தல். (நினைப்பு பயத்தில் பார்க்க.)

**பாரிடா மூரியாடிகா :** மனச்சோர்வு, பிரக்ஞையுடன் இருக்கும் போதே வலிப்புகள், மட்டித்தனம், விஷயங்களைத் தாமதமாகக் கிரகித்தல். சீக்கிரமாக கோபம் வருதல் சிற்றின்பப் பைத்தியம்.

**பாளிப்போரா இன்கார்நேடா :** காலையில் குழப்பம். அமைதியின்மை, தூக்கமின்மை.

**பாஸிலினம் :** கோபம். வருத்தம்.

**பாஸ்பரஸ் :** மயக்கமும் பிதற்றல்களும் (மயக்கத்தில் பார்க்க) கைகளால் எதையோ பிடிக்கப்போவதுபோல் தாவுதல். முன்கோபம் ஆனால் சிறிது நேரத்திற்குப் பின் அதற்காக வருந்துதல். சிறிதளவு உதைத்தாலும் சரீரத்தில் அதிக பலஹீனமேற்படுதல். சங்காதோஷம் போன்ற மனக்கோளாறுகளில் சற்றுநேரம் மாறி மாறி சிரிப்பதும்

அழுவதும், மாலை நேரங்களில் மூலைக்குமூலை ஏதோ பிசாசு பூதங்கள் இருப்பது போன்ற பயம். இருட்டிலும் சாவைப் பற்றியும் தனியாக இருப்பதற்கும் பயம். ஒன்றிலும் பற்றின்மை அல்லது எல்லா விஷயங்களிலும் கவலை. மிகவும் கஷ்டத்துடன் எழுப்ப முடிந்தாலும் மறுபடியும் மயக்கத்தில் ஆழ்ந்துவிடுதல்.

**பீஸ்மத்:** தனிமையிலிருப்பதில் வெறுப்பு. யாராவது தன்னுடனிருக்கப் பிரியப்படுதல். தன் நிலைமையைப்பற்றிக் குறை கூறிக்கொண்டே இருத்தல், திருப்தியற்றிருத்தல்.

**புபோ:** தன் தேகாரோக்கியத்தைப் பற்றிக் கவலை. எப்போதும் வருத்தம். அமைதியின்மை. சப்தமாக ஊளையிடுதல். பெருமையற்றிருத்தல், பயந்த சுபாவம். முட்டாள் தனம். தான் தனிமையாக இருக்கப் பிரியப்படுதல். மனோதிடம் இல்லாமை.

**பெட்ரோலியம்:** தான் இரட்டையாக இருப்பதுபோலவும், தன் படுக்கையை மற்றொருவர் ஸ்வீகரித்துப் படுத்திருப்பது போலவும் தோன்றுதல், பிரசவ ஜுரத்தில் தன் பக்கத்தில் இரண்டு குழந்தைகள் இருப்பதுபோல் தோற்றம். தான் எங்கிருக்கிறோமென்பது தெரியாது, கோபம், வருத்தம், அழுகை, தனக்கு மரணம் சமீபத்தில் நெருங்கி விட்டதாக நினைத்து அதற்குவேண்டிய ஏற்பாடுகள் செய்தல், உற்சாகமின்மை, மங்கின பார்வை, கோபம், சண்டைபோடும் குணம்.

**பெர்ரம்மெட்.** குழப்பம், சோர்வு, வருத்தம், சீக்கிரத்தில் கோபம் வரக்கூடிய தன்மை, பொறுமை, தனக்கு விரோதமாகப் பிறர் ஏதாவது சொல்லிவிட்டால் உடனே கோபம் வருதல், சிறு சப்தத்தையும் சகிக்க முடியாமை.

**பெல்லடோன்னு:** கடுமையான பிதற்றல்கள். பேசுதல், பாடுதல், குதித்தல், கண்டவற்றைக் கடித்தல், திடீரென்று சிரித்தல், பக்கத்திலிருப்பவர்களை அடிப்பதும், சிலசமயம் எதையோ இழந்துவிட்டதைப்போல் மெதுவாக முணமுணத்துக்கொண்டு படுக்கையை நோண்டுதல், முனகுதல், தான் பிசாசுகளையும் பூதங்களையும் பார்ப்பதுபோலவும், நாய்கள், பலவிதப் பூச்சிகள்

முதலியவை தன்னை நோக்கி வருவதைப்போல் நினைத்தும் அலறுதல். தூக்கத்தில் திடீரென்று தூக்கிப்போடுதல். பிறர் தன்னிடம் வரும்போது பயத்துடன் அலறுதல். தான் இருக்கும் இடத்தைவிட்டுத் தப்பித்துக் கொண்டு வெளியே சென்றுவிட முயலுதல். (இக்குறிகள் திடீரென்று தோன்றிய ஜுரத்தில் இருந்தால் பெல்லடொன்னு பயன்படும். டைபாய்ட் போன்ற ஜுரங்களில் இக்குறிகள் நீடித்து இருந்தால் ஸ்ட்ரமோனியம் கொடுக்க வேண்டும் பெல்லடொன்னுவில் நீடித்த நிலைமை கிடையாது.)

**பைடொலக்கா:** வாழ்க்கையில் வெறுப்பு, கூச்சம், வெட்கமின்மை.

**பைரோஜினியம்:** (நினைப்பு, பேசுதல், கனவில் பார்க்க.) ஏராளமான கைகள் தன்னைச் சுற்றிலும் இருப்பதுபோன்ற தோற்றம், தலை படுக்கையில் இருப்பது போலவும் கை கால்களெல்லாம் சிதறிக்கிடப்பதுபோலவும் (பாப்டீஷியாவில் உள்ளதுபோல் ஆனால் அதைவிட அதிகத் தோற்றம்.) தன் படுக்கையில் இதரர்களும் தன்னுடன் படுத்திருப்பதாக பிரமை.

**போடோபில்லம்:** எல்லா வியாதிகளிலும் விடாமல் அதிகமாகப் பேசிக்கொண்டேயிருத்தல். புளிக்கும் பழங்களை உண்டால் தூக்கத்தில் பிதற்றல்கள்.

**போராக்ஸ்:** மேலிருந்து கீழே செல்லும்போது பயம். (குழந்தைகளில் பார்க்க) அற்ப காரியங்களிலும் கவலை, பயம், அமைதியின்மை.

**போவிஸ்டா:** வருத்தம். படிக்கும்போது வார்த்தைகள் திக்குதல். உறுப்புகள் பெரிதான உணர்ச்சி. கைகளில் வைத்திருக்கும் வஸ்துக்களைக் கீழே போட்டுவிடுதல்.

**பிரையோனியா:** அதிக முன்கோபம். சிறிய விஷயங்களும் ஆத்திரத்தை உண்டுபண்ணுதல். பிதற்றல்கள்; கனவுகளில் தன் தொழிலைப்பற்றிப் பிதற்றல்கள்.

**ப்ரோமியம்:** யாரோ தன்னைப் பின்னேயிருந்து கவனித்துக் கொண்டிருப்பதாக ப்ரமை. சண்டைபோடும் குணம்.

**ப்ளம்பம்:** பிரமைபிடித்ததுபோலிருத்தல். தன்னை யாராவது கொன்று விடுவார்கள் என்ற ப்ரமை. ஒருவருடனும் பேசாதிருத்தல். விஷயங்களை மெதுவாகக் கிரஹித்தல். ஞாபகமறதி. பிதற்றலும் வயிற்றுவலியும் மாறி மாறி வருதல். பிதற்றல், மயக்கம் இழுப்புகள்.

**பிளாடினு:** பிரறைக் கொல்லவேண்டுமென்று நினைத்தல். தான் பிரறைவிட எல்லா விஷயங்களிலும் உயர்ந்தவர் என்ற எண்ணம். மாதவிடாய் தாமதப்பட்டதால் ஏற்பட்ட சித்தப்ரமை. மனக்குறிகள் ஏற்பட்டால் சரீரக் குறிகள் மறைதல், கவலை, பலவீனம்.

**மங்கானம்:** எப்போதும் அழுதுகொண்டிருத்தல். அடிக்கடி பெருமூச்சு விடுதல். முனகுதல், அழுதுகொண்டிருக்கும் மனோநிலை, பயம், கவலை, ஒருவருடனும் பேசாமை, பொறுமை, மந்தபுத்தி.

**மெக்னீஷியா கார்ப்:** வருத்தமாயிருத்தல். பிறருடன் பேசப் பிரியப்படாமை. தனக்கு ஏதாவது ஆபத்து நேர்ந்து விடுமென்று எப்போது பார்த்தாலும் பயம். தன் சரீரத்திலிருந்து புளிப்பு நாற்றம் கிளம்புவதுபோன்ற உணர்ச்சி.

**மெக்னீஷியா மூரியாடிகா:** கவலை, வருத்தம், அழுதுகொண்டிருத்தல், தனியாகவிருக்கப் பிரியம்.

**மெடோரினம்:** ஞாபகமறதி, தன் பெயரையே மறந்துவிடுதல், நெருங்கிய பந்துக்களையே மறந்துவிடுதல். பேசிக்கொண்டிருக்கும்போதே விஷயத்தை மறந்துவிடுதல். முன் கோபம். பொறுமையின்மை. போதுபோகாமை. சற்று நேரமும் சும்மாவிருக்க முடியாமை. தன் உபாதியைப் பற்றி நினைத்துக்கொண்டாலே அது அதிகமாதல்,

**மெர்க்கூரியஸ் ஸொலு:** ஞாபகமறதி, கவலை, அமைதியின்மை, மெதுவாக முணமுணக்கும் பிதற்றல்கள். ஒன்று அவசரமாகப் பேசுதல் அல்லது கேள்விகளுக்கு மிகவும் தாமதமாகவும் மெதுவாகவும் பதில்சொல்லுதல், மூளைச் சோர்வு.

**மெஸீரியம் :** மனம் சஞ்சலப்பட்டால் உடனே தலைவலி.

**மோஸ்சஸ் :** அடக்க முடியாத சிரிப்பு.

**யூபடோரியம் பர்போரி :** ஜுரத்துடன் முன்கோபம், பிடிவாதம், சரீர வலி தாங்கமுடியாமல் அலறுதல், முனகுதல்.

**யூரேனியம் நைட்ரிகம் :** மந்தம், முன்கோபம், மனச்சோர்வு.

**ரஸ்டாக்ஸ் :** சரீரத்தில் மந்தமான கடுப்பு வலியுடன் மயக்கம், மனம் மந்தப்பட்டிருத்தல். ஞாபகமறதி, சொல்வதை கிரஹித்துக் கொள்ளும் சக்தி குறைவு. சமீபத்தில் நடந்த விஷயங்களையும்கூட மறந்துவிடுதல். பிறருக்குப் புரியாத பேச்சு. அவசரமாகவோ அல்லது இஷ்டமில்லாமலோ பேசுதல். சரியான பதில்களே கொடுத்தாலும், மிகவும் மெதுவாகப் பேசுதல். மெதுவாக முணமுணக்கும் பிதற்றல்கள்; மாலை நேரங்களில் அனுவசியமாக வருத்தமாயிருத்தல், படுக்கையில் அங்குமிங்கும் புரண்டு கொண்டேயிருத்தல்.

**ரானங்குலஸ் :** ஒரு விஷயத்தைப்பற்றி யோசனை செய்துகொண்டிருக்கும்போது அவ்விஷயமே மறந்துவிடுதல். பிசாசுகளைப் பற்றிய பயம். அதிகக்கோபம், சண்டைபோடுதல்.

**ரூடா :** பிறர் சொல்வதற்கு விரோதமாகப் பேசிக்கொண்டிருத்தல், பிறரிடம் சண்டை போடுதல். பிறரிடமும் தன்னிடமும் அதிருப்தி, மாலையில் மன அமைதி இல்லாமை.

**ரூமக்ஸ் :** வருத்தம், உற்சாகமில்லாமை.

**ரோகிடாக் :** ஞாபகமறதி.

**ரோடோடெண்ட்ரன் :** எழுதிக் கொண்டிருக்கும்பொழுது சில வார்த்தைகளை விட்டுவிடுதல். எந்தத்தொழில் செய்வதற்கும் விருப்பமில்லாமை.

**லாக் கானினம் :** மனவெறுப்பு; ஞாபகமின்மை.

**லாச்செஸஸ் :** யாரேனும் தன்னைத் தொட்டால் உடனே கோபம், கர்வம், அசூயை, கோபம், சந்தேகம், பழிக்குப்

பழி வாங்க நினைத்தல். இரக்கமின்மை, பாம்பின் குணம் சரீர. மன பலவீனம். அதிகப் படிப்பால் ஏற்பட்ட சித்தப் பிரமை, மதசம்பந்தப் பைத்தியம், விஷயத்தை விட்டு வேறு விஷயம் பேசிக்கொண்டிருத்தல். விஷயங்களை சீக்கிரமாகக் கிரஹித்தல். புத்திகூர்மை. சில சமயங் களில் இதற்கு மாறான மந்தபுத்தி. அசதி ஏற்படுதல், (சுரத்தில் பார்க்க )

**லாரோசிராஸஸ்:** பிரக்ஞை இழத்தல். பேசும் சக்தி இழத்தல். அசையும் சக்தி இழத்தல், மன பலஹீனம், ஞாபகம் அறவே ஒழிந்துபோதல். தனக்கு ஏதோ பலமான வியாதி இருக்கிறதென்று அனுவசியமான பயம், கவலை.

**லில்லியம் டிக்ரினம்:** மனத்தில் நன்கு வேலை செய்யவல்லது. சங்காகுணமுள்ள ஸ்திரீகள், பேசும்போதும் எழுதும் போதும் பிசகு செய்தல். மன உற்சாகமின்மை, பிறரைத் திட்டுதல், அடித்தல், கருப்பைக் கோளாறுகளில் ஆபாஸ மான நினைவுகள், எதையும் அவசரமாகச் செய்தல், எப்போதும் ஏதாவது செய்துகொண்டேயிருக்கவேண்டி யிருத்தல். அமைதியின்மை ஆயினும் அசைய இஷ்ட மின்மை. வருத்தம், கவலை, பயம், தனக்கு ஏதாவது ஆபத்து வந்துவிடுமென்றும், பெரிய வியாதி வந்துவிடும் என்றும் தனக்குப் பைத்தியம் பிடித்துவிடுமென்றும் பயம். தனக்கு இருக்கும் நோயை ஒருவராலும் சொஸ்தம் செய்ய முடியாதென்ற எண்ணம்.

**லைகபோடியம்:** மயக்கம், ஞாபகமறதி, குழப்பம். தளர்ச்சி. தான் ஒரே சமயத்தில் இரண்டு இடங்களில் இருப்பதாக எண்ணம். பலர் இருக்கும் இடத்துக்குச் செல்ல பயம். தன்நம்பிக்கை இழந்திருத்தல். மதசம்பந்தப் பைத்தியம், வாழ்க்கையில் வெறுப்பு. பிறர் வந்தனம் செய்தால் திரும்பி வந்தனம் செய்வதற்குப் பதிலாக அழுதுவிடுதல், பழைய நண்பர்களைக் கண்டதும் அழுதுவிடுதல். தெரிந்த வர்களின் பெயர்களையும் மறந்து விடுதல்.

**வலேரியானு:** பேசும்போது ஒரு விஷயத்திலிருந்து வேறு விஷ யத்திற்கு மாறிவிடுதல். மனம் அதிதுரிதமாக வேலை செய்

தல். விஷயங்களைப்பற்றி தப்பான அபிப்பிராயம். தான் வேறு யாரோ என்று எண்ணுதல். சில பிராணிகள் தன்னுடன் படுக்கையில் படுத்திருப்பதுபோலவும் அவைகளால் தனக்குத் துன்பம் நேரிடும் என்றும் எண்ணம் நடுக்கல், மனவெழுச்சி, முதலியவைகளுடன் சங்கா தோஷம். தனியாக இருக்கப் பயம், மாலைநேரங்களிலும் இருட்டிலும் பயம், படபடப்பு, நடுக்கல்கள்.

**வெராட்ரம் ஆல்பம்:** (பேசுதல். பயம், நினைப்பில் பார்க்க.) தற்கொலை செய்துகொள்ள எத்தனித்தல். தன் கௌரவத்துக்கு இழைக்கப்பட்ட தீங்கால், ஏற்பட்ட கோளாறுகள். தனக்கு ஒரு கெடுதி சம்பவிக்கப்போவதாக பிரமை. பைத்திய சேஷ்டைகள்.

**ஜஸ்டீஷியா ஆடாதொடா:** முன்கோபம், மந்தம். ஒரு சப்தத்தையும் கேழ்க்க சகிக்காமை.

**ஜெல்ஸ்மியம்:** அதிர்ச்சியால் கர்ப்பச் சிதைவு ஏற்படும் போலிருத்தல். இதே காரணத்தால் பிரசவ வலிகள் நின்று விடுதல், மந்த குணம், பயந்த சுபாவம், கண்களை மூடிக் கொண்டு மந்தமாக அசையாமல் படுத்திருத்தல், மன உழைப்பு முடியாமை.

**ஸபடில்லா:** நோயாளி பிதற்றல்களில் (ஸ்திரீயாக இருந்தால்) தான் கர்ப்பமாக இருப்பதாக சொல்லுதல். அதிசயமான மனப்பிராந்தி. மயக்கம் கேள்விகளுக்குப் பதில் சொல்லாமை முறை சுரத்தில் பிதற்றல்கள், பயித்தியம், கோபமான அலறல். குளிர்ந்த நீரால் தலையைக் கழுவினால் சமனம் மன உழைப்பால் தலைவலி, தூக்கம் உண்டாதல்.

**ஸபீனு:** ஸங்கீதம் கேட்டால் தூக்கம் சகிக்க முடியாமை.

**ஸரகா இன்டிகா:** எல்லோரிடமும் அதிக அபிமானம் அதிக பக்ஷமாயிருத்தல். தனிமையில் இருக்கப் பிரியம்.

**ஸரஸபரில்லா:** இந்திரியஸ்கலிதத்தின் பின் பலஹீனம், வலிகள் கவலை, பலஹீனம், மந்த குணம், விஷயங்களை மெதுவாகக் கிரஹித்தல்.

**ஸல்பர்:** பெயர்களை மறந்து விடுதல். மனதில் இருப்பதை வெளியிட சரியான வார்த்தைகள் வெளி வருவதில்லை. விஷயங்களை நினைத்துப்பார்க்கும் சக்தியை இழந்து விடுதல். தன்னிடத்தில் பெரிய தேவ ரகசியங்கள் இருக்கிறதென்ற முட்டாள்தனமான சந்தோஷம், மமதை, கந்தைகளையும் விலை மதிப்பற்ற ரத்தினங்களாகப் பாவித்தல். பெரிய விஷயங்களைக் கண்டுபிடிக்கும் மேதாவிகள். வேலை செய்ய மனமில்லாமை, ஒன்றிலும் பற்றுதலில்லாமை, குளிப்பதில் வெறுப்பு. தன் சரீரத்திலிருந்து எழும் நாற்றம் தனக்கே சில சமயங்களில் சகிக்க முடியாமை. பிரமை பிடித்ததுபோல் வேதாந்த விசாரணை செய்தல். பிறருக்கு மோக்ஷம் கிடைக்காதே என்று ஏங்கிக் கொண்டிருத்தல். ஒவ்வொரு விஷயத்தையும் படிப்படியாகப் பேசிக் கொண்டே போய் கடவுளிடத்தில் முடித்தல். அசூசை. முன்கோபம். முன்கோபம் ஏற்பட்டாலும் மறுவிநாடியே அதற்காக வருந்துதல். தான் பிடித்ததும், தான் சொல்லுவதும் தான் சரி என்று பிடிவாதமாக இருத்தல், தனியாக இருக்க விருப்பம்.

**ஸாங்குனேரியா:** கோப குணம், பயம், மனக் குறிகள் ஏப்பம் விடுவதால் சமனம்.

**ஸாம்புகஸ்:** சிடுசிடுப்பு, தூக்கிப் போடுதல், நடுங்குதல் அமைதியின்மை.

**ஸானிகுலா:** காமோமில்லா போல் சிடுமூஞ்சித்தனம்.

**ஸிகூடா:** மன அசதி. தான் ஒரு புது இடத்தில் இருப்பது போன்ற உணர்ச்சி. ஜன்னியின் பிதற்றல்களில் பாடுதல், குதித்தல், பலவிதமான சேஷ்டைகள் செய்தல், சிறு குழந்தைகளின் விளையாட்டுக் கருவிகளில் பிரியம். ஞாபக சக்தி அறவேயின்மை. கவலை, அழுதல், முனகுதல், பிறரை நம்பாமை. தான் ஒரு குழந்தை என்று நினைத்து அது நடந்து கொள்வது போல் நடந்து கொள்ளுதல், இறந்த காலம், நிகழ்காலம், இவைகளில் நடந்த விஷயங்களைக் குழப்புதல், அலறுதல்.

**லிங்கம்மெட்:** (பிரக்ஞை, பேசுதல், நினைத்தல், பயம் இவைகளில் பார்க்க)

**லிங்கம்வெலீனு:** பிரமைபிடித்தது போலிருத்தல்.

**லிபிலினம்:** ஞாபக மறதி. தற்காலத்தில் ஏற்பட்டிருக்கும் நோய்க்கு முந்திய விஷயங்கள் மட்டும் ஞாபகத்தில் இருக்கும். முகங்கள், நடந்த விஷயங்கள், பெயர்கள் தேதிகள் முதலியவைகளை மறந்து விடுதல். தனக்குப் பயித்தியம் அல்லது பக்ஷவாதம் வந்துவிடும் என்ற பயம். இரவு வரப்போகிறதே என்றும் தன் நோய் சௌகர்யமாகாதென்றும் பயம்.

**லிலிகா:** குழப்பம், பயம், பலஹீனம், பிடிவாதம். எந்த விஷயங்களிலும் மன வெழுச்சியேற்படல். விஷயங்களில் மனதைச் செலுத்த முடியாமை. வாழ்க்கையில் வெறுப்பு, சிறு சத்தம் கேட்டாலும் தூக்கிப் போடுதல் (பயம் மூளையில் பார்க்க.)

**லிஸ்டஸ்:** மன உழைப்பால் தலைவலி ஏற்படுதல்.

**லீகேல்:** மந்தம், உணர்ச்சி மந்தம். அரைத்தூக்கம், தான் இறந்து விடுவோம் என்ற பயம். பிறரைக் கடித்தல், கிணற்றில் விழும்படியான மனநிலை. இறக்கும் வரை சுய அறிவு நீங்காமை. பிரசவத்தின் பின் மனப்பிராந்தி.

**லீனு:** பயம் ஏற்பட்டதுபோல் பரிதாபமாக அழுதல். அதிகச் சிடுமூஞ்சித்தனம் குழந்தையைத் தொட்டால் அலறுதல். பல வஸ்துக்களைக் கேழ்க்கும், ஆனால் கொடுத்தால் வீசியெறிந்துவிடும். அடக்கமுடியாத சிடுமூஞ்சித்தனம். சமாதானம் செய்வது பிடிக்காது.

**ஸெபீயா:** குடும்ப விஷயங்களில் கவனக்குறைவு. ஏற்கனவே பக்ஷமாயிருந்தவர்களிடமும் தற்சமயம் அன்பின்மை. மந்தம், அலக்ஷ்யம், குறைந்த ஞாபக சக்தி, மாறி மாறி அழுதலும் சிரித்தலும், முன் கோபம், பேராசை, லோபித்தனம், சப்தத்தில் வெறுப்பு அதிக வருத்தம், அழுதல்.

**ஸெலீனியம்:** விஷயங்களை கிரகிக்கக் கஷ்டம் மன உழைப்பு முடியாமை. ஞாபக மறதி திக்கல் தடுமாற்றத்துடன் பேசுதல், கோபம்.

**ஸெனகா:** சண்டை போடுங்குணம் மிகப் பழைய விஷயங்கள் திடீரென்று ஞாபகத்திற்கு வருதல்.

**ஸெனஸியோ:** மனதை ஒரு விஷயத்திலும் நிலைநிறுத்த முடியாமை பயந்த சுபாவம், முன் கோபம்.

**ஸைக்ளமன்:** மந்தம், குழப்பம் எப்போதும் ஏதாவது யோஜனை செய்துகொண்டேயிருத்தல். ஏக்கம் பிடித்தது போலிருத்தல். அல்லது சந்தோஷமும் சிடுமூஞ்சித்தனமும் மாறி மாறி ஏற்படுதல்.

**ஸோரினம்:** அசதி, வருத்தம். தற்கொலை செய்துகொள்ளும் எண்ணம். தனக்கு சௌகர்யமாகாது என்ற எண்ணம்.

**ஸ்க்வில்லா:** கவலை. சாவு பயம். அற்ப விஷயங்களுக்கும் அதிகக் கோபம் வருதல்.

**ஸ்டாபிஸாக்ரியா:** திடீரென்று ஏற்படும் அதிர்ச்சிகள். அதிக முன் கோபம். தனியாக இருக்கப் பிரியம். தனியாக இருக்கும்போது காம சம்பந்தமான விஷயங்களையே நினைத்துக் கொண்டிருத்தல். அமுக்கப்பட்ட கோபம், பொறாமை. தனக்கு நேர்ந்த அவமரியாதையை நினைத்துக்கொண்டே மனதிற்குள் சஞ்சலப்படுதல் இவைகளால் ஏற்பட்ட கோளாறுகள். குழந்தைகள் சிடுமூஞ்சிகளாக இருத்தல். யாதொன்றாலும் இவைகளைத் திருப்தி செய்ய முடியாது. எப்போதும் சிற்றின்ப விஷயங்களையே சிந்தித்துக் கொண்டிருக்கும் மன நிலையுள்ளவர்கள். வயிறு நிரம்பியிருக்கும்போது கூட அரைப்பசி எடுக்கும் உணர்ச்சி, தன்னாலோ அல்லது பிறராலோ செய்யப்பட்ட காரியங்களைப்பற்றிக் குறை கூறிக்கொண்டேயிருத்தல். கோபத்தால் ஏற்பட்ட உபாதிகள்.

**ஸ்டானம்:** படிக்கும் விஷயம் உடனே மறந்துவிடுதல் ஞாபக மறதி பலவீனம். கவனமின்மை. வலியினால் மனம் மந்தப் பட்டிருத்தல். மனத்தில் ஒரு அபிப்பிராயம் ஏற்பட்டு விட்டால் அதை மாற்றிக்கொள்ள முடியாமை. அழுங் குணம். அப்படி அழுவதினால் சமனம். வருத்தம்.

பிறருடன் பேச இஷ்டமின்மை. ஒரு வேலையும் செய்ய தைரியமின்மை. அனுவசியமாக எப்போதும் வேலை செய்தல். மனமும் சரீரமும் பலமிழந்திருத்தல்.

**ஸ்டிக்டா:** தன் சரீரம் காற்றில் பறப்பதுபோன்ற உணர்ச்சி.

**ஸ்டரமோனியம்:** ஆத்திரத்துடன் பிதற்றல்கள் (பயத்தில் பார்க்க) படுக்கையிலிருந்து எழுந்தோட முயற்சித்தல், (பேசுதலில் பார்க்க ஜன்னிவாதத்தில் பார்க்க, நினைப்பில் பார்க்க.) காமக் கிளர்ச்சி, அடுத்ததாக மயக்கம் அல்லது சிறு வலிப்புகள் இதன் பின் முழு மயக்கம். குறட்டை வாங்குதல். கண்களை சொருகிக் கொள்ளுதல் மமதை (பயித்தியத்தில் பார்க்க.) தன் சமீபத்திலிருப்பவர்களை கோபத்துடன் அடித்தல், கடித்தல், மறு சமயம் அதிக சந்தோஷத்துடன் இருத்தல். ஆடுதல், பாடுதல் எது செய்தாலும் மிகக் கடுமையாகவேயிருக்கும். (நினைப்பில் பார்க்க.) (அமைதியில் பார்க்க.) தன்னை நோக்கி ஒரு நாய் அல்லது துஷ்ட மிருகம் ஓடிவருவது போல் பிரமை ஏற்பட்டு அதை அடிக்கவும் அத்துடன் சண்டை போடவும் முயற்சிப்பது போன்ற சேஷ்டைகள். தன் சரீரம் அளவுக்கு மீறி மிகப் பெருத்துவிட்டது போன்ற பிரமை. தன் சரீரத்தைப்பற்றிய தாறுமாறுன எண்ணங்கள் தான் தென்னைமரம் போன்ற உயரமாக இருப்பதாக எண்ணம். அமைதியின்மை.

**ஸ்பாஞ்சியா:** அவ்வப்போது இருதயத்தில் ஏற்படும் வலி. படபடப்பு மூச்சுத்திணறல் இவைகளால் கவலையடைதல். சாவைப்பற்றிய பயம். ஆனால் வாழ்க்கையில் வெறுப்பு சிறு உழைப்பின் பின்னும் பலவீனம். சரீரம் கனத்த உணர்ச்சி. அப்போது பித்தம் தலைக்கு ஏறுதல்.

**ஸ்பைஜீலியா:** ஞாபக சக்தி குறைவு. மன உழைப்பிற்குச் சக்தியின்மை, வருத்தம், தற்கொலை எண்ணம். கூரான ஆயுதங்களிடம் அதிகப் பயம், திக்கல்கள்.

**ஹயாஸ்யாமஸ்:** நினைவுத் தடுமாற்றம். பிதற்றல்கள். கைகளால் எதையோ பிடிப்பதைப்போல் செய்தல், துணிகளை இழுத்தல். பிறருக்குப்புரியாத பேச்சு. (பேசுதலில் பார்க்க) மானத்தை இழந்த பேச்சுகள். ஆபாச வார்த்தை

களைப் பிதற்றுதல். பைத்தியம். பிறர்மேல் சந்தேகங் கொள்ளல். தனக்கு விஷம் வைத்துவிடுவார்கள் என்ற எண்ணம். மர்ம ஸ்தானங்களைத் திறந்து வைத்துக் கொள்ளல். பொறாமையால் ஏற்பட்ட உபாதிகள், அலட்டுதல், புலம்புதல், கேலி சேஷ்டைகள். ஆத்திரத்துடன் அடிக்கவும், கடிக்கவும் வருதல். அலறுதல், மயக்கம். பிரக்ஞையின்மை. துடிப்பு, நடுக்கல்கள். (நினைப்பில் பார்க்க.) சுவற்றில் வரிசையாக மூட்டைப் பூச்சிகள் இருப்பது போன்றும், அவைகளைக் கயிற்றால் கட்டுவதுபோன்று பாடுபட்டுச் சேஷ்டைகள் செய்தல். வெளிச்சமும் தன்பக்கத்தில் மற்றவர் இருப்பதும் சகிக்காமை. விரல்களால் சேஷ்டைகள் செய்துகொண்டேயிருத்தல். காதல் பலியாதலால் ஏற்பட்ட பயித்தியம், காக்கை வலிப்பு.

**ஹீபர்ஸல்பர் :** சகிப்பு தன்மையின்மை. சிடுசிடுப்பு அவசரப் பேச்சு அவசரமாகத் தண்ணீர் குடித்தல், சண்டை போடும் குணம்.

**ஹெலோனியாஸ் :** (மனதை வேறு விஷயத்தில் செலுத்தியிருக்கும்போது உபாதிகள் சமனம்) உற்சாகக் குறைவு.

**ஹெல்லிபோரஸ் :** பிரக்ஞை இன்மை, ஜன்னி, அமைதியின்மை முணமுணக்கும் பிதற்றல்கள். மந்தமாகப் படுத்திருத்தல். ஒன்றும் சொல்லாமை. தசைகளை தன்னிஷ்டபடி அசைக்க முடியாமை. பேந்த பேந்த விழித்தல். கைகால் முதலிய உறுப்புகள் தன்னுணர்வின்றி அசைதல். பேசுவதைக் கேட்டு பேந்தப் பேந்த விழித்தல். பேசுவதை கிரகிக்கும் சக்தி குறைந்துவிடுதல். சரீரத்தின் எல்லா உணர்ச்சிகளும் அற்றுவிடும் நிலைமை.

**ஹைடிராஸ்டிஸ் :** அசதி. தான் சாவது நிச்சயமென்றும் தான் இறந்து விடுவதே நல்லதென்றும் நினைத்தல்.

**ஹைபெரிகம் :** அதிர்ச்சிகளால் ஏற்படும் கோளாறுகள், பிரமை பிடித்தது போலிருத்தல், எப்போதும் போதை கொண்டது போலிருத்தல். ஆகாயத்தில் மிதப்பது போன்ற உணர்ச்சி.

# தலை

**அகோரிகஸ்:** குளிர்ந்த ஊசியால் குத்துதல்போன்ற தலைவலி, நரம்புத் தலைவலி, கண்களின் உழைப்பால் ஏற்பட்ட தலை நெருக்கம்.

**அகோனைட்:** தானும் தன்னைச்சுற்றியவையும் சுற்றுவது போலிருத்தல். மயக்கம், வறண்ட குளிர்ந்தகாற்றுத் தாக்கியபின் இரத்தத் தேக்கத்தால் மயக்கம். சூரியஇடி, கண்களின் மேற்புறத் தலைவலி, கிழிக்கும் தலைவலி, அதிகமான மூத்திரத்துடன் தலைவலி.

**அக்டியா ரஸிமோஸா:** வெடிக்கும் தலைவலி, உச்சி பறத்தல்போலிருத்தல்; வலி தலையின் பின்புறத்திலிருந்து வலது கண்ணில் தங்குதல், இடதுகண் பக்கத்தலைவலி. விழியில் வலியுடன் தலைவலி. (இரவில் உபாதி அதிகம்) தலையை குனியமுடியாமை. உச்சந்தலையில் மந்த உணர்ச்சி. குனியும்போதும் காலையில் தூங்கி யெழுந்திருக்கும் போதும் தலைச்சுற்றல். படுக்கையிலிருந்து தலையைத் தூக்கினால் குமட்டல். பின் தலையிலிருந்து உச்சிவரை வலி. நெற்றி, கழுத்திலிருந்து உச்சியில் கடுமையான ஆணி அடிக்கும் உணர்ச்சி. நரம்புத் தலைவலி, முன்புறம் வளைக்கமுடியாமை (உபாதி அதிகமாதல்; அசைவு, மாத விடாய், திறந்தவெளி, அழுக்குதல் குளிர்ந்த ஒற்றிடங்கள்)

**அக்னஸ் காஸ்டஸ்:** தலை முன்புறம் விழுவதுபோலிருத்தல். கழுத்தில் கனம், அமுக்கம். நெற்றிப்பொட்டில் அமுக்கும், கிழிக்கும் தலைவலி, பொட்டைச்சுற்றிய தலைவலி. தலை மந்தமாகவிருத்தல். நீடித்த தலைவலி, நடுக்கம், வாந்தி.

**அபிஸிந்தியம்:** தலை பின்புறமாக விழுதல்.

**அபிஸ்மெல்லிபிகா:** தலையை உருட்டிக்கொண்டே யிருத்தல், பின்புறமாக இழுக்கப்படுதல், தலையணைக்குள் புகுத்திக் கொள்ளல், நெற்றி, பொட்டு, பின்தலை, கண்களின மேல் புறம், கொட்டும், தெறிக்கும் வலி, தலையைக் கீழே

வைத்திருத்தல், அசைவு, குனிவதால், உபாதி அதிகம். இடதுபுறம் இழுப்புடன் அதிக வலி, உச்சியில் குழி விழுதல், தலை வியர்த்தல்.

**அபோஸினம் :** தலைக்கனம்.

**அப்ரோடேனம் :** குழந்தைகள் தலையை நிமிர்த்தி வைத்துக் கொள்ள முடியாமை.

**அமில்நைட்ரேட் :** சூடு, துடித்தல், இருதய இறுக்கத்தால் தலைக்கு இரத்தமேறுதல். மாதவிடாய் நிற்குங்காலத்தில் தலைக்கு இரத்தமேறுதல்.

**அமோனியா கார்ப் :** காலையில் எழுந்தவுடன் கிறுகிறுப்பு, நாள் முழுவதுமிருத்தல், இரவிலும் மாலையிலும் தலையை அசைத்தாலும் உபாதி அதிகம். பிற்பகல் நடப்பது, குளிப்பது, குளிர்காலத்தாலும் தலைவலி அதிகரித்தல். காலையில் தலைவலியும், குமட்டலும் உச்சி வெடிப்பது போலிருத்தல், கண்களின் முன் மின்னுவதுபோன்ற குறியுடன் நெற்றி வலி. குளிர்காலத்தில் தலைக்கனம், உண்டபின், திறந்த வெளி, உஷ்ண அறை, அழுக்குதல் இவைகளால் நெற்றி வலி.

**அமோனியா மூரி :** கீழேவிழுதல்போன்ற கிறுகிறுப்பு. மூக்குத் தண்டு அடியிலும் நெற்றியிலும் கனம், அழுக்கம். பிடறிக்கழுத்தில் சுண்டியிழுக்கும் வலி. குனிந்தால் தலை உச்சியிலும் இடது பொட்டிலும் பிடிப்புவலி, உச்சி உடைந்துவிடும்போலிருத்தல். முகம், வலதுபொட்டில், கிழிக்கும் வலி.

**அம்ப்ரா க்ரீஸியா :** வலதுபாகத்தில் ஒரு சிறிய இடத்தில் வலி. பொட்டிலிருந்து ஆரம்பிக்கும் தலைவலி. இழுக்கும் கிழிக்கும் வலி. தெருவில் போகமுடியாமை. காலையிலும் வேலைசெய்தாலும், தூங்கினபின்பும், மூக்குசிந்துவதாலும் உபாதி அதிகம். ஓய்வில் உபாதி சமனம். தலையில் மயிர் உதிர்தல். சங்கீதத்தால் தலையில் இரத்தம் ஏறுதல். உச்சிக்கனம், வயோதிகர்களின் கிறுகிறுப்பு.

**அயிலாந்தஸ் :** கிறுகிறுப்பு, சூடானமுகம், உட்காரமுடியாமை, மயக்கம், அமைதியின்மை, கவலை, பிதற்றல், மயக்கம், உணர்ச்சியற்றிருத்தல், தலைவழியாக ஏதோ மின்சார சக்தி போவதுபோன்ற உணர்ச்சி. (இடது புறம்) or கைகால்களுக்குச் செல்லுதல்.

**அரேனியா டயாடிமா :** தலைவலி, சதுப்பு நிலம், குளிர்ந்த பருவத்தால் அதிகமாதல். தலைவலியின்பின் வாந்தி, சுருட்டு, திறந்த வெளியில் தலைவலி சமனம்.

**அர்ஜண்டம் நைட்ரிகம் :** தலைவலி, துடிப்பு, எரிச்சல். சில்லிப்பாலும் இறுகக் கட்டுவதாலும் சமனம். தலை பெரிதாயிருக்கும் உணர்ச்சி, மனதினுல் வேலை செய்தால் தலைவலி, தலையின் இடது பாதியில் வலி, பெரிதாயிருக்கும் உணர்ச்சி, கோபமாயிருக்கும்போது தலைவலி.

**அர்ஜண்டம் மெடாலிகம் :** தலையில் இரத்தப்பெருக்கு, இதனுல் கன்னங்கள் சிவத்தல், நெற்றியில் வலி, பொட்டுகளில் அமுக்கும் வலி, உஷ்ணம், அமுக்குதல், துணியால் இறுகக் கட்டுதல், இவைகளால் சமனம், தலைசுற்றல். தலையில் சூன்ய உணர்ச்சி.

**அலுமினு :** துடிக்கும் நெற்றிவலி. மலச்சிக்கலுள்ள தலைவலி' அமைதியாகப் படுத்தால் சமனம். தலையில் முண்டாசு இறுகக் கட்டியிருப்பதுபோன்ற உணர்ச்சி. மயிர் உதிர்ந்து கொண்டிருத்தல்.

**அல்லியம் ஸீபா :** காலையிலும் வீட்டிலிருக்கும்போதும் ஜல தோஷத்துடன் தலையிலும் நெற்றியிலும் தலைவலி. திறந்த வெளியில் சமனம். பொட்டுகளில் உடைக்கும் கிழிக்கும் துடிக்கும் தலைவலி நெற்றிவரை பரவுதல், வெளிச்சத்தைப் பார்ப்பதில் வெறுப்பு.

**அவீனு ஸடீவா :** பிடரித் தலைவலி.

**அஸ்குலஸ் ஹிபோ :** மந்தமான நெற்றித் தலைவலி. மந்தத் தலைவலி அதன்பின் அடிவயிற்றின் வலது பக்கத்தில் பிடிப்பு வலி, இடது பக்கத்திற்கு செல்லுதல். பின் தலையில் நசுங்கி விழும்போன்ற மந்தமான வலி.

**அஸ்கிளிபியாஸ் :** நெற்றி, உச்சந்தலைவலி, அசைவால் அதிகம், படுத்தால் சமனம்.

**அஸபோடிடா :** தலையினுள்ளிருந்து வெளிப்பக்கமாகச் செல்லும் பிடிப்பு வலியுடன் தலைவலி. மாலையில் நெற்றியிலும் பொட்டுகளிலும் வலி. வீட்டிலிருக்கும்போதும், களைப்பாறும்போதும் உட்கார்ந்திருக்கும் சமயத்திலும், அதிகம் திறந்த வெளியில் நடந்தால் சமனம், தலையில் சில்லிட்ட வியர்வை, முண்டுகள் மண்டையோட்டில் மறமறப்பு.

**அனகார்டியம் ஓரி :** எல்லாவிதமான உணர்ச்சிகளும் பலஹீனம், எதையேனும் கொஞ்சம் கவனித்தால் தலைவலி, உச்சியின் இடது பாகத்திலும் முன் தலைப் பொட்டுகளிலும் மூளையை வைத்து அழுத்துவது போன்ற மந்தவலி. நரம்பு சம்பந்தமான தலைவலி, தலைவலி சாப்பிடுவதால் சமனம்,

**ஆண்டிமோனியம் ஆர்ஸனிகம் :** அதிக ரத்தத் தேக்கம், நெற்றி, பொட்டு வலி.

**ஆண்டிமோனியம் க்ரூடம் :** கிறுகிறுப்பு, குமட்டல் மூக்கிலிருந்து இரத்தம் கொட்டுதல், தலைக்கு இரத்தம் விரைவாகச் செல்லுதல், மந்தத் தலைவலி, கிருகிருப்பு உயர ஏறுவதால் அதிகமாதல், நெற்றி வியர்வையுடன் வலித்தல். ஆற்று நீரில் குளித்தால் ஜீரணக் கோளாறுகள், மூக்கிலிருந்துவடியும் நீர் குறைந்தவுடன் தலைவலி ஆரம்பித்தல்.

**ஆண்டிமோனியம் டார்டாரிகம் :** (கிறுகிறுப்பில் பார்க்க) தலையைத் தூக்கும்போதும் கிறுகிறுப்பு, அமுக்கும் வலி, நெற்றி துடித்தல், வலப்பக்கம் நெற்றியிலும் பொட்டுகளிலும் இடது கண்ணுக்கருகில் பிடிப்பு வலிகள், இருமும்போது தலை நடுங்குதல். நெற்றியைச் சுற்றியும் கயிற்றால் கட்டிய உணர்ச்சி, வலது பொட்டில் இழுக்கும் வலி தாடை வரையிலும் பரவுதல்.

**ஆரம்டிரிபில்லம் :** தலை அல்லது பொட்டுகள் மந்தமான அமுக்கும் வலி. சூடு, உஷ்ண அறைகளில் அதிகமாதல், பொட்டுகள், கண்கள், பிடரித்தலை, முதலியவைகளில் பிடிப்பு வலி.

**ஆரம் மூரி**: காலையில் எழுந்திருக்கும் போதும், மாலையிலும் இடது பொட்டில் துடிக்கும் வலி குளிர்ந்த தண்ணீர் ஒற்றிடத்தால் சமனம் நெற்றியில் அரிப்பு.

**ஆரம் மெட்டாலிகம்**: நெற்றியிலும் பொட்டுகளிலும் ஆழ்ந்த கிழிக்கும் வலி. தலைவலி மன உழைப்பாலும் காலையிலும் அதிகரித்தல். திறந்த வெளியிலும் துணியால் இறுக்கிக் கட்டினாலும் சமனம் ரத்தம் வேகமாக அதிகரித்தல், அடிபட்டதுபோல் வலி. தலையில் குடைதல், பைத்திய மடையச் செய்யும் கடுந்தலைவலி. தன்மேல் காற்று அடிக்கும் உணர்ச்சி. இருதயத் தொந்திரவுடன் தலைவலி, குமட்டல், பித்த வாந்தி, மண்டையோடுகளில் வலி. அடிபட்டதுபோல் இசிவு. படுத்தால் அதிகரித்தல், தலையிலும் மூக்கிலும் உள்ள எலும்புகள் அழுகுதல்.

**ஆர்சனிகம் ஆல்பம்**: நரம்பு சம்பந்த தலைவலி 3, 4, 7, 12, 15 நாட்களுக்கொருமுறை தவறுமல்வரும் தலைவலி, அமுக்கும் தலைவலி. உச்சந்தலையிலும், தலையிலும் எரிச்சல் வென்னீர் ஸ்நானத்தாலும், அமுக்குவதாலும் சமனம் வாத சம்பந்த வலிகளானுல் உஷ்ணத்தால் சமனம். தலைவலியும் அதிமூத்திரப் போக்கும் மாறி மாறி வருதல், பிடரியில் கடுமையான வலியால் மயக்கமுறச் செய்தல் அதியுணர்ச்சியுள்ள மண்டையோடு, தலைமயிரைத்தொடச் சகிக்காமை வலிகள் இடப்பாகத்திலும், இடப்பாகத்தில் படுப்பதாலும் அதிகரித்தல். சீழுடன்கூடிய நீடித்த சிரங்குகள். மயிர் உதிர்தல்.

**ஆர்னிகா மொன்டானு**: கண்களுக்கு நேராக நெற்றியில் அமுக்கும் வலி பொட்டுகளில் பிடிப்பு வலி அசைந்தாலும், படித்தாலும், அதிகமாதல் நள்ளிரவில் பொட்டுகளில் ஆணியை அடிப்பது போன்ற வலி, மூர்ச்சை அடைதல், தலை சூடாகவும் சரீரம் சில்லிப்பாகவுமிருத்தல், தலையில் அடிபட்டதால் ஏற்பட்ட கோளாறுகள், மூளைத் தொந்திரவுகள்.

**ஆலோ ஸொகோட்ரினு**: கிறுகிறுப்பு, மாடிப்படி ஏறும்போதும் தலையைத் திடீரென்று திருப்பும்போதும் தலைச்சுற்றல். மூக்கிலிருந்து நீர்வடிய ஆரம்பித்தவுடன் சற்று சமனம்.

சூடான தலை, நெற்றியில் வலி கண்களில் கனம், குமட்டல் கண்களைக் குறுக்கிக்கொள்ளுதல், பொட்டுகளில் தைக்கும் வலி, அடியெடுத்து வைக்கும்போது அதிகமாதல், மலச்சிக்கலால் தலைவலி. சூடான தலை சில்லிப்புள்ள கால்கள், குளிர்ந்த ஒற்றிடங்களால் தலைவலி சமனப்படுதல்.

**ஆஸிட் அஸடிக்:** புகையிலை, அபின், கஞ்சா, காபி, சாராயம் இவைகளால் உண்டாகும் தலைவலி.

**ஆஸிட் ஆக்ஸாலிக்:** மலம் கழிப்பதன் முன் தலைவலி, தலையில் காலியாயிருப்பது போன்றும் மூளையில் இருக்கும் ரத்தம் எல்லாம் வெளியே போய்விட்டது போன்றும் தோன்றுதல். உச்சந்தலையிலும் நெற்றியிலும் கனம், மந்தவலி, காதுகளின் பின் திருகாணி இருப்பதுபோல் தோன்றுதல். உச்சந்தலைக்கும் பின் தலைக்கும் நடுவில் உட்புறமாகச் செல்லும் தலைவலி. சிறிய இடங்களில் தலைவலி தூங்கின பின்னும் கீழே படுத்தாலும் சாராயம் குடித்தாலும் எழுந்திருந்தாலும் அதிகமாதல். மலங்கழித்தால் சமனமாகும். மண்டையோட்டில் சிலவிடங்களில் வலி.

**ஆஸிட் கார்பாலிக்:** நெற்றியில் இறுக்க உணர்ச்சி.

**ஆஸிட் நைட்ரிக்:** காலைகளில் கிறுகிறுப்பு, படுத்திருக்கவேண்டி வருதல், வண்டிகளில் பிரயாணம் செய்வதால் சமனம். ஆனால் வண்டிகள் கடகடவென்று ஆடினால் சகிக்க முடியாமை. வெளியிலிருந்து இரண்டு இரும்புப் பட்டைகளை வைத்து அமுக்குவது போன்ற உணர்ச்சி தலையில் வலி, திடீரென்று தூக்கிப் போடுவதனாலும், அசைவதனாலும் அதிகம். தலையில் தலைப்பாகை வைத்துக் கொள்வதுகூட சகிக்க முடியாமை. மண்டை ஓடுகள் உளுத்துப்போதல், மயிர் உதிர்தல், கூரிய வலிகள். தலையை இறுகக் கட்டியதுபோன்ற வலி.

**ஆஸிட் பாஸ்பாரிக்:** குழப்பம், எழுந்து உட்கார்ந்தால் தலை சுற்றுதல். மயக்கத்தை உண்டுபண்ணும் நெற்றித் தலைவலி. வருத்தத்தாலோ அல்லது பயத்தாலோ ஏற்பட்ட நீடித்த மண்டைக்கனம். கண்களை அதிகமாக உப

யோகித்ததினுல் எற்படும் தலைவலி. பிடரியில் கனத்துடன் வலி. மயிர், காலத்திற்கு முன் நரைத்தல் உதிர்தல்.

ஆஸிட் பிக்ரிக்: தலைவலி, துணியால் இறுகக்கட்டினுல் சமனம்,

ஆஸிட் பென்சாயிக்: தலைச் சுற்றல். பக்கங்களில் விழும்படியான கிறுகிறுப்பு.

ஆஸிட்ப்ளுவாரிக்: பிடரி, பொட்டுகளில் அமுக்கும் வலி. நெற்றியில் மதமதத்த உணர்ச்சி, சடைவிழுதல், புதிதாக முளைக்கும் மயிர் இலகுவில் அறுந்துவிடுதல்.

ஆஸிட் மூரி: கல்லீரல் கோளாறுகளால் ஏற்படும் தலைச் சுற்றல், இடது புறம் படுத்தால் சமனம்.

ஆஸிட் ஸல்பியூரிக்: வலதுபக்கத் தலைவலி, வலியுடன் வெட்டியிழுக்கும் உணர்ச்சி, சருமத்தைக் கிள்ளுவது போன்ற உணர்ச்சி. வலது பொட்டில் ஒரு முளையை இருக்குவது போல் வலி.

இக்கினேஷியா: நெற்றி அல்லது உச்சியில் அமுக்கும் தலைவலி. மலம் கழிக்க முக்கும்போது பிடரியில் வலி. பசித்தலை வலி. தலையின் ஒரு பாகத்தில் ஆணியால் அடிப்பது போல் வலி. அந்தப்பக்கத்தைக் கீழே வைத்துப் படுத்தால் சமனம். உஷ்ணத்தாலும், சாப்பிடும்போதும் மெதுவாக அமுக்குவதாலும், அதிக மூத்திரம் வெளியாவதாலும், சமனம். உபாதி அதிகம்: சாப்பிட்டபின், காலையில் கண்களை அசைப்பதால், உற்றுப் பார்ப்பதால், சப்தம், பேசுவது, கேட்பது, குளிர்காற்று, திடீரென்று தலையைத் திருகுவது. காபி, புகையிலை சாராயம் முதலியவைகளால் அதிகரிக்கும். தலைவலி நின்றதும் ஏராள மூத்திரம் வெளியாதல், முன்பக்கமாகக் குனிந்தால் தலைவலி சமனம். இரண்டிரண்டு நாட்கள் முறை வைத்து வரும் தலைவலி,

இபிகாக்உனு: பின்தலையிலும், பின்கழுத்திலும் தலைவலி.

ஐயோடியம்: தலைவலி. இடதுபக்கத்தில் தலையை இறுகக் கட்டிய உணர்ச்சியுடன் தலைவலி. கதகதப்பான காற்று வண்டியில் எழுந்து நிற்பது. வேகமாக நடப்பது, முதலியவைகளால் அதிகரித்தல். பிரதி அசைவிலும் பொட்டுகளில் துடிப்பு. மற்றக்குறிகள் அசைவால்

சமனப்படினும் தலைக்குறிகள் மட்டும் அதிகரிக்கும். இடைவிடாமல் தலையில் ரத்தம் கூடுதல். இதனால் தலைவலி. இறுகக்கட்டிய உணர்ச்சி.

**ஐரீஸ் வர்ஸிகோலர்:** காலை ஆகாரம் உண்டவுடன் பிளக்கும் தலைவலி ஆரம்பித்தல். நெற்றியின் வலது பக்கத்தில் துடிப்பு, குமட்டல். உச்சந்தலை பறந்து விடுமென்று நினைத்தல். மந்தத் தலைவலி. பொதுவாகத் தலைவலி அசைந்தால் சமனம் (உபாதி அதிகம்: மாலை இளைப்பாறும்போது) வேகமாக அசையும்போது, குளிர் காற்று, இருமுவது) பார்வை மங்கலுடன் 8 நாட்களுக்கு அல்லது சில தினங்கட்கொரு முறை தலைவலி வருதல் வலி கண்களின் மேற்புறம் ஆரம்பித்தல். தலைவலி நின்றபின் பார்வை ஒழுங்குக்கு வருதல் கல்லீரல் அல்லது அஜீரணத் தலைவலி.

**ஓநோஸ்மோடியம்:** பிடரித் தலைவலி, நெற்றி, பின் கழுத்துக்குச் செல்லுதல் (காலையில் எழுந்ததும்) தலைக்குமேல் கையைத் தூக்கினாலும், இடது பக்கமாகப் படுத்தாலும் அதிகரித்தல், ஜனனேந்திரியங்களின் பலஹீனத்தால் ஏற்படும் முறைத் தலைவலி.

**ஓபியம்:** எழுந்தவுடன் மயக்கம், தலை பின்னுக்கிழுக்கப்பட்ட மூளை ஜுரம். கிழவர்கட்குத் தலை லேசாக இருக்கும் உணர்ச்சி. போர்வையை உதறித் தள்ளிக் குளிர்ந்த அறைக்குச் செல்லுதல். சருமம் முகம் சிவத்தல், கண்ணினுள் கருமணி குருகியிருத்தல், சூடான தண்ணீரில் ஸ்நானம், சூடான ஒற்றிடங்களால் உபாதி அதிகம், தலையில் ரத்தம் விரைவாகக் கூடுதல்.

**ஒலியாண்டர்:** தலையில் பேன் இருப்பதுபோல் கடிக்கும் உணர்ச்சி. அரிப்பு, சொரிந்தால் சமனம். பிறகு எரிச்சல் அதன்பின் அரிப்பு. தலைத் தோலில் கொப்புளங்கள். ஆடையைக் கழற்றும்போது அரிப்பு அதிகரித்தல். பக்கவாட்டமாகப் பார்த்தால் தலைவலி சமனமாதல்;

**ஔிமம் ஸாங்டம்:** தலைவலி, கைகால் வலி, இருமல், ஜலதோஷம் தலையைக் கைகளால் தாங்கிக் கொண்டால் இருமல் சமனமாதல்.

**கந்தாரிஸ் :** பின் கழுத்திலிருந்து நெற்றிவரை தலைவலி. தலையைச் சீவிக்கொள்ளும்போது மயிர் உதிர்தல், மூளையினுள்ளே எரிச்சல். நடந்தாலும் கீழே படுத்தாலும் சமனமாதல்.

**கல்கேரியா அஸடிகா :** வலது பொட்டில் இழுக்கும் வலி.

**கல்கேரியா ஆர்ஸனிக் :** தலைக்கு அதிவேகமாக ரத்தம் பாய்தல். கிறுகிறுப்பு வலிப்புகள், வலியுள்ள இடத்தைக் கீழே வைத்துப் படுப்பதால் வலிகள் சமனம். படுத்துக் கொண்டிருக்கும் பக்கத்திலிருந்து தலைவலி ஆரம்பித்து மறுபக்கத்திற்குச் செல்லுதல்.

**கல்கேரியாகார்ப் :** உஷ்ணத்துடன் தலையில் வேகமான ரத்தம் பாய்தல். அதனுல் முகம் சிவந்தும் சுரந்தும் இருத்தல். காக்கை வலிப்பு. கண்களுக்கு மேலாக நெற்றியில் அதிக வலி உச்சந்தலையில் வெடித்துவிடும்போல் வலி. தலைவலி அசைவு, நடத்தல், மாடிப்படி ஏறுதல் முதலியவை களால் அதிகரித்தல். (உபாதி சமனம்: இறுகக்கட்டுதல்: இருட்டறை, கண்களை மூடுதல், சூடான ஒற்றிடங்கள் முதலியவைகளால் சமனம்.) உச்சந்தலை பனிக்கட்டி போல் சில்லிடல். ஆனுல் எரிச்சல். ஒரு பக்கம் தலைவலி. பெரிய தலை. உச்சிக்குழி திறந்திருத்தல். கெட்டியான பொருக்குகள் அவற்றைப் பிடித்திழுத்தால் ரத்தம் வருதல். சிலசமயங்களில் மஞ்சளாகச் சீழ்வருதல், தலையைத் திருப்பினுல் கிறுகிறுப்பு

**கல்கேரியா பாஸ் :** உச்சிக்குழி மூடாமை குழந்தைகளுக்கு பிடரித் தலையில் வலி. தலைப்பாகை முதலியவைகளால் ஏற்படும் தலைவலி, உச்சந்தலையில் ஐஸ் வைத்திருப்பது போல் ஊரும் உணர்ச்சி, மண்டையோடு, மிருதுவாகவும் மெல்லியதாகவும், அமுக்கினுல் நொறுங்குவது போன்ற ஓசையுடனும் இருக்கும். உச்சிக்குழியின் இருபாகங் களுமே திறந்திருத்தல், அதிகப்படிப்பினுல் உண்டாகும் தலைவலி.

**கல்கேரியா ப்ளோரிகா :** நொறுங்கும் சப்தம். பிறந்த குழந்தை களின் தலையில் ரத்தக்கட்டிகள். வீக்கம், மண்டையில் கடினமான கழலைக் கட்டிகள். கடினமான ஓரங்களுள்ள குழிப்புண்கள்.

**கல்கேரியாஸல்ப்:** எப்போதும் இடைவிடாத தலைவலி, திறந்த வெளியில் சமனம், அசைவு, சப்தம், மாதவிடாய்க்காலம் முதலியவைகளால் அதிகரித்தல். பகல் 4 மணிக்குத் தலைப் பாகை வைத்திருப்பது போன்ற உணர்ச்சி.

**கல்கேரியாஹைபோபாஸ்:** உச்சந்தலையில் மந்தமான கனத்துடன் தலைவலி. தலையிலும் மார்பிலும் நிறைந்த உணர்ச்சி. தலையில் அசுத்த ரத்தக் குழாய்கள் கயிறு போல் பருத்திருத்தல்.

**கன்னபிஸ் இண்டிகா:** நெற்றியில் புடைக்கும் வலி. வலது பொட்டில் மந்தமான பிடிப்பு வலி. மூளையினுள்ளே கடுமையான அழற்சி ஏற்படுவதுபோன்ற தோற்றம். கிறுகிறுப்பு. தலை தானகவே ஆடுதல். தலை தானே திறந்துகொண்டும் மூடிக்கொண்டும் இருப்பது போன்ற உணர்ச்சி தலை மிகவும் கடினமாக இருக்கும் உணர்ச்சி. இதனுல் பிரக்ஞை இழந்து கீழே விழுதல்.

**கன்னபிஸ் ஸடிவா:** தலைக்கு ரத்தம் வேகமாகச் சென்று அதனுல் உஷ்ணமும் அனல் வீசும் உணர்ச்சியும், தண்ணீர் சொட்டுவது போன்ற உணர்ச்சி. நெற்றியிலும் பொட்டுகளிலும் வலி.

**காக்குலஸ்:** கிறுகிறுப்பு, மயக்கம், கண்கள் கிழிந்துவிட்டது போன்ற உணர்ச்சியுடனும் குமட்டலுடனும் தலைவலி. குளிர் காற்ருல் அதிகரித்தல் நெற்றியில் துணியால் இறுகக் கட்டியதுபோல் துடிக்கும் தலைவலி. வண்டி சவாரியால் அதிகரித்தல், சாப்பிடுதல், குடித்தல், தூங்குதல் முதலியவைகளால் கலக்கம். கழுத்துத் தசை பலஹீனத்தால் தலையைத் தூக்கமுடியாமை. (உபாதி அதிகம்: மல்லார்ந்து படுத்தல், மாலை வேளை யோசனை செய்தல், ஒலி, ஒளி முதலியவைகளால் உபாதி அதிகரித்தல்) (உபாதிசமனம்: வீட்டிற்குள் படுத்தால் உபாதி சமனமாதல்.)

**காக்டஸ்க்ராண்டிப்ளோரஸ்:** ரத்தத்திரட்சியால் முகம் சிவந்து ரத்தம் செறிதல். தலையை இறுக்கும் உணர்ச்சி. உச்சந்தலையில் கனமான வஸ்துவால் அமுக்கும் உணச்சி, இந்த ஒரு குறி மட்டும் அமுக்குவதால் சற்று சமனமடையும். பேச்சு, சப்தம், பிரகாசம், முதலியவைகளால் அதிகரித்

தல். பொட்டுகளில் (வலது) புடைக்கும் வலி, மண்டை வெடித்துவிடும் போல் தோன்றுதல், தலைவலி வலப் பாகத்தில் அதிகம்.

**காட்மியம் ஸல்ப்:** குளிர்ந்த தண்ணீர் குடிப்பதால் மயிர்க்கூச்ச லெடுத்தல்.

**காபியாக்ரூடா:** இரவிலும் சாப்பிட்ட பின்னும் விட்டு விட்டு வரும் தலைவலி. உபாதிகள் வாயை மெல்லுவது, சூடான பானங்கள், சூடு, முதலியவைகளால் அதிகரித்தல். சில்லென்றபானங்களை வாயில் வைத்திருப்பதால் சமனம். தலையில் ஆணிவைத்து அடிப்பது போன்றவலி, மனமும் சரீரமும் நள்ளிரவுவரை வழக்கத்திற்கு விரோதமாகச் சுறு சுறுப்புடன் வேலை செய்தல். இதனால் தூக்கம் கெடுதல், தாங்க முடியாத தலைவலியால் ஏக்கங்கொள்ளல். ஒருபக்கத்தலைவலி.

**காப்ஸிகம்:** அசைக்கும்போது அல்லது இருமும்போது அல்லது நடக்கும்போது மண்டையோடு வெடித்துவிடும் போன்ற தலைவலி. தலையைக்கைகளால் பிடித்துக் கொள்ளல், நெற்றியிலோ அல்லது தலையின் பக்கங் களிலோ துடிக்கும் புடைக்கும்வலி. தலைத் தோலில் அரிப்பு, எரிச்சல், சொறிந்தவுடன் சற்று சமனம். பிறகு அதிகரித்தல்.

**காமோமில்லா:** மூளையின் ஒருபக்கத்தில் புடைக்குந்தலைவலி, தலையைப் பின்புறமாகச் சாய்க்க விரும்புதல். நெற்றியிலும் தலையிலும் சூடான கசகசத்த வியர்வை.

**காம்போரா:** (கிறுகிறுப்பில் பார்க்க) நடக்கும்போது தடு மாறுதல். தலையில் அதிக ரத்தத்திரட்சி. பின்தலையில் புடைக்கும் தலைவலி. சம்மட்டியால் அடிப்பது போன்ற வலி. சூடானதலை; சிவந்தமுகம் சில்லிட்ட கால்கள், நின்றால் சமனம். குனிந்தால் அதிகம், தலையில் இருக்கும் வலி விரல்களின் நுனிக்குச்செல்லுதல், இத்துடன் நடுக்கம், மனோவேதனை.

**கார்டூஸ் மரியேனஸ்:** மந்தத்தலைவலி பிறகு பித்தவாந்தி, ரத்தத்திரட்சியுடன் தலைவலி, மந்தத்தலைவலியுடன் மஞ்சட்காமாலை, பித்தத்தலைவலி.

**கார்பன் ஸல்ப்:** தலைக்கு ரத்தம் அதிகவேகமாகச் செல்லுதல், நெற்றியில் சில்லிப்பு இருக்கும் உணர்ச்சி. கசகசப்பான பொருக்குகள் உள்ள சொரிசிரங்குகள். தலைமயிர் கொட்டுதல் தலைப்பாகையை இறுகக் கட்டினாற்போன்ற தலைவலி. அசைவாலும் மாலையிலும் அதிகம். தலையில் பலவித சப்தங்கள்.

**கார்போ அனிமாலிஸ்:** அதிக ரத்தத் திரட்சி, கலக்கம், பிடரித் தலையில் கிழிக்கும் வலி, குளிர்ந்த காற்றிலும் திறந்த வெளியிலும் அதிகரித்தல், உச்சந்தலையில் பிளப்பது போன்றிருத்தல்.

**கார்போ வெஜி:** எந்த விஷயத்தில் அமிதமாக இருப்பினும் வலி ஏற்படுதல். மயிர்க்கால்களில் வலி. சுலபமாக மயிர் உதிர்தல். படுத்திருக்கும்போது படுக்கைச் சூட்டால் தலைத் தோலில் அரிப்பு. தலையில் முண்டாசு கட்டினால் பெருஞ்சுமை தூக்குவதுபோல் கனத்தல். காதுகளில் கிண்கிணென்ற ஒலியுடனும் குமட்டலுடனும் கிறு கிறுப்பு.

**காலாடியம்:** சுருட்டுக்குடிப்பவர்களின் தலைவலி, தோள்பட்டை வலி. கண் நெற்றியில் அழுத்தும் உணர்ச்சியுடன் ஒழுங்கீனமான தலைவலி. சப்தத்தால் அதிகரித்தல்.

**காலின்சோனியா:** மந்தமான நெற்றித்தலைவலி.

**காலீ ஐயோடேட்டம்:** நெற்றியில் சம்மட்டியால் அடிப்பது போன்ற வலி. அமுக்கினாலும் திறந்த வெளிக்காற்றினாலும் சமனம்.

**காலீ கார்ப்:** சில்லென்ற காற்றில் போய் வந்ததால் ஏற்பட்ட தலைவலி கொட்டாவியுடன் தலைவலி வருதல். வண்டியில் போகும்போது குமட்டலுடன். பொட்டுகளிலும், பின் தலையிலும் வலி. தலை மயிர் மிகவும் காய்ந்து உதிர்ந்து கொண்டிருத்தல்.

**காலீ க்ளோரிகம்:** கண்களின்மேல் தலைவலி.

**காலீ பாஸ்:** பின் தலைவலி எழுந்தபின் அதிகம் (கிறுகிறுப்பில் பார்க்க) பள்ளிச் சிறுவர்கட்கும் களைத்துப்போனவர் கட்கும் உண்டாகும் தலைவலி. மெதுவாக அசைந்து

கொண்டிருந்தால் சமனம். வயிற்றில் சூன்ய உணர்ச்சி யுடன் தலைவலி.

**காலி பைக்குரோம்** : புருவங்களுக்கு மேல் தலைவலி, வலி வரு முன் கண் பார்வை மங்குதல். மண்டைத் தோலிலும் எலும்புகளிலும் வலி.

**காலி ப்ரோமேடம்** : நடுக்கத்துடன் தூக்கிட்டுக் கொள்ளும் எண்ணம் தலையில் மறத்த உணர்ச்சி.

**காலி மூர்** : வாந்தியுடன் தலைவலி, தலைப்பொடுகு.

**காலி ஸல்ப்** : மாலையில் ஆரம்பிக்கும் வாதத்தலைவலி, வழுக்கை, பொடுகு.

**காலோஸிந்திஸ்** : தலையை இடதுபுறம் திருப்பினால் கிறுகிறுப்பு, வாந்தி, குமட்டலுடன் ஒரு பக்கத் தலைவலி. மண்டைத் தோலில் வலி, ரணமான உணர்ச்சி. எரிச்சலும் வலியும். நெற்றித் தலைவலி, குனிந்தாலும், கண்ணிமைகளை அசைத் தாலும் முதுகைக் கீழே வைத்துப் படுத்தாலும் அதிகரித்தல்.

**கால்மியா** : குனிந்தால் கிறுகிறுப்பு அதிகம். நெற்றி பொட்டு களில் வலி, கழுத்திற்கும் பற்களுக்கும் பரவுதல், இருதயக் கோளாறால் ஏற்பட்டவை.

**காஸ்டிகம்** : நெற்றிக்கும் மூக்கிற்கும் இடையில் சூன்ய உணர்ச்சி, வலது நெற்றியில் வலி.

**குப்ரம் மெடாலிகம்** : வலிப்புகளுடன் தலை வீங்கிப் பழுப்பு அல்லது செந்நிறமடைதல். தலையின் மேல் தண்ணீரை ஊற்றுவதுபோன்ற உணர்ச்சி. தலை முன்புறமாகச் சாய்ந்து விழுதல் தலை காலியாயிருக்கும் உணர்ச்சி.

**கோக்கஸ் காக்டி** : பிடரித் தலைவலி, (உபாதி அதிகம்: தூங்கிய பின் மல்லார்ந்து படுத்தால், சரீர உழைப்பால் அதிகரித் தல்.) காலையில் வலது கண்ணின் மேல் மந்தவலி (உபாதி சமனம்: தலையை உயரமாக வைத்தால் சமனம்.)

**கோல்சிகம்** : பிடரித்தலையில் குடையும் வலி, காலையில் அதிகரிப்பு. குனியும்போதும் மனோவேலையாலும் அதிக ரித்தல், தலையின் மேலும் நெற்றியிலும் ஊறும் உணர்ச்சி

**கோனியம் :** தலையை ஆட்டினால் கிறுகிறுப்பு அதிகமாதல், தலையை இடதுபுறமாக அசைத்தால் மண்டையினுள்ளே ஏதோ அன்னிய வஸ்து இருக்கும் உணர்ச்சி, குமட்டல், கோழை, வாந்தி, மயக்கம் தரும் தலைவலி, இரு பொட்டுகளையும் நசுக்குவது போன்றவலி, சாப்பிட்டபின் அதிகம். காலையில் எழுந்திருக்கும்போது பிடரித்தலையில் மந்தவலி

**கிராபைடிஸ் :** தலைக்கு அதிவேகமாக ரத்தம் செல்வதால் முகம் சிவத்தல். சிலசமயம் மூக்கிலிருந்து ரத்தப்பெருக்கு. தூங்கி யெழுந்ததும் தலைவலி, ஒருபக்கத் தலைவலி, குமட்டல். நெற்றியில் சிலந்தி வலையிருக்கும் உணர்ச்சி, மறத்தல் அழுக்கினால் குழிவிழுதல். தலையின் ஒருபக்க வாதவலி. இவ்வலி பற்களுக்கும் கழுத்துக்கும் பரவுதல். உச்சந்தலையில் எரிச்சல், தலையில் மயிருள்ள இடங்களில் அரிப்பு, நாற்றம், கசகசப்புள்ள சிரங்குகள்.

**க்ரிஸோட் :** மாதவிடாய் நாட்களில் பிடரித்தலையில் வலி. நெற்றியைக் கீழாக அழுக்குவதுபோன்ற உணர்ச்சி. தூக்கமின்மையுடன் நெற்றியில் இழுக்கும் குதிக்கும் வெட்டும் வலிகள்.

**க்ரோடேலஸ் ஹாரிடஸ் :** நெற்றியின் மத்தியில் கடுமையான வலி.

**க்வாய்கம் :** எழுந்திருக்கும்போது கிறு கிறுப்பு, வாதசம்பந்த தலைவலி. நெற்றி முழுதும் புடைக்கும் தலைவலி. அசைந்தால் சமனம். தலையின் இடது பாகத்தில் வாதசம்பந்த தலைவலி கழுத்திற்கோ முகத்திற்கோ பரவுதல். பொட்டுகளில் புடைக்கும் தலைவலி. வெளிப்புரத்தில் அழுக்கினாலும் நடப்பதாலும் சௌகர்யம். (இதில் மட்டுந்தான் நடந்தால் சமனம்) சாதாரணமாக வலிகள் கடைசியில் பிடிப்பு வலிகளாக மாறுதல்.

**க்ளமேடிஸ் எரெக்டா :** பொட்டுகளில் குடையும் வலி.

**க்ளோனாயின் :** தலை மிகவும் பெருத்த உணர்ச்சி, தலையில் துடிப்பு, மனக் கலக்கம். தலை கனமாக இருந்தாலும் தலையணையில் சாய்த்து வைக்க முடியாமை தலையின்மேல் யாதொரு உஷ்ணத்தையும் பொறுக்க இயலாமை, மூளை அலைபோல் நகரும் உணர்ச்சியுடன் துடிக்கும், புடைக்கும்

தலைவலி, சூரிய இடி, சூரிய உஷ்ணம், அசைவு, குனிவது, பின்புறமாக வளைவது, கீழே படுப்பது, ஈர நப்புள்ள பருவம் முதலியவைகளில் அதிகமாகும் தலைவலி. மாத விடாய் நிரந்தரமாக நிற்கும் காலத்தில் தலைக்கு ரத்தம் அதிகம் ஏறும் உணர்ச்சி, அசைந்தால் தலை உடைந்து போய்விடும் உணர்ச்சி, தலையில் தொப்பி குல்லாய் வைக்க முடியாமை, தலையிலும் இருதயத்திலும் மாறி மாறி அதிக ரத்த திரட்சி ஏற்படுதல். தலைவலி இருக்கும் போது ஜன்னல் வழியாக வெளியே குதிக்க முயற்சித்தல் மனவெழுச்சி, கிறுகிறுப்பு மயக்கம் கீழிருந்து மேல் செல் லும் தலைவலி. மண்டையோட்டை அடிக்கடி தூக்குவது போலவும் அல்லது அகலமாக ஆக்குவது போலவும் அல்லது குறுக்குவது போன்ற உணர்ச்சி. தலையை ஆட்டுவதற்கு மிகச்சிரமம். பிடரித்தலை, உச்சந்தலை, பொட்டுகள் நெற்றி ஆகிய இடங்களில் தெறிப்பு. சம்மட்டியால் அடிப்பதுபோல் வலி, கைகளில் தலையைத் தாங்கிக் கொள்ளல் தலைகீழாக தொங்கவிட்டிருப்பது போன்ற உணர்சி, அரைப்பார்வை, அதிக மூத்திரம் பிரிதல். கைகால்களில் குளிர்ந்த வியர்வையுடன் தலைவலி, துரிதநாடி. முகத்தில் வியர்வை மயக்கத்துடன் தலைவலி, திறந்தவெளி, தூங்கிய பின், வாந்தி முதலியவைகளால் சமனம். தலைவலி ஆட்டத்தாலும், முன்புறம் குனிவ தால், அதிகமாதல். தலையில் தொப்பி முதலியவை வைக்க முடியாமை. தலைவலி மட்டும் குளிர்ந்த தண்ணீரால் சமனம். உபாதிகள் காலை 6 மணி முதல் உச்சி வரை அதிகமாக இருத்தல்.

**சிமாபிலா:** இடது பொட்டில் வலி.

**சின்னினம் ஆர்ஸனிகம்:** பலஹீனம், கனம், படபடப்பு, கவலை அதிகக்கிறுகிறுப்பு, அண்ணார்ந்து பார்த்தால் கிறுகிறுப்பு, நெற்றியிலும் பிடரியிலும் மந்தமான தலைவலி.

**சின்னினம் ஸல்பியூரிகம்:** காலை முதல் முறையே, அதிகரித்து உச்சியில் கடுமையாகும். நெற்றி, பொட்டுவலி, மலேரியா சம்பந்தமான கிறுகிறுப்பு. நாடித் துடிப்புடன் இருக்கும் இடதுபுறம் அதிக வலி, கொஞ்ச நேரங்கூட சேர்ந்தாற் போல் நின்று கொண்டிருக்க முடியாமை.

**செலிடோனியம்:** பிடரி சில்லிப்பு, கனம், தூக்க மயக்கம், சரீரத்தில் உணர்ச்சிக் குறைவு, கல்லீரல் கோளாறு, வலப்பக்க தலைவலி.

**சைனு:** தலை ரத்தக் குழாய்களில் விண் விண்ணெனத் தெரிப்பு எக்காரணத்தினுலாவது அதிக ரத்தம் வெளியேறிய பின், அமித போகத்தால் தாதுநீர் வெளியேறிய பின் முகம் சிவத்தல். தலையைச் சீவினுல் வலி, திறந்த வெளியில் பொட்டுகளின் இடது பாகத்தில் வலி, (உபாதி அதிகம், அசைவது தொடுவது காற்றுப்படுவது.) நடக்கும்போது லாகிரி உண்டதுபோல் இருத்தல்.

**டபாகம்:** வயிற்றில் குடைவது போன்ற உணர்ச்சியுடன் கிறு கிறுப்பு, வெளியில் உலாவும்போது சமனம், வீட்டிற்குள் அதிகம், நரம்பு சம்பந்தத் தலைவலி, திடீரென்று சம்மட்டி யால் அடிப்பது போன்ற தலைவலி, குமட்டலுடன் காலை யிலிருந்து நடுப்பகல் வரை அடிக்கடி மந்தத் தலைவலி. வெளிச்சம் சப்தத்தால் அதிகவலி.

**டல்கமாரா:** பிடரிவலி, பேசினுல் சமனமாகும் தலைவலி, பஸ் என்ற சப்தம் மண்டைத்தோல் படை.

**டாரண்டுலா குபான்ஸிஸ்:** உஷ்ணம் உள்ள வியர்வை, மயக்கம். உச்சந்தலையில் மந்த வலி. இடது கண்ணி லிருந்து நெற்றிக்குப் பாயும் வலி.

**டாரண்டுலா ஹிஸ்பானியா:** தலையை எப்பொழுதும் தேய்த் துக் கொண்டிருக்கப் பிரியம்.

**டிஜிடாலிஸ்:** படுத்திருந்தோ, உட்கார்ந்திருந்தோ எழுந் திருக்கும் போது தலை மயிரை பிய்த்துக் கொள்வது, வீறிட்டு அலறுதல்.

**டயஸ்கோரியா:** இரு பொட்டுகளிலும் மந்தவலி, அழுக்கினுல் சமனப்பட்டு அதிகமாதல், பஸ் என்ற சப்தம்.

**டியூபர்குலீனம்:** அடிக்கடி வந்துகொண்டிருந்த தலைவலி திடீரென்று நின்று அதன்பின் சரீரம் இளைக்க ஆரம்பித் தல். தலையைச் சுற்றிலும் இரும்புப்பட்டை இருப்பது போன்ற வலி, நீடித்து அடிக்கடி வரும் தலைவலி, நரம்புத் தலைவலி. வாரம் ஒரு முறை அல்லது 15 நாட்களுக்கு

ஒரு முறை வரும் தலைவலி, இது மழை காலங்களில் அதிகம். மனவெழுச்சி, உழைப்பு, சிறிது அஜீரணம் ஏற்பட்டாலும் தலைவலி.

**தராக்ஸகம்:** உச்சந்தலையில் அதிக உஷ்ண உணர்ச்சி. அஜீர ணத்தால் ஏற்பட்ட பித்த தலைவலி

**துஜா:** ஒரு ஆணியை வைத்து அடிப்பதுபோன்ற வலி. டீ குடித்தால் உடனே தலைவலி, இடதுபக்கத் தலைவலி. வெண்மையான செதில்கள் போன்ற படைகள், மயிர் உதிர்தல்.

**தெரிடியன்:** அடிக்கடி வரும் தலைவலி, தலைவலி பக்கத்தில் யாரேனும் நடந்தாலும் அதிகமாதல், தலையைச் சற்று அசைத்தாலும் ஓக்காளம் வாந்தி கிறுகிறுப்பு.

**தெரிபிந்த்:** தலைவலி, அமுக்க உணர்ச்சி, கிறுகிறுப்பு, கனம்.

**நக்ஸ் வாமிகா:** இரவு ஆகாரத்தின் பின் தலைச் சுற்றலும், மயக்கமும் ஆகாரத்தின் பின் படுத்தால் தன் படுக்கையே சுழல்வது போலிருத்தல். வெய்யிலில் சென்றாலும் அஜீர ணத்தாலும் தலைவலி. காலை நேரங்களில் தலைவலி, இவ் வலி மனத்தால் வேலை செய்தாலும், சாராயம், காபி முதலியவை குடித்தாலும் சரீர உழைப்பாலும், ஆகாரத் தின் பின்னும், உஷ்ணத்தாலும், அதிகமாதல், பிடரியில் ஒரு ஆணியை வைத்து அடிப்பது போன்ற வலி. நெற்றி யில் அமுக்கும் வலி இது காலையிலும் குளிர்ந்த காற்று மேலே படுவதாலும் அதிகமாதல்

**நக்ஸ் மாஸ்சாடா:** தலைவலி எதிர்காற்றில் சென்றால் அதிகரித் தல் நெற்றியில் ஏதாவது ஒரு இடத்தில் மட்டும் அமுக்கும் வலி, தலை தொங்குதல் தூக்கி நிறுத்த சக்தியின்மை.

**நாஜா:** இடது பொட்டிலிருந்து வலி ஆரம்பித்து பிடரி வரை செல்லுதல், குமட்டல்.

**நேட்ரம் ஆர்சனிகம்:** நடக்கும்போது தலைச் சுற்றல் தலை முழு தும் உஷ்ணமாக நிறைந்திருப்பது போன்ற உணர்ச்சி. காலையில் கண், விழி, நெற்றியில் குத்துவதும் கிழிப்பதும் போன்ற வலி. அடிக்கடி வரும் முறைத் தலைவலி நெற்றி யில் மட்டும் வியர்வை.

**நேட்ரம் கார்ப் :** தலை மிகவும் பெரிதாயிருக்கும் உணர்ச்சி. கிழிக்கும் குத்தும் வலிகள் நெற்றியிலும் கண்களிலும் அதிகம். காலையில் உச்சந்தலை துடித்தல், நெற்றியை அமுக்குவது போன்ற வலிகள். காலையில் அதிகம், அதிகாலையிலிருந்து உச்சிவேளை வரை தாங்கமுடியாத வலி. மூக்கைச் சிந்துவதாலும் இருமுவதாலும் வலிகள் அதிகமாதல், கண்களுக்கு மேலே அமுக்குவதால் சற்று சமனம். முறைச் சுரத்தில் ஏற்படும் துடிப்பு வலிகள் சூரிய இடியால் ஏற்படும் கோளாறுகள். எலக்டிரிக் வெளிச்சத்திலும். சூரிய வெளிச்சத்திலும் கிறுகிறுப்பு, சூரிய உஷ்ணத்தில் சென்றாலும் மன உழைப்பாலும் தலைவலி உண்டாதல். சில சமயங்களில் அதிக உஷ்ணமும் வெளிச்சமும் கொடுக்கும் விளக்குகள் சமீபம் இருந்தாலும் தலைவலி உண்டாதல்.

**நேட்ரம் பாஸ் :** சூடு, மந்தம், கனம்.

**நேட்ரம் மூர் :** கிறுகிறுப்பு, உடைக்கும், கண்களை மறைக்கும். தலைவலி, தலையிலிருந்து வலி மார்புக்கு பாய்தல். சிவந்த முகம், குமட்டல், வாந்தி மாதவிடாய்க் காலத்திலும், அதற்கு முன்னும் வாந்தியுடன் தலைவலி, சிறு சம்மட்டிகளைக் கொண்டு அடிப்பதுபோன்ற தலைவலி. இது காலையிலும், படித்தாலும், பேசினாலும், அதிகமாதல். உச்சந்தலையில் வலி, கன உணர்ச்சி இது அமுக்குவதனால் சமனம். பிரதிதினம் சூரிய உதயம் முதல் அஸ்தமனம் வரை தலைவலி; 11 மணி முதல் 3 மணி வரை அதிகம். மாதவிடாய்க்குபின் இது போன்ற தலைவலி ஏற்படுதல். வலது கண் கலங்கியிருத்தல், வெளிச்சத்தை பார்க்க முடியாமை, கழுத்தின் இடது பக்கத்தில் ஒரு ஆணியை வைத்து அடிப்பதுபோன்ற தலைவலி, தலையை பிடிச்சராவி அல்லது குறட்டில் வைத்து அமுக்குவது போன்ற தலைவலி, தலைவலியுடன் வியர்வை ஆனால் அந்த வியர்வையால் தலைவலி சமனமாகாமை. தலையில் கம்பளி முதலியவைகளை கட்டிக்கொண்டேயிராவிட்டால் சளி பிடித்தல்.

**நேட்ரம் ஸல்ப் :** ஆகாரத்தின் பின்னும் மாலை 6 மணிக்கு கிறுகிறுப்பு உச்சந்தலையில் உஷ்ணமான உணர்ச்சி, இது

நெற்றியில் வியர்வை உண்டாகுமளவும் இருக்கும். பொட்டு வெடித்துவிடும்போன்ற தலைவலி. அடிக்கடி பித்த வாந்தியுடன் தோன்றும் பித்தத் தலைவலி மண்டையிலும் முள்ளந்தண்டிலும் அடிப்பட்டதனால் ஏற்படும் கோளாறுகள் படிப்பினாலும் மூளைக்கு வேலை கொடுப்பதாலும் அதிகமாதல். கைகளால் அமுக்கிக் கொள்வதனாலும் படுத்திருப்பதனாலும் சமனம். முன்பக்கமாக குனிந்தால் மண்டையினுள் மூளை தனியாக இருப்பது போன்ற உணர்ச்சி தலையில் ஈரப்பசையுள்ள படைகள் மண்டையில் அடிப்பதால் ஏற்பட்ட காக்கைவலிப்பு. மண்டையின் பின்பக்கத்தில் வலியுடன் கூடிய மூளை தாபித சுரம். தலையும் கழுத்தும் பின்பக்கமாக இழுக்கப் படுதல் தலையில் அதிக ரத்தத்திரட்சி, அதனால் பிதற்றல்கள்.

**நேட்ரம்ஸாலி:** படுக்கையிலிருந்து தலையை தூக்கினால் கிறுகிறுப்பு அதிகம். தலையை படுக்கையிலேயே வைத்திருந்தால் கிறுகிறுப்பு சமனம்.

**நைக்டாந்தஸ்:** மந்தத் தலைவலி.

**பல்லாடியம்:** தலையும் மூளையும் ஊசலாடும் உணர்ச்சி.

**பல்ஸடில்லா:** (கிறுகிறுப்பில் பார்க்க) கிறுகிறுப்பால் படுத்துக் கொண்டேயிருத்தல். கனத்துடன், துடிக்கும், அமுக்கும் தலைவலி. மாதவிடாய்க்கு முன்னும் மாதவிடாயின் போதும், பின்னும் தலைவலி. படிக்கும் சிறுமிகளுக்கு பிரவிடையாகும் சமயத்திலும், மாதவிடாய்க் காலத்திலும் தலைவலி. கண்களை அசைப்பதால் தலைவலி அதிகரித்தல். ஐஸ்கிரீம் கொழுப்புள்ள ஆகாரங்களை உண்டதால் ஏற்படும் தலைவலி. உஷ்ண அறைகளில் ஏற்படும் தலைவலி, குளிர்ந்த ஒற்றிடங்கள், திறந்த வெளியில், குளிர்காற்றில் உலாவுவதால் சமனம். நெற்றியில் அடிபட்டது போன்ற உணர்ச்சியுடன் தலைவலி. அதிக உழைப்பால் ஏற்படும் தலைவலி, ஒரு பக்கத் தலைவலி, மாலை நேரங்களில் தலைவலி.

**பாப்டீஷியா:** கழுத்தில் வலி, பலஹீனத்தால் தலையை நிமிர்த்தி வைத்துக்கொள்ள முடியாமை. கனம், அதனால் உட்கார

முடியாமை. மந்தமான அமுக்கும் உணர்ச்சியுடன் தலைவலி. தலை பெரிதாகியிருப்பதுபோன்ற உணர்ச்சி நெற்றியிலும் மூக்கின் அடியிலும் வலி. திடீர் திடீரென்று பொட்டுகளில் வலி. மூளையின் அடிப்பாகத்தில் கனமான வலி.

**பாரிடா கார்ப் :** வயதானவர்கள் கீழேகுனிந்தால் கிறுகிறுப்பு, குடிகாரர்களுக்கு ஏற்படும் ரத்தக்கொதிப்பு. வயதான வர்களின் மனக்குழப்பம், கைகால்களில் நடுக்கம், இவை உஷ்ணம் மிகுந்த வெயில் காலத்தில் அதிகமாதல், மாலை நேரங்களில் சப்தத்தால் தலைவலி குளிர்ச்சியான ஒற்றிடங்களால் சமனம். உஷ்ணத்தால் அதிகமாதல். மண்டைஓட்டினுள் மூளை இந்தப்பக்கமும் அந்தப்பக்கமும் ஆடுவது போன்ற உணர்ச்சியுடன் தலைவலி கண்களுக்கு மேலேயும் ரத்தத் திரட்சியுடனும் கூடிய தலைவலி. (படபடப்புடனும் துடிப்புடனும் வேகமாக ரத்தம் தலைக்கு ஏறுதல்)

**பாரிடா மூரியாடிகா :** (தலையில் உஷ்ண உணர்ச்சி.) தலை கனத்தல், உட்கார முடியாமை, கிறுகிறுப்பு, வயதானவர் களின் தலைவலி.

**பாஸிலினம் :** கடுமையான உள் தலைவலி, படை.

**பாஸ்பரஸ் :** (கிறு கிறுப்பில் பார்க்க) சூரிய இடியில் தலையைப் பிடித்துக் கொள்ளுவதும், வாய் இடது புறமாக இழுக்கப் பட்டிருப்பதும், சரீரம் முழுவதும் எரிச்சல், மூளைச் சோர்வு. இடதுபொட்டில் படபடவென்று துடிப்பு, ஒரு நாள் விட்டு ஒருநாள் வரும் தலைவலி இடது கண்ணுக்கு மேல் மந்தமான கனத்துடன் தலைவலி, தலைவலி மூக்கின் அடியிலும் கண்களிலும் அமுக்குவது போலிருத்தல்.

**பிஸ்மத் :** தலைவலியும் அஜீர்ணமும் மாறி மாறிவருதல்.

**புபோ :** உள்ளேயிருந்து உச்சந்தலைக்கு ஆவியேறும் உணர்ச்சி.

**பெட்ரோலியம் :** பிடரித்தலைவலி, வாந்தி, தலையில் ஈயம் இருப் பதுபோல் கனம், எழுந்திருக்கும்போது தலைச்சுற்றல் மண்டையில் படை, நீடித்த பிடரித்தலைவலி.

**பெர்பெரிஸ் அக்யூபோலியம் :** காதுகளுக்கு கொஞ்சம் மேலே ஒரு பட்டையை வைத்து இறுக்குதல் போல் பித்தத் தலைவலி. செதில் போன்ற படை, கொப்புளம் (தலை முகம் கழுத்தில்)

**பெர்பெரிஸ் வல்கேரிஸ்:** மந்தம், சோம்பல், தலை பெரிதாகும் உணர்ச்சி அடிக்கடி தலைச்சுற்றல், மயக்கம் வருதல்போல் நெற்றிவலி, முதுகு, பிடரியில் சில்லிட்ட உணர்ச்சி, தலையைக் குல்லாவால் அமுக்கும் உணர்ச்சி.

**பெர்ரம் பிக்ரிகம்:** அதிக உழைப்பால் பிடரித்தலைவலி.

**பெர்ரம்மெடாலிகம்:** இரவுகளில் தலைசுற்றுதலும், வயிற்றுப் போக்கும், கர்ப்பகாலத்தில் தலைவலியுடன் ஓக்காளம் திடீரென்று அசைந்தால் விண்ணென்று தெரிக்கும் பிடரித் தலைவலி. அமுக்கினால் சமனம். தலைச்சூடு. ஆனால் பாதம் சில்லிப்பு, இரத்தத்தேக்கம் தலையைச் சுற்றி இரும்புப் பட்டையிறுக்கும் உணர்ச்சி. அமுக்கினால் சமனம். இருமினால் பிடரிவலி, ஜலதோஷத்துடன் இடதுபுறத் தலைவலி, மயிர்க்கால் நொந்திருத்தல் முகம் சிவத்தல் சம்மட்டியால் அடிப்பதுபோன்ற தலைவலி, 2, 3 தினங்கள் படுத்திருந்தால்தான் சமனமாகும். பின் இரவில் அதிகம். அடிக்கடி முறைத்தலைவலி.

**பெல்லடோன்னா:** தலைவலிகள் வெளிச்சத்திலும், அசைவதினாலும், சப்தத்தினாலும் அதிகமாதல், தலையை பின்புறமாக வளைப்பதால் சமனம் வலிகள் திடீரென்று ஆரம்பித்து அப்படியே நின்றுவிடுதல், அதியுணர்ச்சி, அதிக ரத்தம் ஏறியதால் கனம், மயக்கம் போலிருத்தல் நடக்கும்போது ஒவ்வொரு அடிக்கும் விண்ணென்ற தலைவலி. தலையில் பொட்டில் அழுத்தும் தலைவலி. ஒரு பொட்டிலிருந்து மறு பொட்டுக்கு ஈட்டி சொருகியது போன்ற வலி. நெற்றிப் பொட்டில் அமுக்கும் வலி, வலிகள் திடீரென்று ஆரம்பித்து கொஞ்ச நேரமோ அதிகநேரமோ இருந்து திடீரென்று நின்றுவிடுதல். சரீரத்திலிருந்து எல்லா ரத்தமும் தலையில் வந்து தேங்குதல். பின் தலையில் வலி. பொட்டுகளில் துடிக்கும் வலி

**பெல்லாண்ட்ரியம்:** பிடரிவலி, கண்களின்மேல் பொட்டு எரிச்சல், மந்தவலி

**பைடோலக்கா:** தலை வலியும் முதுகுவலியும், சரீர முழுதும் அடித்து போட்டது போன்றவலி அசைய விருப்பம் ஆனால் அசைவினால் வலிகள் அதிகரித்தல்.

**பைரோஜீனியம் :** வலியின்றித் துடித்துக் கொண்டிருத்தல்.

**போடோபில்லம் :** சுற்றல், முன் விழுதல்போல் தலைவலியும் வயிற்றுப்போக்கும் மாறி மாறி வருதல். படுக்கையில் தலையை உருட்டுதல், முனகுதல், வாந்தி.

**போராக்ஸ் :** வண்டிப்ரயாணம், கீழ்நோக்கிச்சென்றாலும் தலைச் சுற்றல் தினந்தோறும் காலை 10-மணிக்குத் தலைவலி. நடுக்கல், குமட்டல்

**போவிஸ்டா :** அரிப்பு, சொரிதல், சொரிந்ததால் ரணம். தலை பெரிதான உணர்ச்சி. இரவில் தலைவலி. (எழுந்திருந்தால் அதிகம்)

**ப்ரயோனியா :** மூக்கிலிருந்து ரத்தம் கொட்டினால் தலைவலி சமனம். கிறுகிறுப்பு, குமட்டல் எழுந்திருக்கும்போது தலைச் சுற்றுதல், மண்டையை உடைக்கும் தலைவலி உள்ளேயிருந்து ஒரு சம்மட்டியால் அடிப்பது போன்ற தலைவலி, கண்களைத் திறப்பதனாலும் முன்னால் குனிவதனாலும் அசைவினாலும், தலைவலி அதிகமாதல். விழிகளை அசைப்பதனால் கூட தலைவலி அதிகமாதல். படுக்கையிலிருந்து தலையைத் தூக்கும்போது தலை சுற்றுதல். அமுக்குவது போன்ற தலைவலி.

**ப்ரோமியம் :** இடது பக்க நரம்புத் தலைவலி, முன் குனிந்தால், பால் குடித்தால், வேகமாக நடந்தால். வெயிலில் சென்றால் அதிகமாதல், தண்ணீரைக் கடந்தால் தலை சுற்றுதல்.

**ப்ளாட்டினா :** கனமான அமுக்கும் வலி ஒரு சிறிய இடத்தில் வலி. தலைவலி, மதமதப்பு, கெண்டையேறுதல்போல் வலி.

**ப்ளாண்டகோ :** முறைத்தலைவலி; காலை 7 மணி முதல் பிற்பகல் 2 மணி வரை அப்போது கண்வலி, நீர் கொட்டுதல்.

**மங்கானம் :** பெரிதாக, கனமாக விருத்தல், ரத்தத்தேக்கம், திறந்த வெளிக்காற்றில் சமனம், தலையை அசைக்கும் போது உள்ளே மூளை உதறுவது போலிருத்தல். உச்சந் தலையில் சில்லிட்ட உணர்ச்சி.

**மில்லிபோலியம் :** ரத்தத்தேக்கம். மார்பிலிருந்து தலைக்கு ரத்தம் ஏறுதல்.

**மெக்னீஷியா கார்ப் :** நெற்றியில் இறுக்கம், துடிப்பு சுருட்டு. கூட்டம் மனஉழைப்பால் தலைவலி, மழைகாலங்களில் தலையில் அரிப்பு, தலைமயிர் உதிர்தல்.

**மெக்னீஷியா பாஸ் :** விட்டுவிட்டு வரும் நரம்புத் தலைவலி, இத்தலைவலி இடம் விட்டு இடம் பெயரும். (உபாதி சமனம்: உஷ்ண ஒற்றிடம், அழுக்குவது திறந்த வெளிக் காற்றில் நடப்பதால் சமனம்)

**மெக்னீஷியா மூரியாடிகா :** கீழே விழுந்து விடுதல் போல சுற்றுதல் சாப்பிட்டுவிட்டு எழுந்திருக்கும்போது கிறு கிறுப்பு, பிடரியில் அமுக்கினுல் வலி, தலையை இரண்டு பக்கங்களிலிருந்தும் அமுக்குவது போன்ற வலி, கண் களைச் சுற்றிலும் நரம்பு வலிகள் தலைவலிகள். இறுக்கிக் கட்டுவதாலும் கைகளால் கெட்டியாக அமுக்குவதாலும் சமனம் ஏற்படுதல்.

**மெடோரினம் :** கனம் பின்புறமாக இழுக்கப்படுதல், இறுக்க உணர்ச்சி வண்டிகளில் போகும்போது அதிர்ச்சியால் தலைவலி, அத்துடன் வயிற்றுப்போக்கு.

**மெர்க்கூரியஸ் ஸோலு :** தலையைச் சற்றிலும் கயிறுகொண்டு இறுக்கிக்கட்டியது போன்ற இறுக்க உணர்ச்சி. படுத் திருக்கும் போதும் தலை சுற்றிச் சுற்றி வருவதுபோன்ற தோற்றம். ஜலதோஷம் அழுக்கப்பட்டதால் உண்டான கோளாறுகள். தலையில் ஈர நப்புள்ள படை, நாற்ற முள்ள நீரை வெளியிடும் படை. பக்கங்களிலும் பொட்டி லும் கேசங்கள் உதிர்தல்.

**மெலிலோடஸ் :** அதிக ரத்தம் ஏறுதல் இதனுல் ரத்தம் கண், முகம், மூக்கு, காது இவைகளைப் பிய்த்துக் கொண்டு வெளியேறிவிடும்போலிருத்தல். இது அசைவினுல் அதி கரித்தல். தலைவலி ரத்தப் பெருக்கால் சமனம்.

**மெஸீரியம் :** சீழ் பொருக்கு உள்ள ரணம், நீரைக் கக்கும் படை கள்.

**மேனியாந்தஸ் :** படி வழியாக மேலே ஏறும்போது பிரதி படியில் தலையில் ஒவ்வொரு கனத்தை வைத்து அமுக்கும் உணர்ச்சி.

**மைரிகா:** மந்தமான பலஹீன உணர்ச்சி,

**யூபடோரியம் பர்பூரியம்:** அடிக்கடி மண்டைக் குத்தல் ஏற்படல், காலையில் ஆரப்பித்து மாலையில் அதிகமாதல். தலை சுற்ற லுடன் இடது தோள்பட்டையிலிருந்து பிடரிவரை வலி.

**யூபடோரியம் பர்போலியேடம்:** ஒன்றுவிட்டு ஒரு தினம் காலை யில் குமட்டலுடன் தலைவலி, (உபாதி அதிகம்) திறந்த வெளிக்காற்றில் குளிருடன் தலைவலி, பிடரியில் சூடு.

**யூரேனியம் நைட்ரிகம்:** தலை கனத்துடன் வலி.

**ரஸ் டாக்ஸ்:** வயதானவர்கட்குப் படுக்கையிலிருந்து எழுந் திருக்கும்போதும், குனியும்போதும், ஏற்படும் தலைச் சுற்றல், துடிப்பது போன்ற வாதத்தலைவலி, நெற்றியில் எரிச்சலுடன் அழுக்கும் உணர்ச்சி, தலையில் ஏராளமான ரத்தம் ஏறுதல், அரிப்பும் நாற்றமும் உள்ள சீழ் பிடித்த பொருக்குகளுடன் கூடிய படைகள், மயிர் உதிர்ந்து விடுதல், (மூளையில் பார்க்க,)

**ரானங்குலஸ்:** ரத்தத் தேக்கம். தலை பெருத்த உணர்ச்சி, முகம் சிவத்தல், நெற்றி பிடரியில் அழுக்கும் வலி தூக்க மயக்கம், வாந்தி, தலைவலி வீட்டிலிருந்து வெளியே செல்லும்போது மயக்கத்துடன் கீழே விழுந்துவிடல். மாலையில் தலைவலியுடன் குமட்டல்.

**ரீஸினஸ்:** பிடரிவலி, தலைச் சுற்றல்.

**ரூமக்ஸ்:** நெற்றியில் சிராய்த்த உணர்ச்சி மந்தமான கடுப்பு வலி.

**ரோடோடெண்ட்ரன்:** காலை நேரங்களில் தலைவலி மழைக் காலங் களில் நெற்றியிலும் பொட்டுகளிலும் வலி. தலைவலி அசையாமலிருக்கும்போதும், காலையிலும் காற்று மழை யிலும் அதிகமாதல் அல்லது ஏற்படுதல். மண்டைத் தோலில் நொந்தவலி. (உபாதி சமனம் உஷ்ணகாலம், தேகப்பயிற்சி செய்தல், நடந்கொண்டிருக்கும்போது நன்றாக போர்த்திக்கொண்டிருந்தாலும் சமனம்.)

**லாக்டிப்லொ.** காலையில் நெற்றியிலிருந்து பின்புறம் செல்லும் தலைவலி, தெறிக்கும் தலைவலி, குமட்டல், வாந்தி, கண்

பார்வை மங்குதல், கண் கூச்சம், தீராத மலபந்தம் மயக்கத்துடன்கூடிய ஒற்றைத் தலைவலி.

**ஸாங்கெனிஸ்:** காலையில் தூங்கி விழித்தவுடன் தலை சுற்றுதல் முன் தலையில் வலி. தலை சூடாகவிருத்தல் இடது பொட்டில் தெறிக்கும் வலி மூக்கின் அடிவரை செல்லும் வலி. பிடரியில் அலைஅலையாக மேலே செல்லும் வலி உஷ்ணக் காற்று மேலே அடிக்கும் உணர்ச்சி மண்டையோட்டையும் துளைத்துக்கொண்டு செல்லும் கட்டிகள் தலைக்கு ரத்தம் ஏறுதல், துடிக்கும் வலி, பிடரியில் அதிகம். (கிறுகிறுப்பில் பார்க்கவும்)

**ஸாரோஸிராஸஸ்:** திறந்த வெளிக்காற்றிலும், கீழே படுத்தாலும் தலைச் சுற்றல் மந்த உணர்ச்சி. சரீரம் சில்லென்றிருத்தல் எவ்வளவு சூடான ஒற்றிடங்கள் கொடுத்தாலும் சமனம் ஏற்படாமை. மயக்கத்தை உண்டுபண்டும் அளவுக்கு ரத்தத்தேக்கத்துடன் தலைவலி. சரீரம் உஷ்ணமாகயிருப்பதும் சில்லென்றிருப்பதும் மாறி மாறி ஏற்படுதல்.

**ஸில்லியம் டிக்ரீனம்:** நடக்கும்போது தலை சுற்றுதல். முன்னால் விழுந்துவிடுவதுபோல் தள்ளாடுதல். அறைகளிலிருக்கும் போது மயக்கம் வருவது போலிருத்தல். இது வெளிக் காற்றில் சென்றால் சமனம், மண்டை உடைந்துவிடுவது போல் வலி வலது பொட்டிலிருந்து இடது பொட்டுக்குச் செல்லும் வலி. நெற்றியில் மந்தமானவலி.

**லேடம் பாலஸ்திரி:** அமுக்கும் தலைவலி, தலையை மூடி வைத்துக் கொள்வதால் அசௌகர்யம். குளிர்காற்று படுவதால் சமனம், பொட்டுகளிலும், பிடரியிலும் நமநமவென்று பிடுங்கும் வலி. தலையைக் குளிர்ந்த தண்ணீரால் கழுவினாலும், தண்ணீரில் நனைந்தாலும் தலைவலி ஏற்படுதல்.

**லைகோபோடியம்:** பசி ஆரம்பத்தில் தலைவலி, தலைமயிர் உதிர்தல், நரைத்தல், மூளை குழப்பம் அடையும் நிலைமை காலையில் எழுந்ததும் தலைச் சுற்றல்.

**வலேரியானா:** தலையில் கனமேயில்லாமல் ஆகாயத்தில் மிதப்பதுபோன்ற உணர்ச்சி. குனிந்தால் தலைச் சுற்றுதல், நெற்றியில் அமுக்கம், இறுக்கம், தலை சில்லென்றிருக்கும் உணர்ச்சி.

**வெராட்ரம் ஆல்பம் :** பிடரியும் பொட்டுகளும் பனிக்கட்டியால் அமுக்கப்படுவது போன்ற உண்ர்ச்சி. தலையில் அதிக ரத்தத் தேக்கமும் கால்கள் சில்லென்றிருத்தலும் ஏராள மாக வழியும் வியர்வை, பிடரியில் பூச்சிகள் ஊறுவது போன்ற உணர்ச்சி. நடுக்கல்கள் (வாந்தியில் பார்க்க)

**வெராட்ரம் விரைட் :** தலையை பின்புறமாக வளைக்கும் வலிப்புகள்.

**ஜஸ்டிஷியா ஆடாதோடா :** உஷ்ணம், கனம்.

**ஜெல்ஸிமியம் :** அசைவு, சுருட்டு பிடித்தால் தலை சுற்றல். பிடரிப் பொட்டில் சம்மட்டியால் அடிப்பது போன்ற தலை வலி. அதிகநீர் பிரிந்தால் சமனம். இதனல் சிறிது நேரம் கண் தெரியாது. தலையில் கன உணர்ச்சி, தலை அசைவ தால் சமனம். மண்டைக் குத்தல் வந்த பின் கண் திருப்பத் தெரிதல்.

**ஸபடில்லா :** தலைச் சுற்றல். நெற்றிப் பொட்டுகளில் அமுக்க உணர்ச்சி படிப்பில் அதிக கவனம் செலுத்தினுலும் அதிக யோசனை செய்வதாலும் ஏற்பட்ட தலைவலிகள், நாக்குப் பூச்சித் தொந்தரவால் ஏற்பட்ட ஒரு தலை மண்டைக் குத்தல். தலையில் சில்லிட்ட வியர்வை.

**சரஸபரில்லா :** ஓக்காளம், வாந்தியுடன் தலைவலி, வலி பிடரியி லிருந்து ஆரம்பித்து வலது அல்லது இடது பொட்டுக்குச் செல்லுதல், நடக்கும்போது பிடரியில் தெறிக்கும் வலி, நெற்றியிலும் பொட்டுகளிலும் நமநமவென்று பிடுங்கும் வலி. வலிகள் படிப்படியாக அதிகமாகி அவ்வாறே சமனப்படுதல்.

**ஸல்பர் :** காலையில் மூக்கிலிருந்து ரத்தம் வருவதுடன் தலை சுற்றுதல் திறந்தவெளிக்காற்றில் உலாவினுல் உடனே சளிபிடித்தல். ஆற்றைக் கடக்கும்போது தலை சுற்றுதல், ஓக்காளம் கண் பார்வை மறைந்து விடுதல். இடது புறமாக விழுந்துவிடுவது போலிருத்தல், ஆகாரம் உட் கொண்டபின் தலைச்சுற்றல் அதிகமாக இருத்தல். தலைக்கும் முகத்துக்கும் ரத்தம் ஏறும்போது காதுகளில் இரைச்சல், சப்தம் கேட்டல். குனிவதாலும், பேசுவ தாலும், திறந்தவெளிக் காற்றில் செல்வதாலும், உபாதி கள் அதிகமாகும். பற்களை இறுகக்கடிப்பதாலும், தலையை

அமுக்கி வைத்துக் கொள்வதாலும் சமனப்படும். பிரதி 3 அல்லது 7 தினத்தில் இடிக்கும் தலைவலி, இவ்வலியுடன் எரிச்சல் உணர்ச்சி, குளிர்ந்த தண்ணீரினால் தலையைக் கழுவுவதால் சமனம். ஒரு முறை ஏற்பட்ட தலைவலி இரண்டு மூன்று தினங்களுக்கு நீடித்திருத்தல், நெற்றியிலும் தலையிலும் கடுமையான அரிப்பு. மயிர் உதிர்தல், மயிர்க்கால்கள் ரணமாயிருத்தல், பொடுகு

**ஸாங்குநேரியா :** அடிக்கடி மண்டைக் குத்தல் ஏற்படுதல், தலை வெடித்துவிடும் போலிருத்தல், தூங்குவதால் சமனம். வலது பக்கத்துக் கோளாறுகள், எரிச்சல் உணர்ச்சி, தலைவலி சூரியோதயத்தில் ஆரம்பித்து உச்சியில் அதிகமாகி சூரியஸ்தமனத்தில் சமனப்படல். வலது பக்கத்தில் அதிகம். அடிக்கடி அல்லது மூன்றாவது அல்லது ஏழாவது நாள் தோன்றும் மண்டைக்குத்தல், வலி இருக்கும்போது தலை வெடித்துவிடும் போலவும் கண் விழிகள் வெளியே பிதுங்கிவந்துவிடும் போலவும் இருத்தல். தலைவலியுடன் குளிர், குமட்டல் உண்ட ஆகாரம் பித்தநீர் வாந்தி, தலையிலுள்ள அசுத்த ரத்தக் குழாய்கள் தடித்தல் (உபாதி சமனம்: அமைதியாகப் படுத்திருத்தல், தூக்கத்தால், வாந்தியெடுத்தால், இருட்டு அறையில் இருந்தால் உபாதிகள் சமனமாகும்.)

**ஸிகூடாவிரோஸா :** (கிறுகிறுப்பில் பார்க்க,) குனிந்தால் தலை சுற்றிக் கீழே விழுந்துவிடுதல், தலைவலியை நினைத்துக் கொண்டால் கொஞ்சநேரத்துக்கு அதுஇல்லாமலிருத்தல்.

**ஸிங்கம் மேடாலிகம் :** முதன் முதலில் மயக்கம், ஆனால் எழுப்ப முடியும். அதன் பின் விழிப்புகள் ஏற்பட்டு பிரக்ஞை இன்மை ஏற்படும். இங்கிலையில் தலையைப் புரட்டுதல்.

**ஸிங்கம்வெலீரினு :** நரம்புத் தலைவலி.

**ஸிஞ்சிபேர் :** ஆகாரம் உண்டபின் தலைவலி.

**ஸிபீலினம் :** தலைச்சுற்றல் பொட்டு, நெற்றி, நரம்புத் தலைவலி, மண்டையோடு வலி, மயிர்உதிர்தல், பிடரியில் வெடிக்கும் வலி.

**ஸிலிகா:** கழுத்துப் பிடிப்புடன் தலைவலி. சரீர அளவுக்கு இருக்க வேண்டியதைவிட தலை பெரிதாக இருத்தல். உச்சிக்குழி மூடாமை. பட்டினி இருந்தால் தலைவலி ஏற்படுதல். தலையில் அதிக இரத்தம் ஏறுதல், தாடைகள் உஷ்ணமாக இருத்தல், அடிக்கடி பிடரி நெற்றியில் தலைவலி கடுமையாக ஏற்படுதல். பிடரியில் வலி, குளிர் ஓக்காளத்துடன் ஆரம்பித்து தலைவலியாக வந்து கண்களின்மேல் தங்குதல், நரம்பு பலஹீனத்தால் ஏற்பட்ட தலைவலி, இறுகக்கட்டினால் தலைவலி சமனமாதல் தலையில் அதிக வியர்வை. (வியர்வையில் பார்க்க) தூங்கும்போது தலை, முகம் கழுத்தில், ஏராள புளித்த நாற்ற வியர்வை. ஒரு பக்கத் தலைவலி, முள்ளந்தண்டு அமுக்கப்பட்டால் தலைவலி ஏற்படல். வாரத்திற்கு ஒரு முறை தலைவலி வருதல். மேல்நோக்கிப் பார்த்தால் தலை சுற்றலும், முன்னே விழுந்து விடுவதுபோலிருத்தலும்.

**ஸினேபிஸ் நைக்ரா:** நெற்றியில் வியர்வை.

**ஸிஸ்டஸ்:** பசி எடுக்கும்போது முன் தலையிலும் நெற்றியிலும் வலி, மன உழைப்பால் தலைவலி ஏற்படுதல், வியர்வை ஏற்பட்டால் தலைவலி அதிகமாதல். மாலை நேரங்களில் அதிகமாகி இரவு முழுதும் தலைவலி, கழுத்தின் வீக்கத்தால் தலை ஒரு பக்கமாக இழுக்கப்பட்டிருத்தல்

**ஸீகேல்:** பிடரியில் பலமற்ற உணர்ச்சி. தலை கனத்த உணர்ச்சி, தலையிலும், மார்பிலும் ரத்தத் தேக்கம். நாடித் துடிப்புகள் அதிகமாகவிருத்தல்.

**ஸீட்ரான்:** ஜுரம் ஆரம்பிக்கும்போது வலது பக்கத் தலை வலி.

**ஸீமெக்ஸ்:** தண்ணீர் குடித்ததும் தலைவலி.

**ஸீனு:** நெற்றியில் மந்தமான வலி.

**ஸெபியா:** (கிறுகிறுப்பில் பார்க்க) அமுக்கும் தலைவலி, முன்புறம் குனிதல், அசைதல், இருமுதல், தலையை ஆட்டுதல் இவைகளால் உபாதி அதிகம், காலை நேரங்களில் தலைவலி. மந்த உணர்ச்சி, தலையை இறுகக் கட்டுவதால்

வலிகள் சமனப்படுதல். இடது பொட்டிலிருந்து இழுக்கும் வலி மேல் நோக்கிச் செல்லுதல். தலையில் அரிப்பு, மயிர் உதிர்தல், அடிக்கடி ஏற்படும் பித்தத் தலைவலி, மாதவிடாய்ப் போக்குக் குறைவாகவிருந்து அதனால் ஏற்படுந்தலைவலி, அடிவயிறு உப்பிசம் இரைச்சலுடன் தலைவலி.

**ஸெலீனியம்:** நரம்புத் தலைவலி, சூரிய உஷ்ணம், காபி, டீயால் அதிகரித்தல். மயிர் உதிர்தல்.

**ஸெனகா:** மந்தம், அமுக்கும் உணர்ச்சி, பொட்டு, நெற்றியில் இடிக்கும் வலி.

**ஸெனஸியோ:** மந்தமான தலைவலி, இடது கண்ணின் மேல் அல்லது இடது பொட்டில் கூரான ஆயுதத்தால் குத்தும் வலி.

**ஸைக்ளமென்:** தலைச்சுற்றல் நெற்றியில் கடுமையான வலி. இடது பொட்டில் வலி வலியுள்ள பாகத்தை அமுக்கிப் படுப்பதாலும் திறந்த வெளிக்காற்றிலும் வலி அதிகமாதல் மாதவிடாய்க் கோளாறுகளால் தலைவலி.

**ஸோரினம்:** (கழுத்தில் பார்க்க) கழுத்திலிருந்து தலைக்குச் செல்லும் வலி. தலைவலியுடன் தலைச்சுற்றல். தலைவலியுடன் பசியெடுத்தல். இதனால் இரவுகளில் எழுந்திருந்து உண்ணவேண்டி வருதல். நீடித்து அவ்வப்போது வரும் தலைவலிகள். சாப்பிடுதல், தலையைக் கழுவுதல், மூக்கிலிருந்து ரத்தம் வருதல். இவைகளால் தலைவலி சமனம். தலையில் சிரங்கு. கொப்புளம். படைகளில் நாற்றமுள்ள நீர் வெளிப்படுதல், குளிர்காலத்தில் படைகள் ஏற்படுதல், படைகளும் தலைவலியும் மாறி மாறி ஏற்படுதல். மயிர்கள் ஒன்றோடொன்று ஒட்டிக்கொண்டிருத்தல்.

**ஸ்க்வில்லா:** வலது பக்கத்தில் குத்தும் வலி.

**ஸ்டாபிஸாக்ரியா:** நரம்புத் தலைவலியுடன் நடு நெற்றியில் உஷ்ண உணர்ச்சி. நெற்றியில் ஒரு உருண்டையான வஸ்து ஒட்டிக்கொண்டிருப்பது போன்ற உணர்ச்சி. தலையிலும் காதுகளின் பின்புறத்திலும் ஈரப்பசையுள்ள படைகள் ஏற்பட்டு அவைகளிலிருந்து நீர் வெளியேற்றப் படுதல்.

**ஸ்டானம் :** படிக்கும்போது கிறுகிறுப்பு ஏற்படுதல், காலை நேரத்தில் ஒரு கண்ணில் வலி ஆரம்பித்து சிறிது சிறிதாக முழுத்தலைக்கும் பரவி கடைசியில் வாந்தியுடன் சிறிது சிறிதாகவே வலி சமனப்படுதல். அமுக்குவதால் வலி சமனம்.

**ஸ்டிக்டா :** முகத்தின் ஒரு பாதி, பிடரி, கீழ்த் தாடையில். கூரான ஆயுதத்தை செலுத்தும் உணர்ச்சி. வலி நெற்றியில் அமுக்கும் உணர்ச்சி. பொழுது ஏறினால் அதிகமாதல். ஜலதோஷ தலைவலி. சளி வெளியேறினால் சமனம்.

**ஸ்ட்ரமோனியம் :** இருட்டில் நடக்க எத்தனித்தால் தலை சுற்றுதல் இடதுபுறமாகவோ அல்லது பின்புறமாகவோ விழுந்துவிடுதல். தலைவலி. ஒக்காளம், விழிகள் குத்திட்டிருத்தல் நரம்புகள் துடித்தல், தலையணையிலிருந்து தலையை அடிக்கடி தூக்குதல்.

**ஸ்பாஞ்சியா :** கழுத்துப் பிடிப்பு. உள் தலைவலி, நெற்றி, பிடரியில் துடிக்கும் வலி.

**ஸ்பைஜீலியா :** சூரிய உதயத்திலிருந்து அஸ்தமனம் வரை தலைவலி. இடது பக்கத்தில் அதிகம். காலையில் தூங்கி விழித்தவுடன் தலைவலி, சுற்றல், நரம்புத்தலைவலி, நினைத்தாலும், சரீரத்தைக் குலுக்கும் அசைவினாலும் சப்தத்தாலும் அதிகமாதல். தலைவலியுடன் படபடப்பு, குமட்டல் வாந்தி, இடது பிடரியில் ஆரம்பித்து மண்டையின் வழியாக முன் நோக்கி வந்து இடது புருவத்திற்கு, மேலும் இடது பொட்டிலும் தங்குதல், தலை வெடித்துவிடும் போன்ற வலிகள். கழுத்து விறைப்பாகவிருத்தல். தலையை இறுக்கிக் கட்டியது போன்ற உணர்ச்சி.

**ஹமாமெலிஸ் :** ஒரு பொட்டிலிருந்து மறு பொட்டு வரை வலி.

**ஹீபர்ஸல்பர் :** தலையில் குளிர்காற்றுப்பட்டால் உடனே சளி பிடித்தல், மயிர் உதிர்தல். மூளையின் ஒரு பாதியில் ஒரு முளையை வைத்து இறுக்கியதுபோல் வலி. தலையை இறுகக் கட்டுவதால் வலிகட்குச் சமனம். தலைத்தோலைத் தொட்டால் வலி எடுத்தல்.

**ஹெல்லிபோரஸ் :** குனிந்தால் தலை சுற்றல். நிமிர்ந்தால் சமனம். தலையைத் தலையணையில் அமுக்கி வைத்துக்கொள்ளல்.

தலையை உருட்டுதல் தலை பின்புறமாக இழுக்கப் பட்டிருத்தல்.

**ஹைட்ராஸ்டிஸ்:** மந்த உணர்ச்சி நெற்றியில் அழுக்கும் வலி முன் தலையில் மயிர்க்கால் ஓரங்களில் படைகள்.

**ஹைபெரிகம்:** கனம். சில்லென்ற பனிக்கட்டி வைத்திருப்பது போன்ற உணர்ச்சி, தலை நீண்ட உணர்ச்சி.

**ஹையாஸ்யாமஸ்:** கழுத்தின் தசைகள் முறுக்கிக்கொண்டு தலை கோணலாக இழுக்கப்பட்டிருத்தல், தலையை உருட்டுதல்.

# மூளை

**அகோனைட்:** மூளை பிதுங்கிவிடும் போலிருத்தல்.

**அக்டியா ரஸிமோஸா:** மூளை நோய்கள், மூளையில் அடிப்பது போலிருத்தல்.

**அபிஸிந்தியம்:** டைபாய்டில் மூளையின் அடிப்பாக நெருக்கத்தால் தூக்கமின்மை.

**அபிஸ் மெல்லிபிகா:** மூளை ஜுரத்தில் சுயநினைவின்றி வீல் என்று அலறுதல். மூளைத் தொந்தரவில் வெந்நீரால் அரிப்பு உண்டாதல்,

**அமோனியம் கார்ப்:** மூளை வளர்ந்த உணர்ச்சி.

**அம்ப்ரா க்ரிஸியா:** மூளைக் கோளாறுகள்.

**அயிலாந்தஸ்:** மூளையிலிருந்து கைகால்களுக்கு மின்சார விசை போன்ற உணர்ச்சி ஓடுதல்.

**அர்னிகா மொண்டானா:** மூளைச்சோர்வு.

**ஆர்னிகா மொண்டானா:** மூளை அதிர்ச்சியால் மூத்திரம் தடைபடல். தலையில் அடிபட்டதாலேற்பட்ட மூளை உபாதிகள், மற்றும் பல தொந்தரவுகள்,

**ஆஸிட் அஸடிக்:** மூளைக் கலக்கம்.

**ஆஸிட் ஆக்ஸாலிக் :** மூளையிலிருக்கும் ரத்தமெல்லாம் வெளியே போய்விட்டதுபோன்ற உணர்ச்சி.

**ஆஸிட் பிக்ரிக் :** மூளைத் தளர்ச்சி, மூளை மிருதுவாதல்.

**ஆஸிட் ஸல்ப்யூரிக் :** நெற்றியின் உள்ளே மூளை தொள தொளத்த உணர்ச்சி. அது பக்கத்துக்குப் பக்கம் விழுவது போன்ற உணர்ச்சி.

**இபிகாக்உனு :** பித்த வாந்தியுடன் கூடிய மூளை நோய்கள்.

**ஓபியம் :** தலை பின்னுக்கிழுக்கப்பட்ட மூளை ஜுரம்.

**கந்தாரிஸ் :** மூளையினுள்ளே எரிச்சல்.

**கல்கேரியா பாஸ் :** மூளை களைத்திருத்தல்.

**கன்னபிஸ் இண்டிகா :** மூளையில் அநேகவிதமான விஷயங்கள் தோன்றிக்கொண்டே யிருப்பதால் முன்னே நடந்த சம்பவங்களையோ அல்லது பேசின வார்த்தைகளையோ ஞாபகத்துக்குக் கொண்டுவர இயலாமை மூளையினுள்ளே கடுமையான அமுற்சிகள் ஏற்படுவது போன்ற தோற்றம்.

**காக்குலஸ் :** மூளை முள்ளந்தண்டுக் கோளாறுகளில் மிகவும் பயன்படும்.

**காக்டஸ் க்ராண்டிப்ளோரஸ் :** மூளையில் ரத்தத்திரட்சி, சிவந்த கண்கள், மூச்சுத்திணறல்.

**காமொமில்லா :** மூளையின் ஒருபக்கத்தில் புடைக்கும் தலைவலி.

**காலீ பாஸ் :** மூளையில் ரத்தசோகை, மூளை உபாதிகள்.

**குப்ரம் மெடாலிகம் :** மூளையில் அடிபட்டது போன்ற வலி, மூளை ஜுரம்.

**க்ளோனுயின் :** மூளை அலைபோல் நகருவது போன்ற உணர்ச்சி யுடன் துடிக்கும், புடைக்கும், தலைவலி, மூளை பெருத்த உணர்ச்சி, வெடித்து விடும்போல் தோன்றுதல்.

**செனபோடியம்:** மூளையில் ஊசலாடும் உணர்ச்சி.

**சைனு:** மூளை அங்குமிங்கும் ஊசலாடி மண்டையோட்டில் முட்டுவது போன்றும் அதனால் வலியேற்படுவது போன்றும் உணர்ச்சி.

**டாரண்டுலா ஹிஸ்பானியா:** மூளையை ஆயிரம் ஊசிகளால் குத்துவது போன்ற வலி.

**டியூபர்குலீனம்:** மூளை அழர்ச்சி ஜுரம், மெனிஞ்ஜிடிஸ்.

**நேட்ரம் மூரி:** மூளைக் குழப்பம்.

**நேட்ரம் ஸல்ப்:** முன்பக்கமாகக் குனிந்தால் மண்டையினுள் மூளை தனியாக ஊசலாடுவது போன்ற உணர்ச்சி. தலை உபாதிகள், படிப்பதனாலும், மூளைக்கு வேலை கொடுப்பதனாலும் அதிகமாதல். மூளையிலும் முள்ளந்தண்டிலும் அடிபட்டதனாலேற்பட்ட கோளாறுகள்.

**பல்லாடியம்:** தலையும் மூளையும் ஊசலாடும் உணர்ச்சி.

**பாப்டீஷியா:** மூளையின் அடிப்பாகத்தில் கனமான வலி.

**பாரீடா கார்ப்:** மண்டை ஓட்டினுள் மூளை இந்தப் பக்கமும் அந்தப் பக்கமும் ஆடுவது போன்ற உணர்ச்சியுடன் தலை வலி. கிழவர்கட்கு மூளை சுருங்கியதால் நடுக்கல்களும் சிறுவர்களைப்போல் நடந்துகொள்ளுதலும்.

**பாரீடா மூரியாடிகா:** மூளைக்கு ரத்தம் சரிவர செல்லாமை.

**பாஸ்பரஸ்:** மூளைச் சோர்வு.

**புபோ:** மூளையில் மதமதப்பு.

**பேர்ரம் பிக்ரிகம்:** அதிக உழைப்பால் மூளை பலஹீனம்.

**ப்ளம்பம்:** தொண்டையிலிருந்து மூளைக்கு ஓர் பந்து ஏறிச் செல்வது போன்ற உணர்ச்சி.

**மங்கானம்:** தலையை அசைக்கும்போது மூளை உள்ளே உதறுவது போலிருத்தல்.

**மெர்க்குரியஸ் ஸொலுபுலிஸ்:** மூளைச் சோர்வு.

**ரஸ்டாக்ஸ்:** மண்டையினுள்ளே மூளை அங்குமிங்கும் ஊசலாடுவது போன்ற உணர்ச்சி.

**லாரோஸிராஸஸ்:** மூளை குளகுளப்பாயிருப்பது போன்ற உணர்ச்சி மூளையில் வேலை செய்யும் ஔஷதம்.

**லைகோபோடியம்:** மூளை பலஹீனம், மூளை குழப்பம் அடையும் நிலைமை.

**ஜெல்ஸிமியம்:** மூளை ஜுரம்.

**ஸிகூடா விரோஸா:** மூளையில் அடிபட்டதால் ஏற்படும் வலிப்புகள், மூளை, முள்ளந்தண்டு தாபிதஜுரம்.

**ஸிங்கம் மெடாலிகம்:** மயக்கத்துடன் தன்னுணர்வின்றி வெளியேற்றப்படும் வயிற்றுப் போக்கை நிறுத்தினல் மூளைக் குறிகள் உண்டாதல். மூளையில் நீர் கோத்துக்கொண்ட குறிகள்.

**ஸிலிகா:** மூளையில் பலஹீனம். விஷயங்களில் மனதைச் செலுத்த முடியாமை, வக்கீல்கள் முதலிய அதிக மூளையை உபயோகிப்பவர்களின் மூளைச் சோர்வு (மனம், பயத்தில் பார்க்க)

**ஸ்ட்ரமோனியம்:** (எல்லாவித) மூளைக் கோளாறுகளிலும் பயன்படக்கூடிய ஔஷதம். (ஜுரங்களிலும்)

**ஹயாஸ்யாமஸ்:** மூளை அழர்ச்சி, மூளைக் கோளாறுகள்.

**ஹீபர் ஸல்பர்:** மூளையின் ஒரு பாதியில் ஒரு முளையை வைத்து இறுக்கியது போன்ற வலி.

**ஹெல்லிபோரஸ்:** மூளை மிகவும் பெரிதாக உப்பியிருப்பதுபோன்ற உணர்ச்சி. மூளையில் நீர் சுரத்தல், மூளை பாதிக்கப்பட்ட டைபாய்ட் கேஸ்கள்.

**ஹைபெரிகம்:** இறுக்கப்பட்ட உணர்ச்சி, மூளைச் சோர்வு.

# முகம்

அகேரிகஸ் : சிவத்தல், அரிப்பு (பனி உபாதிபோல் உஷ்ணத்தால் அதிகமாதல்) முகத்தை முறுக்கிக் கொள்ளல். நரம்பு வலி ஒரு சமயம் ஒரு பக்கத் தசையும், மறுபக்க தசையும் முறுக்கிக் கொள்ளல். தசைகள் குதித்தல், வெளுத்தல், நீலம்.

அகோனைட் : சிவப்பு, சூடு, வீக்கம் ரத்தச்சுரப்பு, ஒரு கன்னம் வெளுப்பும், மறு கன்னம் சிவத்தலும், வலி, கீழ்த்தாடை வீக்கம், முகம் பெரிதாகும் உணர்ச்சி, வாய் ஒருபுறமாகக் கோணுதல், எப்போதும் சிவப்பாக இருக்கும் முகம், எழுந்ததும் பிண வெளுப்படைதல்.

அக்டியா ரஸிமோஸா : தசை ஆடுதல், சிவத்தல்.

அக்டியா ஸ்பைகாடா : வாதவலி.

அக்னஸ் காஸ்டஸ் : கன்னங்களைக் கரைக்கும் அரிப்பு, இடது கன்ன அக்கி, கீழ்த்தாடை வலப்பக்க குழியில் பிளக்கும், கிழிக்கும் வலி.

அபிஸிந்தியம் : முகத்தில் ஆரம்பித்து மற்ற பாகங்களுக்குப் பரவும் கூக்குரலுடன்கூடிய வலிப்பு, குரங்குபோல் அழுகு வழிதல், நுரையுடன் கூடிய காக்கை வலிப்பு.

அபிஸ் மெல்லிபிகா : வெளுப்பு, குழி விழுதல், கருஞ்சிவப்பு, வீக்கம், சூடான நீர் வீக்கம். மெழுகுபோல் வலதுபுறமிருந்து இடதுபுறம் செல்லும் அக்கி, தாடையெலும்பில் கொட்டும் வலி, நீலம் பூரித்த உதடுகள். நீர்ச் சுரப்பு, கீழ் உதடு வெடித்தல்.

அப்ரோடேனம் : இளைப்பு, சில்லிப்பு, சுருக்கம்.

அமில்நைட்ரேட் : முகம் சிவத்தல் (சூரிய இடியில் சிவத்தல்)

அமோனியா கார்ப் : கன்னங்களிலும் கோளங்களிலும் கடின வீக்கம், முகவாய், கன்னம், நெற்றியில் கொப்புளங்கள், முகம் அதைத்தல், வெளுத்தல்.

**அமோனியம்மூரி:** எரிச்சல், வெண்மை, எலும்புகளில் கிழிக்கும் வலி. கன்னம் தாடைக் கோளங்களில் வீக்கம், பருக்கள், திறந்த வெளியில் முக உபாதி சமனம்.

**அம்ரா க்ரீஸியா:** காமாலே. அனல் வீசுதல். முகத் தசை முறுக்கிக் கொள்ளல்.

**அயிலாந்நஸ்:** சிவந்த சூடான முகம்.

**அர்ஜண்டம் நைட்ரிகம்:** வியாதியுற்றுக் குழி விழுந்து வெளுத்து மஞ்சள் நிறமாகயிருத்தல். கருத்தல், அகாலத்தில் கிழத் தன்மையடைந்த முகம், கன்னங்களில் வட்டமாகச் சிவத்தல், முகத்தில் நரம்பு சம்பந்தமான வலிகள்.

**அலுமினு:** வெளுத்தல் அல்லது சிவத்தல். முகம் நீண்ட உணர்ச்சி, அரிப்பு உணர்ச்சி. சிலந்தி வலேயிருக்கும் உணர்ச்சி, ரத்தங் கொதித்தல், இடது முகவாய்க் கட்டை தானுகவே அடிக்கடி முறுக்கிக் கொள்ளுதல்.

**ஆண்டிமோனியம் ஆர்ஸனிகம்:** முகம் ஊதுதல்.

**ஆண்டிமோனியம் க்ருடம்:** அதிக சிவப்பு. பருக்கள், கொப்புளங்கள் தோன்றுதல். கன்னங்களில் சீழ்க்கொள்ளும் ஆருத புண்கள்.

**ஆண்டிமோனியம் டார்டாரிகம்:** வெளுத்தல், குழி விழுதல், ஊதியிருத்தல். நீலநிறமடைதல். கிழிக்கும் வலி. சூடான எரிச்சல் முகத்தில் குளிர்ந்த வியர்வை. குமட்டலும், தலே நெற்றியில் சூடான வியர்வையும்.

**ஆரம் ட்ரிபில்லம்:** ஊதியிருத்தல். தாடைக் கோளங்களில் வீக்கம்.

**ஆரம் மூரி:** நெற்றியில் அரிப்பு. முகஞ் சிவத்தல்.

**ஆரம் மெடாலிகம்:** நிறைந்த நாடியுடன் தாடைக் கோள வீக்கம், முக எலும்புகளில் அழர்ச்சி. கன்ன எலும்புகள் அழுகுதல். முகம் ரத்தம் செறிந்திருத்தல். முகத்தின் இடப்பாகத்தில் கிழிக்கும் வலி, வீக்கம்.

**ஆர்ஸனிகம் ஆல்பம் :** பிண வெளுப்பு, வீக்கம், குழிந்திருத்தல். குளிர்ந்த வியர்வையுடன் நீர்ச் சுரப்பு. முகத்திலும் உதடுகளிலும் எரிச்சலுள்ள புற்றுகள். சூடான ஊசிகளை சரீரத்தில் குத்துவது போல் எரிச்சல், கடுக்கும் வலி.

**ஆர்ஸனிக் ஐயோ :** பிணம்போலிருத்தல்.

**ஆர்னிகா :** ஒரு கன்னம் சிவந்தும் எரிந்துகொண்டுமிருத்தல் குழி விழுதல், முகத்தைக் கழுவினுல் மூக்கில் ரத்தம் கொட்டுதல்.

**ஆஸிட் அஸடிக் :** கவலை, கடுமையான தோற்றம், வெளுத்திருத்தல். மெழுகு தடவியது போலிருத்தல். ஒட்டிப் போதல், சுரத்தில் இடது கன்னம் சிவத்தல், கீழ்த் தாடையிலிருக்குங் கோளங்கள் வீங்குதல்.

**ஆஸிட் கார்பாலிக் :** நெற்றியில் இறுக்க உணர்ச்சி, முகம் கருத்த சிவப்பாகவிருப்பினும் வாயையும் மூக்கையும் சுற்றி வெண்மையான கோடுகள்.

**ஆஸிட் நைட்ரிக் :** வெளுத்து மஞ்சள் நிறமாகச் சாம்பல் பூசியது போல் குழி விழுந்துமிருத்தல். முகம் ஊதியிருத்தல். நெற்றியிலும் முகத்திலும் வியர்க்குருக்கள், சிம்பிடித்த சினப்புகள், கடை வாய்களில் ரணம், தாடையெலும்புகள் உளுத்தல. கழுத்துக் கோளங்கள் வீங்குதல், பற்களை அசைக்கும்போது தாடைகளில் கடக் கடக்கென்ற சப்தம்.

**ஆஸிட் பென்ஸாயிக் :** நெற்றியில் சில்லிட்ட வியர்வை, முகத்தில் செம்புநிறத் தேமல் போன்ற படைகள்.

**ஆஸிட் மூரி :** மயக்கத்தால் சிவத்தல், கீழ்த்தாடை தொங்குதல். கன்னத்தில் உட்புறம் சிவப்பு.

**இக்னேஷியா :** வலிப்புப்போல் தசைகளில் முறுக்குதல். பேசும்போது அடிக்கடி தாடைகள் மூடிக்கொள்ளுதல், முகஞ் சிவத்தலும் வெளிர்தலும் மாறி மாறி வருதல். ஒரு பக்கத்துக் கன்னமுங் காதும் சிவந்தும் சூடாகவுமிருத்தல்.

**இபிகாக்உனு :** வெளுப்பு. சிவப்பு, உப்பியிருத்தல், குழிவிழுந்திருத்தல்.

**எரிகரான் :** சிவந்த முகம்.

**ஐயோடியம் :** மஞ்சள் நிறம், நீர் அதைப்பு, தாடைக் கோளங்கள் வீங்குதல்.

**ஐரிஸ் வர்ஸிகோலர் :** நரம்பு சம்பந்த வலி.

**ஓபியம் :** முகத்தசைகள் தளர்ந்து தொங்குதல், அத்தசைகளில் கெண்டைப் பிடிப்பு, ஊதியிருத்தல் கருஞ்சிவப்பு நிறம். சூடு, சில சமயங்களில் வெளுத்தும் மண்போலுமிருத்தல், குழிவிழுந்த முகம், கண்களில் ரத்தத் திரட்சி, பிடரித்தலையில் வலி, வாயில் நுரை. வதங்கிய கிழவனை ஒத்த குழந்தைகள், கீழ்த்தாடை தொங்குதல்.

**ஓலிமம் ஸாங்டம் :** முகம் ஊதுதல், சூடாதல்.

**கந்தாரிஸ் :** வலியிருக்கும்போதும் வலி நீங்கியபின்னும், மாலை வேளைகளிலும் முகம் சவத்தையொத்த நிறத்தையடைதல். அதிக வீக்கம், தடிப்பு, குனியும்போது முகத்தில் ரத்தம் சுரத்தல். அக்கி, தொட்டால் எரிச்சல். சிவந்த முகம், தாடையை அசைக்க முடியாமை.

**கன்னபீஸ் ஸடிவா :** இடது கன்னம் சிவந்தும் வலது கன்னம் வெளுத்துமிருத்தல்.

**கல்கல்கேரியா ஐயோ :** கீழ்த்தாடை உமிழ் நீர்க்கோளங்களில் அழர்ச்சி.

**கல்கேரியா கார்ப் :** வெளுத்தல், அதைப்பு கண்களைச் சுற்றி நீல வளையங்கள், சுருக்கம், காலையில் மேலுதடு வீங்கியிருத்தல். கீழ்த்தாடைக் கோளங்களில் வலியுள்ள வீக்கம்.

**கல்கேரியா பாஸ் :** மேல் தாடை எலும்புகளில் வலப்பக்கத்திலிருந்து இடப்பக்கத்திற்குச் செல்லும் வலி.

**கல்கேரியா ப்ளோரி:** தாடை யெலும்புப் பக்கமாகக் கன்னத்தில் கடினமான வீக்கம்.

**கல்கேரியா ஸல்ப்:** முகத்தில் பருக்கள், கட்டிகள்.

**காக்குலஸ்:** வெளுத்தும் சுரத்துமிருத்தல், வாயைத் திறக்கும் போது இழுக்கும் வலி, முகத்தில் சூடு. குளிர்ந்த அறையி லிருக்கும்போது கன்னங்கள் சிவந்திருத்தல்.

**காக்டஸ் க்ராண்டி:** வெளுப்பு. நரம்பு சம்பந்தமான இழுப்புகள்.

**காட்மியம் ஸல்ப்:** முகத்தில் குளிர்ந்த வியர்வை. ஒரு கண்ணை யும் முகத்தின் ஒரு பாகத்தையும் மாத்திரம் பீடிக்கும் பாரிசவாதம்.

**காபியா க்ருடா:** முகத்தில் நரம்பு சம்பந்த இழுப்பு வலி.

**காப்ஸிகம்:** கொழுத்த தொளதொளத்த சரீரங்களில் ஒரு சமயம் கன்னங்கள் சிவத்தல். மறுசமயம் வெளுத்தல். சிவந்திருக்கும்போது கன்னங்களில் சூடில்லாதிருத்தல் முகத்தில் வலி, தொட்டால் அதிகரித்தல்.

**காமோமில்லா:** ஒரு தாடை சிவந்து சூடாகவும், மறு தாடை வெளுத்து சில்லிட்டுமிருத்தல். தாடையிலேற்படும் பிடிப்புவலி. உட்காதுகளுக்கும், பற்களுக்கும் பரவுதல். முகத்தசைகளிலும் நாக்கிலும் துடிப்பு.

**காம்போரா:** சரீரச் சூட்டால் சிவப்பாயிருத்தல் அல்லது சவம் போல் வெளுத்துச் சில்லிட்டிருத்தல். வாந்தியுடன் முகத் தில் சில்லிட்ட வியர்வை.

**கார்பன் ஸல்ப்:** வெளுத்தல், சில்லிடல், அதைத்தல்.

**கார்போ அனிமாலிஸ்:** செம்பு நிறத்தையொத்த சினைப்புகள், அக்கி.

**கார்போ வெஜ்:** நீலம் அல்லது வெளுப்பு. குளிர்ந்த வியர்வை யுடன் சில்லென்றிருத்தல். நெற்றியிலும் முகத்திலும் பருக்கள்.

**காலாடியம்:** கண்களிலும் நெற்றியிலும் அழுத்தும் உணர்ச்சி.

**காலீ க்லோரிகம்:** அதிக வீக்கத்தால் பார்க்க முடியாமை.

**காலீ பாஸ்:** கன்றியும் குழிவிழுந்துமிருத்தல், கண்கள் இடுங்கியிருத்தல், வலப்பாக நரம்புவலி, குளிர்ந்த ஒற்றிடங்களால் சமனம்.

**காலீ பைக்ரோமிகம்:** அழகான வடிவம், சிவந்த மேனி, பருக்கள், கண்களின் கீழுள்ள எலும்புகளில் வலி.

**காலீ ப்ரோமேடம்:** முகத்தில் ரத்தச் சுரப்பு.

**காலீ மூரி:** கன்னங்களில் வீக்கம், வலி, கழுத்திலும் முகவாய்க் கட்டையிலுமுள்ள கோளங்கள் வீங்குதல்.

**காலீ ஸல்ப்:** புற்றுக்கள். சூடான அறையில் வலி.

**காலோஸிந்திஸ்:** கடுமையான வலி. வீக்கம், இடது பாகத்தில் அதிகமான வலி, அமுக்கினால் வலி சமனம். சில்லிப்புடன் நரம்பு சம்பந்த வலி.

**கால்மியா:** நரம்பிழுப்பு வலப்பாகத்தில் அதிகம். நாக்கில் பிடிப்பு வலி, தாடை முகவெலும்புகளில் பிடிப்பு வலி.

**காஸ்டிகம்:** வலதுபாகப் பாரிசவாயு. பாலுண்ணிகள் பருக்கள் முகவெலும்புகளில் வலி. தாடைகளில் வலி, வாயைத் திறக்க சிரமம்.

**குப்ரம் மெடாலிகம்:** வாயில் நுரையுடன் தாடைகளில் இழுப்பு, பயந்த கோளாறுகளால் முகத்தசைகள் குதித்தல்.

**கோபைவா:** சிவந்த சிணைப்புகள்.

**கோல்சிகம்:** முகத்தில் நீர் அதைப்புள்ள வீக்கம், மஞ்சளாகவும் குழிவிழுந்துமிருத்தல்.

**க்ராபைடிஸ்:** முகத்தில் அக்கி, எரிச்சல், கொட்டுவலி. முகத்தில் சிவப்புடன் ரத்தசோகை, சிலந்தி வலை இருக்கும் உணர்ச்சி, மூக்கின்மேல் படைகள், அரிக்கும் பருக்கள், வாய், தாடை இவைகளைச் சுற்றி கசகசப்பான படைகள்.

**க்ரீஸோட்:** நோயுற்றுக் கஷ்டத்தை அனுபவிக்கும் முகத் தோற்றம். குழந்தைகள் கிழவர்கள் போல் தோற்ற மளித்தல். கீழ் உதட்டில் பயறு போன்ற சினைப்புகள். முகத்தில் எரிச்சல், அசைவதனாலும், பேசுவதனாலும் அதிகமாகி வியாதியில்லாத பக்கத்தில் படுப்பதனால் சமனம்.

**க்வாய்கம்:** முகம் சிவந்து வீங்கிக் கிமடு தட்டியிருத்தல் வலது தாடையெலும்பிலும் கன்னங்களிலும் பிடிப்பு வலி. மாலை 6 மணி முதல் விடியற்காலை 4 மணி வரை அதிகரித்தல்.

**க்ளோனாயின்:** ரத்தச் சுரப்பு தலைவலியில் சூடாகவிருத்தல் முகம் மாறி மாறி ரத்தம் சுரந்தும் வெளுத்துமிருத்தல் முகத்தில் வியர்வை நரம்பு வலி, தெறிப்பு வலி, தலை வழியாகப் பரவுதல்.

**சின்னியம் ஸல்ப்:** நரம்பு வலிகள் கண்களுக்குக் கீழ் பாகத்தில் ஆரம்பித்து கண்களைச் சுற்றி பரவுதல். குறிப்பிட்ட நேரங்களில் வலி வந்துகொண்டே இருத்தல். அமுக்குவ தால் வலி சமனமாதல்.

**செலிடோனியம்:** கன்னம் மூக்கு மஞ்சள் நிறமாதல்.

**சைனா:** எக்காரணத்தாலாவது அதிக ரத்தம் சரீரத்திலிருந்து வெளியேறிய பின்னும் அமித சிற்றின்ப நுகர்ச்சியாலும் தாது நீர்கள் அதிகமாக வெளியேறிய பின்னும் முகஞ் சிவந்திருத்தல். சோகை பிடித்த முகம் உப்பியிருத்தல்.

**டபாகம்:** மண் வெளுப்பு, குளிர்ந்த வியர்வை, மாலையில் முக வெலும்பு வலி.

**டல்கமாரா:** தாடையில் வலி, கண் காதுகளுக்கு நடுவில் பாய்தல், வலிகளுக்கு முன் சில்லிடல். குளிர் காற்றுப் பட்டால் வலி,

**டிஜிடாலிஸ்:** நீலம் பூரித்தல், சிவத்தல், பிணக்களை, வெளுத்தல்.

**ட்யூபர்குலீனம்:** சுரத்திலும் குளிரிலும் சிவந்திருத்தல்.

**ட்ரோஸிரா:** இடது பக்கத்தில் குளிர்ந்த உணர்ச்சி, வலது பக்கத்தில் உஷ்ண உணர்ச்சி; கொட்டும் வலி.

**துஜா:** எண்ணெ தடவியது போலிருத்தல்.

**தெரிபிந்த்:** சுருங்குதல், வெளுத்தல்.

**நக்ஸ்வாமிகா:** விட்டு விட்டு வரும் வலிகள். காலே நேரங்களில் அதிகம் படுத்திருப்பதால் சமனம். முகம் மஞ்சளாக விருத்தல், களைத்திருத்தல், கீழ்த்தாடை தொங்குதல். காதுகளுக்குக் கீழேயுள்ள கோளங்களில் வீக்கத்தால் ஆகாரத்தை விழுங்கும்போது கொட்டும் வலிகள், பல் வலியுடன் முகம் வீங்கியிருத்தல்.

**நேட்ரம் ஆர்ஸனிகம்:** நெற்றியில் மட்டும் வியர்வையேற்படல் முகம் ஊதியுஞ் சிவந்தும் உஷ்ணமாகவுமிருத்தல். கண்களைச் சுற்றிலும் நீலநிறமாகவிருத்தல்.

**நேட்ரம் கார்ப்:** ஊதியிருத்தல் நெற்றியில் மஞ்சள் நிறமுள்ள படை, முகம் வெளுத்து சரீரம் இளைத்தல்.

**நேட்ரம் முரி:** அதிக ஜுரத்தாலேற்படும் சிறிய கொப்புளங்கள் மீசையின் மயிர்கள் உதிர்தல். உதடுகளிலும் வாயைச் சுற்றிலும் முத்துக்கள் போன்ற கொப்புளங்கள் கழுத்தின் இருபக்க கோளங்களும் வீங்கியிருத்தல்.

**நேட்ரம் சல்ப்:** வெளுத்தல் மஞ்சளாகவிருத்தல் அரிப்புடன் கூடிய படைகள். (வாயில் பார்க்க) தாடைகளில் பருக்கள்; தொட்டால் எரிச்சல்.

**பல்ஸடில்லா:** முகத்தில் நெருப்பினல் அறைவது போன்ற உணர்ச்சி. சிவப்பாகவோ அல்லது சிவப்பும் வெளுப்பும் மாறி மாறியோ இருத்தல். ஊதியிருத்தல், மாலைகளில் உஷ்ணமான எரிச்சல், முகத்தில் நரம்பு வலி, கீழ் உதட்டின் நடுவில் வெடிப்பு, தாளம்மை.

**பாடியாகா:** நெற்றியிலும் கண் விழிகளிலும் வலி. முகக் கோளங்கள் வீங்கிக் கறடு தட்டுதல்.

**பாப்டீஷியா:** சிவத்தல், உப்புதல், மயக்கம், தாடை உப்புதல்.

**பாரிடாகார்ப்:** வியாதியுற்றும், வெளுத்தும், சங்கோஜம் தோற்றுவித்தும், அதைத்தும், பயங்கொண்டும், காய்ந் தும், சுருங்கியுமிருத்தல். கழுத்து பக்கத்துக் கோளங் கள் வீங்கிக் கரடுதட்டி யிருத்தல்.

**பாஸ்பரஸ்:** வெளுத்து வியாதியுற்று சாம்பல் நிறமாகவிருத் தல். அல்லது மஞ்சளாகவும் ஊதியுமிருத்தல். உதடுகள் நீலம் பூரித்திருத்தல். கண்களுக்கு கீழே அதைத்திருத்தல் குழி விழுந்த கண்களும் சுற்றி நீலநிற வளையங்களும் இருத்தல் நெற்றியிலிருந்து கண்களுக்குச் செல்லும் வலி. கீழ்த்தாடை யெலும்புகள் உளுத்துப் போதல். முகம் முழுதும் ஊதியிருத்தல். கைகால்களில் நீர்ச்சுரப்பு.

**பிஸ்மத்:** துண்டுதுண்டாக கிழிக்கும் வலி; ஆகாரத்தால் உபாதி அதிகம், குளிர்ச்சியால் சமனம்.

**புபோ:** முகத்தில் எப்போதும் வியர்வை கசிதல். நெற்றி வலி, முகம் ஊதல்.

**பெர்பெரீஸ் அக்யூபோலியம்:** முகப்பரு, முகம், கழுத்து, கொப் புளங்கள். (தலையிலிருந்து)

**பெர்பெரீஸ் வல்கேரிஸ்:** வெளுப்பு, வியாதித் தோற்றம் முகம் கன்னம் குழி விழுதல்.

**பெர்ரம் மெட்:** வெளுப்பு, சாம்பல் நிறம், பச்சைநிறம், மனவெழுச்சியால் அதி சீக்கிரம் முகஞ்சிவத்தல், உடலில் நல்ல அதிக ரத்தம் இருப்பதுபோன்ற தோற்றம். (ஆனால் அப்படியல்ல.) வலி, உப்பிய உணர்ச்சி.

**பெல்லடோன்னு:** சிவப்பு, உஷ்ணம் அல்லது வெளுப்பு. சில்லிப்பு, உஷ்ணம், எரிச்சல், ஆனால் பாதம் சில்லிப்பு.

**பைரோஜீனியம் :** வெளுப்பு, குழி விழுதல். சில்லிட்ட வியர்வை.

**ப்ரோமியம் :** முகத்தில் சிரங்குகள். இடதுபக்கத் தாளம்மை.

**ப்ளம்பம் :** வெளுத்தல், வியாதித் தோற்றம், மஞ்சள், பிணக் களை, கன்னம் குழி விழுதல், எண்ணெ தடவியதுபோல் பளபளப்பு.

**ப்ளாட்டினு :** சில்லிப்பு, பூச்சி ஊறுவது போலிருத்தல், மறத் தல், வலப்பாகத்தில் அதிகம். வலி முறையே அதிகமாகி முறையே குறைதல்.

**ப்ளாண்டகோ :** தாடை வீக்கம்.

**மங்கானம் :** வெளுத்தல், குழி விழுதல், சாம்பல் நிறம்.

**மில்லிபோலியம் :** ரத்தத்தேக்கம்.

**மெக்னீஷியா கார்ப் :** சிவத்தல் அல்லது வெளுத்தல், வீக்கம், தலைவலி, இரவில் அதிகம்; வலிபொறுக்காமல் அங்கு மிங்கும் ஓடுதல்.

**மெக்னீஷியா முரியாடிகா :** வெளுத்தல் மஞ்சள் நிறமடைதல். நெற்றி, முகத்தில், அடிக்கடி சினைப்புகள்.

**மெபைடிஸ் :** கக்குவாயிருமலில் முகம் ஊதல், இருமியபின் நீல நிறமடைதல்.

**மெர்க்குரியஸ் கரோஸிவஸ் :** அதைப்பு, வெளுப்பு.

**மெர்குரியஸ் ஸொலுபுலிஸ் :** வெளுத்து குழிவிழுந்திருத்தல், முகத்தின் ஒரு பக்கம் (வலது புறம்) வீக்கம், கோளங்கள் பருத்திருப்பதால் வாய்திறக்க முடியாமை. தாடை எலும்புகளில் சொத்தை விழுதல்.

**மெலிலோடஸ் :** தலையில் ரத்தம் ஏறியதால் முகஞ் சிவத்தல், பிய்த்துக்கொண்டு வெளியேறிவிடும் போலிருத்தல்.

**மெஸீரியம் :** முகத்தில் ரணம், நீரைக் கக்கும் படைகள், சீழ் பொருக்கு, ரத்தம் வருதல்.

**மைகேல் :** தசைகள் வெடுக்கென்று துடித்தல், முகம் சிவந்திருத்தல்.

**மைரிகா :** மஞ்சள் நிறம்,

**ரஸ்டாக்ஸ் :** இடதுபுறமிருந்து வலதுபுறஞ் செல்லும் அக்கிப் படை, மஞ்சள் நிறக் கொப்புளங்கள், எரிச்சல், அரிப்பு, குருகுருப்பு, கொட்டும் வலி, இழுக்கும் உணர்ச்சி, சிவத்தல், வெளுத்தல், குழி விழுதல்.

**ரானங்குலஸ் :** மாலையில் சிவந்த கன்னங்கள், உஷ்ண உணர்ச்சி, நீர்க்கொப்புளம், எரிச்சல்.

**ரீயம் :** முகத்தின் தசைகள் துடித்தல்.

**ரோடோடெண்ட்ரன் :** வலி. குளிர்ச்சியால் அதிகம்.

**ரோஹிடாக் :** நெற்றிவலி, முகத்தில் சூடு, எரிச்சல்.

**லாச்சசிஸ் :** இடது பக்கம் வெளுத்தும் உப்பியுமிருத்தல். (வாயில் பார்க்க.) தாடைப்பிடிப்பு, வாயை மூட முடியாமை.

**லாரோஸிராஸஸ் :** குழி விழுந்திருத்தல். உப்பி மந்தமாகவிருத்தல், பூச்சிகள் ஊறுவதுபோன்ற உணர்ச்சி, துடிப்பு, வலிப்புகள், வாயைச் சுற்றிலும் படைகள் போன்ற சிணைப்புகள் ஏற்படுதல்.

**லில்லியம் டிக்ரினம் :** கருப்பை கீழே யிறங்கியிருப்பதுடன் மந்தமான நெற்றித் தலைவலி, கண் பார்வை மங்குதல்.

**லைகோபோடியம் :** வெளுத்தல். கன்னங்களில் சிவந்த வளையம், சில்லென்றிருத்தல். மஞ்சள் நிறம், நீரதைப்பு, கீழ்த் தாடை தொங்குதல், குழந்தைகளின் கிழத்தோற்றம்.

**லேடம் பாலஸ்திரி :** மாறிமாறிச் சிவத்தலும் வெளுத்தலும், குடித்தவனைப்போல் முகம் உப்புதல். திறந்த வெளிக் காற்றில் எரிதல்.

**வலேரியானு :** வலி, தசை துடித்தல், குளிர் காற்றுப் பட்டால் உஷ்ணம், சிவப்பு, திடீரென்று தூக்கிப்போடும் வலிகள் ஆரம்பித்தல்.

**வெராட்ரம் ஆல்பம் :** பிணம்போல் வெளுத்து சுருங்குதல், நெற்றியில் சில்லிப்பு, சில்லிட்ட வியர்வை.

**ஜெல்ஸிமியம் :** மஞ்சள் நிறம், கனம், மந்தம், கள் குடித்து மயங்கியவனைப் போன்ற தோற்றம்.

**ஸபடில்லா :** சிவத்தல், வீங்குதல், தாடையில் படக்படக் என்ற சப்தம், சாராயம் குடித்ததுபோல் உஷ்ணமாகவிருத்தல்.

**ஸரஸபரில்லா :** சிவப்பு, சிலவிடங்களில் நிறம் மாறியிருத்தல். நெற்றியில் அரித்தல், சொரிந்தால் நீர் கசிதல். கிழத் தோற்றம், கோடைக்காலத்தில் முகத்தில், மேல்உதட்டில், கொப்புளங்கள்.

**ஸல்பர் :** வெளுத்தல், வியாதித் தோற்றம், வலது காதிலிருந்து அக்கி முகம் முழுவதும் பரவுதல், வலது பக்க நரம்பு வலி.

**ஸாங்குநேரியா :** கன்னத்தில் சிவந்த வளையம், ஒரு கன்னத்தில் அல்லது இரண்டு கன்னத்திலும் சிவந்த வளையங்கள், காதுகளில் எரிச்சலுடன் முகம் சிவத்தல், மாதவிடாய் குறைவாக உள்ள பெண்களுக்கு அதிக முகப்பருக்கள். வலது கன்னத்தில் சிவப்பு நிறம் வட்டமாகத் தெரிதல்.

**ஸாம்புகஸ் :** உப்புதல், கருத்தல்.

**ஸிகூடா விரோஸா :** சிவப்பு அல்லது பிணம்போல் வெளுத்திருத்தல், பலவிதமாக இழுக்கப்பட்டிருத்தல், முகத்தின் தசைகளில் வலிப்புகள், தாடை யிறுக்கப்பட்டிருத்தல். சிறு கொப்புளங்கள் ஒன்றின் பக்கத்தில் ஒன்றாக ஏற்பட்டுப் பொறுக்குத் தட்டியிருத்தல், மேலுதட்டில் புற்றுக்கள், முகம் கடுஞ்சிவப்பாதல்.

**ஸிங்கம் மெடாலிகம் :** மாறிமாறிச் சிவத்தலும் வெளுத்தலும், நெற்றியில் குளிர்ந்த வியர்வை.

**ஸிபிலினம் :** ஒரு பக்கப் பக்ஷவாதம். செம்புநிறப் படை.

**ஸிலிகா :** கிழடு தட்டல், சுருங்குதல், வெளுத்தல், தாடைகளில் படை, முக நரம்புப் பிடிப்பு, கிழிக்கும் வலி. சிவப்பு ரத்தக்கட்டி, கீழ்த்தாடை யெலும்புகள் சொத்தை விழுதல், கோளங்கள் பருத்தல், சரீரம் சில்லிட்டு வியர்வையுடனிருத்தல்.

**ஸிஸ்டஸ்:** அடிக்கடி திடீரென்று உஷ்ண உணர்ச்சி, எரிச்சல் கழுத்துக் கோளங்கள் சிம்ப்பிடித்தல், கீழ்த் தாடை யெலும்பு சொத்தை விழுதல்.

**ஸீகேல்:** வெளுத்தல் அல்லது கருத்தல் பிணம்போன்ற முகம் உப்பியிருத்தல். குழிவிழுந்த கண்கள். முகத்திலிருந்து துடிப்புகள் ஆரம்பித்தல். நெற்றி மட்டும் சூடாகவிருத்தல், உதடுகள் பிணம்போல் வெளுத்திருத்தல்.

**ஸீனு:** முகம் வெளுத்து, வியாதியுற்று, சில்லென்றிருத்தல் வாயைச் சுற்றி வெண்மை அல்லது நீலநிறமாகவிருத்தல். கண்களைச் சுற்றி கருநிற வளையங்கள்.

**ஸெபியா:** மஞ்சட்காமாலைபோன்ற ரத்த சோகை, தாடைகளின் கீழ்க்கோள வீக்கம், வாயைச் சுற்றி மஞ்சள் நிறம், உதடுகளில் படைகள், முகத்தில் மஞ்சள் நிறப் பொட்டுகள்.

**ஸெனகா:** இடதுபக்கப் பக்ஷவாதம், உஷ்ண உணர்ச்சி.

**ஸெனஸியோ:** இடது புறத்தில் வலி, வாய், தொண்டை உலர்ந்திருத்தல்.

**ஸைக்ளமேன்:** வெளுத்த ரத்தசோகை.

**ஸோரினம்.** கீழ்த்தாடை தொங்குதல், தாடைக்கோளம் வீக்கம், தொட்டால் வலி.

**ஸ்டாபிஸாக்கிரியா:** முகம் சுருங்கியிருத்தல். மூக்கு நீண்டிருத்தல்.

**ஸ்டானம்.** சாம்பல் நிறம், மெழுகுபோல், ஒரு கன்னம் உஷ்ணம், சிவப்பு, வெளுப்பு குழிவிழுந்த கன்னங்கள்.

**ஸ்டிக்டா:** பிடரி, முகத்தின் ஒரு பாதி, கீழ்த்தாடையில் கூரான ஆயுதத்தை உட்செலுத்துவது போன்ற வலி.

**ஸ்ட்ரமோனியம்:** பயத் தோற்றம், சிவப்பு, உஷ்ணம் முகம் வீங்கியிருத்தல், தாடை தொங்குதல்.

ஸ்ட்ரோண்டியா கார்ப் : சிவந்து. ரத்தக்குமாய் துடித்தல்.

ஸ்பாஞ்சியா: மாறி மாறி வெளுத்தலும் சிவத்தலும். கவலைத் தோற்றம். தாடை வீக்கம் நெற்றியில் குளிர்ந்த வியர்வை. தாடைக் கோளம் வீங்கல், மார்பு, கழுத்தில் அதிக ரத்தம் ஏறுதல்.

ஸ்பைஜீலியா: கீழ்த்தாடையில் கிழிக்கும் வலி. ஆரம்பித்து காது வரை செல்லுதல். தாடையெலும்பில் நம நம வென்ற வலி கவலை தரும் தோற்றம்.

ஹயாஸ்யாமஸ் : உஷ்ணம், சிவப்பு, வீக்கம், தசை துடித்தல். விகாரத் தோற்றம். கோரணிகாட்டல், கீழ்த்தாடை தொங்குதல்.

ஹீபர் ஸல்பர் : நரம்பு வலி, மேலுதடு வீக்கம்.

ஹெல்லிபோரஸ்: வெளுத்தல். சுருங்குதல், பனிக்கட்டிபோல் சில்லிடல், சில்லிட்ட வியர்வை. நெற்றியில் சுருக்கம் விழுதல், நெற்றியும் கண்களும் வெளியே அமுக்கப்படும் உணர்ச்சி,(வாயில் பார்க்க.)

ஹைபெரிகம் : வலது பக்கத்தில் வலி.

# நெற்றி

அபீஸ் மெல்: கொட்டும், தெறிக்கும் வலிகள்.

அமோனியம் மூரி: கனம்.

அர்ஜண்டம் மெடாலிகம்: வலி.

அலுமினு: துடிக்கும் நெற்றி வலி.

அல்லியம் ஸீபா: ஜலதோஷத்துடன் நெற்றித் தலைவலி.

அஸ்குலஸ் ஹிபொ: மந்தமான நெற்றித் தலைவலி.

அஸக்ளிபியாஸ் ட்யூபரோஸா: நெற்றித் தலைவலி, அசைவால் அதிகம், படுத்தால் சமனம்.

**அஸபோட்டிடா :** மாலையில் நெற்றி வலி.

**ஆண்டிமோனியம் டார்ட் :** நெற்றி துடித்தல், வலதுபுறம் பிடிப்பு வலி, நெற்றியைச் சுற்றிக் கயிற்றால் கட்டிய உணர்ச்சி. நெற்றியில் குளிர்ந்த வியர்வை.

**ஆரம் மூரி :** நெற்றியில் அரிப்பு.

**ஆரம் மெடாலிகம் :** நெற்றியிலும் பொட்டுகளிலும் ஆழ்ந்த கிழிக்கும் வலி.

**ஆர்னிகா :** கண்களுக்கு நேராக நெற்றியில் அமுக்கும் வலி.

**ஆஸிட் ஆக்ஸாலிக் :** கனம்.

**ஆஸிட் கார்பாலிக் :** இறுக்க உணர்ச்சி.

**ஆஸிட் நைட்ரிக் :** நெற்றியிலும் முகத்திலும் வியர்குருக்கள்.

**ஆஸிட் பாஸ்பாரிக் :** மயக்கத்தை உண்டுபண்ணும் நெற்றித் தலைவலி.

**ஆஸிட் பென்ஸாயிக் :** சில்லிட்ட வியர்வை.

**ஆஸிட் ப்ளூவாரிக் :** மதமதத்த உணர்ச்சி.

**இக்னேஷியா :** நெற்றியில் அமுக்கும் தலைவலி.

**ஐரிஸ் வர்ஸிகோலர் :** வலதுபக்கத்தில் துடிப்பு,

**ஓநோஸ்மோடியம் :** பிடரித் தலைவலி, நெற்றி பின்கழுத்துக்குச் செல்லுதல்

**கந்தாரிஸ் :** பின்கழுத்திலிருந்து நெற்றிவரை தலைவலி.

**கல்கேரியா கார்ப் :** கண்களுக்கு மேலாக அதிக வலி.

**கன்னபிஸ் இண்டிகா :** புடைக்கும் தலைவலி.

**கன்னபிஸ் ஸடீவா :** வலி.

**காக்குலஸ் :** துணியை இறுகக் கட்டியதுபோல் துடிக்கும் வலி.

**காப்ஸிகம் :** துடிக்கும், புடைக்கும் வலி.

**காமொமில்லா :** நெற்றியிலும் தலையிலும் சூடான கசகசத்த வியர்வை.

**கார்பன் ஸல்ப் :** சில்லிப்பு.

**கார்போ வெஜி:** நெற்றியிலும் முகத்திலும் பருக்கள்.

**காலாடியம்:** நெற்றியில் அழுத்தும் உணர்ச்சியுடன் ஒழுங் கீனத் தலைவலி.

**காலின்ஸோனியா:** மந்தமான நெற்றித் தலைவலி.

**காலீ ஐயோ:** நெற்றியில் சம்மட்டியால் அடிப்பது போன்ற வலி அமுக்கினாலும், திறந்த வெளிக்காற்றினாலும் சமனம்.

**காலோஸிந்திஸ்:** நெற்றித் தலைவலி.

**கால்மியா:** நெற்றி பொட்டுகளில் வலி. கழுத்திற்கும் பற் களுக்கும் பரவுதல்.

**காஸ்டிகம்:** வலது நெற்றியில் வலி.

**கோல்சிகம்:** ஊரும் உணர்ச்சி.

**க்ராபைடிஸ்:** சிலந்திவலை இருக்கும் உணர்ச்சி.

**க்ரியோஸோட்:** கீழாக அமுக்குவது போன்ற உணர்ச்சி. தூக்க மின்மையுடன் நெற்றியில் இழுக்கும், குதிக்கும், வெட்டும், வலிகள்.

**க்ரோடேலஸ் ஹாரிடஸ்:** நெற்றியில் மத்தியில் கடுமையான வலி.

**க்வாய்கம்:** நெற்றி முழுதும் புடைக்கும் தலைவலி. அசைந்தால் அதிகமாதல்.

**சின்னியம் ஆர்ஸனிகம்:** நெற்றி, பிடரியில் மந்தத் தலைவலி.

**டாரண்டுலா குபான்ஸிஸ்:** இடது கண்ணிலிருந்து நெற்றிக்குப் பாயும் வலி.

**நக்ஸ்வாமிகா:** அமுக்கும் தலைவலி. இது காலையிலுங் குளிர்ந்த காற்று மேலே படுவதாலும் அதிகமாகும்.

**நக்ஸ் மாஸ்சாடா:** நெற்றியில் ஏதோ ஓரிடத்தில் மட்டும் அமுக்குந்தலைவலி.

**நேட்ரம் ஆர்ஸனிகம்:** குத்துவதும் கிழிப்பதும் போன்ற வலி. நெற்றியில் மட்டும் வியர்வை.

**நேட்ரம் கார்ப் :** குத்தும் கிழிக்கும் வலிகள் அதிகம். மஞ்சள் நிறத் தேமல்போல் படை.

**நேட்ரம் ஸல்ப் :** நெற்றியில் வியர்வை உண்டாகும் வரை தலை உபாதிகள் இருத்தல்.

**பாடியாகா :** நெற்றியிலும் கண் விழிகளிலும் வலி.

**பாப்டீஷியா :** நெற்றியில் மூக்கின் அடியிலும் வலி,

**பாஸ்பரஸ் :** நெற்றியிலிருந்து கண்களுக்குச் செல்லும் வலி.

**புபோ :** வலி.

**பெர்பெரீஸ் வல்கேரிஸ் :** மயக்கம் வருவதுபோல் நெற்றி வலி.

**பெல்லடோன்னு :** நெற்றிப்பொட்டில் அமுக்கும் வலிகள். திடீரென்று தோன்றிச் சிறிது நேரத்தில் திடீரென்று நின்று விடுதல்.

**மெக்னீஷியா கார்ப் :** இறுக்கம், துடிப்பு.

**மெக்னீஷியா மூரியாடிகா :** நெற்றி, முகத்தில் அடிக்கடி சிலைப்புகள்.

**ரஸ்டாக்ஸ் :** எரிச்சலுடன் அமுக்கும் உணர்ச்சி.

**ரூமக்ஸ் :** சிராய்த்த உணர்ச்சி.

**ரோடொடெண்ட்ரன் :** மழைக்காலங்களில் நெற்றியில் வலி.

**ரோஹிடாக் :** நெற்றி வலி.

**லாக் டிப்ளோ :** காலையில் நெற்றியிலிருந்து பின்புறம் செல்லுந் தலைவலி.

**வில்லியம் டிக்ரினம் :** நெற்றியில் மந்தவலி, கருப்பை கீழே யிரங்கி யிருத்தல், கண்பார்வை மங்குதல்.

**வலேரியானு :** அமுக்கம், இறுக்கம்.

**வெராட்ரம் ஆல்பம்:** சில்லிப்பு, சில்லிட்ட வியர்வை.

**ஸபடில்லா:** நெற்றியில் பொட்டுகளில் அமுக்க உணர்ச்சி.

**ஸரஸபரில்லா:** அரித்தல், சொரிந்தால் நீர் கசிதல்.

**ஸல்பர்:** நெற்றியிலும் தலையிலும் கடுமையான அரிப்பு.

**ஸிங்கம் மெட்:** நெற்றியில் குளிர்ந்த வியர்வை.

**ஸிபிலினம்:** நெற்றியில் நரம்புத் தலைவலி.

**ஸிலிகா:** நெற்றியில் கடுமையான தலைவலி.

**ஸினேபிஸ் நைக்ரா:** நெற்றியில் வியர்வை.

**ஸிஸ்டஸ்:** பசியெடுக்கும்போது முன்தலையிலும் நெற்றியிலும் வலி.

**ஸீகேல்:** நெற்றி மட்டும் சூடாகவிருத்தல்.

**ஸீனு:** நெற்றியில் கடுமையான வலி.

**ஸெனகா:** இடிக்கும் வலி.

**ஸைக்ளமென்:** கடுமையான வலி.

**ஸ்டாபிஸாக்ரியா:** நரம்புத் தலைவலியுடன் நடுநெற்றியில் உஷ்ண உணர்ச்சி. நெற்றியில் ஒரு உருண்டையான வஸ்து ஒட்டிக்கொண்டிருக்கும் உணர்ச்சி.

**ஸ்டிக்டா:** அமுக்கும் உணர்ச்சி.

**ஸ்பாஞ்சியா:** நெற்றி, பிடரியில் துடிக்கும் வலி. குளிர்ந்த வியர்வை.

**ஹெலிபோரஸ்:** சுருக்கம், நெற்றியும் கண்களும் வெளியே அமுக்கப்படும் உணர்ச்சி.

**ஹைட்ராஸ்டிஸ்.** அமுக்கும் வலி.

# கண்

**அகேரிகஸ்:** இமைகள் முறுக்கிக்கொள்ளல். கண்களின் அதிக உழைப்பால் தலையில் நெறுக்க உணர்ச்சி. கருமணிகள் அகலுதல் அல்லது குறுகுதல். விழிகள் சுண்டுதல் அல்லது முறுக்கிக்கொள்ளுதல். விழிகள் பிரண்டு கொண்டேவிருத்தல். இமைகள் விறைவாக திறந்து திறந்து மூடிக்கொள்ளுதல்.

**அகோனைட்:** குத்திடல், விழி சுருங்குதல், சிவத்தல் அழற்சி. எரிச்சல், சுடுதல், அமுக்குதல், இமை வீக்கம், பலாத்காரமாகத் திறந்தால் அதிகக் கண்ணீர் வடிதல். கருமணி முதலில் சுருங்கிப் பிறகு விரிந்துபோதல். குளிர்காற்று தாக்கியதால கண் அழற்சி. (Conjunctivitis)

**அக்டியா ரஸிமோஸா:** புடைத்தும், பாயும் வலிகள் கண் விழிகளில் பலத்த வலி, கண்ணிலிருந்து உச்சிக்குப் போகும் வலி. இடது கண் பக்கத் தலைவலி, விழித்தலைவலி, வலது கண்ணில் தங்கும் பின்புறத் தலைவலி.

**அக்னஸ் காஸ்டஸ்:** கருமணி அகலுதல், மாலையில் படித்தால் எரிச்சல், அரிப்பு பிரகாசத்தில் அதிக உணர்ச்சி.

**அபிஸிந்தியம்:** கண் கூசுதல்.

**அபிஸ் மெல்லிபிகா:** சிவத்தல் கண்களை கீழாக வைத்துக் கொள்ளல் பாயும் கொட்டுந் தன்மையான வலி. நெருப்பைப் பார்த்தால் அதிக உபாதி, எரிச்சல் குளிர்ந்த ஒற்றிடம் தண்ணீரால் கழுவுவதால் உபாதி சமனம். பூந்தசை உள்ளுக்குச் செல்லுதல். கருவிழி கெட்டியாதல், ரத்தக் குழாய் பெருத்தல், கருப்பு புகை நிறம் போன்ற பொட்டுகளுடன் கூடிய வாத நோய் கருவிழி ரணம், புண்ணுக்குந் தன்மையும் சூடும் உள்ள அதிகக் கண்ணீர். இமை கருத்தல் சிவத்தல. மாமிசத் துண்டு போலிருத்தல், வீக்கம், கீழிமை நீர்ச் சுரப்பு, விரைப்பு, கண் பாதி மூடிக்கொண்டிருத்தல்.

**அமில் நைட்ரேட்:** கண் பிதுக்கம், சூரிய இடியில் கண் குத்திடல்.

**அமோனியா கார்ப்:** தலையில் வலியுடன் கண்களின் முன் பூச்சி பறத்தல், அதிக உழைப்பால் கண் பார்வை மங்குதல்.

**அமோனியம் மூரி:** சதை வளர்தல், எரிச்சல் இரவில் கண்ணீர் வடிதல் காலையில் கண்கள் ஒட்டிக்கொள்ளல்.

**அம்ப்ரா க்ரிஸியா:** தூசி இருப்பதுபோல் அமுக்க உணர்ச்சி, உறுத்தல, கண்ணீர் வடிதல். இடது கண்ணில் அமுக்கம். காலையில் திறக்க முடியாமை. வலி. இறுக மூடிக்கொள்ளல், வலது கண் இமை எரிச்சல், கண்ணில் கிருக் கட்டிகள்.

**அயிலாந்தஸ் :** நீர் தளும்புதல், அதிக ரத்தம் கூடுதல், தூக்கத்திலிருந்து எழுப்பினால் திகைத்தல். எரிச்சல், வலி, கண்களைச் சுற்றி கறுத்த நீலநிற வளையங்கள். வெளிச்சத்தில் கண் கூச்சம், ரத்தம் வெளியாதல்.

**அர்ஜண்டம் நைட்ரிகம் :** பிறந்த சிசுக்களின் கண்ணோய் பூந்தசை முதலியவை வெளியாதலுடன் கூடிய கடுமையான கண்ணோய். கண் விழிகளில் ரணம். நிலையற்றிருத்தல். இமைகளில் சிறு கொப்புளங்கள். குளிர்ந்த காற்று, குளிர்ந்த ஒற்றிடங்களால் சமனமாதல். கண் அழற்சியில் கண் வீங்குதல். வலிப்பு வருவதற்குப் பல மணி நேரம் அல்லது பல நாட்களுக்கு முன்னமேயே கண் விழிகள் அகன்று விடுதல். காக்கை வலிப்பு ஏற்பட்ட சில நாட்களுக்குப் பின் ஒரு கண் மாத்திரம் பெரிதாகி விடுதல். கண்களை இறுக மூடிக்கொண்டு நடந்தால் கிறுகிறுப்பு, இருட்டில் நடக்கும்போது தடுமாறுதல்.

**அர்ஜண்டம் மெடாலிகம் :** இமைகளின் ஓரங்களில் கடினமான கிருக்கட்டிகள். பழுப்பு நிறமுங் கெட்டியுமான பிசுக்கான பீளை.

**அலுமினு :** வரட்சி, அழற்சி சூடான காரமுள்ள கண்ணீர். இமைகள் தடித்தல், எரிச்சல், வரட்சி, வலி. இமை மயிர்கள் உதிர்தல். இமைகளைத் திறக்க சிரமம். திறந்த வெளியில் கண்களில் சில்லிப்பு உணர்ச்சி. கண்களைத் திறந்துகொண்டிருக்கும்போதும் பகல் நேரத்திலும் தான் நடக்க முடியும். நுண்ணிய கொப்புளங்களுடன் தடித்த கண்ணிமை.

**அல்லியம் ஸீபா :** வெளியாகும் நீர் காரமற்றதாகவும் பட்ட விடங்களைப் புண்ணாக்காததாகவும் இருக்கும் இடது கண்ணில் அதிகம். கண் விழிகளில் சிவப்பு, வெளிச்சத்தில் கண் கூசுதல். அரித்தல் எரிதல்.

**அனகார்டியம் ஓரியண்டேல் :** கண்களில் மூளையிருக்கும் உணர்ச்சி.

**அஸபோட்டிடா :** வரட்சி, எரிச்சல், கண்ணில் வலி, அமுக்கினுல் சமனம்.

**அஸ்குலஸ் ஹிபோகாஸ்டானம்:** கண்களிலிருக்கும் ரத்தக் குழாய்கள் பருத்தும் கண்கள் கனமாகவும், மந்தமாகவும், கண் விழிகள் ரணமாயும் சூடாகவும் வலியுடனுமிருக்கும். கண் விழிகள் அகன்று விடுதல். பிறகு மெதுவாகச் சுருங்குதல். கண்குழியில் ஆழமான பாகத்தில் இடது கண்ணின் மேலாக வலி. வேகமாய் பாயும் வலிகள். கண்ணீர் வடிதல் சிவப்பு, கண் விழிகளில் எரிச்சல்,

**ஆண்டிமோனியம் க்ருடம்:** சிவந்து அழற்சியுடனிருத்தல் இடது கண் சிவத்தலும் வெளிச்சத்தைப் பார்க்க வெறுப்பும். இமைகள் சிவத்தல், அழற்சியடைதல்.

**ஆண்டிமோனியம் டார்ட்டாரிகம்:** மேக வெட்டை, வாதம், கண்ணோய் இவைகள் சம்பந்தமாக கண்விழிகளில் அடிபட்டது போன்ற வலி கண்களைச் சுற்றிலும் கருத்த வளையங்கள் கண் விழிகளில் கனத்த உணர்ச்சி, கண்களை மூடினால் கிறுகிறுப்பு.

**ஆரம் ட்ரிபில்லம்:** மேலிமைகள் கனமாக நடுங்கிக்கொண்டிருத்தல். வெளிச்சத்தில் கூச்சம். ஓரங்களில் வீக்கம்.

**ஆரம் மூரி:** இடது கண்ணில் கிழிக்கும் வலி திறந்த வெளியில் சென்றால் எரிச்சல் அரிப்பு, கைகளால் கண்ணை மூடிக் கொள்வதால் சௌகர்யம், கண்ணிமைகள் காலையில் வீங்கியும் சிவந்தும் ஒட்டிக்கொண்டுமிருத்தல்,

**ஆரம் மெடாலிகம்:** கண்களில் விரைப்பு. பாப்பாக்கள் சுருங்கியோ அல்லது ஒழுங்கீனமாக அகன்றோயிருத்தல். கருவிழியில் புள்ளிகள் விழுதல், குத்திட்ட பயங்கரப் பார்வை, கண் விழிகள் வெளுத்திருத்தல். வெளிச்சத்தில் கூச்சம், கண்களைத் திறந்தால் புண்ணை உண்டாக்கும் தன்மையான ஏராள கண்ணீர் வடிதல். கண்களைச் சுற்றி இசிக்கும் வலி, கருவிழிகளில் நீடித்த கிரந்திக் குழிப்புண்கள்.

**ஆர்னிகா மோண்டானு:** கண்களில் ரத்தம் செறிதல், அடிபட்டபின் பார்க்கும் வஸ்துக்கள் இரண்டாகத்தெரிதல்,

**ஆர்ஸனிகம் ஆல்பம் :** கண்களிலிருக்கும் ரத்தக்குழல்கள் மாமிசத்துண்டுபோல் சிவத்தல். எரிதல், வரட்சி வெளிச்சத்தில் கூச்சம் இமைகளில் வலி, எரிச்சல், காரமான கண்ணீர். புளிச்சையுடன் சிறுவர்கட்கேற்படும் சுரபியுடன் கூடிய கண்ணோய்.

**ஆலோ ஸொகோட்ரினு :** கண்களின் மேற்புறத்தில் அழுத்த உணர்ச்சி. கண்களில் கனம், பிரகாசமாகவுஞ் சிவப்பாகவும் நிலையற்று மிருத்தல். இடுக்கிக்கொள்ளுதல்,

**ஆஸிட் நைட்ரிக் :** மணலிருப்பதுபோன்ற உணர்ச்சி, சமீபத்திருஷ்டி, வெண்விழிகளில் ரணம், கண்களில் அமுக்கமும் குத்தும் வலியும், இமைகள் வீங்கித்தடித்து ரணப்பட்டுச் சிவந்திருத்தல்.

**ஆஸிட் பாஸ்பாரிக் :** கண்களை மண்டையுடன் சேர்த்து அமுக்குவது போன்ற வலி, கண்களை அதிகமாக உபயோகித்ததாலேற்படும் தலைவலி.

**ஆஸிட் பிக்ரிக்:** நீடித்த கண் ரணம், மஞ்சள்நிற நீர் வெளியாதல்,

**ஆஸிட் ப்ளுவாரிக் :** இடது கண் சிறிதாகவிருத்தல், கண்களில் மணல்களிருக்கும் உணர்ச்சி. அவைகளில் காற்று வேகமாகப்படும் உணர்ச்சி.

**ஆஸிட் ஸல்பியூரிக் :** கண்ணுக்குள் ரத்தப்பெருக்கு, அடிபட்ட அதிர்ச்சி, வலி.

**இக்னேஷியா :** சூரிய வெளிச்சம், பிரகாசம் முதலியவை சகிக்க முடியாமை, வெளிச்சத்தில் கண் கூச்சம், பகலில் காரமான கண்ணீர் வடிதல், கண் நரம்புகளில் வலி.

**எதுஸா சைனுபியம் :** குத்திட்ட கண்கள். அகன்ற கருமணிகள் (காக்கை வலிப்பில் பார்க்க )

**ஐயோடியம் :** கண்களின் வெண் விழி அழுக்கடைந்து மஞ்சட்காமாலைபோல் மஞ்சள்நிறமடைதல். விழிகள் பிதுங்கியிருத்தல் இமைகளில் நீரதைப்பு.

**ஐரிஸ் வர்ஸிகோலர் :** கண்களுக்கு மேலே வலி.

**ஓலியாண்டர் :** தலையின் பக்கமாகக் கண்கள் உள்ளுக்கு இழுக்கப்பட்ட உணர்ச்சி.

**ஓபியம் :** கருமணி சுருங்குதல், கண்கள் பாதி திறந்தும் மேற்புறத்தில் சொருகிகொண்டுமிருத்தல், கண் விழிகளில் பாப்பா சுருங்குதல், கண்களில் ரத்தத்திரட்சி, பாதிக் கண் மூடியபடியேயிருத்தல். கண்கள் கண்ணாடிபோல் பளபளப்பாகவிருத்தல், கண்கள் அகலத் திறந்திருத்தல் பிரகாசத்தில் அதியுணர்ச்சி அல்லது உணர்ச்சியின்மை.

**ஓனோஸ்மோடியம் :** அச்செழுத்துக்களைப் படித்தால் கண்களில் விரைப்பான உணர்ச்சி, விழிகளில் பாரமான மந்தவலி, கண்ணுக்கு அதிக வேலையைக் கொடுப்பதால் ஏற்படும் முறைத் தலைவலி.

**கந்தாரிஸ் :** எரிச்சல், திறந்த வெளியில் கண்ணீர் பொழிதல், கண்களை மூடிக்கொள்ள நேரிடல், கண்ணிமைகளைத் திறந்தவுடன் ஓரங்களில் புண்ணிருப்பது போன்ற வலி, இமைகள் பச்சை மாமிசம் போலிருத்தல், பளபளவென்று பிரகாசிக்கும் வஸ்துக்களைக் கண்டால் பயம்.

**கல்கேரியா ஆர்ஸனிக் :** கண்களை முடியதும் நெருப்புப் பிடித் தெரியும் காக்ஷி, இறந்த மனிதர்களைப் பார்ப்பது போன்ற ப்ரமை.

**கல்கேரியா கார்ப் :** கண்களைச் சுற்றி நீல வளையங்கள். பூவிழுதல் கண் விழிகளில் மேல் தோலில் மங்கல். குழிப்புண்கள், கண்களில் அழற்சி, பிரதி தடவை குளிர் தாக்கும்போதும் கண்களில் ரத்தச் சுரப்பு. இமைகளில் வீக்கம், ஒன்றோடொன்று ஒட்டிக்கொள்ளல். எரிச்சல் (பார்வையில் பார்க்க,)

**கல்கேரியா பாஸ் :** ரணம், சிறிதளவு வெளிச்சமும் உறுத்துதல், கண் விழிகளில் வலி.

**கல்கேரியா ப்ளோரிகா :** வெண் விழியில் புள்ளிகள். கண் அழர்ச்சி, பூவிழுதல்.

**கல்கேரியா ஸல்ப்:** கண்ணழற்சி, கெட்டியான மஞ்சள் நிறப் பீளை வெளி வருதல், பூவிழுதல், வெள்ளை விழிகளில் ரணம், பிறந்த குழந்தைகளில் கண்ணழற்சி.

**கன்னபிஸ் இண்டிகா:** கண்ணழற்சி. கண்களை மூடிக் கொள்ளுதல்.

**கன்னபிஸ் ஸடீவா:** கண்ணழற்சி யேற்பட்டபின் கண்கள் மங்குதல்.

**காக்குலஸ்:** கண்கள் மூடினபடியே யிருந்தபோதிலும் அடிக்கடி உருண்டுகொண்டே யிருத்தல். இமைகளில் பாரிச வாயு, கண்கள் கிழிந்துவிட்டதுபோன்ற உணர்ச்சி, இரவில் கண் விழிப்பதால் ஏற்படும் உபாதிகள்.

**காட்மியம் ஸல்ப்:** கண் விழிகளில் மேல் தோலில் மங்கல், மெதுவாகத் தோன்றும் அழர்ச்சி, இமைகளில் பாரிச வாயு, ஒரு கண்ணையும் முகத்தின் ஒரு பாகத்தை மட்டும் பீடிக்கும் பக்ஷவாயு.

**காப்ஸிகம்:** கண்களில் தூசு இருப்பதுபோன்ற வலி, காலையில் மங்கின பார்வை கண்களைக் கசக்கினுல் சற்று பிரகாச மடைதல்.

**காமொமில்லா:** இமைகளில் எரிச்சல், விட்டுவிட்டு மூடிக் கொள்ளல்.

**காம்போரா:** சூரிய வெளிச்சத்தில் கண் உபாதிகள் அதிகரித்தல், கருமணிகள் சுருங்கியும் அசைக்க முடியாமலும் அகன்றிருத்தல், விகாரமாக குத்திட்ட கண்கள்.

**கார்பன் ஸல்ப்:** மணலிருப்பது போன்ற உணர்ச்சி, இமைகள் கனமாகவும் கெட்டியாகவும் இரவில் ஒன்ருேடொன்று ஒட்டிக்கொண்டுமிருத்தல்.

**கார்போ வெஜ்:** எரிச்சல், வலி.

**காலாடியம்:** கண்களிலும் நெற்றியிலும் அழுத்தும் உணர்ச்சி.

**காலீ ஐயோ:** எரிச்சல், நாற்றம், கெட்டியான பச்சை நிற முள்ள பீளை அதிகமாக வெளிப்படுதல்.

**காலீ கார்ப் :** கண்களில் பிடிப்பு வலிகள், காலையில் கண்ணிமைகள் ஒட்டிக் கொள்ளல், மேலிமைகள் சிறு பைகள்போல் விளங்குதல். கண்களை மூடியவுடன் மூளையில் வெளிச்சம் பரவுவதுபோல் வலியுள்ள உணர்ச்சி.

**காலீ க்ளோரிகம் :** அதிக முக வீக்கத்தால் பார்க்க முடியாமை.

**காலீ பாஸ் :** கண்ணிமைகள் தொங்குதல், இடுங்கிய கண்கள்.

**காலீ பைக்ரோ :** கண்களின் கீழுள்ள எலும்புகளில் வலி, கண் குழிகளின் மேல் நரம்பு வலி, வலது கண்ணிமைகளில் வீக்கம், எரிச்சல், நீரதைப்பு, மஞ்சளான கம்பிபோன்ற போக்கு, வெண்விழிகளில் குழிப்புண்கள், வலியின்மை அல்லது வெளிச்சத்தில் கண் கூச்சமின்மை.

**காலீ மூரி :** வெளுத்த பீளை, சீழுள்ள சொறி.

**காலோஸிந்திஸ் :** கடுமையான குடைவதுபோன்ற வலி, அமுக்கினால் சமனம். கீழே குனியும்போது கண்கள் வெளியே விழுந்துவிடும்போன்ற உணர்ச்சி, வாத சம்பந்த கண் உபாதிகள். இமைகளை அசைத்தால் தலைவலி அதிகரித்தல்.

**கால்மியா :** பார்வை கெடுதல். கண்களை அசைக்கும்போது விரைப்பாகவும் இழுப்பதுபோலவும் உணர்ச்சி. கருவிழிகளில் வாத சம்பந்த அழற்சி. வெள்ளைப் பாகத்தில் அழற்சி. அசைவினால் வலி அதிகம்.

**காஸ்டிகம் :** மோட்டார் நரம்புக் கோளாறுகளுடன் பூவிழுதல், கண்ணிமைகளில் அழர்ச்சி. குழிப்புண். பாரிசவாயுவால் கண்களின் மேலிமைகள் தளர்ந்து தொங்குதல்.

**குப்ரம் மெடாலிகம் :** கண்களுக்கு மேலாக வலி, குத்திட்ட பார்வை, கண்விழிகள் பளப்பளப்பாக விருத்தல், விழிகள் கடகடவென்று உருளுதல், கண்களை அசைக்கும்போது கண்களில் அடிபட்டது போன்ற வலி.

**கோக்கஸ்காக்டி:** காலையில் வலது கண்ணின்மேல் மந்தவலி, கண்ணின் மேலிமைக்கும் கண்விழிக்கும் நடுவில் ஏதோ தூசி இருப்பதுபோன்ற உணர்ச்சி.

**கோல்சிகம்:** கண்களில் பூவிழுதல், கருமணிகள் அகன்றிருத்தல், வெளிச்சத்தில் சிறிது கூச்சம். இமை அழற்சியுற்று வீங்குதல். சிரமப்பட்டுப் படிப்பதாலும் இரவில் கண் விழிப்பதாலும் ஏற்பட்ட உபாதிகள்.

**கோனியம்:** அமிதமான கண்ணீர் வடிதல் கண்களை மூடியதும் வியர்வை, கண்களைச் சுழற்றும்போது கிறுகிறுப்பு.

**க்ராபைட்டிஸ்:** கண்ணோய்கள், சூரிய வெளிச்சம் தவிர மற்ற செயற்கையான வெளிச்சங்களை பார்க்க முடியாமை. இமைகள் வீங்கியுஞ் சிவந்துமிருத்தல். இமைகளின் ஓரங்களில் அழற்சி. இமைகள் காய்ந்திருத்தல், சொரி சிரங்குகள், வெடிப்புகள்.

**க்ரிண்டிலியாரோபஸ்டா:** விழி வலி.

**க்ரோடன் டிக்லியம்:** வலது கண்ணின் விழியில் விண் விண்ணென்று தெறிக்கும் வலி.

**க்ரோடேலஸ் ஹாரிடஸ்:** கருமணிகள் அகன்றுவிடுதல் கண் மஞ்சளாகவிருத்தல், திறந்த கண்கள்.

**க்வாய்கம்:** கண்கள் வெளியே பிதுங்கியிருக்கும் உணர்ச்சி, வீக்கம். கண்ணின் கருமணிகள் அகன்றிருத்தல்.

**க்ளோனுயின்:** கண்களின் கருமணிகள் அகன்று, அல்லது குறுகியிருத்தல். வலிப்புகளிலும் சூரிய இடியிலும் கண்கள் மேல் நோக்கித் திரும்பியும், மேலாகவும் வெளிப்புறமாகவும் உருட்டிக்கொண்டு இருக்கும். கண்கள் குத்திடல், வெளியில் பிதுங்கிச் சிவந்திருத்தல். கண்ணிமைகள் காய்ந்தும் விழிகளில் ஒட்டிக் கொண்டு மிருத்தல். குனிந்தால் கண்களுக்கு முன் கரும் புள்ளிகள் தோன்றுதல். மேலும் அசைந்தாலும் திறந்த வெளியில் நடந்தாலும் இவ்வித கரும் புள்ளிகள் தோன்றும். கண்களில் ரத்தத் திரட்சி.

**சிமாபிலா:** இமைகளில் அரிப்பு, இடது கண்ணிலிருந்து அதிக நீர் வடிதல், குத்துவலி, கண்களில் பூவிழ ஆரம்பிக்கும் சமயம், விருத்தியாகும் சமயம்.

**சின்னியம் ஆர்ஸனிகம்:** வெளிச்சத்தில் அதிகக் கூச்சம், அப்போது சூடான கண்ணீர் வருதல்.

**செலிடோனியம்:** வெள்ளை விழி மஞ்சளாக மாறுதல், கருமணி சுருங்குதல்.

**செனபோடியம்:** வலது கண்ணின் மேற்புறம் வலி, அதிகக் கண்ணீர் வடிதல்.

**சைனு:** குழிவிழுந்த மஞ்சள்நிறக் கண்கள், கண்ணைச்சுற்றி நீலநிற வளையம், ரத்தசோகையில் இருட்டில் கண் தெரியாமை, கண் கூச்சம், விழி பிதுக்கம், விட்டுவிட்டு வரும் நரம்புவலி.

**டபாகம்:** கண்களில் மேலிருக்கும் எலும்பில் வலி, குழி விழுந்த தோற்றம், விழி பிதுக்கம்.

**டல்கமாரா:** பிரதி தடவை சளி பிடிக்கும்போது கண் உபாதிகள், கெட்டியான மஞ்சளான நீர் வெளிப்படல். இமை ரணம்.

**டாரண்டுலா குபான்ஸிஸ்:** இடது கண்ணிலிருந்து நெற்றிக்குப் பாயும் வலி.

**டிஜிடாலிஸ்:** கருமணிகள் அகன்று உணர்ச்சியற்றிருத்தல்.

**டுக்ரியம்:** கண்களிலிருந்தும் மூக்கிலிருந்தும் நீர் வடிதல்.

**டெல்லூரியம்:** இமைகள் தடித்தல், நீர் வடிதல்.

**ட்யூபர்குலீனம்:** கண் விழிகளிலும் எலும்புகளிலும் வலி.

**தூஜா:** நரம்பு சம்பந்த வலிகள் இரவுகளில் இமைகள் ஒட்டிக் கொள்ளுதல். கிருக்கட்டிகள். அவை சிவந்திருத்தல், நீடித்த கண் ரணம்.

**தெரிடியன் :** கண்களின் முன் பளிச் பளிச்சென்று மின்னுதல். வெளிச்சத்தில் கண் கூசுதல், விழிகளின் பின்புறம் இறுக்கம். இடது கண்ணுக்கு மேல் துடிப்பு.

**தெரிபிந்த் :** மூத்திர உபாதிகளுடன் கண்களில் ரணம்.

**நக்ஸ் மாஸ்சாடா :** காய்ந்திருத்தல், இமைகள் கனமாகவும் விரைப்பாகவுமிருப்பதால் விழித்திருக்க சிரமம்.

**நக்ஸ் வாமிகா :** காலையில் கண் கூச்சம் எரிச்சல், கண்ணிற்குள் உப்புக் கற்கள் கரைவது போன்ற உணர்ச்சி. இமைகளில் அரிப்பு, எரிச்சல்.

**நாப்தலேன் :** பொதுவான கண் உபாதிகள். பூவிழுதல்.

**நேட்ரம் ஆர்ஸனிகம் :** வெள்ளை விழிகளிலும் இமைகளிலும் புண்கள் வெளிச்சத்தில் கண் கூச்சம், இமைகள் கனமாகவும் மூடிக்கொண்டுமிருத்தல். விழிகளிலுள்ள ரத்தக் குழாய்களில் அதிக ரத்தமிருத்தல், காலையில் இரணத்துடன் இமைகள் ஒட்டிக்கொள்ளுதல், காலையில் பொதுவாகக் கண் உபாதிகள் அதிகரித்தல். படித்தால் அதி சீக்கிரத்தில் கண்கள் தளர்ச்சியடைதல்.

**நேட்ரம் கார்ப் :** வெண் விழிப் பாகங்களில் ரணங்கள். மேலிமைகள் கனமாகவிருத்தல், கண்கள் காய்ந்தும் எரிச்சலுடனுமிருத்தல். குத்தும் கடிக்கும் வலிகள். கண்களைச் சுற்றி நீலநிற வளையங்கள், அடிக்கடி கண்களைத் துடைக்க வேண்டி வருதல்.

**நேட்ரம் பாஸ் :** பொன் போன்ற மஞ்சள் நிறம் அல்லது பாலேடைபோல் நீர் வடிதல். ஒரு கண்ணின் கருமணி விரிந்திருத்தல். வெண் விழிகள் அழுக்கடைந்து மஞ்சள் நிறமாகவிருத்தல்.

**நேட்ரம் மூரி :** பலஹீனம். கூர்ந்து பார்த்தால் கண்களில் வலி. கண் தசைகளின் வாதம், கண் தசைகள் பலவீனம். அசைக்க முடியாமை. வெண் விழிகளில் ரணம். கீழே குனிந்து பார்த்தால் கண்ணில் வலி. கண்களினுள்ளே மணலிருப்பதுபோன்ற உணர்ச்சி. காரமான பட்ட விடத்தை புண்ணாக்கும் கண்ணீர்.

கண் கூச்சம், விழிகள் பிதுங்கிபிருத்தல். இமைகளின் ஓரங்களில் கழலைக் கட்டிகள். இருமும்போது கண்ணீர் வடிதல். வலதுகண் கலங்கியிருத்தல், வெளிச்சத்தைப் பார்க்க முடியாமை.

நேட்ரம் ஸல்ப் : கண்கள் பலவீனமாகவும் நீர்கோத்துக் கொண்டுமிருத்தல். மஞ்சட்காமாலை, தலைவலியுடன் கண் கூச்சம். காலையிலும் மாலையிலும் நெருப்பின் சமீபம் சென்றாலும் கண்களில் எரிச்சலும் கண்ணீர்வெளிப் படுதலும். இமைகள் கனமாயிருத்தல். மாலையில், முக்கிய மாய்ப் படிக்கும்போது, கண்களில் இறுக்க உணர்ச்சி இமைகளில் காலை நேரங்களில் அரிப்பு.

பல்ஸடில்லா : அரிப்பு, எரிச்சல், நீர் வடிதல், வெளிச்சத்தில் கூச்சம் கண்களைத் துடைத்துக்கொள்ளுதல், குழந்தைகள் அடிக்கடி கண்களைத் துடைத்துக் கொள்ளுதல், கண் களில் ரணம். காரமில்லாத நீர் வெளியேறுதல். இது திறந்த வெளிக்காற்றில் சமனம். கண்களிலிருந்து பிசுக் கென்ற காரமற்ற கெட்டியான மஞ்சள் நீர் ஏராளமாக வடிதல். காலையில் இமைகள் ஒன்றோடொன்று ஒட்டிக் கொள்ளுதல்.

பாடியாகா : விழிகளிலும் நெற்றியிலும் வலி.

பாரிடா கார்ப் : கருமணிகள் மாறி மாறிப் பெரிதாவதும் சிறிதா வதும். கண்களில் வரண்ட அழர்ச்சி, பூவிழுதல், இமை கள் தடித்திருத்தல், காலையில் ஒட்டிக்கொள்ளுதல்.

பாரிடா மூரியாடிகா : கண், மூக்கு, காதுகளிலிருந்து நீர் வடிந்து கொண்டேயிருத்தல், கண்கள் குழிவிழுதல், கண்களைத் திருப்ப முடியாமை.

பாரிஸ் க்வாட்ரி : விழிகளைக் கயிற்றால் உட்புறம் கட்டியிருக்கும் உணர்ச்சி.

பாஸிலினம் : இமைகளில் படைகள்.

பாஸ்பரஸ் : ரணம். கருமணிகள் சுருங்கியிருத்தல். கண்களின் பலவீனம், கண்களில் எரிச்சல், உருத்துதல், சிவப்பு. குளிர்ந்த தண்ணீரால் சமனம். கண் நரம்புகள் சக்தி யிழந்திருத்தல், இமைகள் வீங்குதல், குழிவிழுந்த கண்கள் சுற்றி நீலநிற வளையங்கள்.

புபோ : சிறிய கொப்புளங்கள்.

பெட்ரோலியம் : இமைகளின் கோடியில் அரிப்பு, வெடிப்பு.

பெர்பெரீஸ் வல்கேரீஸ் : கண்கள் குழிவிழுந்திருத்தல்.

பெர்ரம் மெட்டாலிகம் : ரணம், எரிச்சல், கொட்டும் வலி, திறந்து வைத்துக்கொள்ள முடியாமை. இமை உள்ளுக் கிழுக்கப்படல், இடது கண்ணின் மேல் திடீரென்ற வலி. கண்கள் பலஹீனம். கருமணி குறுகியிருத்தல்.

பெல்லடோன்னு : கண்விழி வெளியே வந்துவிடும் போன்ற உணர்ச்சி. வலி, பாப்பா விரிதல், உலர்தல் மணல் சிக்கிய உணர்ச்சி, இமைகளில் ரணம் போன்ற வலி.

பெல்லாண்ட்ரியம் : கண்களுக்குமேலே வலி. பொட்டில் வலி.

பைடோலக்கா : உறுத்துதல், சூடான நீர் வருதல், கண்ணில் சிவந்த நீர்ப்பெருக்குடன் ஜலதோஷம்.

பைரோஜினியம் : விழிகளைத் தொட்டாலும் அசைத்தாலும் வலி,

போடோபில்லம் : தூக்கத்தில் பாதிகண் மூடியிருத்தல்.

போராக்ஸ் : இமை ஒட்டிக்கொள்ளுதல், உட்புறம் வளைதல்.

ப்ரையோனியா: விழிகளை அசைப்பதாலும் கண்களைத் திறப்பதாலும் தலைவலி அதிகரித்தல். கண்களில் அமுக்கும் வலி, அழர்ச்சி, கைகளால் தொடுவதனுல் வலி அதிகமாதல்.

ப்ரோமியம்: கண்களின் உள் வலி.

ப்ளம்பம்: கருமணி குறுகுதல், மஞ்சள் நிறம். கண் நரம்பு அழர்ச்சி, கண் அழர்ச்சி, மயக்கமேற்பட்டதும் கண் தெரியாமை.

ப்ளாட்டினு: இமை துடித்தல் சில்லிட்ட உணர்ச்சி,

ப்ளாண்டகோ: விழியில் வலி, (முறைத் தலைவலியில் கண் கூச்சம், நீர் கொட்டுதல்.)

**மங்கானம் :** தைத்தாலும், சிறிய எழுத்துக்களைப் படித்தாலும் வலி. அதிக ப்ரகாசத்தைப் பார்த்தால் எரிச்சல், உலர்ந்த உணர்ச்சி.

**மெக்னீஷியா கார்ப் :** காலையில் இமை ஒட்டிக்கொள்ளுதல், விழிகளில் வீக்கம்.

**மெக்னீஷியா மூரியாடிகா ;** அழர்ச்சி, சிவத்தல், எரிச்சல், இமை ஓரத்தில் சிறு கொப்புளங்கள், கண்ணைச் சுற்றி நரம்பு வலி.

**மெர்குரியஸ் கரோஸிவஸ் :** மேகவெட்டை சம்பந்த ரணம், எரிச்சல், ரணங்களால் தசை அழிதல்.

**மெர்க் டல்ஸிஸ் :** ரணம்.

**மெர்க் ஸொலு :** ஸிபிலிஸ் சம்பந்த கண்ணோய், கண்களிலிருந்து அதிக நீர் வெளிப்படுதல், இது பட்ட விடங்களைப் புண்ணாக்கும், சீழ் வருதல், இரவில் கண்ணைச் சுற்றி வலி.

**மைரிகா :** மந்தமான பலஹீன உணர்ச்சி, கலங்கிய மஞ்சள் நிறம்.

**யூபடோரியம் பர்போலி :** விழி வலி, வெளிச்சத்தைப் பார்க்க முடியாமை, சுவாசக் கோளாறில் நீர் வெளிப்படுதல்.

**யூபரேஷியா :** காரமுள்ள நீர் வழிந்துகொண்டேயிருத்தல், வெளிச்சத்தைக் காணமுடியாமை, இருட்டறையில் உபாதி சமனம். ரணங்கள் மயிர் அல்லது மணல் சிக்கிய உணர்ச்சி, கண்வலி, இமை துடித்தல், வாயு சம்பந்தக் கண் உபாதிகள். அரிப்பு.

**யூரேனியம் நைட்ரிகம் :** கிருக்கட்டிகள். இமை ரணப்பட்டு ஒட்டிக்கொள்ளுதல்.

**ரஸ் டாக்ஸ :** அதிகமான, காரமான நீர் வெளிப்படுதல். தானுக இமை மூடிக்கொள்ளல், வெள்ளை விழிகளில் கொப்புளம் ரணம், கண் சிவத்தல், இமை வீக்கம், சுற்றி நீலநிற வளையம்.

**ராபேனஸ் ;** கண்விழி சுற்றி வருதல். இமை துடித்தல்.

**ரானங்குலஸ் :** விழிகளில் அமுக்கும் உணர்ச்சி, எரிச்சல், வலி.

**ரூடா:** கண் தசைகளுக்கு அதிக வேலை கொடுத்ததாலேற் பட்ட உபாதிகள், குளிர்காற்று, கப்பல் பிரயாணத்தில், உபாதிகள் அதிகம். தீ வைத்ததுபோல் எரிச்சல், உள்ளே அரிப்பு, தேய்த்தால் கலங்கிய கண்ணீர் வருதல். வலி, உபாதிகள்.

**ரோஹிடாக்:** சூடு, எரிச்சல்; மந்தம்.

**லாக்கஸிஸ்:** கண்ணை மூடிக்கொண்டே நடந்தால் தலைச் சுற்றல், வெள்ளை விழிகளில் ரணம். கண் சிவத்தல், வெளிச்சத்தைப் பார்க்க அதிகக் கூச்சம்.

**லாக் டிப்ளோ:** தலைவலியில் பார்வை மங்குதல், கண் கூச்சம்.

**லாக் பெல்:** இடது கண்ணின் மேல் எப்போதும் ஊசிகுத்தும் வலி.

**லாரோஸிராஸஸ்:** விழித்தபடியே யிருத்தல், ஒரு பக்கம் இழுக் கப்பட்டிருத்தல். பாப்பா விரிதல்.

**லித்தியம் கார்ப்:** படித்த பின் நொந்தவலி, மணல் இருப்பது போன்ற வலி, வஸ்துக்களின் இடது பாகம் மட்டுந் தெரிதல், தாமதப்பட்ட மாதவிடாயில் கண் வறளுதல், ரணவலி.

**லில்லியம் டிக்ரினம்:** கண்ணிலிருந்து பிடரிவரை இறுக்கும் வலி, மேல்பாகம் வலி, நீர் வடிதல், (கருப்பை கீழிறங்கி யிருத்தலில் மந்தமான நெற்றி வலி, கண் பார்வை மங்குதல்.)

**லேடம் பாலஸ்திரி:** அடிபட்டதனால் கண் கலங்குதல். உள்ளே ரத்தக் கசிவு. விழிகளை வெளித்தள்ளும் உணர்ச்சி.

**லைகோபோடியம்:** வரட்சி, உறுத்துதல், வயிற்றுக் கோளாறு களுடன் கண்ணில் பூவிழுதல், இமை ரணம், சிவப்பு.

**லைகோபோஸ் வர்ஜீனியா:** கண்கள் வெளித்துருத்தியிருப்பதும், இருதயப் படபடப்பும்.

**வலேரியானா:** உள்ளிருந்து வெளியே செல்லும் கிழிக்கும் வலி. தலைவலி மாறி மாறி வருதல்.

**ஜெல்ஸிமியம்:** இமைகள் கனத்துத் தானாக மூடிக்கொள்ளல். பாப்பாக்கள் விரிதல்.

**ஸல்பர்:** குழி விழுந்து வெளுத்திருத்தல். சுற்றி நீலநிற வளையம், கூச்சம், மணல்போல் உருத்துதல். குளிர்ந்த நீரால் கழுவினால் சமனம். இமை அழர்ச்சி, வீக்கம், எரிச்சல், இரவில் இமை ஒட்டிக்கொள்ளுதல், கண் எரிச்சல்.

**ஸாங்குனேரியா:** தலைவலியில் கண் விழிகள் வெளியே பிதுங்கி விடும் போலிருத்தல்.

**ஸிகூடா:** கூச்சமின்றி பாப்பா விரிதல் விழி துடித்தல். விழிகள் விழித்தவாறேயிருத்தல்,

**ஸிங்கம் பாஸ்:** விழித்துப் பார்த்தபடியே யிருத்தல்,

**ஸிங்கம் மெடாலிகம்:** மேலிமை கனம், பிரகாசத்தில் கூச்சம், பிரளும் விழிகள்.

**ஸிங்கம் ஸல்ப்:** அழர்ச்சி மணல் விழுந்த உணர்ச்சி, வெளிச்சத்தில் கூச்சம், நீர் வடிதல், இமை ஒட்டிக்கொள்ளல்.

**ஸிபிலினம்:** வெள்ளை விழிகள் அழர்ச்சி. ரணம் அதிக நீர் வடிதல். கூச்சம். இமை வீக்கம்; இரவுகளில் வலி.

**ஸிம்பைடம:** அடிபட்ட காயங்கள்.

**ஸிலிகா:** குழி விழுந்திருத்தல், சூரிய வெளிச்சத்தைக் காண சகிக்காமை.

**ஸினேபிஸ் நைக்ரா:** ஜலதோஷத்தில் கண்ணில் நீர் வடிதல், அரிக்கும் உணர்ச்சி.

**ஸீகேல்:** குழி விழுதல், நீல வளையம், கூச்சம், விழிகளை பலமாக சுற்றும் வலி. கருமணி அகலுதல், மேலிமை வலு விழத்தல், விழித்தபடி பயங்கரமாகப் பார்த்தல்.

**ஸீட்ரான்:** கண்களைச் சுற்றி வலி.

**ஸீனு :** கண்ணைச் சுற்றி நீலநிற வளையம். கருமணிகள் விரிந்திருத்தல்.

**ஸெபீயா :** மணலிருப்பதுபோல் வலி, எரிச்சல் நீர் வருதல்.

**ஸெனகா :** விழி பெருத்த உணர்ச்சி, குத்திட்ட பார்வை, கண்ணை அடிக்கடி தேய்த்தல், அதிக நீர் வடிதல், கண்களின் நரம்புக் கோளாறுகள்.

**ஸெனஸியோ :** இடது கண்ணின் மேல் கூரான ஆயுதத்தால் குத்தும் வலி.

**ஸைக்ளமன் :** தளர்ச்சி, குழி விழுதல், வயிற்று உபாதியால் கண் பாதிக்கப்படல்.

**ஸோரினம் :** இமை தடித்தல், வெளிப்புறம் பிரண்டு இருத்தல், அடிக்கடி கண் வலி, கண்கள் வெளியே பிதுங்கி விடுவது போன்ற உணர்ச்சி.

**ஸ்க்வில்லா :** அடிக்கடி கண்ணையும் மூக்கையும் தேய்த்தல்; கண்களிலிருந்து நீர் வெளிப்படல்.

**ஸ்டாபிஸாக்ரியா :** மேகரோகக் கண் ரணம், இமைகளில் அடிக்கடி கிரிக்கட்டிகள், சிறு சினப்புகள், பொட்டுகளிலும் விழிகளிலும் பிளக்கும் வலி, கண்ணைச் சுற்றி நீலநிற வளையம்.

**ஸ்டானம் :** விழி வெளுத்து விரிந்திருத்தல்.

**ஸ்ட்ரமோனியம் :** கண்கள் சொருகிக் கொள்ளுதல், கண்களை மூடினாலும் இருட்டிலும் கீழே விழுவதுபோல் தள்ளாடுதல், விழிகள் குத்திடல், அகன்று போதல், அசையாமை, வெளிச்சம் பார்க்க முடியாமை.

**ஸ்பாஞ்சியா :** சில்லென்ற உணர்ச்சி, அமுக்கும் உணர்ச்சி, சிவந்திருத்தல், குழி விழுதல்.

**ஸ்பைஜீலியா:** கருமணி அகன்றிருத்தல், கண்களை அசைக்கும் போது அமுக்கும் குத்தும் வலி. கண்களில் ஒரு கத்தியை சொருகுவதுபோல் வலி. விழிகள் பெரிதாயிருப்பது போன்ற உணர்ச்சி, அடிக்கடி சிமிட்டுதல்.

**ஹமாமேலிஸ்:** அடிபட்ட கலக்கம், விழிகள் உள்ளேயிருந்து வெளியே தள்ளப்படும் உணர்ச்சி. விழிகளின் உள்ளே இரத்தக் கசிவு.

**ஹயாஸ்யாமஸ்:** கருமணி சுருங்குதல் அல்லது அகலுதல், விழிகள் சுற்றி சுற்றி வருதல்.

**ஹீபர்ஸல்பர்:** வெள்ளை விழியில் ரணம், கூசுதல், அழர்ச்சி, நீர் அல்லது நாற்றமுள்ள ரத்தம் கலந்த நீர் வடிதல்.

**ஹெல்லீபோரஸ்:** ஒளி மழுங்கியிருத்தல், கருமணிகள் சுருங்கிச் சுருங்கி விரிதல், திறந்த கண் திறந்தபடியே இருத்தல். விழிகள் மேற்புறமாகச் சொருகிக் கொண்டிருத்தல், பேந்தப் பேந்த விழித்தல், சிசுக்களுக்கு கண்களிருந்தும் பார்க்கமுடியாத நிலைமை, நெற்றியும் கண்களும் வெளியே அமுக்கப்படும் உணர்ச்சி.

# விழிகள்

**அகேரீகஸ்:** கருமணிகள் அகலுதல் அல்லது குறுகுதல், விழிகள் சுண்டுதல் அல்லது முறுக்கிக்கொள்ளுதல், பிரண்டுகொண்டேயிருத்தல்.

**அகோனைட்:** விழிகள் குத்திடல், சுருங்குதல், சிவத்தல், அழர்ச்சி, எரிச்சல் சுடுதல், கருமணி முதலில் சுருங்கிப் பிறகு விரிந்து போதல்.

**அக்டியா ரஸிமோஸா:** விழித் தலைவலி.

**அக்னஸ் காஸ்டஸ்:** கருமணி அகலுதல்.

**அபிஸ் மெல்லிபிகா:** கருவிழி கெட்டியாதல், கறுத்த புகை போன்ற பொட்டுக்களுடன், வாதநோய். கருவிழி ரணம்.

**அமில் நைட்ரேட்:** சூரிய இடியில் விழி குத்திடல்.

**அர்ஜண்டம் நைட்ரிகம்:** விழிகளில் ரணம், நிலையின்மை வலிப்பு வருவதற்குப் பல மணி அல்லது பல நாட்களுக்கு முன்னமேயே விழிகள் அகன்று விடுதல்.

**அஸ்குலஸ்:** ரணம், சூடு, வலி. முதலில் அகன்று விடுதல். பிறகு மெதுவாகச் சுருங்குதல், எரிச்சல்.

**ஆண்டிமோனியம் டார்ட்டாரிகம்:** மேகவெட்டை வாதம் கண்ணோய் இவைகள் சம்பந்தமாக அடிபட்டது போன்ற வலி, கனத்த உணர்ச்சி.

**ஆரம் மெட்டாலிகம்:** பாப்பாக்கள் சுருங்கி அல்லது ஒழுங்கீனமாக அகன்றிருத்தல். கருவிழியில் புள்ளிகள் விழுதல், குத்திட்ட பயங்கரப் பார்வை, விழிகள் வெளுத்திருத்தல், கருவிழிகளில் நீடித்த கிரந்திக் குழிப்புண்கள்.

**ஆர்னிகா:** ரத்தம் செறிதல்.

**ஆர்ஸனிகம் ஆல்பம்:** ரத்தக்குழல்கள் மாமிசத்துண்டுபோல் சிவத்தல், எரிதல், வரட்சி, காரமான கண்ணீர். பீளையுடன் சிறுவர்கட்கேற்படும் கண்ணோய்.

**ஆஸிட் நைட்ரிகா:** ரணம், அழுக்கம், குத்துவலி.

**ஆஸிட் பிக்ரிக்:** நீடித்த ரணம் மஞ்சள்நிற நீர்.

**ஆஸிட் ஸல்ப்:** ரத்தப்பெருக்கு, அடிபட்ட அதிர்ச்சி, வலி.

**இக்கினேஷ்யா:** நரம்புகளில் வலி.

**எதூஸா:** குத்திடல், கருமணிகள் அகலுதல்.

**ஜயோடியம்:** வெள்ளை விழி அழுக்கடைந்து மஞ்சட்காமாலை போல் மஞ்சள் நிறமடைதல். விழிகள் பிதுங்கியிருத்தல்.

**ஓலியாண்டர்:** தலையின் பக்கமாக உள்ளுக்கிழுக்கப்படல்.

**ஓபியம்:** கருமணி சுருங்குதல். மேற்புறத்தில் சொருகிக் கொண்டிருத்தல், விழிகளில் பாப்பா சுருங்குதல், ரத்தத் திரட்சி. கண்ணாடிபோல் பளபளப்பாகவிருத்தல்.

**ஓனோஸ்மோடியம்:** பாரமான மந்தத் தலைவலி.

**கல்கேரியா கார்பானிகா:** பூ விழுதல் விழிகளின் மேல் தோலில் மங்கல். குழிப்புண்கள். அழர்ச்சி, பிரதி தடவை ஜலதோஷம் ஏற்படும்போதும் ரத்தச் சுரப்பு.

**கல்கேரியா பாஸ்:** ரணம், வலி.

**கல்கேரியா ப்ளோரிகா:** வெள்ளை விழியில் புள்ளிகள், கண்ணழுர்ச்சி, பூவிழுதல்.

**கல்கேரியா ஸல்ப்:** அழர்ச்சி, கெட்டியான மஞ்சள் நிறப் பீளை, பூவிழுதல், வெண்விழிகளில் ரணம், பிறந்த சிசுக்களின் கண்ணழற்சி.

**கன்னபிஸ் இண்டிகா:** அழர்ச்சி.

**கன்னபிஸ் ஸடைவா:** அழற்சியேற்பட்டபின் மங்குதல்.

**காக்குலஸ்:** மூடியிருக்கும்போதும் அடிக்கடி உருண்டு கொண்டேயிருத்தல், கிழிந்துவிட்டது போன்ற உணர்ச்சி இரவில் விழிப்பதால் ஏற்படும் உபாதிகள்.

**காட்மியம் ஸல்ப்:** விழிகளின் மேல் தோலில் மங்கல், மெதுவாகத் தோன்றும் அழர்ச்சி.

**காப்ஸிகம்:** தூசு இருப்பதுபோல் வலி.

**காம்போரா:** சூரிய வெளிச்சத்தில் உபாதிகள் அதிகரித்தல், கருமணிகள் சுருங்கியும் அசைக்க முடியாமலும் அல்லது அகன்றிருத்தல், விகாரமான குத்திட்ட கண்கள்.

**கார்பன் ஸல்ப்:** மணலிருப்பது போன்ற உணர்ச்சி.

**கார்போ வெஜ்:** எரிச்சல் வலி.

**காலாடியம்:** அழுத்தும் உணர்ச்சி.

**காலீ கார்ப்:** பிடிப்பு வலி.

**காலீ பைக்ரோ:** கண் குழிகளின் மேல்நரம்புகளில் வலி. வெண் விழிகளில் குழிப்புண், வலியின்மை அல்லது வெளிச்சத்தில் கூச்சம்.

**காலீ மூரி:** வெளுத்த பீளை அல்லது சீழுள்ள சொறி.

**காலோஸிந்திஸ்:** கடுமையான குடைவது போன்ற வலி. அமுக்கினுல் சமனம், கீழே குனியும்போது கண்கள் வெளியே விழுந்துவிடும் போன்ற உணர்ச்சி, வாத சம்பந்த உபாதிகள்.

**கால்மியா:** அசைக்கும்போது விரைப்பாகவும் இழுப்பது போலவும் உணர்ச்சி, கருவிழிகள் வாத சம்பந்த அழர்ச்சி, வெள்ளை விழிகளில் அழர்ச்சி. அசைவால் அதிகம்.

**காஸ்டிகம்:** மோட்டார் நரம்புக் கோளாறுகளுடன் பூவிழுதல்.

**குப்ரம் மெடாலிகம்:** பளபளப்பு. குத்திட்ட பார்வை, விழிகள் கடகடவென்று உருளுதல், அசைக்கும்போது அடி பட்டது போன்ற வலி.

**கோல்சிகம்:** பூவிழுதல். கருமணிகள் அகன்றிருத்தல், வெளிச்சத்தில் சிறிது கூச்சம், சிரமப்பட்டுப் படிப்பதாலும் இரவில் கண் விழிப்பதாலும் ஏற்படும் உபாதிகள்.

**கோனியம்:** அமிதக் கண்ணீர், சுழற்றும்போதும் இறுகிறுப்பு.

**க்ராபைடிஸ்:** கண்ணேய்கள்.

**க்ரிண்டிலியா ரோபஸ்டா:** விழி வலி.

**க்ரோடேலஸ் ஹாரிடஸ்:** கருமணிகள் அகன்றுவிடுதல், கண்கள் மஞ்சளாகவிருத்தல், திறந்த கண்கள்.

க்ளாய்கம்: வெளியே பிதுங்கியிருக்கும் உணர்ச்சி, வீக்கம், கருமணிகள் அகன்றிருத்தல்.

க்லோனுயின்: கருமணிகள் அகலுதல் அல்லது குறுகியிருத்தல், வலிப்புகளிலும் சூரிய இடியிலும் கண்கள் மேல்நோக்கித் திரும்பியும் மேலாகவும் வெளிப்புறமாகவும் உருட்டிக் கொண்டிருத்தல், விழிகள் குத்திடல், வெளியில் பிதுங்கிச் சிவந்திருத்தல், விழிகள் ஒட்டிக்கொண்டிருத்தல், ரத்தத் திரட்சி.

சிமாபிலா: பூவிழ ஆரம்பிக்கும் சமயம், விருத்தியாகும் சமயம்.

சின்னியம் ஆர்ஸனிகம்: வெளிச்சத்தில் அதிகக் கூச்சம், அப்போது சூடான கண்ணீர் வருதல்.

செலிடோனியம்: வெள்ளை விழி மஞ்சளாக மாறுதல், கருமணி சுருங்குதல்.

சைனு: குழிவிழுதல், மஞ்சள் நிறம் விழி பிதுக்கம், விட்டு விட்டு வரும் நரம்பு வலி.

டபாகம்: குழி விழுந்த தோற்றம், விழி பிதுக்கம்.

டல்கமாரா: பிரதிதடவை சளி பிடிக்கும்போதும் உபாதிகள், கெட்டியான மஞ்சள்நிற நீர் வெளிப்படுதல்.

டிஜிடாலிஸ்: கருமணிகள் அகன்று உணர்ச்சியற்றிருத்தல்.

ட்யூபர்குலீனம்: விழிகளிலும் எலும்புகளிலும் வலி.

துஜா: நரம்பு சம்பந்த வலிகள் நீடித்த கண் ரணம்.

தெரிடியன்: பின்புறம் இறுக்கம்.

தெரிபிந்த்: மூத்திர உபாதிகளுடன் கண்களில் ரணம்.

நக்ஸ்வாமிகா: காலையில் கூச்சம் எரிச்சல், உப்புக்கறக்கள் கறைவதுபோன்ற உணர்ச்சி.

**நாப்தலேன் :** பொதுவான கண் உபாதிகள். பூவிழுதல்.

**நேட்ரம் ஆர்ஸனிகம் :** வெள்ளை விழிகளில் ரணம். ரத்தக் குழாய்களில் அதிக ரத்தமிருந்தால் காலையில் உபாதிகள் அதிகம். படித்தால் அதிசீக்கிரத்தில் கண்கள் தளர்ச்சி.

**நேட்ரம் கார்பானிகம் :** வெள்ளை விழியில் ரணங்கள். காய்தல், எரிச்சல். குத்துங் கடிக்கும் வலிகள்.

**நேட்ரம் பாஸ் :** ஒரு கண்ணின் கருமணி விரிந்திருத்தல். வெள்ளை விழிகள் அழுக்கடைந்து மஞ்சள்நிறமாகவிருத்தல் பொன் நிறம்போல் அல்லது பாலேடைபோல் நீர்வடிதல்.

**நேட்ரம் மூர் :** அசைக்க முடியாமை. வெள்ளை விழிகளில் ரணம். மணலிருக்கும் உணர்ச்சி, காரமான புண்ணுக்கும் கண்ணீர். விழிப் பிதுக்கம்.

**நேட்ரம் ஸல்ப் :** பலவீனம். நீர்கோத்துக்கொள்ளல். மஞ்சட் காமாலை. தலைவலியுடன் கண்கூச்சம். மாலையில் படிக்கும்போது இறுக்க உணர்ச்சி.

**பல்ஸடில்லா :** அரிப்பு எரிச்சல் நீர் வடிதல். ரணம், காரமற்ற நீர் வடிதல். காரமற்ற பிசுக்கான கெட்டியான நீர் ஏராளமாக வடிதல்.

**பாடியாகா :** விழிகளிலும் நெற்றியிலும் வலி.

**பாரிடா கார்ப் :** கருமணிகள் மாறி மாறிப் பெருத்தலும் சிறுத்தலும். வரண்ட அழர்ச்சி பூவிழுதல்.

**பாரிடா மூரியாடிகா :** திருப்ப முடியாமை.

**பாரிஸ் க்வாட்ரி :** விழிகளை கயிற்றால் உட்புறம் கட்டியிருக்கும் உணர்ச்சி.

**பாஸ்பரஸ் :** ரணம். கருமணிகள் சுருங்கியிருத்தல். எரிச்சல். உளுத்தல். சிவத்தல், குளிர்ந்த தண்ணீரால் சமனம் நரம்புகள் சக்தியிழந்திருத்தல்.

புபோ: சிறு கொப்புளங்கள்.

பேர்ரம்மெடாலிகம்: ரணம். எரிச்சல் கொட்டும் வலி திறந்து வைத்துக்கொள்ள முடியாமை. பலஹீனம் கருமணி குறுகியிருத்தல்.

பெல்லடொன்னு: விழிகள் வெளியே வந்துவிடும் போன்ற உணர்ச்சி வலி, பாப்பா விரிதல், உலர்தல், மணல் சிக்கிய உணர்ச்சி.

பைடோலக்கா: உறுத்துதல் சூடான நீர் வருதல். சிவந்த நீர்ப் பெருக்குடன் ஜலதோஷம்.

பைரோஜினியம்: தொட்டாலும் அசைத்தாலும் வலி.

போடோபில்லம்: தூக்கத்தில் பாதி கண் மூடியிருத்தல்.

ப்ரையோனியா: அசைப்பதாலும் திறப்பதாலும் தலைவலி அதிகரித்தல். அமுக்கும் வலி அழற்சி தொடுவதால் வலி.

ப்ரோமியம்: உள்ளே வலி.

ப்ளம்பம்: கருமணி குறுகுதல். மஞ்சள் நிறம். கண் அல்லது கண் நரம்பு அழற்சி.

ப்ளாண்டகோ: வலி.

மங்கானம்: தைத்தாலும் சிறு வெழுத்துக்களைப் படித்தாலும் வலி. அதிகப் பிரகாசத்தைப் பார்த்தால் எரிச்சல், உலர்ந்த உணர்ச்சி.

மெக்னீஷியா கார்ப்: வீக்கம்.

மெக்னீஷியா மூரி: அழற்சி, சிவத்தல், எரிச்சல்.

மெர்குரியஸ் கரோஸிவஸ்: மேகவெட்டை சம்பந்த ரணம். எரிச்சல். ரணங்களால் தசை அழிதல்.

மெர்குரியஸ் டல்ஸிஸ்: ரணம்.

**மெர்குரியஸ் ஸொலுபுலிஸ் :** ஸிபிலிஸ் சம்பந்தமான கண்ணேய் அதிக நீர் வெளிப்படல் (இது பட்டவிடங்களைப் புண்ணுக்கும்) சீழ் வருதல்.

**மைரிகா :** மந்தமான பலவீன உணர்ச்சி. கலங்கிய மஞ்சள் நிறம்.

**யூபடோரியம் பர்போலி :** விழி வலி. சுவாசக் கோளாறில் நீர் வெளிப்படுதல்.

**யூபரேஷியா :** காரமுள்ள நீர் வழிந்துக் கொண்டேயிருத்தல். ரணங்கள். மயிர் அல்லது மணல் சிக்கிய உணர்ச்சி. வலி, வாயு சம்பந்தக் கண் உபாதிகள். அரிப்பு.

**ரஸ்டாக்ஸ் :** அதிகமான காரமான நீர் வெளிப்படுதல், வெள்ளை விழிகளில் கொப்புளம். ரணம். சிவத்தல்.

**ராபேனஸ் :** விழி சுற்றிச் சுற்றி வருதல்.

**ரானங்குலஸ் :** அமுக்கும் உணர்ச்சி. எரிச்சல் வலி.

**ரூடா :** கண் தசைகளுக்கு அதிக வேலை கொடுத்ததாலேற்பட்ட உபாதிகள் குளிர் காற்று, கப்பல் பிரயாணத்தாலேற்பட்ட உபாதிகள். தீ வைத்ததுபோல் எரிச்சல், வலி, அரிப்பு. தேய்த்தால் கலங்கிய கண்ணீர் வருதல்.

**ரோஹிடாக் :** சூடு எரிச்சல், மந்தம்.

**லாக்கெஸிஸ் :** வெள்ளை விழிகளில் ரணம், சிவத்தல்.

**லாரோஸிராஸஸ் :** விழித்தபடியே யிருத்தல். ஒரு பக்கம் இழுக்கப்பட்டிருத்தல். பாப்பா விரிதல்.

**லிதியம் கார்ப் :** படித்தபின் நொந்தவலி மணலிருப்பது போல் வலி தாமதப்பட்ட மாதவிடாயில் வறளுதல். ரணவலி.

**லில்லியம் டிக்ரினம் :** நீர் வடிதல்.

லேடம் பாலஸ்திரி : அடிபட்டதனுல் கலங்குதல், ரத்தக் கசிவு, விழிகளை வெளித்தள்ளும் உணர்ச்சி.

லைகோபோடியம் : வரட்சி உறுத்துதல், வயிற்றுக் கோளாறு களுடன் கண்ணில் பூவிழுதல்.

லைகோபோஸ் வர்ஜீனியா : வெளித்துருத்தியிருத்தல், இருதயப் படபடப்பு.

வலேரியானு : உள்ளிருந்து வெளியே செல்லும் கிழிக்கும் வலி.

ஜெல்ஸிமியம் : பாப்பாக்கள் விரிதல்.

ஸல்பர் : மணல் போல் உறுத்துதல், குளிர்ந்த நீரால் கழுவி ஞல் அதிகம்.

ஸாங்குநேரியா : தலைவலியில் விழிகள் வெளியே பிதுங்கிவிடும் போலிருத்தல்.

ஸிகூடா : கூச்சமின்றி பாப்பா விரிதல், விழி துடித்தல், விழிகள் விழித்தவாறேயிருத்தல்.

ஸிங்கம் பாஸ் : விழித்து பார்த்தபடியேயிருத்தல்.

ஸிங்கம் மெடாலிகம் : புரளும் விழிகள்.

ஸிங்கம் ஸல்ப் : அழற்சி, மணல் விழுந்த உணர்ச்சி, வெளிச் சத்தில் கூச்சம், நீர் வடிதல்.

ஸிபிலினம் : வெள்ளை விழிகளில் அழற்சி ரணம், அதிக நீர் வடிதல் கூச்சம்.

ஸிம்பைடம் : அடிபட்ட காயங்கள்.

ஸினேபிஸ் நைக்ரா : ஜலதோஷத்தில் நீர் வடிதல், அரிக்கும் உணர்ச்சி.

ஸிகேல் : விழிகளைப் பலமாகச் சுற்றுவதுபோல் வலி, கருமணி அகலுதல், விழித்தபடி பயங்கரமாகப் பார்த்தல்.

**சீனு:** கருமணிகள் விரிந்திருத்தல்.

**ஸெபீயா:** மணலிருப்பதுபோல் வலி, எரிச்சல், நீர் வருதல்.

**ஸெனகா:** விழி பெருத்த உணர்ச்சி, அடிக்கடி தேய்த்தல், அதிக நீர் வடிதல்.

**ஸைக்ளமென்:** வயிற்று உபாதியால் கண் பாதிக்கப்படல்.

**ஸோரினம்:** அடிக்கடி கண் வலி, விழிகள் வெளியே பிதுங்கி விடுவது போன்ற உணர்ச்சி.

**ஸ்க்வில்லா:** அடிக்கடி கண்ணையும் மூக்கையுந் தேய்த்தல், கண்களிலிருந்து நீர் வெளிப்படல்.

**ஸ்டாபிஸாக்ரியா:** மேகரோகக்கண் ரணம். பொட்டுகளிலும் விழிகளிலும் பிளக்கும் வலி.

**ஸ்டானம்:** வெளுத்து விரிந்திருத்தல்.

**ஸ்ட்ரமோனியம்:** சொருகிக் கொள்ளுதல், குத்திடல். அசையாமை, அகன்று போதல், கண்களை மூடினாலும் இருட்டிலும் கீழே விழுவதுபோல் தள்ளாடுதல்.

**ஸ்பாஞ்சியா:** சில்லென்ற, அமுக்கும் உணர்ச்சி.

**ஸ்பைஜீலியா:** கருமணி அகன்றிருத்தல், விழிகளை அசைக்கும் போது அமுக்கும் குத்தும் வலி சில்லென்ற உணர்ச்சி, கத்தியைச் சொருகுவதுபோல் வலி, பெரிதாயிருப்பது போன்ற உணர்ச்சி.

**ஹமாமெலிஸ்:** அடிபட்ட கலக்கம் உள்ளேயிருந்து வெளியே தள்ளப்படும் உணர்ச்சி, உள்ளே ரத்தக் கசிவு.

**ஹயாஸ்யாமஸ்:** கருமணி சுருங்குதல், அல்லது அகலுதல். விழிகள் சுற்றிச் சுற்றி வருதல்.

**ஹீபர் ஸல்பர்:** வெள்ளை விழியில் ரணம், கூசுதல். அழற்சி நீர் அல்லது நாற்றமுள்ள ரத்தங் கலந்த நீர் வடிதல்.

ஹெல்லிபோரஸ் : ஒளி மழுங்கியிருத்தல், கருமணிகள் சுருங்கிச் சுருங்கி விரிதல். கண்கள் திறந்தபடியேயிருத்தல், விழிகள் மேற்புறமாகச் சொருகிக்கொண்டிருத்தல். பேந்தப் பேந்த விழித்தல். நெற்றியுங் கண்களும் வெளியே அமுக்கப்படும் உணர்ச்சி.

# இமைகள்

அகேரிகஸ் : முறுக்கிக் கொள்ளல், திறந்து திறந்து மூடிக் கொள்ளல்.

அகோனைட் : வீக்கம்.

அபிஸ் மெல்லிபிகா : கருத்தல், சிவத்தல், மாமிசத்துண்டு போல் வீக்கம், கீழிமை நீர்ச்சுரப்பு, விரைப்பு கண் பாதி மூடிக்கொண்டிருத்தல்.

அமோனியம் மூரியாடிகம் : காலையில் ஒட்டிக்கொள்ளல்.

அம்ப்ரா க்ரிஸியா : எரிச்சல், கிருக்கட்டிகள்.

அர்ஜண்டம் நைட்ரிகம் : சிறு கொப்புளங்கள்.

அர்ஜண்டம் மெடாலிகம் : ஓரங்களில் கடின கிருக்கட்டிகள்.

அலூமினு : தடித்தல், எரிச்சல், வரட்சி, வலி, மயிர்கள் உதிர்தல், திறக்க சிரமம், நுண்ணிய கொப்புளங்களுடன் இமை துடித்தல்,

ஆண்டிமோனியம் க்ருடம் : சிவத்தல், அழர்ச்சி.

ஆரம் ட்ரிபீல்லம் : மேலிமைகள் கனமாக நடுங்கிக்கொண்டிருத்தல், ஓரங்களில் வீக்கம்.

ஆரம் மூரியாடிகம் : காலையில் வீங்கிச் சிவந்து ஒட்டிக்கொண்டிருத்தல்.

ஆர்ஸனிகம் ஆல்பம் : வலி, எரிச்சல்.

ஆஸிட் நைட்ரிக் : வீங்கித் தடித்து ரணப்பட்டுச் சிவந்திருத்தல்.

**ஐயோடியம்:** நீரதைப்பு.

**கந்தாரிஸ்:** இமைகளைத் திறந்தவுடன் ஓரங்களில் புண்ணிருப்பதுபோல் வலி, இமைகள் பச்சை மாமிசம் போலிருத்தல்.

**கல்கேரியா ஆர்ஸனிக்:** இமைகளை மூடியதும் தீப்பிடித்தெரியுங் காக்ஷி.

**கல்கேரியா கார்பானிகா:** வீக்கம், ஒன்றோடொன்று ஒட்டிக் கொள்ளல், எரிச்சல்.

**கன்னபிஸ் இண்டிகா:** நிலைத்த பார்வை.

**காக்குலஸ்:** மூடினபடியே யிருத்தல், பாரிசவாயு.

**கார்பன் ஸல்ப்:** கனம், கெட்டி, இரவில் ஒட்டிக்கொண்டிருத்தல்.

**காலி கார்ப்:** ஒட்டிக்கொள்ளல். மேலிமைகள் சிறு பைகள் போல் வீங்குதல், இமைகளை மூடியவுடன் மூளையில் வெளிச்சம் பரவுவதுபோல் வலியுள்ள உணர்ச்சி.

**காலீ பாஸ்:** தொங்குதல், இடுங்கிய கண்கள்.

**காலி பைக்ரோ:** வலது கண்ணிமைகளில் வீக்கம். எரிச்சல் நீரதைப்பு.

**காலோஸிந்திஸ்:** இமைகளை அசைத்தால் தலைவலி அதிகரித்தல்.

**காஸ்டிகம்:** பாரிசவாயுவால் கண்களின் மேலிமைகள் தளர்ந்து தொங்குதல். அழர்ச்சி. குழிப்புண்.

**கோல்சிகம்:** அழர்ச்சி, வீக்கம்.

**கோனியம்:** மூடியதும் வியர்வை.

**க்ராபைடிஸ்:** வீக்கம், சிவத்தல், ஓரங்களில் அழர்ச்சி, காய்ந்திருத்தல், சொரி சிரங்குகள், வெடிப்புகள்.

**க்ளோனுயின்:** காய்தல், விழிகளுடன் ஒட்டிக்கொள்ளல்.

**க்ரோடேலஸ் ஹாரிடஸ்:** திறந்தகண்கள்,

**காமோமில்லா:** எரிச்சல், விட்டுவிட்டு மூடிக்கொள்ளல்.

**சிமாபிலா:** அரிப்பு.

**டல்கமாரா:** ரணம்.

**டெல்லூரியம்:** இமை தடித்தல், நீர் வடிதல்.

**தூஜா:** இரவுகளில் இமைகள் ஒட்டிக்கொள்ளல், சிவந்த கிருக்கட்டிகள்.

**நக்ஸ் மாஸ்சாடா:** காய்ந்திருத்தல், கனம் விரைப்பு, இதனுல் விழித்திருக்க சிரமம்.

**நக்ஸ் வாமிகா:** அரிப்பு எரிச்சல்.

**நேட்ரம் ஆர்ஸனிகம்:** புண்கள், கனம், மூடிக்கொண்டிருத்தல் காலையில் ரணத்துடன் ஒட்டிக்கொள்ளுதல்,

**நேட்ரம் கார்பானிகம்:** மேலிமைகள் கனமாகவிருத்தல்.

**நேட்ரம் மூரி:** ஓரங்களில் கழலேக்கட்டிகள்.

**நேட்ரம் ஸல்ப்:** கனம். காலையில் அரிப்பு.

**பஸ்ஸடில்லா:** மாலையில் இமைகள் ஒன்ருேடொன்று ஒட்டிக் கொள்ளுதல்.

**பாரிடா கார்ப்:** தடித்திருத்தல், காலையில் ஒட்டிக்கொள்ளுதல்.

**பாஸிலீனம்:** படைகள்.

**பெட்ரோலியம்:** கோடியில் அரிப்பு வெடிப்பு.

**பெர்ரம் மெட்:** உள்ளுக்கிழுக்கப்படல்.

**பெல்லடோன்னு:** ரணம் போன்ற வலி.

**போடோபில்லம்:** தூக்கத்தில் பாதிக்கண் மூடியிருத்தல்.

போரக்ஸ்: இமை ஒட்டிக்கொள்ளுதல். உட்புறம் வளைதல்,

ப்ளாட்டினு: துடித்தல், சில்லிட்ட உணர்ச்சி.

மெக்னீஷியா கார்ப்: காலையில் ஒட்டிக்கொள்ளுதல்.

மெக்னீஷியா மூரியாடிகா: ஓரத்தில் சிறு கொப்புளங்கள்.

யூபரேஷியா: இமை துடித்தல்.

யூரேனியம் நைட்ரிகம்: கிருக்கட்டிகள். ரணப்பட்டு ஒட்டிக் கொள்ளுதல்.

ரஸ்டாக்ஸ்: தானுக மூடிக்கொள்ளல், வீக்கம்.

ராபேனஸ்: துடித்தல்.

லைகோபோடியம்: ரணம் சிவப்பு.

ஸல்ப: அழற்சி, வீக்கம், எரிச்சல், இரவில் ஒட்டிக் கொள்ளல்.

ஸிங்கம் மெடாலிகம்: மேலிமை கனம்.

ஸிங்கம் ஸல்ப்: ஒட்டிக்கொள்ளல்.

ஸிபிலினம்: வீக்கம், இரவுகளில் வலி.

ஸீகேல்: மேலிமை வலு விழத்தல், விழித்தபடி பயங்கரமாகப் பார்த்தல்.

ஸோரினம்: தடித்தல், வெளிப்புறம் பிரண்டிருத்தல்.

ஸ்டாபிஸாக்ரியா: அடிக்கடி கிருக்கட்டிகள்.

ஸ்பைஜீலியா: அடிக்கடி சிமிட்டுதல்.

## வலது கண்

அக்டியா ரஸிமோஸா: வலது கண்ணில் தங்கும் பின் தலைவலி.

அம்ப்ரா க்ரிஸியா: இமைகளில் எரிச்சல், கிருக்கட்டிகள்.

**காலீ பைக்ரோமிகம்:** வலது கண்ணிமைகளில் வீக்கம். எரிச்சல் நீரதைப்பு, மஞ்சளான கம்பி போன்ற நீர் வெளிப்படல், வெண் விழிகளில் குழிப்புண், வலியின்மை அல்லது வெளிச்சத்தில் கூச்சம்.

**கோக்கஸ் காக்டி:** காலையில் வலது கண்ணின் மேல் மந்தவலி, மேலிமைக்கும் கீழிமைக்கும் நடுவில் தூசியிருக்கும் உணர்ச்சி.

**க்ரோடன் டிக்லியம்:** வலது கண்ணின் குழியில் விண் விண்ணென்று தெறிக்கும் வலி.

**செனபோடியம்:** மேற்புறம் வலி, அதிகக் கண்ணீர் வடிதல்.

**நேட்ரம் மூரியாடிகம்:** கலங்கியிருத்தல், வெளிச்சத்தைப் பார்க்க முடியாமை.

# இடது கண்

**அக்டியா ரஸிமோஸா:** இடது கண் பக்கத் தலைவலி.

**அம்ப்ரா க்ரிஸியா:** அமுக்கம், காலையில் திறக்க முடியாமை, வலி, இறுக மூடிக்கொள்ளல்.

**அல்லியம் ஸீபா:** காரமற்ற புண்ணுக்காத நீர் வடிதல்.

**அஸ்குலஸ் ஹிபோ:** கண் குழியில் ஆழமான பாகத்தில் மேலாக வலி.

**ஆண்டிமோனியம் க்ருடம்:** சிவத்தல், வெளிச்சத்தைப் பார்க்க வெறுப்பு.

**ஆரம் மூரி:** கிழிக்கும் வலி.

**ஆஸிட் ப்ளூவாரிக்:** சிறிதாகவிருத்தல், மணலிருக்கும் உணர்ச்சி, காற்று வேகமாகப்படும் உணர்ச்சி.

**சிமாபிலா :** இடது கண்ணிலிருந்து அதிக நீர் வடிதல், குத்து வலி, பூவிழ ஆரம்பிக்கும் சமயம், விருத்தியாகும் சமயம்.

**டாரண்டுலா குபன்ஸிஸ் :** இடது கண்ணிலிருந்து நெற்றிக்குப் பாயும் வலி.

**தெரிடியன் :** இடது கண்ணுக்கு மேலே துடிப்பு.

**பெர்ரம் மெடாலிகம் :** இடது கண்ணின் மேல் திடீரென்று வலி, பலஹீனம், கருமணி குறுகியிருத்தல்.

**லாக் பெல் :** எப்போதும் இடது கண்ணின்மேல் ஊசியால் குத்துவதுபோல் வலி.

**ஸெனஸியோ :** இடது கண்ணின் மேல் கூரான ஆயுதத்தால் குத்துவது போன்ற வலி.

# பார்வை

**அகேரிகஸ் :** சூன்யவிடத்தில் வஸ்து இருப்பது போலிருத்தல். பார்க்கப்படும் வஸ்துவை ஒரே தூரத்தில் வைத்து பார்க்க முடியாமை தூரத்திலும் அருகிலும் மாற்றி மாற்றி வைத்துப் பார்த்தல். மங்கிய பார்வை. பூச்சி பறத்தல்போல் கரும்புள்ளிகள், சிலந்தி வலைபோல தோன்றுதல். நீடித்த கண் உழைப்பால் பார்வை மங்குதல்.

**அகோனைட் :** வெளிச்சத்தில் கண் கூச்சம். வெளிச்சத்தைப் பார்க்க வெறுப்பு, தன்னை சுற்றியவை யாவும் சுழல்வது போலிருத்தல்.

**அக்டியா ரஸிமோஸா :** கரும்புள்ளிகள். இரட்டைப் பார்வை.

**அபிஸ் மெல்லிபிகா :** பிரகாசத்தில் கூச்சம். ஒன்றரைக்கண் பார்வை.

**அமோனியா கார்ப் :** இரட்டைப் பார்வை, தலைவலி, பூச்சி பறத்தல்போல். தையல் வேலை செய்த பின் கண்களின் முன் பெரிய கரும்புள்ளிகள் தோன்றுதல். அதிக உழைப்பால் பார்வை மங்குதல்.

**அமோனியம் மூரியாடிகம் :** மூடுபனிபோல் தோற்றம். மஞ்சள் புள்ளி (பிரகாசத்தில் அதிகம்) அறையில் சமனம். பூச்சி பறத்தல் போலிருத்தல்.

**அம்ப்ரா க்ரிஸியா :** மூடுபனியில் பார்ப்பது போன்ற மங்கின பார்வை.

**அயிலாந்தஸ் :** இரவில் மூடின கண்களுக்கு முன் மின்னல் போன்ற வெளிச்சம் தோன்றித் தோன்றி மறைதல். வெளிச்சத்தில் கண் கூசுதல், ரத்தம் வெளியாதல்.

**அர்ஜண்டம் நைட்ரிகம் :** கண்களின் முன் பாம்புகள் போன்ற உருவங்கள் அசைந்து கொண்டிருத்தல், கண்ணமுற்சியில் கண் வீங்குதலும், மங்கின பார்வையும், இருட்டில் நடக்கும்போது தடுமாறுதல்.

**அலுமன் :** விளக்கு வெளிச்சத்தில் இரட்டையாகத் தெரியும் பார்வை,

**அலுமினு :** கிறுகிறுப்புடன் கண்களுக்கு முன் வெண்மையான நக்ஷத்திரங்கள் தோன்றுதல். மஞ்சளாகவோ மூடுபனியால் மூடப்பட்டது போலவோ பார்க்கப்படும் வஸ்துக்கள் தோன்றுதல், மங்கிய பார்வை, கண்களைத் திறந்து கொண்டிருக்கும்போதும் பகலிலும்தான் நடக்கமுடியும்.

**அல்லியம் ஸீபா :** வெளிச்சத்தில் கூசுதல்.

**அனகார்டியம் ஓரியண்டேல் :** பார்வை தெளிவற்றிருத்தல்.

**ஆண்டிமோனியம் க்ருடம் :** எரியும் நெருப்பைப் பார்த்தால் இருமல் அதிகரித்தல், இடது கண்ணுக்கு வெளிச்சத்தைப் பார்ப்பதில் வெறுப்பு.

**ஆண்டிமோனியம் டார்ட்டாரிகம் :** பார்வை மறைதல் மங்கிய பார்வை வெண்மையான பூச்சிகள் பறக்கும் உணர்ச்சியுடன் கிறுகிறுப்பு.

**ஆரம் ட்ரிபில்லம் :** வெளிச்சத்தில் கூச்சம்.

**ஆரம் மூரியாடிகம் :** அசையும்போது கண்களின் முன்பாகச் சுற்றுதலும் கண்களின் மேல் கிழிக்கும் வலியுடன் கிறுகிறுப்பு.

**ஆரம் மெடாலிகம்:** வெளிச்சத்தில் கூச்சம், அரைப் பார்வை இரட்டைப் பார்வை, வஸ்துக்களின் கீழ்ப்பாகம் மட்டும் தெரிதல், மேல்பாகம் கறுப்பாகவும் அவ்விடங்களில் பளபளப்பான நக்ஷத்திரங்கள் இருப்பது போலவும் தோன்றுதல், குத்திட்ட பயங்கரப் பார்வை, பருவகால பெண்கள், பருவமடையாச் சிறுவர்கள், வயதானவர்கள் இவர்களின் பலஹீனப் பார்வை.

**ஆர்னிகா மோண்டானு:** கண்களின் முன் பூச்சி பறத்தல்போலிருத்தல், அடிப்பட்ட பின் வஸ்துக்கள் இரண்டாகத் தெரிதல், பார்வையிழத்தல்.

**ஆர்ஸனிகம் ஆல்பம்:** வெளிச்சத்தில் கண் கூசுதல், பார்க்கும் வஸ்துக்களெல்லாம் பச்சையாக விருத்தல், ஏதோ ஒரு திரை வழியாகப் பார்ப்பதுபோன்ற உணர்ச்சி, ஆகாரத்தைப் பார்ப்பதில் சகிக்க முடியாமை.

**ஆலோ சொகோட்ரீனு:** பளபளப்பான பூச்சிப் பறத்தல்போல், பிறரைப் பார்க்க வேண்டுமாயின் கண்களையிடுக்கிக் கொள்ளுதல்.

**ஆஸிட் ஆக்ஸாலிக்:** பார்வை மறைவுடன் மூக்கிலிருந்து ரத்தப் பெருக்கு, படிக்கும்போது அச்செழுத்து ஒன்றின்மேலொன்றிருப்பது போல் தோன்றுதல், மயக்கம், வியர்த்தல் முதலியவைகளுடன் பார்வை மறைதல்.

**ஆஸிட் நைட்ரிக்:** படித்துக் கொண்டிருக்கும்போதே பார்வை மங்குதல், பார்வைக்கெதிரில் கரும்புள்ளிகள் தோன்றுதல், வெளிச்சத்தைப் பார்க்க சகிக்காமை, சமீபத்ருஷ்டி.

**ஐயோடியம்:** கண்களின் முன் துணியிருப்பதுபோல் தோன்றுதல்.

**ஐரிஸ் வர்ஸிகொலர்:** தலைவலி நின்றபின் பார்வை ஒழுங்குக்கு வருதல். பார்வை மங்கலுடன் 8 நாள் அல்லது சில நாட்களுக்கொருமுறை வருந்தலைவலி, கல்லீரல் அல்லது அஜீர்ணத் தலைவலியில் கண் பார்வை மங்குதல்.

**ஓபியம்:** பலவித அனுமானங்கள், பூதம், பிசாசு, நெருப்பு, கறுத்த உருவங்கள் இவைகளைப் பார்ப்பதாகச் சொல்லுதல்.

**கந்தாரிஸ்:** பளபளப்பான பிரகாச வஸ்துக்களைக் கண்டால் பயம், வஸ்துக்கள் மஞ்சளாகத் தோன்றுதல்.

**கல்கேரியா ஆர்ஸனிக்:** இறந்த மனிதர்களைப் பார்ப்பதுபோன்ற பிரமை, கண்களை மூடியதும் நெருப்பு பிடித் தெரியும் காக்ஷிகள் தோன்றுதல்.

**கல்கேரியா கார்ப்:** கண்களை மூடியதும் பலவிதமான உருவங்கள், காக்ஷிகளைப் பார்ப்பது போலிருத்தல். மங்கிய பார்வை, நக்ஷத்திரங்கள் உதிர்வதையும் தூமகேதுக்கள் ஆகாயத்தை நோக்கிச் செல்வதையும் பார்த்தல், வஸ்துக்களின் ஒரு பாகத்தை மட்டும் பார்த்தல், (ஸல்பருக்கு பின் உபயோகிக்கவும்.)

**கல்கேரியா ப்ளோரிகா:** பூச்சி பறத்தல் போலிருத்தல்.

**கல்கேரியா ஸல்ப்:** இரட்டைப் பார்வை

**கன்னபிஸ் இண்டிகா:** வெளிச்சத்தைப் பார்க்கவியலாமை, குத்திட்ட பார்வை படிக்கும்போது எழுத்துக்கள் ஒன்றோடொன்று கலந்து கொள்வது போலிருத்தல்.

**காக்குலஸ்:** மங்கிய பார்வை.

**காக்டஸ் க்ராண்டிப்ளோரஸ்:** மங்கிய பார்வை, கண்களின் முன் வட்டம் வட்டமாக சிவப்பு வெளிச்சம் தோன்றுதல்.

**காபியா க்ரூடா:** நுணுக்கமான எழுத்துக்களையும் நன்கு படித்தல்.

**காப்ஸிகம்:** வஸ்துக்கள் கறுப்பாகத் தோன்றுதல், காலையில் மங்கிய பார்வை. கண்களைக் கசக்கினல் சற்று பிரகாசமடைதல்.

**காம்போரா:** பார்க்கும் வஸ்துக்கள் அதிக ப்ரகாசமாகவும் அவைகளில் கரும்புள்ளிகள் இருப்பதாகவும் தோன்றுதல்.

**கார்பன் ஸல்ப் :** சமீபத் திருஷ்டி. மங்கிய பார்வை, பார்வை கெடுதல், நிறங்களின் வித்தியாசங்களை அறிய முடியாமை. இரட்டைப் பார்வை. அழற்சிக்குப்பின் பார்வை நரம்புகளின் சக்தி குறைதல்.

**கார்போ வெஜி :** கண்களின் முன் கரும்புள்ளிகள் மிதப்பது போலிருத்தல்.

**காலீ ஐயோடேட்டம் :** பார்வை மங்குதல்

**காலீ கார்ப் :** கண்களுக்கு முன் வலை போட்டிருப்பது போலிருத்தல். கரும்புள்ளிகள். பார்வை பலவீனம், அமித போகத்தால் பார்வை குறைதல்.

**காலீ க்ளோரிகம் :** அதிக முக வீக்கத்தால் பார்க்க முடியாமை.

**காலீ பாஸ் .** பார்வைக் குறைவு. கிரகிக்கும் தன்மைக் குறைவு.

**காலீ பைக்ரோமிகம் :** தலைவலி வருமுன் கண் பார்வை மங்குதல். வெளிச்சத்தில் கூச்சம்.

**கால்மியா :** பார்வை கெடுதல்.

**காஸ்டிகம் :** கரும்புள்ளி தோன்றுதல். பூச்சி பறத்தல்போல், பார்வை கெடுதல், கண்களின் முன் பாகத்தில் திரையிருக்கும் உணர்ச்சி.

**குப்ரம் மெடாலிகம் :** குத்திட்ட பார்வை.

**கோல்சிகம் :** வெளிச்சத்தில் சிறிது கூச்சம்.

**கோனியம் :** வெளிச்சத்தைப் பார்க்கவியலாமை. மங்கிய பார்வை,

**க்ராபைடிஸ் :** சூரிய வெளிச்சத்தைத் தவிர மற்ற செயற்கையான வெளிச்சங்களைப் பார்க்க முடியாமை.

**க்ளோனுயின் :** அரைப் பார்வை, குனிந்தால் கண்களின் முன் கரும்புள்ளிகள் தோன்றுதல், அசைந்தாலும் திறந்த வெளியில் நடந்தாலும் இவ்விதக் கரும்புள்ளிகள் தோன்றுதல்.

சின்னியம் ஆர்ஸனிகம்: வெளிச்சத்தில் அதிகக் கூச்சம், அப்போது சூடான கண்ணீர்வருதல்.

சைனு: கரும் புள்ளிகள், பலவித வர்ணங்கள் தோன்றுதல். ரத்த சோகை உள்ளவர்கட்கு இருட்டில் கண் தெரியாமை, கண்களில் கூச்சம்.

டபாகம்: வலியிருக்கும் தோற்றம், வஸ்துக்கள் இரண்டாகத் தென்படல்.

டிஜீடாலிஸ்: வஸ்துக்கள் மஞ்சளாகவும் பச்சையாகவும் தோன்றுதல்.

தேரிடியன்: கண்களுக்கு முன் பளிச் பளிச்சென்று மின்னுதல், வெளிச்சத்தில் கண் கூசுதல்.

நக்ஸ் மாஸ்சாடா: வஸ்துக்கள் மிகப் பெரியவையாக அல்லது மிகச் சிறியவையாக அல்லது வெகு தூரத்தில் இருப்பவை போல் தோன்றுதல்.

நக்ஸ்வாமிகா: காலையில் கண் கூச்சம், அதிகமான ஆகாரம் உட்கொண்டால் கண் பார்வை மங்குதல்.

நேட்ரம் ஆர்ஸனிகம்: மங்கிய பார்வை வஸ்துக்கள் கறுப்பாயிருப்பதுபோன்ற தோற்றம், வெளிச்சத்தில் கண் கூச்சம், எல்லாக் கண் உபாதிகளும் காலை நேரங்களில் அதிகமாயிருத்தல், படித்தால் அதிசீக்கிரத்தில் கண்கள் தளர்ச்சியடைதல்.

நேட்ரம் கார்ப்: எழுதிக்கொண்டேயிருக்கும்போது கண்களின் முன் கரும் புள்ளிகள் தோன்றுதல், மந்தமான பார்வை. அடிக்கடி கண்களைத் துடைக்கவேண்டி வருதல், சிறிய எழுத்துக்களைப் படிக்க முடியாமை, வெளிச்சத்தில் கண் கூச்சம்.

நேட்ரம் மூரியாடிகம்: பலஹீனம். படிக்கும்போது எழுத்துக்கள் ஒரே கோடாக விருப்பதுபோன்ற தோற்றம், கூர்ந்து பார்த்தால் கண்களில் வலி, பார்க்கும் வஸ்துக்கள் இரண்டாகத் தென்படல் அல்லது பார்க்கப்படும் வஸ்துக்களின் ஒரு பாதியே தென்படல், கண்களை மறைக்குந் தலைவலி.

**நேட்ரம் ஸல்ப் :** பார்வை மங்குதல், தலைவலியுடன் கண் கூச்சம், மாலைகளில் முக்கியமாய்ப் படிக்கும்போது கண்களில் இறுக்க உணர்ச்சி.

**நேட்ரம் ஸாலி :** பார்க்கும் வஸ்துக்கள் சுழல்வதுபோலிருத்தல்.

**பல்ஸடில்லா :** வெளிச்சத்தில் கூச்சம். மாதவிடாய்க்கு முன் கண்கள் இருட்டுதல் கண்களுக்கு முன் திரையிட்டு மறைப்பதுபோலிருத்தல். இது கண்களைத் துடைப்பதனால் சமனம். மாதவிடாய் சரிவர வெளி வராமையால் சிறு பெண்களுக்கேற்படும் பார்வை மங்கல். கண்பார்வை மங்குதலும் மயக்கமும். குழந்தைகள் அடிக்கடி கண்களைத் துடைத்துக்கொள்ளுதல்.

**பாரிடா கார்ப் :** வயோதிகர்கட்கேற்படும் மங்கிய பார்வை, இருட்டில் கண்களுச்கு முன் பொறிகள் தோன்றுதல். வெளிச்சத்தைப் பார்க்க சகிக்காமை. மூடுபனியில் பார்ப்பதுபோன்ற மங்கிய பார்வை.

**பாஸ்பரஸ் :** எழுத்துக்கள் சிவப்பாகவிருப்பதுபோல் தென்படல். படிக்கும்போது கண்களுக்கெதிரில் கரும்புள்ளிகள் தென்படல். அதிகபிரகாசமான வெளிச்சத்தையோ விளக்கையோ பார்த்தால் இது அதிகமாதல் சமீபத்ருஷ்டி, தான் பார்க்கும் வஸ்துக்களைத் துணியால் மறைத்திருப்பதுபோலிருத்தல். மங்கிய பார்வை. கண் நரம்புகள் சக்தியிழந்திருத்தல்.

**புபோ :** பளபளப்பான பொருள்களைப் பார்த்தால் கூச்சம்.

**பெட்ரோலியம் :** மங்கின பார்வை.

**பெர்ரம் மெட்டாலிகம் :** கண்களின் முன் கறுப்பாகத் தெரிதல், இருட்டில் கண்கள் நன்ருகத் தெரிதல்.

**பெல்லடோன்னு :** தான் பிசாசு பூதம் முதலியவைகளைப் பார்ப்பதுபோலவும், நாய்கள், பலவித பூச்சிகள் முதலியவை தன்னை நோக்கி வருவது போலவும் தோன்றுதல். பிரகாசமான பொறிகள் தோன்றுதல். வெளிச்சத்தில் கூச்சம்

**பைரோஜினியம்:** ஏராளமான கைகளும் கால்களும் தன்னைச் சுற்றியிருப்பதுபோன்ற தோற்றம். தலை படுக்கையிலிருப்பது போலவும் கைகால்களெல்லாம் சிதறிக்கிடப்பது போலவும், பாப்டீஷியாவில் உள்ளதுபோல், ஆனால் அதைவிட அதிகத் தோற்றம். விழித்துக் கொண்டிருக்கும் போதே கனவு காணுதல், தன் படுக்கையில் இதரர்களும் தன்னுடன் படுத்திருப்பதாக ப்ரமை.

**போராக்ஸ்:** மாலையில் பார்வை மந்தம். (இடது கண்)

**ப்ளம்பம்:** மயக்கமேற்பட்டதுங் கண் தெரியாமை.

**ப்ளாட்டினு:** பார்க்கும் வஸ்துக்கள் மிகச்சிறியவையாகத் தோற்றுதல்.

**மங்கானம்,** சமீப பார்வை மட்டும் தெரிதல் அதிகப் பிரகாசத்தைப் பார்த்தால் எரிச்சலும் உலர்ந்த உணர்ச்சியும். தைத்தாலும் சிறிய எழுத்துக்களைப் படித்தாலும் வலி.

**மெக்னீஷியா கார்பானிகா:** கரும்புள்ளிகள் தோன்றுதல்

**மெர்கூரியஸ் ஸொலுபுலிஸ்:** கரும்புள்ளிகள் தோன்றுதல், பார்வை மங்குதல், சில விநாடிகட்குப்பார்வை தெரியாதிருத்தல் உஷ்ணமான விடங்களிலும் நெருப்பின் சமீபத்திலும் திரையிட்டு மறைத்தது போல பார்வை மங்குதல்,

**மேனியாந்தஸ்:** (ஜுரத்தில்) பார்வை மந்தம் திரையிட்டு மறைத்தது போலிருத்தல்.

**யூபடோரியம் பர்போலி:** வெளிச்சத்தைப் பார்க்க முடியாமை.

**யூபரேஷியா:** வெளிச்சத்தைக் காணமுடியாமை, இருட்டறையில் உபாதி சமனம்.

**ருடா:** விளக்கைப் பார்த்தால் அதைச் சுற்றி பச்சைநிற வளையந் தெரிதல்.

**ரோடோடெண்ட்ரன்:** படிக்கும்போதும் எழுதும்போதும் மங்கின பார்வை.

**லாக்டிப்ளோரேடம்:** தெறிக்கும் தலைவலி, குமட்டல், வாந்தியுடன் மங்கிய பார்வை, கண் கூச்சம்.

**லாக்பேல்:** சமீபத்தில் பாம்பு வரும் தோற்றம்.

**லாச்சஸிஸ்:** மந்தமான பார்வை, பார்க்கப்படும் பொருள் ஆடுதல், கரும்புள்ளி, பிரகாசத்தைப் பார்த்தால் அதிகக் கூச்சம், டைபாய்டில் பூதம் பிசாசுகளைப் பார்க்கும் ப்ரமை.

**லாரோஸிராஸஸ்:** திரையிட்டதுபோல் மந்தமான பார்வை எதிரிலுள்ள வஸ்துக்கள் பெரிதாகத் தெரிதல், விழித்தபடியேயிருத்தல்.

**லீதியம் கார்ப்:** கறும்புள்ளிகள், சூரிய வெளிச்சத்தைப் பார்த்தால் கண் தெரியாமை. படித்தபின் நொந்த வலி. வஸ்துக்களின் இடது பாகம் மாத்திரம் தெரிதல்.

**லில்லியம் டிக்ரினம்:** மங்கிய பார்வை (கருப்பை கீழிரங்கியிருதல். மந்த நெற்றித் தலைவலியுடன்)

**லைகோபோடியம்:** வஸ்துக்களின் இடது பக்கம் மட்டும் தெரிதல். இரவில் கண் தெரியாமை, கண்கூச்சம்.

**வலேரியானு:** மின்னல் வெளிச்சம் போல் தோன்றுதல். கூர்மையான பார்வை. பயங்கரமாக பிசாசு போல் பார்த்தல்.

**ஜெல்ஸிமியம்:** மண்டைக்குத்தல் வருமுன் பார்வை தெரியாமை. வந்தபின் பார்வை தெரிதல், மந்தமான பார்வை.

**ஸபடில்லா:** பார்க்கப்படும் வஸ்துக்கள் இருண்டு விடுதல், உட்கார்ந்துவிட்டு எழுந்திருக்கும்போதும் திறந்த வெளிக் காற்றிலும் வஸ்துக்கள் சுற்றும் உணர்ச்சி.

**ஸரஸபரில்லா:** மூடுபனியைப் பார்ப்பதுபோன்ற பார்வை. இது இந்திரிய ஸ்கலிதம் ஏற்பட்டபின் அதிகமாதல்.

**ஸல்பர்:** கூச்சம், வெளிச்சம் பார்க்க முடியாமை, பசியில் பல கோடுகள் கரும்புள்ளிகள் தோன்றுதல், குட்டைப்பார்வை, ஆற்றைக்கடக்கும்போது கண் பார்வை மறைந்துவிடுதல்.

**ஸிகூடா விரோஸா:** வஸ்துக்கள் இரட்டையாகத் தெரிதல், இருட்டியது போல் தோற்றுதல்.

**ஸிங்கம் மெடாலிகம்:** பிரகாசத்தில் கூச்சம்.

**ஸிங்கம் ஸல்ப்:** மங்கிய பார்வை, பிரகாசத்தில் கூச்சம்.

**ஸிபிலினம்:** பார்வை நரம்புக் கோளாறுகள், குட்டையான பார்வை, கூச்சம்.

**ஸிமிகா:** சூரிய வெளிச்சம் பார்க்கமுடியாமை, ஒரு எழுத்துடன் மற்ருேரெழுத்து மோதும் உணர்ச்சி.

**ஸிகேல்:** கூச்சம், வஸ்துக்கள் இரண்டாகவும், மூன்ருகவும் தெரிதல், வயோதிகத்தில் கண் பார்வை மந்தம், விழித்த கண் விழித்தபடி பயங்கரமாகப் பார்த்தல்.

**ஸீனு:** கருமணி விரிதல். படிக்கும்போது பார்வை இருளுதல். கசக்கிய பின் நல்ல பார்வை வர்ணங்கள் சரியாகத் தெரியாமை.

**ஸெனகா:** தலையைப் பின்புறம் வளைத்துப் பார்த்தால்தான் சரியான பார்வை தெரியும்

**ஸைக்ளமென்:** தூங்கி விழித்ததும் பூச்சி பறப்பதுபோலிருத்தல். மந்தமான பார்வை, மஞ்சள் நிறம், பச்சையும் மஞ்சள் நிறமும் மாறி மாறித் தோன்றுதல், வஸ்துக்கள் தன்னைச் சுற்றி வருவதுபோல் தோற்றம் அல்லது ஊசலாடுவது போலிருத்தல் திறந்த வெளிக்காற்றில் அதிகம். அறைகளில் உட்கார்ந்திருந்தால் சமனம்.

**ஸ்ட்ரமோனியம்:** பார்க்கும் சக்தி முழுவதும் இல்லாமை. இரட்டைப் பார்வை, சிறிய பொருளெல்லாம் மிகப் பெரிதாகத் தோன்றுதல் வெளிச்சத்தைப் பார்க்கமுடியாமை.

**ஸ்பாஞ்சியா:** இரட்டைப் பார்வை.

**ஹயாஸ்யாமஸ்:** வஸ்துக்கள் இரட்டையாகத் தெரிதல். பெரியவையாகத் தெரிதல், இரவில் கண் தெரியாமை. நெடும் பார்வை.

**ஷீபர் ஸல்பர்:** கூச்சம்.

**ஹெல்லிபோரஸ்:** கண் திறந்தபடியேயிருத்தல், பேந்த பேந்த விழித்தல். சிசுக்களுக்குக் கண்களிருந்தும் பார்க்க முடியாத நிலைமை.

# மூக்கு

**அகேரிகஸ்:** பனியால் உண்டானது போன்ற சிவப்பு. அடிக்கடி தும்முதல், க்ஷயரோகிகளின் நீடித்த ஜல தோஷம், பொருக்குத்தட்டுதல். வரட்சி.

**அகோனைட்:** வரண்ட குளிர் காற்றால் ஏற்பட்ட உபாதிகள் நீர் வடிதல். அழுத்தி சிந்துதல். ரத்தங் கொட்டுதல்.

**அக்னஸ் காஸ்டஸ்:** ஏதோ வாசனையடிப்பது போலிருத்தல். இடது கன்னத்திலிருந்து மூக்கின்மேல்புறம் பரவும் அக்கி.

**அபிஸ் மெல்லிபிகா:** வீக்கம், சிவப்பு, நீர்ச்சுரப்பு, கொப்புளங்கள் குளிர்ச்சியால் சமனம், கெட்டியான வெண்மையான வஸ்து வெளியாதல்.

**அப்ரோடனம்:** மூக்கிலிருந்து ரத்தங்கொட்டுதல்,

**அமோனியா கார்ப்:** ரத்த மயமாக வெளிவருதல். முகம், கை கழுவினால் மூக்கில் ரத்தங் கொட்டுதல், இரவில் மூக்கால் மூச்சுவிட முடியாமை, குனிந்தால், உண்டபின் ரத்தங் கொட்டுதல்.

**அமோனியம் மூரியாடிகம்:** முகரும் சக்தியிழத்தல், நீர் வடிதல், அரிப்பு, இடது மூக்கில் ரத்தம் வருதல், அடைப்பு, நீர் வடிதல் உதடுகளை புண்ணாக்கும் நீர்.

**அம்ப்ரா க்ரிஸியா:** காலையில் எழுந்ததும் ரத்தங் கொட்டுதல். அதிகம் காய்ந்திருத்தல். மூக்கடைப்பு உலர்தல், வலி, நீடித்த பூந்தசையை அரிக்கும் உபாதிகள். வரண்ட நீர் வடிதல், மூக்கு சிந்துவதால் தலை உபாதி அதிகம்.

**அயிலாந்தஸ்:** மூகரும் சக்தியிழத்தல், அதிகமான தண்ணீர் போன்ற பதார்த்தம் வெளியாதல், அல்லது ரத்தம் போன்ற வஸ்து வெளியாதல், மூக்கடைப்பு.

**அர்ஜண்டம் மெடாலிகம்:** எலும்புகள் கட்டையாதல், உருகுதல், காலையில் அடிக்கடி தும்மல், கடுமையான ஏராள நீர் ஒழுகுதல், மூக்கில் ஊறும் உணர்ச்சி, பிறகு ரத்தம் வருதல், நாற்ற சுவாசம்.

**அலுமன்:** மூக்கில் புற்று

**அலுமினு:** சிவத்தல், நுனியில் வெடித்தல், தும்மலுடன் ஏராளமான நீர் மூக்கின் ஒரு துவாரத்திலிருந்து வெளியாதலும், மற்ருெரு துவாரம் அடைத்திருத்தலும், சொரியுடன் நீடித்த ஜலதோஷம் ரணமாயிருத்தல், கெட்டியான மஞ்சள் நிறச் சளி வெளியாதல், மூக்கில் வீக்கம், சிவப்பு, மாலையில் அதிக வலி, சீக்கிரத்தில் ஜலதோஷம் பிடித்தல்.

**அல்லியம் ஸீபா:** ஏராளமான நீர் முதலில் இடது மூக்கிலிருந்தும் பிறகு வலது மூக்கிலிருந்தும் வெளியாதல், காரமான நீர் வெளியாவதுடன் தும்மல் ஏற்படுதல், துடைத்தால் அதிகமாதல், வீட்டிற்குள் நுழையும்போது நீர் வடிய ஆரம்பித்தல், ஏராளமான ஜலதோஷம், தலைவலி, நீருள்ள மூக்கு, இருமல், சூடு, தாகம், கைகளில் நடுக்கம், இரவிலும் வீட்டிலும் அதிகம். திறந்த வெளியில் சமனம்.

**அனகார்டியம் ஓரியண்டேல்:** எங்கே போனுலும் ஒரே நாற்றமாக மூக்குக்கு உணர்ச்சி.

**அஸபோட்டிடா:** மூக்கின் எலும்புகள் உருக்குலைதல்.

**ஆண்டிமோனியம் க்ருடம்:** இரவிலும் அதிக உஷ்ண அறையிலும் மூக்கடைப்பு. ரத்தப் பெருக்கு, மூக்கில் ரணம், வெடிப்பு, பொருக்குத்தட்டுதல், தலைவலி ஆரம்பிக்கும்போது மூக்கிலிருந்து வடியும் நீர் நின்றுவிடுதல்.

**ஆண்டிமோனியம் டார்ட்டாரிகம்:** தும்மல், ஏராள நீர் வடிதல், சில்லிப்பு, முகரும் சக்தி அறவேயொழிதல், ஏராளமாக நீர் வடிந்தபின் மூக்கிலிருந்து ரத்தப்பெருக்கு. மூக்கில் பொறுக்குகள் நிறைதல். மூக்கடைப்பும் நீர் வடிதலும் மாறி மாறி வருதல்.

**ஆரம் ட்ரிபில்லம்:** மூக்கடைப்பு இடது பக்கத்தில் அதிகம். வாயால் மூச்சுவிடவேண்டி வருதல். ஏராள நீர் வடிதல் பிற்பகலில் இடது மூக்கிலிருந்து அதிக நீர் கொட்டுதல். தண்ணீர் குடிக்கும்போது மூக்கில் ஏறி விடுதல். காரமான புண் உண்டாக்குந் தன்மையுள்ள நீர் வடிதல், அடிக்கடி மூக்கு நோண்டுதல்.

**ஆரம் மூரியாடிகம்:** வீக்கத்துடன் சிவப்பு நிறம் (இடது) இடது மூக்கின் ஆழத்தில் குழிப்புண்கள், வரண்ட மஞ்சளான பொறுக்கு. சுவாசம் விட முடியுமென்றாலும் ஏதோ அடைத்திருப்பது போன்ற உணர்ச்சி. தும்மல், மூக்கெலும்புகளில் கிழிக்கும் வலி, நாற்றமுள்ள தண்ணீர் போன்ற காரமான நீர், திறந்தவெளியில் சமனம்.

**ஆரம் மெடாலிகம்:** மூக்கைச் சிந்தும்போது அழுகிய வாசனை. முகரும் சக்தியிழத்தல். மூக்கின் வழியாக மூச்சுவிட முடியாமை. மூக்கில் பொறுக்குகள் மூக்கிலிருந்து வடியும் நீர் நாற்றமாகவும், முட்டையின் வெண் கருபோலுமிருத்தல், அடிக்கடி தும்முதல். மூக்கின் சிறு எலும்புகள் அழுகுதல், மூக்கின் வலப் பக்கத்தெலும்பைத் தொட்டால் வலி. மூக்கு கூர்மையிழந்து சப்பையாதல். மூக்கின் நுனி சிவத்தல் முடிச்சுகளுடனிருத்தல். வீக்கம் மூக்கில் வரட்சி, தலையிலும் மூக்கிலுமுள்ள எலும்புகள் அழுகுதல்.

**ஆர்னிகா மோண்டானு:** அடிபட்டதால் அல்லது முகத்தைக் கழுவினால் ரத்தங்கொட்டுதல் (இக்குறி டைபாயிட் ஜுரத்திலும் கக்குவாயிருமலிலும்)

**ஆர்ஸனிகம் ஆல்பம்:** அதியுணர்ச்சி ஆகாரத்தின் வாசனை சகிக்க முடியாமை. தும்மல், தண்ணீர்போல் காரமாக நீர் வடிதல் திறந்த வெளியில் சமனம். மூக்கில் வீக்கம். மூக்கிலிருந்து மார்புவரை ஜலதோஷம் கட்டியிருத்தல்.

கோபமேற்பட்ட பின்னும் வாந்தியின் பின்னும், மூக்கி லிருந்து ரத்தப் பெருக்கு மூடிச்சுகளுடன் கூடிய வீக்கம். எரிச்சல், திறந்த வெளியில் சமனம், தும்மலால் யாதொரு சௌகர்யமும் ஏற்படாமை.

**ஆர்ஸனிக் ஐயோடைட்:** புண்ணுண்டாக்கும் கடுமையான நீர். (ஆர்ஸனிகம் ஆல்பத்தின் தொண்டைக் குறிகளுடன்)

**ஆலோ ஸெகோட்ரினு:** மூக்கிலிருந்து நீர் வடிய ஆரம்பித்தவுடன் கிறுகிறுப்பு சற்று சமனம்.

**ஆஸிட் அஸடிக்:** ரத்தப்பெருக்கு, அடிக்கடி மூக்கிலிருந்து நீர் வடிதல்.

**ஆஸிட் ஆக்ஸாலிக்:** தும்மல், நீருள்ள ஜலதோஷம், வலது மூக்கு சிவந்து பளபளப்பாகவிருத்தல், கண்பார்வை மறைந்தவுடன் மூக்கிலிருந்து ரத்தப்பெருக்கு.

**ஆஸிட் கார்பாலிக்:** அசாதாரணமாக வாசனையறியும் சக்தி யேற்படுதல் முகம் கறுத்த சிவப்பாகவும், வாயையும் மூக்கையும் சுற்றி வெண்மையான கோடுகள். மூக்கி லிருந்து நாற்றமுள்ள போக்கு, விழுங்க ஆரம்பித்தால் வாயிலிருந்தும் மூக்கிலிருந்தும் எதுக்களிப்பு. திரவ பதார்த்தங்களை விழுங்கியவுடன் அவை மூக்கின் வழியே வெளிவந்து விடுதல். டிப்தீரியாவில் மூக்கையும் வாயை யும் பீடித்தல்.

**ஆஸிட் நைட்ரிக்:** காலையிலும் இரவிலும் ரத்தம் கொட்டுதல். கருத்த, பட்டவிடத்தைப் புண்ணாக்கும், காரமான ரத்தங் கொட்டுதல், தூக்கத்தில் தும்மல்கள், மூக்கடைப்பு, நாற்றமான மஞ்சள் நிறச்சளி, ஸிபிலிஸ் நோயில் நாசியில் எலும்புகள் பாதிக்கப்படுதல், நாசி நுனியில் வெடிப்புகள்.

**ஆஸிட் பென்ஸாயிக்:** எலும்புகளில் வலி.

**ஆஸிட் ப்ளூவாரிக்:** சிவத்தல், வீக்கம், ஏராள தண்ணீர்போல சளி வெளியேறுதல், நொண நொணவென்று மூக்கால் பேசுதல்.

**ஆஸிட் மூரி:** ஜலதோஷம், ரத்தம் வருதல், தண்ணீர்போல் காரமான நீர் அல்லது கெட்டியான மஞ்சள் நிறச் சளி வருதல், சுவாசக் காற்று நாற்றமடித்தல்.

**ஆஸிட் லாக்டிக் :** காலையில் மூக்கிலிருந்து ரத்தம் வருதல்.

**ஆஸிட் ஸல்ப் :** சுவாசிக்கும்போது மூக்கு விரிந்து விரிந்து சுருங்குதல்

**இபிக்காக்உனு :** வாசனையறியும் சக்தியையிழத்தல், குமட்டல், ரத்தப்பெருக்கு, இடைவிடாது தும்மல்.

**எரிகரான் :** ரத்தப் பெருக்கு.

**ஐயோடியம் :** முகரும் சக்தியிழத்தல், நீர் வடிதல், திறந்த வெளிகளில் அதிகரித்தல், குழிப்புண்ணிலிருந்து நாற்ற முள்ள வஸ்து வெளியேறுதல், மூக்கில் வீக்கம் ஏராள மான, மூக்கைப் புண்ணாக்கும், சூடான, நீர் வடிதல், கஷ்ட சுவாசம்.

**கந்தாரிஸ் :** தும்மல், வீக்கம், சிவந்தநிறம், எரிச்சல், மூக்கின் அடிப்பாகத்திலிருந்து கயிறுபோன்ற சளியை வெளியே யிழுத்தல்.

**கல்கேரியா கார்பானிகா :** வலி, புண், கிறுகட்டிகள். தலைவலி யுடன் நீர்போன்ற ஜலதோஷம். கெட்டியான. நாற்ற முள்ள சளி, கொழுத்திருக்கும் குழந்தைகளுக்கு மூக்கி லிருந்து ரத்தங்கொட்டுதல், பருவங்கள் மாறும் சமயங் களிலெல்லாம் ஜலதோஷம் பிடித்தல்.

**கல்கேரியா பாஸ் :** சளி பிடிக்குந்தன்மை, பிற்பகலில் ரத்தப் பெருக்கு குழிப்புண்கள் வீக்கம்.

**கல்கேரியா ப்ளோரிகா :** வரண்ட சளி, கெட்டியான பச்சைநிற முள்ள கம்பி போன்ற சளி வெளியாதல்.

**கல்கேரியா ஸல்ப் :** மூக்கின் எலும்புகள் அழுகுதல், மஞ்சளான சீழ் போன்ற கெட்டியான பதார்த்தம் வெளியாதல். பிடிவாத ஜலதோஷம் முகரும் சக்தியை யிழத்தல்.

**கன்னபிஸ் ஸடைவா :** ரத்தங்கொட்டுதல், வீக்கம், வரட்சி, சூடு.

**காக்டஸ் க்ராண்டிப்ளோரஸ் :** அதிக ரத்தத்திரட்சியினால் ஏராள ரத்தப்பெருக்கு ஆனால் சீக்கிரம் நின்றுவிடுதல்.

**காப்ஸிகம்:** காலையில் படுக்கையில் ரத்தப்பெருக்கு, இருமும் போது ரத்தங்கலந்த சளி வெளிவருதல்

**காமோமில்லா:** எவ்வித வாசனையையும் சீக்கிரமாக உணர்தல். தூக்கமின்மையுடன் ஜலதோஷம்

**காம்போரா:** ஜலதோஷம். நீர்க்கோர்வை, தும்மல், ஜலதோஷத்தின் ஆரம்பத்தில் சில்லிப்பு, ஜலதோஷம் வரும் நிலைமை

**கார்பன் சல்ப்:** சில்லிப்புடன் நீடித்த ஜலதோஷம், மூக்கு நுனி சிவத்தல், காலையிலும் மாலையிலுங் கருத்த ரத்தங் கொட்டுதல் மூக்கடைப்பு, சிறு கொப்புளங்கள். கெட்ட சதை வளர்தல், திறந்த வெளியில் சில்லிப்புடன் ஜலதோஷம், கெட்டியான மஞ்சள்நிறச் சீழ். முகரும் சக்தியதிகரித்தல் அல்லது குறைதல். காரமான கெட்டியான சீழ் போன்ற போக்கு. அடிக்கடி தும்மல்.

**கார்போ அனிமாலிஸ்:** பிரதி காலையிலும் ரத்தப்பெருக்கேற்படுதல், இதற்கு முன் கிறுகிறுப்பு காணுதல். மூக்கு நுனியில் கடினமான நிறமுள்ள கட்டிகள்.

**கார்போ வெஜி:** வெளுத்த முகத்துடன் பிரதி தினமும் ரத்தப் பெருக்கு, மூக்கின் நுனியில் சிவப்பு நிறம் பொறுக்குகள், மூக்குத் துவாரங்களில் அரிப்பு. அசுத்த ரத்தக்குழாய்கள் தடித்துச் சுருட்டிக்கொள்ளுதல், ஈரகப்புள்ள கோடைக் காலங்களில் இருமலுடன் ஜலதோஷம்; அடிக்கடி சிந்த நேரிடல், ஆனால் ஒன்றும் வெளிவராமை சிவந்த மூக்கு

**காலண்டுலா:** ஈர நப்புள்ள பருவங்களில் ஜலதோஷம் பிடித்தல்.

**காலாடியம்:** ஜலதோஷத்துடன் காச உபாதிகள்.

**காலின்ஸோனியோ:** ஜலதோஷம்.

**காலி ஐயோடேட்டம்:** பட்டவிடங்களைப் புண்ணாக்கும் நீர், அடிக்கடி சளிபிடித்துக் கொண்டேயிருத்தல். மூக்கு சிவந்து வீங்கியுமிருத்தல் மூக்கின் எலும்புகள் அழுகிவிடுதல், முகரும் சக்தி குறைந்து விடுதல்.

**காலி கார்ப் :** உஷ்ணமான அறைகளில் மூக்கடைப்பு. கெட்டியான ஆனால் தாராளமாக வழியும் மஞ்சள்நிறச் சளி. நாசித்துவாரங்களில் ரணம், பொறுக்கு. ரத்தங்கலந்த சளி, காலையில் முகம் கழுவும்போது ரத்தப்பெருக்கு.

**காலி பாஸ் :** கெட்ட நாற்றமுள்ள போக்கு, நாற்றமுள்ள சுவாசம்.

**காலி பைக்ரோமிகம் :** மூக்கால் பேசும் குழந்தைகள், முக்கியமாகக் கொழுத்து தொள தொளவென்ற குழந்தைகள், மூக்கின் அடியில் வலி, பார உணர்ச்சி, மூக்கில் சிக்கிய உணர்ச்சி மூக்கினுட்பாகத்தில் குழிப்புண்கள் வட்டமாயிருத்தல், அதிக நாற்றம், கெட்டியான கம்பி போன்ற பசு மஞ்சள் நிறமுள்ள போக்கு பிறகு மூக்கில் ரணம், முகரும் சக்தி யிழத்தல், மூக்கால் சுவாசிக்க முடியாமை. மூக்கடைப்புள்ள ஜலதோஷம், ஏராளமான தண்ணீர் போன்ற போக்கு. கடுமையான தும்மல், அடிக்கடி ஜலதோஷம் பிடித்தல்.

**காலி மூரியாடிகம் :** ஜலதோஷ சம்பந்த உபாதிகள், சளி, கபம், வெண்மையாகவும் கெட்டியாகவுமிருத்தல். மூக்கடைப்புடன் ஜலதோஷம் ரத்தப்பெருக்கு.

**காலி ஸல்ப்:** மஞ்சள் நிறமுங் குழகுழப்புமுள்ள சளி, ஜலதோஷம் முகரும் சக்தி யிழத்தல். மூக்கடைப்பு, குறட்டை வாயால் மூச்சு விடுதல்.

**காஸ்டிகம் :** கொரகொரப்புடன் ஜலதோஷம். பொறுக்குத் தட்டல் புண், பாலுண்ணிகள்.

**குப்ரம் மெடாலிகம் :** மூக்குக்குக் கடுமையாக ரத்தம் செல்லும் உணர்ச்சி.

**கோபைவா :** எரிச்சல்.

**கோல்சிகம்:** முகரும் சக்தி அதிகரித்தல், மாமிச வாசனையால் குமட்டல் உண்டாதல். புதிய முட்டையின் வாசனையால் மயக்கம் உண்டாதல், வாத சரீரிகளுக்கு மூக்கிலிருந்து ரத்தப் பெருக்கு, உணவு சமையல் செய்யும் வாசனை, நோயாளியின் நிலைமையை மோசமாக்கும். மயக்கத்தையும் உண்டாக்கும்.

**கோனியம்:** சுலபமாக ரத்தம் வெளியாதல், அதனால் ரணம், சிறிய கட்டிகள்.

**க்ராபைடிஸ்:** சுவாசக் காற்று மூத்திரம்போல் நாறுதல், மூக்கின்மேல் படைகள். சிந்தியவுடன் வலி, உடபுறத்தில் அதிக வலி. அபரிமித வாசனையுணரும் உணர்ச்சி, புஷ்ப வாசனை சகிக்க முடியாமை. மூக்குத்வாரங்களில் பொருக்குகள், வெகு சீக்கிரத்தில் ஜலதோஷம் பிடித்தல் சில சமயம் மூக்கிலிருந்து ரத்தப்பெருக்கு, மூக்கின்மேல் படைகள்,

**க்ரிஸோட்:** காரமானசளி, நீர்; மெல்லிய பிரகாசமான சிவப்பு ரத்தம் வருதல். கிழவர்களின் நீடித்த மண்டைச் சளி,

**க்ரோடேலஸ் ஹாரிடஸ்:** கடுமையான ரத்தப்பெருக்கு. டைபாய்டு ஜுரத்தில் மூக்கிலிருந்து ரத்தம் கொட்டுதல்.

**க்வாய்கம்:** மூக்கு எலும்புகளில் வலி, வீக்கம், ஏராள நீர் வடிதலுடன் ஜலதோஷம்.

**செலிடோனியம்:** கன்னம், மூக்கு மஞ்சள் நிறமடைதல்,

**செனபோடியம்:** எரிச்சல் எருப்பு கடிப்பது போன்ற வலி, ஜலதோஷம்

**சைனு** ஜலதோஷம் தடைப்பட்ட உபாதிகள். காலையில் ரத்தமும் நீருப் வெளிவரல் அடிக்கடி சிந்துதல் மூக்கில் மட்டும் வியர்வை சிந்தினால் ஒன்றும் வராமை.

**டபாகம்:** வாசனையறியும் நரம்புகளில் சக்திக் குறைவு.

**டல்கமாரா :** வறண்ட ஜலதோஷம், நாசியடைத்தல், கெட்டியான மஞ்சள் நிறச் சளி, ரத்தப் பொருக்குகள் கலந்தநீர் வெளியாதல் குளிர்காற்று நாசியில் பட்டால் மூக்கடைப்பு. இதனால் மூக்கை உஷ்ணமாக வைத்திருக்க விருப்பம்.

**டுக்ரியம் :** சதையடைப்பு, நீடித்த சளி, அடிக்கடி பெரிய கட்டிகள் வெளிவரல், நாற்ற சுவாசம் மூக்கினுள் ஏதோ ஊறுவது போன்ற உணர்ச்சி. கண்களிலிருந்தும் மூக்கிலிருந்தும் நீர் வடிதல். தும்மல் வலது மூக்கு அடைப்பு எவ்வளவுசிந்தினாலும் சரிபடாமை. மூகரும் சக்தியிழத்தல்.

**டெல்லூரியம் :** அதிக ஜலதோஷம்; உப்புக்கரிக்கும் கோழையை அடிக்கடி உமிழ்தல், தொண்டை கம்முதல்.

**ட்யூபர்குலீனம் :** அடிக்கடி சிறிய கொப்புளங்களுடன் சிரங்குகள் வந்து கொண்டே யிருத்தல்.

**ட்ரில்லியம் :** ஓயாமல் ரத்தம் பெருகிக்கொண்டே யிருத்தல்.

**தலப்ஸி புர்ஸா :** ரத்தப் பெருக்கு,

**துஜா :** நீடித்த மண்டைச் சளி, கெட்டியான பச்சைநிறச் சளி சீழும் ரத்தமும் வெளியேறுதல், மூக்கைச் சிந்தினால் பற்களில் வலி, மூக்கின் உட்புறங்களில் ரணம், உலர்ந்திருத்தல், அடிப்பாகத்தில் வலி.

**தெரிடியன் :** கெட்டியான மஞ்சள் நிறமும் நாற்றமும் உள்ள நீர் வெளியாதல்.

**தெரிபிந்த் :** ரத்தங்கொட்டுதல்.

**நக்ஸ்மாஸ்சாடா :** கறுத்த ரத்தம் வெளிப்படல்.

**நக்ஸ்வாமிகா :** இரவு பகல் எப்போதும் சளி கொட்டிக் கொண்டே யிருத்தல், இது உஷ்ண அறைகளில் அதிகம், குளிர்ந்த காற்றில் சமனம். விடியற்காலையில் அதிகத் தும்மல்கள், இரவுகளில் மூக்கடைப்பு, அஜீர்ணத்தாலேற்படும் ஜலதோஷம், மூக்கிலிருந்து வெளியேற்றப்படும் நீர் காரமுள்ளதாகவிருத்தல், ரத்தம் வருதல்.

**நேட்ரம் ஆர்ஸனிகம்:** மூக்கின் அடிப்பாகத்திலும் நெற்றியிலும் அமுக்க உணர்ச்சியுடன் வலி, மூக்கடைப்பு, உள்ளே சுவாசம் இழுக்க முடியும். ஆனால் சுவாசம் வெளியே விடமுடியாமை, நாசியினுள் பொறுக்குகள், வெளிப்படும் சளி மஞ்சள் நிறமாகவும் ரத்தந்தோய்ந்துங் கெட்டியாகவு மிருத்தல், தொண்டையின் அடிப்பாகத்திலிருந்து காறிக் காறிச் சளியை வெளியே கொண்டு வரல், சளியைக் காறி வெளியே கொண்டுவந்தபின் அந்த இடங்கள் பச்சைப் புண்ணாகவிருக்கும் உணர்ச்சி, மூக்கின் பூந்தசைகள் வீங்கியிருத்தல்.

**நேட்ரம் கார்ப்:** ஜலதோஷத்துடன் வாசனையும் ருசியும் அற்றுப் போதல், ஏராளமான நீர் வெளியாதல், அடிக்கடி மூக்கைச் சிந்த நேரிடல், இரவுகளில் மூக்கடைப்பு, மஞ்சள் நிறமுள்ள நாற்றமான மெல்லிய சளி அல்லது கெட்டியான பசுமை கலந்த மஞ்சள் நிறச் சளி, நீடித்த பீனிசம். ஒரு நாசியிலிருந்து நாற்றமுள்ள முளைகள் வெளிவந்துகொண்டே யிருத்தல், நாசியின் அடிப்பாகத் தில் ரணம் மூக்கின் சளி ஏராளமாக வாயின் வழியாக வெளிப்படல், சாப்பிடும்போது நாசியிலிருந்து தண்ணீர் வந்துகொண்டேயிருத்தல், கெட்டியான மஞ்சள் நிறச் சளியுடன் ஜலதோஷம். இரவுகளில் நாசியின் உட்புறங் காய்ந்து அடைத்துப் போதல், மூக்கு சிந்துவதால் தலை யுபாதி சமனம்.

**நேட்ரம் மூரியாடிகம்:** ஜலதோஷம். வாசனையும் ருசியும் அற்று விடுதல், இரவுகளில் இருமும்போது மூக்கிலிருந்து ரத்தம் கொட்டுதல் சடுதியில் சளிப்பிடித்தல், மூக்கடைப்பும் சளியும் மாறிமாறி ஏற்படுதல், தலையில் கம்பளி முதலிய வைகளைக் கட்டிக்கொண்டே யிராவிட்டால் சளிப்பிடித் தல், அடிக்கடி சளிப்பிடித்தல்.

**நேட்ரம் ஸல்ப்:** மாதவிடாய்க் காலத்தில் மூக்கிலிருந்து ரத்தம் வருதல். அடிக்கடி நின்று நின்று மறுபடியும் தோன்று தல், மூக்கு அடைத்து விடுதல் அல்லது பச்சை கலந்த மஞ்சள் நிறச் சளி வெளிப்படல், அடிக்கடி மூக்கைச் சிந்தவேண்டி வருதல். ஏராள சளி மூக்கினுள் அரிப்பு.

**பல்ஸடில்லா:** ஜலதோஷத்துடன் ருசி வாசனை அற்றுப் போதல், மூக்கில் ஏற்படும் நாற்றம் பிறருக்குச் சகிக்க முடியாமை, இரவுகளிலும் மாலையிலும் மூக்கடைப்பு, நாசித் துவாரங்கள் ரணமாகவும் மஞ்சள் நிறச் சளியுடனு மிருத்தல், நீடித்த ஜலதோஷம்.

**பாடியாகா:** ஜலதோஷம், அதிக நீர் வெளியேற்றம், தும்மல், (உபாதி அதிகம் குளிர்ச்சியால். உபாதி சமனம் உஷ்ணத்தால்.)

**பாப்டீஷியா:** நெற்றியிலும் மூக்கின் அடியிலும் வலி.

**பாரிடா கார்ப்:** வரண்டிருத்தல், கெட்டியான மஞ்சள் நிறச் சளி வெளியேறுதல், வீக்கத்துடன் ஜலதோஷம்.

**பாரிடா மூரியாடிகா:** மூக்கும் நடுக்காதும் அழற்சியுற்றிருத்தல், குழந்தைகள் வாயாலேயே மூச்சுவிடுதல், மூக்கினால் பேசுதல், தூக்கத்தில் தும்மல்கள், ஏராளமான மஞ்சள் நிறமான கெட்டியான சளி. கண். மூக்கு. காதுகளிலிருந்து நீர் வடிந்துகொண்டேயிருத்தல்.

**பாரிஸ் குவாட்ரி:** பலவித வாசனை அடிப்பதுபோன்ற பிரமை, மூக்கடைப்பு. அடிமூக்கில் கன உணர்ச்சி.

**பாஸிலினம்:** அடிக்கடி சளி பிடித்தல்.

**பாஸ்பரஸ்:** பகற்காலங்களில் ஏராளமான நீர் வெளிப்படுதல். மாதவிடாய்க்குப் பதிலாக மூக்கிலிருந்து ரத்தம் வெளிப்படல், அடிக்கடி மூக்கைச் சிந்தவேண்டி வருதல், பொருக்குகள் காய்ந்திருத்தல் அல்லது காலையில் பச்சை அல்லது மஞ்சள் நிற ரத்தந் தோய்ந்த ஏராளமான சளி வெளியேற்றப்படுதல், மூக்கினுள் கட்டி போன்ற சதை வளர்ந்து அதிலிருந்து அடிக்கடி ரத்தம் வெளிப்படுதல். மூக்கு வீங்கியும் சிவந்தும் பளபளப்பாகவும் உட்பக்கங் காய்ந்துமிருத்தல்.

**புபோ:** அடிக்கடி மூக்கிலிருந்து ரத்தம் வருதல், இதனால் தலை உபாதி சமனம்.

**பெட்ரோலியம்:** வெடித்தல், ரணம், எரிச்சல், அடிக்கடி சளி பிடித்தல்.

**பெர்பெரீஸ் வல்கேரிஸ்:** உலர்ந்திருத்தல், இடது மூக்கிலிருந்து சளி நிற்காமல் வருதல். மூக்கினுள் பூச்சி ஊறும் உணர்ச்சி.

**பெர்ரம் மெடாலிகம்:** ஜலதோஷத்தில் அடிக்கடி மூக்கினுள் கட்டியான ரத்தம் சேர்ந்திருத்தல். காலையில் குனியும் போது மூக்கிலிருந்து ரத்தம் வருதல்.

**பெல்லடோன்னு:** உலருதல் நெற்றி வலி, மூக்கிலிருந்து ரத்தம் வருதல். மூக்கு நுனி திடீரென்று சிவத்தல் எரிச்சல். அமுக்கப்பட்ட ஜலதோஷம், அதனால் தாங்கமுடியாத தலைவலி, சிந்தினால் சளியுடன் ரத்தம் வருதல்.

**பைடோலக்கா:** எலும்புகள் அழுகுதல் நீடித்த சளி வண்டிப் பிரயாணத்தில் அதிக மூக்கடைப்பு, ஜலதோஷம், புற்று. ஒரு மூக்கில் மட்டும் சளி கொட்டிக்கொண்டேயிருத்தல்.

**பைரோஜினியம்:** விரிந்து விரிந்து சுருங்குதல்.

**போராக்ஸ்:** பொறுக்கு. வெள்ளை அல்லது பச்சைநிற நீர் வருதல்.

**போவிஸ்டா:** எரிச்சல், காலையில் மூக்கு சிந்தினால் ரத்தம் வருதல்.

**ப்ரையோனியா:** மாதவிடாய் ஏற்படவேண்டிய காலங்களில் மாதவிடாய்க்கு பதிலாக மூக்கிலிருந்து ரத்தங் கொட்டுதல். மூக்கிலிருந்து ரத்தம் கொட்டினால் தலைவலி சமனம். நெற்றியில் வலியுடன் ஜலதோஷம். மூக்கின் நுனியில் வீக்கம், தொட்டால் ரணமாகிவிடுமோ என்ற பயம்.

**ப்ரோமியம்:** மூக்குக்குள் ரணம். ஜலதோஷம், வலது மூக்கு அடைபடல், மூக்கின் அடிப்பாகத்தில் கனம், ரத்தம் வெளிப்பட்டால் மார்பின் கனம் குறைதல்.

**ப்ளாட்டினு:** அடிப்பாகத்தில் வலி.

**ப்ளாண்டகோ:** திடீரென்று நீர் போன்ற மஞ்சள் நிற சளி.

**மங்கானம்:** அடைப்பு அல்லது கெட்டியான பச்சைநிறச் சளி (மாலையிலும் மழைக் காலங்களிலும் அதிகம்)

**மில்லிபோலியம் :** ரத்தப் பெருக்கு.

**மெக்னீஷியா கார்ப் :** காலையில் வலது மூக்கில் ரத்தம் வருதல். தூக்கத்தில் மூக்கடைப்பு அதனுல் எழுந்திருக்க வேண்டி வருதல்.

**மெக்னீஷியா மூரியாடிகா :** முகரும் சக்தி குறைவு. தண்ணீர் போல் காரமானநீர் வெளி வருதல். இரவில் மூக்கடைப்பு. மூக்கினுள் ரணம். வலி, எரிச்சல்.

**மெர்க்குரியஸ் கரோஸிவஸ் :** உட்கொண்ட ஆகாரம் மூக்கின் வழியாக வெளியே வருதல். அதிகமாக வழியும் சளி. அடிக்கடி ரத்தம் வருதல்.

**மெர்குரியஸ் சொலுபுலிஸ் :** இருமும் போதும் தூங்கும் போதும் மூக்கிலிருந்து ரத்தம் கம்பியாக வருதல், தும்மும்போது ஏராள காரமுள்ள சளி வெளி வருதல், மூக்கினுள் ரணம் மூக்கெலும்புகள் பாதிக்கப்படுதல்.

**மெலிலோடஸ் :** தலையில் அதிக ரத்தம் ஏறியதால் மூக்கு சிவத்தல். பிய்த்துக்கொண்டு வெளியேறிவிடும்போலிருத் தல். மூக்கிலிருந்து ரத்தம் வருதல்.

**யூபரேஷியா :** மூக்கிலிருந்து காரமற்ற நீர் அதிகமாக வருதல். (இருமல்; கப வெளியேற்றத்துடன்) (ஜலதோஷத் தும்மல், படுத்தால் இருமல் சமனம் )

**யூரேனியம் நைட்ரிகம் :** சீழ் போன்ற காரமான சளி வெளிப் படல்.

**ரஸ்டாக்ஸ் :** முகரும் சக்தி குறைதல், இரவில், காலையில், குனிந் தால், மலம் கழிக்கும்போது மூக்கிலிருந்து ரத்தம் வருதல். மூக்கு நுனி சிவத்தல் வலி, வீக்கம் துர்நாற்ற சுவாசம் மூக்கு நீண்டு கூராக இருத்தல்.

**ரானங்குலஸ் :** சிவத்தல், அழற்சி, வீக்கம்.

**ரூமக்ஸ் :** ரத்தம் வருதல், தும்மல், அடைப்பு, அருவருப்பு, வறண்ட உணர்ச்சி, மாலை இரவில் அதிகமான நீர் வெளி யேற்றலும் தும்மலும்.

**லாக்கஸிஸ்:** சிந்தினால் ரத்தம் வருதல், எலும்பு வீக்கம், வலி, மாதவிடாய்க்கு பதில் கருத்த ரத்தம் மூக்கிலிருந்து வருதல்.

**லைகோபோடியம்:** வீக்கம் ஜலதோஷம் காரமுள்ள நீர் முதலில் வலது மூக்கில் அரிப்பெடுக்கும் சளி ஆரம்பித்தல், மூக்கடைப்பில் வாயால் மூச்சுவிடல், மூச்சு விடும்போது மூக்கின் இரு பக்கங்களும் விரிந்து விரிந்து சுருங்குதல், உட்கொள்ளும் ஆகாரங்களும் பானங்களும் மூக்கின் வழியாக வெளியே வருதல்

**வெராட்ரம் ஆல்பம்:** நீண்டு நுனி சில்லிடல்.

**ஜஸ்டீஷியா ஆடாதொடா:** அடிக்கடி தும்மல்.

**ஜெல்ஸிமியம்:** மூக்கின் நுனிகளில் ரணம், வலி. கோடையில் ஜலதோஷம்.

**ஸபடில்லா:** எரிச்சல், விடாத்தும்மல், முதலில் வெண்மையான சளி, பிறகு கெட்டியான மஞ்சள்நிறச் சளி, அதிகமாக வழியும் ஜலதோஷம், ஜலதோஷ சுரம், பூக்களை முகர்ந்தால் அதிக ஜலதோஷம், மூக்கினுள் அரித்தல்.

**ஸல்பர்:** சகிக்கமுடியாத நாற்றம், தொட்டால் வலி, மாலை 3 மணிக்கு தலைச்சுற்றல், ரத்தம் வருதல், குழந்தைகள் மூக்குப் பொருக்குகளை உண்ணல், நாற்றமுள்ள தண்ணீர் போன்ற பட்ட இடத்தை புண்ணாக்கும் சளி, திறந்த வெளிக்காற்றிலும் வீட்டிற்குள்ளும் மூக்கடைப்பு, ரத்தம் கசியும் ரணம், நீடித்த ஒரு மூக்கடைப்பு, மூக்கினுள் ரணமாக இருத்தல்

**ஸாங்குனேரியா:** சதை வளர்ச்சி, அதிகச் சளி, முகரும் சக்தி குறைவு, அடிக்கடி தும்மல், வலதுபுறம் அதிகம் காரமான சளி, மூக்கு வெந்திருத்தல், உலருதல், ரத்தம் வருதல்.

**ஸாங்குநேரியா நைட்ரிகா:** நீர்ச்சளி, எரிச்சல், வலி, மூக்கடைப்பு, தும்மல்.

**ஸிகூடா விரோஸா:** தொட்டால் வலி, ரத்தம் வருதல், மஞ்சள் நிறச் சளி.

**ஸிபிலீனம் :** எலும்பு உளுத்துப் போதல், நாற்றமும் பச்சை நிறமும் உள்ள சளி.

**ஸிலிகா :** நுனி அரிப்பு வறண்ட கெட்டியான பொருக்குகள், எடுத்தால் ரத்தம் வருதல், மூக்கின் எலும்பு வலி, காலையில் தூங்கி யெழுந்ததும் தும்மல், வாசனை அறிய முடியாமை. மூக்கடைப்பு, ஆகாரத்தை விழுங்கும்போது மூக்கால் வெளிவருதல். சளி பிடித்தல்,

**ஸினேபிஸ் நைக்ரா :** ஜலதோஷம், தும்மல், அரிப்பு. மாலையில் இடது மூக்கடைபடல்.

**ஸிஸ்டஸ் :** நீடித்த கெட்டியான சளி, சில்லிட்ட உணர்ச்சி, அடிக்கடி தும்மல்கள், ஜலதோஷமின்மை.

**ஸீகேல் கார்னுடம் :** இடைவிடாத கருத்த ரத்தம் ஒழுகுதல், மூக்கடைப்பு, ஆனல் நீர் வடிதல், ரத்தம் வருதல்,

**ஸீனு :** சிசு மூக்கை தலையணையில் தேய்த்தல், ரத்தம் வரும் வரை நோண்டுதல். சொரிதல்.

**ஸெபியா :** மூக்கின்மேல் மஞ்சள்நிற சேணம் போட்டது போலிருத்தல். சதை வளர்ச்சி, கெட்டியான பச்சைநிற சளி, இடது மூக்கு வரட்சி, முகரும் சக்தி குறைவு. மூக்கில் துர்நாற்றமடித்தல், கர்ப்ப காலத்தில் மூக்கிலிருந்து ரத்தம் வருதல்,

**ஸெலீனியம் :** சிறு காரணங்களாலும் சளிபிடித்தல். ஜலதோஷம் பிடித்தபின் வயிற்றுப் போக்கு ஏற்பட்டு நிற்றல்,

**ஸெனகா :** வரட்சி, தும்மல், அதிகத் தண்ணீர்போன்ற கோழை. ஜலதோஷம்,

**ஸெனஸியோ :** அடைப்பு, எரிச்சல், தும்மல், அதிகச்சளி.

**ஸைக்ளமென் :** வாசனையை முகரும் சக்திக்குறைவு. அடிக்கடி தும்மல், ஜலதோஷத்தில் மூக்கெலும்பு வலி.

**ஸோரினம் :** வாசனையை அறிய சக்தியின்மை. புண் நாற்ற மடித்தல், மூக்கடைப்பு, வறண்ட சளி, இருமல் (நாற்றம், மஞ்சள், ஒட்டும் சளி) சுவாசக் காற்று நாற்றடித்தல்.

**ஸ்க்வில்லா :** அடிக்கடி தேய்த்தல், தும்மல், (இருமலுடன் காலையில் காரமான நீர் வெளிப்படல்)

**ஸ்டாபிஸாக்ரியா :** மூக்கு நீண்டிருத்தல்.

**ஸ்டிக்டா :** மூக்கின் அடிப்பாகத்தில் வலி, அமுக்கும் உணர்ச்சி, வலது மூக்கில் குறுகுறுப்பு, முகரமுடியாமை, அடிக்கடி மூக்கு சிந்துதல், ஒன்றும் வராத வறண்ட சளி மூக்கின் உட்புறம் வலி, வரட்சி, சளி வெளி வந்தால் ஜலதோஷம் சமனம், உலர்ந்த பொருக்குகள் வெளிவர சிரமப்படுதல், நீடித்த மண்டைச் சளி, ஜலதோஷமும், தலைவலியும்.

**ஸ்ட்ரில்லிங்க்யா :** பட்டால் புண்ணை உண்டாக்கும் மண்டைச் சளி.

**ஸ்பாஞ்ஜியா:** சில்லென்றிருத்தல், நீண்டிருத்தல். மூக்கு சிந்திய பின் ரத்தம் வழிதல், மூக்கடைப்பு, (கக்குவாய் இருமலில் பார்க்க).

**ஹமாமெலிஸ் :** தலையில் ரத்தத் தேக்கம். மூக்கிலிருந்து ரத்தம் வந்தால் சமனம் அமுக்கும் உணர்ச்சி, திரவமான கருப்பு ரத்தம் கட்டியாக இல்லாமல் ஒழுகுதல்.

**ஹீபர் ஸல்பர் :** குளிர்காற்றுப் பட்டால் ஜலதோஷம், எலும்பில் வலி பீனிசம்.

**ஹெல்லிபோரஸ் :** கருப்பு மைபோல் மூக்கிலிருந்து வழிதல்.

**ஹைட்ராஸ்டிஸ் :** கெட்டியான பிசுக்கென்றிருக்கும் சளி. தண்ணீர் போன்ற காரமான சளி எப்போதும் மூக்கைச் சிந்திக்கொண்டேயிருத்தல்.

# வாய்

**அகோனைட் :** வாய் ஒரு புறமாகக் கோணுதல், மேல் வாயில் மிருதுவான வீக்கம். ரத்தம் உமிழ்தல். வாய் நிறைய ரத்தம் அல்லது பூந்தசைகளில் சிவந்த பிரகாசமான ரத்தம் தோய்ந்திருத்தல்.

**அபிஸிந்தியம் :** வாயில் நுரையுடன் வலிப்பு.

**அபிஸ் மெல்லிபிகா :** வரட்சி, துர்நாற்றம்.

**அமோனியா கார்ப் :** வாயைச் சுற்றி அதிகச் சிறு கொப்புளங்கள், கீழ் உதட்டில் வெடிப்பு, எரிச்சல், ரத்தம் வெளியாதல். மேலுதட்டில் வெடிப்பதுபோல் வலி. உதடுகள் நீலநிறமடைதல். கடைவாயில் பிடிப்பு வலி. உதடுகளின் சந்துகளைப் புண்ணுக்கும் உமிழ் நீர், வீங்கிய உணர்ச்சி, ஒட்டுந்தன்மையுள்ள உமிழ்நீர்.

**அமோனியா மூரி :** உதடுகள் நெருப்புப்போல் எரிதல், காய்தல், வெடித்தல், நக்கிக்கொள்ளல், வாய் எரிச்சல்

**அம்ப்ரா க்ரிஸியா :** காலையில் துர்நாற்றம், ரணம். வெடிப்பு, காலையில் உதடு காய்தல், மறத்தல், மேல் வாயிலிருந்து இடது காது வரை கிழிக்கும் வலி.

**அயிலாந்தஸ் :** நாற்றம்.

**அர்ஜண்டம் நைட்ரிகம் :** பேசும்போது உதடுகளில் நடுக்கம், வாயில் புளித்த ருசி.

**அர்ஜண்டம் மெடாலிகம் :** வாய் உலர்ந்திருத்தல்.

**அலுமினு :** வாயில் குழிப்புண்கள். ஏராள உமிழ்நீர் உற்பத்தி. வரட்சி. மேலுதட்டில் சிறு கொப்புளங்கள்.

**ஆண்டிமோனியம் க்ருடம் :** வறண்ட உதடுகளுடன் அதிக தாகம். வாயின் ஓரங்களில் வெடிப்பு.

**ஆண்டிமோனியம் டார்ட்டாரிகம் :** உதடுகள் காய்ந்தும் சொற சொறப்பாகவும் வெளுத்தும் சுருங்கியுமிருத்தல், உதடுகளின் மூலைகளில் வெடிப்பு, வாய்ப் புண், விழுங்க முடியாமை, வாயிலும் நாக்கிலும் அம்மைபோல் சிறு சிறு கொப்புளங்கள் தோன்றுதல்,

**ஆரம் ட்ரிபில்லம் :** வாயிலிருந்தும் மூக்கிலிருந்தும் காரமான புண்ணுண்டாக்கும் வஸ்து வெளியாதல். வாயின் உட்புறம் முழுதும் ரணம், வலி, ரத்தம் வடிதல் குழிப்புண். வாயிலிருந்து அழுகின நாற்றம், உதடுகள் வெடித்துக் கெட்டியாக வீங்கியும் எரிச்சலுடன் ரத்தம் வடிந்து கொண்டும் இருத்தல், ரத்தம் வரும் வரை உதடுகளைப் பிடித்திழுத்தல்.

**ஆரம் முரியாடிகம் :** எரிச்சல் அரிப்புடன் கூடிய வாய்ப்புண்கள். உதடுகளில் பருக்கள்.

**ஆரம் மெடாலிகம் :** ஏராளமான உமிழ்நீர், இனிப்பான உமிழ்நீர், வாய் துர்நாற்றம்

**ஆர்னிகா :** துர்நாற்றம், உதடுகள் வீங்குதல்.

**ஆர்சனிகம் ஆல்பம் :** நீலம் அல்லது சிவப்பு நிறமுள்ள குழிப் புண்கள் கொப்புளங்கள், காய்தல், கடுந்தாகம்; அடிக்கடி கொஞ்சங் கொஞ்சமாகத் தண்ணீர் குடித்தல். தண்ணீர் வயிற்றில் தங்க முடியாமை. வாய் முழுதும் எரிச்சல், வலி முதலியவைகளுடன் சிரங்குகள், கொப்புளங்கள். வலியுள்ள உதடுகள், உதடுகளில் எரிச்சலுள்ள புற்றுக்கள், குழந்தைகளின் வாயில் வெண்மையான குழிப் புண்கள்.

**ஆஸிட் அஸடிக் :** அதிக உமிழ்நீர்.

**ஆஸிட் ஆக்ஸாலிக் :** தண்ணீர் போன்ற உமிழ்நீர்.

**ஆஸிட் கார்பாலிக் :** வாயிலிருந்து துர்நாற்றமடித்தல். வாயில் வெண்மையான குழிப்புண்கள், டிப்தீரியாவில் மூக்கையும் வாயையும் பீடித்தல் வாயையும் மூக்கையுஞ் சுற்றி வெண்மையான கோடுகள்.

**ஆஸிட் நைட்ரிக் :** கடைவாய்களில் ரணம், துர்நாற்றமுள்ள பட்ட விடங்களைப் புண்ணுக்கும் எச்சில் காலையில் ரத்த மய எச்சில், வாயில் பூந்தசைகள் வீங்கியிருத்தல். ரணங் களில் குத்துவலி, உதடுகளில் வெடிப்பு.

**ஆஸிட் ப்ளூவாரிக் :** அதிக உமிழ்நீர் உற்பத்தி.

**ஆஸிட் மூரி :** சுவாசக் காற்று நாற்றமடித்தல், உமிழ்நீர் கோள வீக்கம், கரு நீலநிற ரணம் கன்னங்களில் உட்புறம் சிவப்பாக விருத்தல், வாய் திறந்தேயிருத்தல்.

**ஆஸிட் ஸல்ப்யூரிக் :** வாயில் துர்நாற்றம், ரணங்கள் ஈறுகளின் சீழ் ரத்தம் வடிதல்.

**இக்னேஷியா :** மேல் வாயில் தைக்கும் வலி காது வரை பரவும் வலி.

**இபிகாக்உனு :** ஏராள உமிழ்நீர் உற்பத்தி, அதனால் அடிக்கடி விழுங்க நேரிடல்.

**ஐயோடியம் :** குழிப்புண், சாம்பல் நிறமாகவிருத்தல். ஏராள உமிழ் நீர் உற்பத்தி, அதிக நாற்றம்.

**ஐரிஸ் வர்ஸிகோலர் :** வாயும் நாக்கும் வெந்த உணர்ச்சி. ஏராள உமிழ்நீர்.

**ஓபியம் :** வாயில் நுரை.

**ஓஸிமம் ஸாங்டம் :** உதடு காய்தல், சிவத்தல்.

**கந்தாரிஸ் :** வரண்டிருத்தல், ஆனால் தாகமின்மை. பூந்தசை களில் அழற்சி, எரிச்சல், தண்ணீரை உபயோகித்தல் அதிகமாதல். ஏராள உமிழ்நீர், தாடையை அசைக்க முடியாமை.

**கல்கேரியா ஐயோடைட் :** கீழ்த்தாடை உமிழ்நீர்க் கோளங்களில் அழற்சி.

**கல்கேரியா கார்ப் :** காலையில் மேலுதடு வீங்குதல்.

**கல்கேரியா பாஸ் :** மேலுதடுகளில் வீக்கம், வலி, கடினம், எரிச்சல், டான்சில்களில் வீக்கம். உள் நாக்கு வளர்ச்சி.

**கன்னபிஸ் இண்டிகா :** காய்ந்தும் ஒட்டிக்கொண்டுமிருத்தல்.

**கன்னபிஸ் ஸடீவா :** வாய், தொண்டை, உதடு காய்ந்திருததல்.

**காக்குலஸ் :** வாயைத் திறக்கும்போது இழுக்கும் வலி.

**காப்ஸிகம் :** நாற்றமடித்தல், உதடுகளில் வீக்கம், எரிச்சல், வெடிப்பு.

**காமொமில்லா :** இரவில் அதிக உமிழ்நீர் உற்பத்தி.

**காம்போரா :** வாய்ப்பூட்டு, வாயில் நுரை தள்ளலுடன் வலிப்பு.

**கார்டுஸ் மரியேனஸ் :** கசப்பு, ருசி.

**கார்பன் ஸல்ப் :** ஏராள ரத்தங்கலந்த உமிழ்நீர், உணர்ச்சியற்றிருத்தல், துர்நாற்றமுள்ள காற்று.

**கார்போ வெஜிடபிலிஸ் :** வெண்மையான குழிப்புண்கள்.

**காலி ஐயோடேடம் :** துர்நாற்றம் அதிக உப்புக்கரிக்கும் எச்சில் ஊறுதல், வெண்மையான ரணங்கள்.

**காலி கார்ப் :** வெண்மையான குழிப்புண்கள், ஏராள உமிழ் நீர் அடிக்கடி உற்பத்தியாதல், துர்நாற்றம்.

**காலி க்ளோரிகம் :** வாயிலிருந்து அபானம் வரை அழுகிய ரணம் வாயில் அழுகிய நாற்றம், ரணம், புளிப்பான உமிழ்நீர் கீழ்த்தாடைக்கோள வீக்கம்.

**காலி பைக்ரோமிகம் :** வரட்சி, பிசின் போன்ற உமிழ்நீர்.

**காலி மூரி :** குழிப்புண்கள், முகவாய்க்கட்டைக் கோளங்கள் வீங்குதல்.

**காஸ்டிகம் :** அரைக்கும்போதும் வாயின் உட்பாகம் கடிபடுதல், கீழ்த்தாடையில் வாதம், வாயைத் திறக்க சிரமப்படல்,

**குப்ரம் மெடாலிகம் :** அமித உமிழ்நீர் உற்பத்தியாதல், குழ குழப்பு உலோகங்களின் ருசி, வாயில் நுறையுடன் தாடைகளில் இழுப்பு, உதடுகள் வெளுத்தல் நீலநிறமடை தல்.

**க்ராபைடிஸ் :** வாயில் வெடிப்புகள் வாயிலிருந்து அழுகிய வாசனை, அமித உமிழ்நீர் உற்பத்தி, வாயைச்சுற்றி கச கசப்புள்ள படைகள்.

**க்ரீஸோட் :** வாயிலிருந்து துர்நாற்றமடித்தல்.

**க்ளோனுயின் :** வாய் உலர்ந்திருப்பினும் அதிக தாகமின்மை. வாயில் நுரை.

**டபாகம் :** அதிக உமிழ்நீர். வெண்மையான பிசுக்கான கோழையை அடிக்கடி வெளியேற்ற வேண்டியிருத்தல், பேசமுடியாமை.

**டயஸ்கோரியா :** காலையில் வாய் உலர்தல், கசத்தல், அதிக பித்தநீர் உற்பத்தி.

**டல்கமாரா :** சோப்புபோல் குழகுழத்த உமிழ்நீர். குளிர்காலத் தில் உதடு வெடித்தல்.

**தராக்ஸகம் :** அதிக உமிழ்நீர் உற்பத்தி (நாக்கில் பார்க்க)

**நக்ஸ் மாஸ்சாடா :** வாய் உலர்ந்திருத்தல், ஆனுல் தாகமின்மை, வாயிலிருந்து துர்நாற்றம் கிளம்புதல்.

**நக்ஸ் வாமிகா :** ரணப்பட்டிருத்தல், சிறு சிறு ரணங்கள் வாயினுட்புறத்திலும் தொண்டையிலும் நாற்றமுள்ளவை களாகவுமிருத்தல், இரவுகளில் உமிழ்நீருடன் ரத்தக் கலப்பு.

**நேட்ரம் ஆர்ஸனிகம்:** உதடுகளிலும் கடைவாயிலும் வெடிப்புகள்.

**நேட்ரம் கார்ப் :** உதடுகளைச் சுற்றி ரணங்களும் படைகளும், உதடுகள் காய்ந்துபோயிருப்பதால் அடிக்கடி நாக்கால் நக்கிக்கொள்ளுதல், வாயில் அமித உமிழ்நீர் தட்டை யான ரணங்கள். எரியும் கொப்புளங்கள் தொட்டால் வலி, அடிக்கடி காறி உமிழவேண்டி வருதல், இரவில் அதிகக் கோழை சேர்ந்துவிடுவதால் காலையில் அதை உமிழவேண்டி வருதல்.

**நேட்ரம் பாஸ்** (நாக்கில் பார்க்க) வாயின் மேற்பாகத்தில் கெட்டியான மஞ்சள்நிற மாசுபடிதல்

**நேட்ரம் மூரி :** உலர்ந்திருத்தல், கொப்புளங்கள், ரணங்கள், தொட்டால் வலி, எரிச்சல் ஏற்படல், உதடுகளிலும் வாயைச் சுற்றியும் முத்துக்கள்போன்ற கொப்புளங்கள்,

**நேட்ரம் ஸல்ப் :** உதடுகளில் முக்கியமாகக் கீழ் உதட்டில் சிறு கொப்புளங்கள், உதடுகள் காய்ந்துந் தோலுரிந்து கொண்டுமிருத்தல்.

**பல்ஸடில்லா :** காலையில் காய்ந்திருத்தல், ஆனால் தாகமின்மை, கசப்பு ருசி, துர்நாற்றம், இனிப்பான எச்சில் அடிக்கடி நுரையுடன் பஞ்சுபோல் துப்பிக்கொண்டேயிருத்தல். கீழுதட்டின் நடுவில் வெடிப்பு.

**பாடியாகா :** காலையில் காறி உமிழப்படுங் கோழையில் ரத்தக் கலப்பு.

**பாப்டீஷியா :** சிவந்து, நாற்றத்துடன், திறந்துகொண்டே யிருத்தல். வாயினுட்புறம் முழுதும் ரணமாகவிருத்தல்.

**பாரிடா கார்ப் :** சற்று திறந்தேயிருத்தல், எச்சில் ஒழுகிக் கொண்டேயிருத்தல்.

**பாரிடா மூரியாடிகா :** அதிக உமிழ்நீருற்பத்தி

**பாஸ்பரஸ் :** ஏராளமான ரத்தந்தோய்ந்த அல்லது தண்ணீர் போன்ற உமிழ்நீர் உற்பத்தியாதல், வாயின் மேற்புறத்தில் ரணங்கள் உதடுகள் நீலம் பூரித்திருத்தல்.

**பிஸ்மத் :** குளிர்ந்த பானங்களில் பிரியம்.

**பெட்ரோலியம் :** அடிக்கடி வாயில் தண்ணீர் ஊறுதல், வாந்தி யெடுக்க வருதல்.

**பெர்பெரிஸ் வல்கேரிஸ் :** குழகுழப்பு, பிசுக்கென்று ஒட்டிக் கொள்ளல் உமிழ்நீர் குறைவு, பஞ்சுபோன்ற நுரைத்த உமிழ்நீர்.

**பெர்ரம்மெடாலிகம் :** உட்கொண்ட ஆகாரம் வாயில் வந்து கொண்டேயிருத்தல்.

**பெல்லடொன்னு :** உலர்ந்து அதிக தாக வரட்சையுடனிருத்தல். வாய் திறக்க முடியாமல் விரைத்திருத்தல், மேலுதடு வீக்கம்.

**பைடலொக்கா :** உதடுகளில் ரணம். சில சமயங்களில் வாய் புண்ணுகிவிடுதல்.

**பைரோஜினியம் :** வாயில் தித்திப்பு ருசி, நாற்றம். (நாக்கில் பார்க்க)

**போடோபில்லம் :** துர் நாற்றம்.

**போராக்ஸ் :** வாயினுள், நாக்கினுள் புண்கள். புண்ணிலிருந்து ரத்தம் கசிதம். வாயுஷ்ணம் உலர்ந்திருத்தல்.

**ப்ரையோனியா :** உலர்ந்திருத்தல், உதடுகள் காய்ந்து உலர்ந்து வெடித்திருத்தல், உதடுகள்கறுத்துத் தடித்து எரிச்சலுடனிருத்தல்.

**ப்ளாண்டகோ :** அதிக உமிழ்நீர்.

**மங்கானம் :** கடைவாய் ரணங்கள், கொப்புளங்கள்.

**மெக்னீஷியா முரி :** எப்போதும் நுரை போன்ற கோழை.

**மெர்க்குரியஸ் கரோஸிவஸ் :** உதடு கறுத்தல், வீக்கம், தொட்டால் வலி, ஈறு வீக்கம், பல் ஆடுதல் வாய் முழுதும் பஞ்சு போல் ரணம். இரத்தம் கசிதல் ரத்தமயமான உமிழ்நீர், வாயிலிருந்து வயிறு வரை எரிச்சல், அதிக உமிழ்நீர் அதிகத் தாக வரட்சை.

**மெர்க்குரியஸ் டல்ஸிஸ் :** ரணம் கறுத்தல், கறுத்த உமிழ்நீர், அதிக உமிழ்நீர், வாய் துர்நாற்றம். கஷ்டப்பட்டு விழுங்குதல் (தொண்டை ரணத்தால்)

**மெர்குரியஸ் சொலுபுலிஸ் :** வாயுள் ரணம், பூந்தசை பஞ்சுபோலாதல். அதிக உமிழ்நீருற்பத்தியாகியும் சகிக்கமுடியாத தாகம், நாற்றம், ரணம் கொப்புளம் கொப்புளங்கள் பருத்திருப்பதால் வாயைத் திறக்க முடியாமை.

**மைரிகா:** துர் நாற்றம், உலர்தல் தாக வரட்சை, சளியிருப்பதால் ஆகாரம் விழுங்க சிரமம்,

**ரஸ்டாக்ஸ்:** ரத்தக் கசிவு தூங்கும்போது தாக வரட்சை சுவாசம் நாற்றமடித்தல். கடைவாய் ரணம். வாயைச் சுற்றி அதிக ஜுரத்தால் கொப்புளங்கள்.

**ரானங்குலஸ்:** செம்பு ருசியுள்ள உமிழ்நீர்.

**லாக்களிஸ்.** கடைவாய்களில் ரணம், வெடிப்புகள் தாடைப் பிடிப்பு, வாயை மூட முடியாமை. உதடுகள் காய்ந்து, வெடித்து, ரத்தம் கசிதல். கீழுதடு வீங்கியிருத்தல், துர் நாற்றம் ஏராளமான குழகுழப்பான உமிழ்நீருற்பத்தி (க்ஷயரோகத்தில் பார்க்க) வாயை நன்ருக திறக்க முடியாமை. கஷ்டத்துடன் பேசமுடிதல் அல்லது எப்போதும் ஏதாவது பேசிக்கொண்டேயிருத்தல்.

**லாரோஸிராஸஸ்:** உலர்தல், நுரைதள்ளல், காக்கை வலி, வாயைச் சுற்றிலும் படைகள் போன்ற சினப்புகள்.

**வலேரியானு:** வாயில் ஏராள உமிழ்நீருற்பத்தி உதடுகளில் பொருக்குகள்.

**ஜஸ்டீஸியா ஆடாதொடா:** வாயிலிருந்து துர் நாற்றமடித்தல்.

**ஸபடில்லா:** உள்மேல் வாயில் அரிப்பு, எதையும் சூடாக உண்ண முடியாமை. வாயுலர்தல்.

**ஸரஸபரில்லா:** கோடை காலத்தில் மேலுதட்டில் கொப்புளங்கள்.

**ஸல்பர்:** துர் நாற்றம், ரணம், குத்து வலி. எரிச்சல், அதிக உமிழ்நீர் உதடு சிவத்தல். மேல் உதடு சிவப்பு, வீக்கம். உதடு வெடித்துலர்தல் சுர சுரப்பு

**சிகூடா விரோஸா:** நுரைத்தல். பேசமுடியாமை. மேலுதட்டில் புற்றுகள்;

**ஸிபிலினம்:** தூங்கும்போது உமிழ்நீர் கொட்டுதல்.

**ஸிலிகா:** வாயில் குளிர்ந்த தண்ணீர் பட முடியாமை. அதிக எச்சில் ஒழுகுதல். அதிக தாகம், உதடு வெடித்தல், கீழுதடுப் புற்று, பழுப்புநிற ரணம்.

**ஸ்பேபிஸ் நைக்ரா:** மேலுதடு நெற்றியில் வியர்வை.

**ஸிஸ்டஸ்:** கீழ் உதட்டில் ரத்தம் கசியும் புற்று, உதடு வெடித்தல்.

**ஸீகேல்:** ரத்தங்கலந்த நுரை, ரத்தம் துப்புதல், உதடுகள் பிணம்போல் வெளுத்திருத்தல்.

**ஸீனு:** வாயைச் சுற்றி வெண்மை அல்லது நீலநிறமாக இருத்தல்.

**ஸெபியா:** கீழுதடு வீக்கம், வெடித்தல், அதிக உமிழ்நீர் உற்பத்தி ஆனாலும் தொண்டை வரட்சி தொண்டையில் முளையிருக்கும் உணர்ச்சி, சுற்றி மஞ்சள் உதடுகளில் படைகள்.

**ஸெனகா:** உதடு கடைவாய்களில் எரிச்சல், கொப்புளம்.

**ஸெனஸியோ:** தொப்புளைச் சுற்றிலும் வலி ஆரம்பித்து வயிறு முழுதும் பரவுதல். மலம் வெளியேறுவதால் சமனம், வாய், தொண்டையுலர்தல், விழுங்கும்போது வலி.

**ஸைக்லமென்:** உப்புக்கரிக்கும் உமிழ்நீர், குழகுழப்பு, உதடு உலர்தல், தாகவரட்சியின்மை.

**ஸோரினம்:** கீழுதட்டின் உட்புறம் கொப்புளங்கள், எரிச்சல், வலி, ரணம்.

**ஸ்டாபிஸாக்ரியா:** உடல்கள் நீலம் பூரித்திருத்தல்.

**ஸ்ட்ரமோனியம்:** புரியாத நடுங்கிய பேச்சு, வரட்சை, சில சமயம். அதிக உமிழ்நீர், பேசமுடியாமை.

**ஹயாஸ்யாமஸ்:** சங்காதோஷத்தில் வாயடைப்பு.

**ஹீபர் ஸல்பர்:** மேலுதடு வீங்குதல்.

**ஹெல்லீபோரஸ்:** வாய்ப்புண்கள், கடைவாய்களில் ரணம், மேலுதட்டில் வெடிப்புகள், உதடுகள் உலர்ந்திருத்தல். உதடுகள் அசைத்தல், ஆடுதல் பேச்சு சத்தம் உண்டாகாமை, கீழ்த்தாடை தொங்குதல், எதையோ தின்று கொண்டிருப்பது போல் வாய் அசைந்துகொண்டேயிருத்தல், உதடுகளை விரல்களால் பிய்த்தல்.

# உதடுகள்

**அபிஸ் மெல்லிபிகா:** நீலம் பூரித்தல், கீழ் உதடு வெடித்தல்.

**அமோனியா கார்ப்:** வாயைச் சுற்றி அதிகச் சிறு கொப்புளங்கள், கீழுதட்டில் வெடிப்பு, எரிச்சல், ரத்தம் வெளியாதல். மேலுதட்டில் வெடிப்பதுபோல் வலி. உதடுகள் நீலநிற மடைதல், கடைவாயில் பிடிப்புவலி, உதடுகளின் சந்துகளைப் புண்ணாக்கும் உமிழ்நீர்.

**அமோனியா மூர்:** உதடுகள் நெருப்புப் போலெரிதல், காய்தல், வெடித்தல், நக்கிக்கொள்ளல். மூக்கிலிருந்து வடியும் நீர் உதடுகளைப் புண்ணாக்குதல்.

**அம்ப்ரா க்ரிஸியா:** காலையில் உதடுகள் காய்தல், மறத்தல்.

**அர்ஜண்டம் நைட்ரிகம்:** பேசும்போது உதடுகளில் நடுக்கம்.

**அலுமினு:** மேலுதட்டில் சிறு கொப்புளங்கள்.

**ஆண்டிமோனியம் க்ருடம்:** வறண்ட உதடுகளுடன் அதிக தாகம், வாயின் ஓரங்களில் வெடிப்பு.

**ஆண்டிமோனியம் டார்ட்டாரிகம்:** காய்ந்து, சொரசொரப்பாக, வெளுத்து சுருங்கியிருத்தல். உதடுகளின் மூலைகளில் வெடிப்பு.

**ஆரம் ட்ரிபில்லம்:** உதடுகள் வெடித்துக் கெட்டியாக வீங்கியும், எரிச்சலுடன் ரத்தம் வடிந்துகொண்டுமிருத்தல் ரத்தம் வரும்வரை உதடுகளைப் பிடித்திழுத்தல்.

**ஆரம் மூரியாடிகம்:** உதடுகளில் பருக்கள்.

**ஆர்னிகா :** வீங்குதல்.

**ஆர்ஸனிகம் ஆல்பம் :** வலி, எரிச்சலுள்ள புற்றுக்கள்.

**ஆஸிட் கார்பாலிக் :** வாயையும் மூக்கையும் சுற்றி வெண்மையான கோடுகள்.

**ஆஸிட் நைட்ரிக் :** உதடுகளில் வெடிப்பு.

**ஓஸிமம் ஸாங்டம் :** காய்தல், சிவத்தல்,

**கல்கேரியா கார்ப்** காலையில் மேலுதடு வீங்கியிருத்தல்.

**கல்கேரியா பாஸ் :** மேலுதடுகளில் வீக்கம், வலி, கடினம் எரிச்சல்

**கன்னபிஸ் ஸடீவா :** காய்ந்திருத்தல்.

**காப்ஸிகம் :** வீக்கம், எரிச்சல், வெடிப்பு.

**குப்ரம் மெட்டாலிகம் :** வெளுத்தல், நீலநிறமடைதல்,

**க்ராபைடிஸ் :** வாயைச் சுற்றிக் கசப்புள்ள படைகள்.

**க்ரிஸோட் :** கீழுதட்டில் பயறுபோன்ற சினைப்புகள்.

**டல்கமாரா :** குளிர் காலத்தில் உதடு வெடித்தல்.

**நேட்ரம் ஆர்ஸனிகம் :** உதடுகளிலும் கடைவாய்களிலும் வெடிப்புகள்.

**நேட்ரம் கார்பானிகம் :** உதடுகளைச் சுற்றி ரணங்களும், படைகளும், உதடுகள் காய்ந்து போயிருப்பதால் அடிக்கடி நாக்கால் நக்கிக்கொள்ளுதல்.

**நேட்ரம் மூரி :** உதடுகளிலும் வாயைச் சுற்றிலும் முத்துக்கள் போன்ற கொப்புளங்கள்.

**நேட்ரம் ஸல்ப் :** கீழுதட்டில் சிறு கொப்புளங்கள், உதடுகள் காய்ந்தும் தோலுரிந்து கொண்டுமிருத்தல்,

**பல்ஸடில்லா :** கீழுதட்டின் நடுவில் வெடிப்பு.

**பாஸ்பரஸ் :** *நீலம் பூரித்தல்.*

**பெல்லடோன்னு :** மேலுதடு வீக்கம்.

**பைரோலக்கா :** உதடுகளில் ரணம்.

**ப்ரையோனியா :** உலர்தல், வெடித்தல், கறுத்தல், தடித்தல், எரிச்சல்.

**மங்கானம் :** கடைவாயில் ரணங்கள், கொப்புளங்கள்.

**மெர்க்குரியஸ் கரோஸிவஸ் :** கறுத்தல், வீக்கம், தொட்டால் வலி.

**ரஸ்டாக்ஸ் :** கடைவாயில் ரணம், அதிக ஜுரத்தால் வாயைச் சுற்றிக் கொப்புளங்கள்.

**லாக்கஸிஸ் :** கடைவாய்களில் ரணம், வெடிப்புகள், காய்தல். ரத்தங் கசிதல், கீழுதடு வீங்கியிருத்தல்.

**லாரோஸிராஸஸ் :** வாயைச் சுற்றிலும் படைகள் போன்ற சினப்புகள்.

**வலேரியானு :** உதடுகளில் பொருக்குகள்.

**ஸரஸபரில்லா :** கோடைக்காலத்தில் மேலுதட்டில் கொப்புளங்கள்.

**ஸல்பர் :** உதடு சிவத்தல், மேலுதடு சிவத்தல். வீக்கம், கரகரப்பு.

**ஸிகூடா விரோஸா :** மேலுதட்டில் புற்றுகள்.

**ஸிலிகா :** வெடித்தல். கீழுதட்டில் புற்றுக்கள், பழுப்புநிறப் புண்கள்.

**ஸினேபிஸ் நைக்ரா :** மேலுதட்டில் வியர்வை.

**ஸிஸ்டஸ் :** கீழுதட்டில் ரத்தங்கசியும் புற்றுகள், உதடு வெடித்தல்.

**ஸிகேல் :** பிணம்போல் வெளுத்திருத்தல்.

**ஸினு :** வாயைச் சுற்றி வெண்மை அல்லது நீலமாகவிருத்தல்,

**ஸெபீயா :** படைகள், கீழுதட்டில் வீக்கம், வெடித்தல்.

**ஸெனகா:** உதடு கடைவாய்களில் எரிச்சல், கொப்புளங்கள்.

**ஸைக்ளமென்:** உதடு உலர்தல், தாகவரட்சியின்மை.

**ஸோரினம்:** கீழுதட்டினுட்புறம் கொப்புளம், எரிச்சல், வலி, ரணம்.

**ஸ்டாபிஸாக்ரியா:** உதடுகள் நீலம் பூரித்திருத்தல்.

**ஹீபர் ஸல்பர்:** மேலுதடு வீங்குதல்.

**ஹெலிபோரஸ்:** கடைவாய்களில் ரணம், மேலுதட்டில் வெடிப்புகள், உதடுகள் உலர்ந்திருத்தல், அசைதல், ஆடுதல். எதையோ தின்றுகொண்டிருப்பதுபோல் வாயசைந்து கொண்டேயிருத்தல். உதடுகளை விரல்களால் பிய்த்தல்.

# பற்கள்

**அகேரிகஸ்:** நீண்ட உணர்ச்சி, குளிர் காற்றில் உபாதி அதிகம்.

**அகோனைட்:** குளிர், வறண்ட குளிர் காற்றால் பல்வலி உண்டாதல்.

**அக்னஸ் காஸ்டஸ்:** இடதுபக்க உளிப்பற்களில் துடிக்கும் கிழிக்கும், வலிகள். உஷ்ண ஆகார பானங்களால் அதிகரித்தல்.

**அபிஸிந்தியம்:** பற்களுக்கிடையில் நாக்கு கடிபடல். பற்களைக் கடித்தல். இதன்பின் அரை மயக்கம் வருதல்.

**அபிஸ் கனடன்ஸிஸ்:** பற்களைக் கடித்தல்.

**அபிஸ் மெல்லிபிகா:** ஈறுகளில் வலி. நறநறவென்று கடித்தல், மேல் பாகத்தில் குதிக்கும் வலி.

**அமோனியா கார்ப்:** நீண்ட உணர்ச்சி, குளித்தபின், படுத்தபின், சீதோஷ்ண மாறுபாடால் உண்டாகும் பல்வலி, பற்கள் தளர்தல், விழுதல்.

**அமோனியம் மூரி:** சொத்தைப் பல்வலி, அமுக்கினால் சமனம்.

**அம்ப்ரா க்ரிஸியா:** இழுப்பது போன்ற வலி, உஷ்ணத்தால் உபாதி அதிகம். குளிர்ச்சியால் உபாதி சமனம்.

**அயிலாந்தஸ்:** அழுக்கு படிந்திருத்தல்.

**அரேனியாடயாடிமா:** இரவில் கீழே படுத்ததும் திடீரென்று கடுமையான பல்வலி. மழைக்காலம், ஸ்நானம், சதுப்பு நில வாசம், ஆகியவைகளால் உபாதி அதிகம்.

**அர்ஜண்டம் நைட்ரிகம்:** வலி.

**அலுமினு:** வலி, மெல்லுவதாலும், திறந்த வெளியிலும், மாலையிலும் அதிகமாதல், பற்கள் நீண்ட உணர்ச்சி. மாசு படிதல்.

**ஆண்டிமோனியம் க்ரூடம்:** மாதவிடாய்க்கு முன்பாக பொட்டுகளில் குடைதலுடன் பல்வலி.

**ஆண்டிமோனியம் டார்ட்டாரிகம்:** விட்டு விட்டு வரும் வாதசம்பந்தப் பல்வலி, காலையில் பற்களில் சளிபோல் சேருதல்.

**ஆரம் மெடாலிகம்:** அதிக நீளமாக இருப்பது போல் தோன்றுதல்.

**ஆர்ஸனிகம் ஆல்பம்:** பல்வலி, அடுப்புச் சூட்டால் சமனம்.

**ஆஸிட் ஆக்ஸாலிக்:** சொத்தையான கடைவாய்ப் பற்களில் வலி.

**ஆஸிட் நைட்ரிக்:** இரவுகளில் விண் விண் என்ற தெறிப்பு வலி. பற்கள் நீண்ட உணர்ச்சி, மஞ்சள் நிறமாகி ஆடி விழுந்து விடல், சொத்தை விழுதல், பற்களை அசைக்கும்போது தாடைகளில் கடக் கடக் என்ற சத்தம்.

**ஆஸிட் ப்ளூவாரிக்:** பல்வலி, குளிர்ந்த ஒற்றிடங்களாலும், வேகமாக நடப்பதாலும், சமனமாதல். பற்களுக்கடியில் சீழ் உண்டாதல்.

**ஆஸிட் மூரி:** பாசிபோல் படிதல்.

**இக்னேஷியா:** உணவு உட்கொள்ளாதபோது பல்வலி, உணவு உட்கொள்ளும்போது பல்வலி குறைதல்.

**காந்தாரிஸ்:** அரைத்தல், தாடைத் தசைகள் சுருங்குவதால் தாடையை அசைக்க முடியாமை.

**கல்கேரியா கார்ப்:** குளிர்ந்த தண்ணீரால் பல்வலி. மாதவிடாயின்போதும், பிறகும், கர்ப்ப காலத்திலும், பொறுக்க முடியாத பல்வலி. வென்னீராலும் குளிர்ந்த தண்ணீராலும் அதிகமாதல். பல் முளைக்காதிருத்தல் அல்லது தாமதப்படுதல்.

**கல்கேரியா ப்ளோரிகா:** சொத்தை, ஆட்டம், உணவு பட்டவுடன் பற்களில் வலி.

**காபியா க்ரூடா:** பல்வலி, சில்லென்ற தண்ணீரை வாயில் வைத்திருப்பதால் சமனம். உஷ்ணப் பதார்த்தங்களால் அதிகமாதல். குழந்தைகளுக்குப் பல் முளைக்கும் காலத்தில் வலிப்புகள், பற்களை கடித்தல்.

**காமோமில்லா:** சூடான பதார்த்தங்களைக் குடித்தால் பல்வலி. காபி குடித்தாலும் இரவிலும் இன்னும் அதிகரிக்கும், கர்ப்ப காலத்திலுண்டாகும் பல்வலி, தாடையிலேற்படும் பிடிப்பு வலி உட்காதுகளுக்கும் பற்களுக்கும் பரவுதல்.

**கார்பன் ஸல்ப்:** காலை 9 மணிக்கு குதிப்பது, பிடிப்பது, கிழிப்பதுபோன்ற வலி, குளிரால் அதிகரித்தல்.

**கார்போ வெஜ்:** கூச்சம், மெல்லும்போது பற்களிலும் ஈறுகளிலும் வலி, பற்களுக்கு மேலாக ஈறுகள் வளர்ந்து விடுதல். பல்தேய்க்கும்போது ஈறுகளிலிருந்து ரத்தம் கசிதல். பயோரியா (Pyorrhoea)

**காலீ கார்ப்:** பற்களும் ஈறுகளும் விலகுதல், சீழ் வருதல் பயோரியா.

**காலீ பாஸ்:** பல்வலி, சுலபமாக ஈறுகளில் ரத்தம் கசிதல்.

**காலோஸிந்திஸ்:** மிக நீண்ட உணர்ச்சி.

**கால்மியா:** (தலையில் பார்க்க.) நெற்றிப் பொட்டுகளில் வலி. கழுத்திற்கும் பற்களுக்கும் பரவுதல்.

**கோல்சிகம்:** பற்களை அரைத்தல், இதனால் கூச்சம், வலி.

**க்ராபைடிஸ்:** தலையின் ஒரு பக்க வாத வலி பற்களுக்கும் கழுத்துக்கும் பரவுதல்.

**க்ரீஸோட்:** பற்களிலிருந்து அழுகிய துர்நாற்றம் வீசுதல், பல் வலி பொட்டுகளுக்கும், காதுகளுக்கும் பரவுதல், வெகு சீக்கிரமாக பல் சொத்தையாதல் கருப்பாகவும் உடையும் தன்மையுமுள்ள பற்கள், ஊத்தை படிதல், முக்கியமாக குழந்தைகளுக்கு பற்கள் வரிசையாக இல்லாமை, சொத்தை விழுதல்.

**க்ளமேடிஸ் எரக்டா:** மிக நீண்ட உணர்ச்சி, பல்வலி இரவிலும் படுக்கும்போதும், புகையிலை உபயோகிப்பதாலும் அதிகமாதல், குளிர்ந்த தண்ணீர், குளிர்ந்த காற்று, முதலியவைகளால் சமனம்.

**க்ளோனுயின்:** தெறிப்பு வலி, சொத்தை விழுதல், நீண்ட உணர்ச்சி.

**சிமாபிலா:** பல்வலி, மெதுவாக பிடுங்குவது போன்ற வலி. சரீர உழைப்பாலும், ஆகாரம் உட்கொண்ட பின்னும், உபாதி அதிகம், குளிர்ந்த தண்ணீரால் சமனம்.

**செனபோடியம்:** பல் வலி, காது, பொட்டு, தாடை எலும்புகளுக்குப் பரவுதல்.

**சைனு:** பல்வலி, பற்களைக்கடிப்பதாலும், உஷ்ணத்தாலும் சமனம்.

**ட்ரில்லியம்:** பல்லெடுத்தபின், ஈறில் ரத்தப் பெருக்கு.

**தூஜா:** ஈறுகளின் சமீபத்தில் உள்ள பாகங்கள் சொத்தை விழுதல், பயோரியா.

**நக்ஸ் வாமிகா:** பல்வலியுடன். முகம் வீங்கியிருத்தல்,

**நேட்ரம் கார்ப்:** ஆகாரம் உட்கொள்ளும் போதும், அதன் பின்னும் பற்களில் வலி. இது முக்கியமாய், பழங்களும், இனிப்பு வஸ்துக்களும், உட்கொண்டால் அதிகமாதல்.

**நேட்ரம் மூரி :** பற்களையசைக்கும் போது காதுகளில் வெடிப்பது போன்ற சப்தம்.

**நேட்ரம் ஸல்ப் :** தெறிக்கும் வலி, உஷ்ணத்தாலும், உஷ்ண ஆகாரம். பானம் முதலியவைகளை, உட்கொள்ளும் போதும், அதிகரித்தல், குளிர்ந்த காற்றுப்பட்டால் சமனம். பற்கள் விழுந்து விடுதல், பற்களிலிருந்து ஈறுகள் விலகி விடுதல்.

**பல்ஸடில்லா :** மாலையிலிருந்து நள்ளிரவு வரை. முக்கியமாக உஷ்ண அறைகளில் பல்வலி, வாயில் குளிர்ந்த ஜலத்தை வைத்துக்கொண்டிருந்தாலும் குளிர் காற்றில் உலாவினலும் சமனம்.

**பாப்டீஷியா :** அழுக்குப் படிந்திருத்தல்.

**பாரிடா மூரி :** பல் வலி, வலியால் துடித்தல், இவ்வலி தூங்கியெழுந்த பின்னும் நள்ளிரவின் பின்னும் அதிகரித்தல்.

**பாஸ்பரஸ் :** பற்கள் பிடுங்கப்பட்டபின் ஏராள ரத்தப்பெருக்கு, கைகளை தண்ணீரில் வைத்து வேலை செய்வதால் பல்வலி, வண்ணரத் தொழில் செய்பவர்களின் பல்வலிக்கு சிறந்தது, அதி சீக்கிரம் சொத்தை விழுதல்.

**பிஸ்மத் :** பல்வலி, குளிர்ச்சி. குளிர்ந்த தண்ணீர் வாயிலிருந்தால்' சமனமாதல், குளிர்ந்த பானங்களில் பிரியம், பற்கள் ஆடுதல், துண்டு துண்டாகக் கிழிக்கும் வலி. ஆகாரத்தால் உபாதி அதிகம்.

**பைடோலக்கா :** முளைக்கக் கஷ்டம், முளைக்கும் காலத்தில் பற்களை அமுக்கிக் கடித்தல்.

**போடோபில்லம் :** தூக்கத்தில் பற்களை நறநறவென்று கடித்தல் (ஈறுகளையும்)

**ப்ளாண்டகோ :** பல்வலி, காதில் சீழ் வருதல், நீண்ட உணர்ச்சி, சொத்தைப்பல், ஈறுகளில் சீழ் பிடித்தல், குளிர் காற்றிலும், தொட்டாலும், பல்வலி அதிகரித்தல்,

மங்கானம்: ஒவ்வொரு பல்லிலும் மாறி மாறி வலி, தொடுவது, சில்லிப்பால், அதிகம்.

மெக்னீஷியா கார்ப்: வலி, எதையும் கடிக்க முடியாமை, இரவில் அதிக வலி, பல் நீண்ட உணர்ச்சி, குளிர் காற்று, வண்டிப் பிரயாணத்தால், பல்வலி அதிகம்.

மெக்னீஷியா பாஸ்: படுக்கைக்குப் போனதும் பல்வலி, குளிர்ந்த வஸ்துக்களால் அதிகரித்தல், உஷ்ணத்தால் சமனமாதல்.

மெக்னீஷியா மூரியாடிகா: மேல் வாய் பற்கள் நீண்ட உணர்ச்சி, எவை பட்டாலும் கூச்சம், வலி.

மெர்க்குரியஸ் கரோஸிவஸ்: ஆடுதல், ஈறுகளில் வீக்கம்.

மெர்க்குரியஸ் ஸொலுபுலிஸ்: நீண்ட உணர்ச்சி, கறுத்தல், ஆடுதல், ஈறுகளில் வீக்கம், தொட்டால் வலி. காது, தலைக்குச் செல்லுதல், இரவில் தெறிப்பு வலி.

ரடானியா: கர்ப்பத்தில் நான்காவது மாதத்திற்குள் பல்வலி, நீண்ட உணர்ச்சி, நடந்தால் சமனம்.

ராபேனஸ்: பல்வலி.

ரீயம்: சிசுக்களுக்கு பல் முளைக்கும் காலத்தில் ஏற்படும் கோளாறுகள்.

ரோடோடெண்ட்ரன்: பல்வலி, காற்று மழைக்குமுன் ஆரம்பித்தல், உஷ்ண ஒற்றிடம், கதகதப்பான அறை, உண்ணும்போது, உண்டபின், சுமார் 2 மணி வரை சமனம். காற்று மழை காலங்களில் ஏற்படும் பல்வலிகள்.

லாக்கஸிஸ்: வலி, உஷ்ணமான ஆகாரங்களை உண்டாலும் காதுவரை பரவும் வலி.

ஸல்பர்: நீண்ட உணர்ச்சி, சொத்தை, வலி, ஆடுதல், ஈறுகளிலிருந்து ரத்தம் வருதல், குளிர்ந்த தண்ணீர் படுவதாலும் உஷ்ண ஒற்றிடங்களாலும் உபாதி அதிகம்.

**ஸிகூடா:** இறுகக் கிட்டிவிடுதல்.

**ஸிபிலினம்:** சொத்தை விழுதல்.

**ஸிலிகா:** இரவு, குளிர்காற்றுப் பட்டால் வலி, ஈறுகளில் சீழ்கட்டி.

**ஸிஸ்டஸ்:** பற்களை விட்டு ஈறுகள் விலகுதல்.

**ஸீகேல்:** நற நறவென்று கடித்தல், ஆடுதல்.

**ஸெனஸியோ:** கூச்சம்.

**ஸைக்ளமென்:** வலி.

**ஸோரினம்:** ஆட்டம், ஈறுகள் கரைதல்.

**ஷ்டாபிஸாக்ரியா:** கறுத்தல், நொறுங்குதல், சொத்தைப் பல் வலி, மாதவிடாயிலும் கர்ப்பகாலங்களிலும் பல்வலி. (ஈறுகளில் பார்க்க.)

**ஷ்பைஜீலியா:** அதிகப் புகையிலையாலேற்பட்ட பல்வலி, குளிர்ந்த பதார்த்தங்கள் படுவதால் அதிகம், படுத்தால் சமனம்.

**ஹயாஸ்யாமஸ்:** கிட்டுதல், கடித்தல்.

# ஈறுகள்

**அபிஸ் நைக்ரா:** ஈறுகளைக் கடித்தல்.

**அமோனியா கார்ப்:** அதிக வலி, ரத்தம் வடிதல், ரணம்.

**அமோனியம் மூரி:** சீழ். இடதுபுற ஈறுகளில் வீக்கம். இங்கிருந்து இடது பொட்டுவரை பிடிப்பு வலி.

**அம்ப்ரா க்ரிஸியா:** வீக்கம், ரத்தம் வடிதல்.

**அலுமினா:** ரத்தப் பெருக்கு, குழிப்புண், வீக்கம்.

**ஆண்டிமோனியம் டார்ட்டாரிகம்:** ரத்தப்பெருக்கு.

**ஆரம் மூரியாடிகம்** : சிவத்தல், வீக்கம் இரவில் அதிகம்.

**ஆர்ஸனிகம் ஆல்பம்** : வீக்கம், ரத்தப் பெருக்கு.

**ஆஸிட் ஆக்ஸாலிக்** : ரத்தம் வருதல், வலி, குழிப்புண்கள்.

**ஆஸிட் நைட்ரிக்** : வீங்கி ரத்தம் கசிந்து கொண்டிருத்தல்.

**ஆஸிட் பென்ஸாயிக்** : நீலநிற ரத்தம் கசிதல்.

**ஆஸிட் ப்ளூவாரிக்** : சீழ்ப் பிடித்தல்

**ஆஸிட் ஸல்ப்யூரிக்** : ரத்தம் சீழ் வருதல்.

**கல்கேரியா கார்ப்** : கீழ்வாய் ஈறுகளில் ஆறாத சீழுள்ள குழிப் புண்கள்.

**கல்கேரியா ப்ளோரிகா** : பயோரியா. சீழ்ப்பிடித்தல், தாடையில் கருமையான வீக்கத்துடன் ஈறுகளில் புண்கள்.

**கார்போ வெஜ்** : மெல்லும்போது ஈறுகளிலும் பற்களிலும் வலி, ஈறுகள் பற்களுக்கு மேலாக வந்துவிடுதல், பல்தேய்க்கும் போது ஈறுகளிலிருந்து ரத்தம் கசிதல், பயோரியா.

**காலி கார்ப்** : பற்களும் ஈறுகளும் விலகுதல், சீழ் கசிதல், பயோரியா.

**காலி பாஸ்** : சுலப ரத்தக் கசிவுள்ள ஈறுகளுடன் பல்வலி.

**காலி ஸல்ப்** : ஈறு வலி.

**காஸ்டிகம்** : சுலபமாக ரத்தம் பீறிடுதல், குழிப்புண்.

**க்ரியோஸோட்** : ஈறுகளிலிருந்து மிகச் சுலபமாக ரத்தம் வெளியாதல்.

**க்ரோடேலஸ் ஹாரிடஸ்** : ரத்தப் பெருக்கு. (கடுமையாக)

**ட்ரில்லியம்** : பல் எடுத்தபின், ஈறுகளில் ரத்தப்பெருக்கு.

**துஜா** : ஈறுகளின் சமீபத்தில் உள்ள பாகங்களில் சொத்தை விழுதல். பயோரியா.

**நேட்ரம் ஸல்ப்** : பற்களிலிருந்து ஈறுகள் விலகிவிடுதல், ஈறுகளில் நெருப்புப்போல் எரிதல்.

பாரிடா மூரியாடிகா: ஈறுகளில் ரத்தம் கசிந்துகொண்டிருத்தல்

பிஸ்மத்: ஈறு வீக்கம்.

போடோபில்லம்: ஈறுகளை அழுக்கிக் கடித்தல். (தூக்கத்தில்)

போவிஸ்டா: ஈறுகளில் ரத்தம் வருதல்.

ப்ளம்பம்: ஈறு வீக்கம், வெளுப்பு, ஈறு நுனி நீலநிறக் கோடு

ப்ளாண்டகோ: சீழ்ப் பிடித்தல்.

மெர்க் கரோஸிவஸ்: ஈறு வீக்கம்.

மெர்க்குரியஸ் ஸொலுபுலிஸ்: ஈறு வீக்கம்.

ஸல்பர்: ரத்தம் வருதல், குளிர்ந்த தண்ணீர் படுதலாலும் உஷ்ண ஒற்றிடங்களாலும் வலி அதிகரித்தல்.

ஸிலிகா: ஈறுகளில் சீழ்க் கட்டிகள், குளிர் காற்று ஈறுகளில் பட சகிக்காமை.

ஸீஸ்டஸ்: பஞ்சுபோல் ரணப்பட்டு இருத்தல். பற்களை விட்டு விலகியிருத்தல். ரத்தம் வருதல்.

ஸீகேல்: ஈறுகளிலிருந்து ரத்தம் வடிதல்.

ஸோரினம்: ஈறு கரைதல்.

ஸ்டாபி ஸாக்ரியா: ஈறுகளில் பவுத்திரம் போன்ற சிறங்குகள். ஈறுகள் பஞ்சுபோல் வெண்மையாகி தொட்டால் ரத்தம் கசிதல்.

# நாக்கு

அகேரிகஸ்: உலர்ந்திருத்தல்.

அகோனைட்: கசப்பு ருசி, வீக்கம், மறத்த உணர்ச்சி, உலர்ந் திருத்தல். பேச சிரமம்

அக்னஸ் காஸ்டஸ்: வெண்மையான மாசு, களிம்பு ருசி, கசப்பு.

**அபிஸ் மெல்லிபிகா :** நுனிசிவப்பு, வீக்கம், உலர்ந்ததுபோ விருத்தல், பளபளப்பு, வெடிப்பு, ரணம், சிறு கொப்புளங்கள், வெண்மையான மாசு.

**அமோனியா கார்ப் :** இனிப்பு, கசப்பு புளிப்பு, அதிக நாற்றம், ரத்தம் வந்ததுபோல் பல ருசி, பேச சிரமம், பழுப்பு நிறம்.

**அம்ப்ரா க்ரிஸியா :** பால் குடித்தபின் புளித்த ருசி. காலையில் கசப்பு ருசி, நாக்கின் அடியில் புற்றுக்கட்டிகள்.

**அயிலாந்தஸ் :** நாக்கு வறண்டு உலர்ந்து வெடித்திருத்தல் அல்லது ஈரமாகவும் வெண்மையான மாசு படிந்திருத்தல், காரமான புளித்த ருசி, நாற்றம்.

**அர்ஜண்டம் நைட்ரிகம் :** அடிநாக்கு கருஞ் சிவப்பு நிறமாக இருத்தல், நுனி நாக்கு சிவந்தும் வலியுடனுமிருத்தல், நாக்கிலுண்டாகும் புண்கள் விரைப்பாகவும் கண்களுக்கு நன்ருய் புலப்படும் வண்ணமும் இருத்தல்.

**அலுமின :** உள்நாக்கு நீண்டுபோனதால் மூச்சுவிடத் தடைப் படுதல், நாக்கில் தித்திப்பு ருசி அல்லது கொஞ்சமும் ருசி யின்மை, ஏராள உமிழ்நீர் உற்பத்தி

**ஆண்டிமோனியம் க்ருடம் :** அடையாகப் பால்போல் வெளுத்த மாசு படிதல், மஞ்சள் நிறமுள்ள உமிழ்நீர், உப்புக்கரித்தல், கசப்பு ருசி.

**ஆண்டிமோனியம் டார்ட்டாரிகம் :** வாயிலும் நாக்கிலும் அம்மை போன்ற சிறு சிறு கொப்புளங்கள் தோன்றுதல், கோடிழுத்தாற்போல் நீளமான சிவப்பு, நாக்கினடியில் அதிக சிவப்பு நிறம், வரட்சி, நாக்கு முழுதும் கெட்டியான வெண்மையான மாசு மூடிக்கொண்டிருத்தல், நாக்கை யசைப்பதற்கும் மிகுந்த சிரமமாகவிருத்தல், புளித்த கசப்பான ருசி.

**ஆரம் ட்ரிபில்லம் :** வீக்கம், வெடிப்பு.

**ஆரம் மூரியாடிகம் :** புற்று.

**ஆர்னிகா :** வெண்மையான மாசு. கட்டிகட்டியாக ரத்தங் கொட்டுதல்.

**ஆர்சனிகம் ஆல்பம்:** நாக்கினடியில் எரிச்சல், வீக்கம், நுனி காய்ந்து ரணப்பட்டுச் சிவந்திருத்தல், கொப்புளங்கள். (வாயில் பார்க்க.)

**ஆஸிட் ஆக்ஸாலிக்:** வீக்கம், சிவப்பு. எரிச்சல், காய்ந்திருத்தல் கெட்டியான வெளுத்த மாசு, குமட்டல், தாகம், ருசியின்மை, புளிப்பு ருசி,

**ஆஸிட் கார்பாலிக்:** பயங்கர வீக்கம், சிவப்பு அல்லது கருப்பு வாயில் வெண்மையான குழிப்புண்கள்.

**ஆஸ்ட் நைட்ரிக்:** தாகமின்மை, நாக்கில் ரணங்களும் கொப்புளங்களும். நாக்கு சுத்தமாகவும் சிவப்பாகவும் ஈரப்பசையுள்ளதாகவும் நடுவில் வெடிப்புடனுமிருத்தல்.

**ஆஸிட் பிக்ரிக்** கசப்பு ருசி,

**ஆஸிட் பென்ஸாயிக்:** ரணம்.

**ஆஸிட் மூரி:** தித்திப்பு ருசி, நாற்றம், ரணம், கறுப்பு. உலர்தல் தோல்போல் சுருங்குதல், விரைத்தல், சக்தியின்மை, உமிழ்நீர்க் கோளங்களில் வீக்கம், கருநீலநிற ரணங்கள்.

**இக்னேஷியா:** மெல்லும், பேசும் போதோ நாக்கைக் கடித்துக் கொள்ளல், புளிப்பு ருசி.

**இபிகாக்உனு:** சுத்தமாயிருத்தல் அல்லது மஞ்சள் நிற மாசு படிந்திருத்தல்.

**ஐரிஸ் வர்ஸிகோலர்:** வாயும் நாக்கும் வெந்த உணர்ச்சி, ஏராள உமிழ்நீர்.

**ஒலீமம் ஸாங்டம்:** நடுவில் சிவத்தல்.

**கல்கேரியா ஐயோடைட்:** உள் நாக்கு வளர்ச்சி,

**கல்கேரியா கார்பானிகா:** நுனி நாக்கில் எரிச்சல், உஷ்ண ஆகாரம். பானங்களால் அதிகரித்தல். காலையில் வறண்டிருத்தல், தெளிவற்ற பேச்சு, புளித்த ருசி.

**கல்கேரியா ப்ளோரிகா:** வெடித்து கனமாகவிருத்தல்.

**கன்னபிஸ் இண்டிகா:** உலோகங்களின் ருசி, திக்குதல்.

**காக்குலஸ்:** நாக்கின் பாரிச வாயுவால் பேச முடியாமை. பசியின்மையுடன் உலோகங்களின் ருசி.

**காப்ஸிகம்:** எரிச்சலுள்ள சிறு கொப்புளங்கள், தொட்டால் வலி உண்டாதல். (டான்ஸில், தொண்டையில் பார்க்க.)

**காமோமில்லா:** மஞ்சள் நிறம், கசப்பு ருசி, இரவில் அதிக உமிழ்நீருற்பத்தி, நாக்கில் குழிப்புண்.

**காம்போரா:** சில்லிப்பாகவும், நடுங்கிக் கொண்டுமிருத்தல். பலமின்றியும், புரியாமலும் பேசுதல்.

**கார்டூஸ் மரியேனஸ்:** வெண்மையான மாசுபடிதல், கசப்பு ருசி.

**கார்பன் ஸல்ப்:** உணர்ச்சியற்றிருத்தல், சில்லிப்பு, விரைப்பு, எரிச்சல்.

**கார்போவெஜி:** வெண்மையான அல்லது சற்றுப் பழுப்பான மாசு.

**காலின்ஸோனியா:** மஞ்சள் மாசு, கசப்பு ருசி.

**காலீ ஐயோ:** உள் நாக்குத் தளர்ந்து தொங்குதல்.

**காலீகார்ப்:** வெளுத்தல்.

**காலீ க்ளோரிகம்:** எரிச்சல்.

**காலீ பாஸ்:** பழுப்பான மாசு நிறைந்திருத்தல், காலையில் அளவுக்கு மீறி யுலர்தல்.

**காலீ பைக்ரோமிகம்:** வரட்சி, பிசின்போன்ற உமிழ் நீர், வயிற்றுக்கடுப்பில் நாக்கு பளபளப்பாகச் சிவந்து வழ வழப்பாக வரண்டிருத்தல், மயிர் சிக்கிய உணர்ச்சி.

**காலீப்ரோமேடம்:** உள்நாக்கில் ரத்தத் திரட்சி, உணர்ச்சியின்மை.

**காலீ மூரி :** நாக்கின் அடியில் வெண்மையான அல்லது பழுப்பு நிறமான மாசுபடிதல். வரட்சி, குழ குழப்பு.

**காலீ ஸல்ப் :** மஞ்சள்நிற மாசு, குழகுழப்பு. ருசியின்மை.

**காலோஸிந்திஸ் :** மிகக் கசப்பு ருசி, நாக்கில் மணலிருப்பது போல் சொரசொரப்பாகவும் நாக்கு வெந்திருப்பது போன்றும் உணர்ச்சி.

**கால்மியா :** பிடிப்பு வலி.

**காஸ்டிகம் :** தெளிவற்ற பேச்சுடன் பாரிச வாயுவால் பீடிக்கப் படுதல்.

**குப்ரம் மெடாலிகம் :** பாம்புபோல் நாக்கு அடிக்கடி சுருங்கிக் கொண்டும் விரிந்துகொண்டுமிருத்தல், பாரிச வாதம், அமித உமிழ்நீர், குழ குழப்பு, உலோகங்களின் ருசி.

**கோக்கஸ் காக்டி :** உள் நாக்கு வளர்ச்சியால் அடிக்கடி கனைத்தல்.

**கோனியம் :** ரணமாயிருக்கும் உணர்ச்சி.

**க்ராபைடிஸ் :** எரிச்சலுள்ள சிறு கொப்புளங்கள்: அதிக உமிழ் நீர் உற்பத்தி.

**க்ரிஸோட் :** தண்ணீர் கசப்பு ருசியாக விருத்தல்.

**க்ரோடேலஸ் ஹாரிடஸ் :** மஞ்சள் நிறமாதல். நாக்கு அழர்ச்சி.

**சின்னியம் ஆர்ஸனிகம் :** வெண்மையான மாசு, சில சமயங் களில் குழகுழப்பான மஞ்சள் நிறமுள்ள மாசுபடிவதுடன் கசப்பு ருசி, பசியின்மை, அதிகத் தாக வரட்சி.

**செலிடோனியம் :** கெட்டியான மஞ்சள் மாசு அதிகக் கசப்பு உமிழ்நீர்.

**செனபோடியம் :** நுனியில் சிறு கொப்புளங்கள்.

**சைனு :** அழுக்குப் போன்ற மாசு படிதல், நுனி நாக்கில் எரிச்சல், கசப்பு ருசி, எந்த ஆகாரமும் உப்புக்கரித்தல்.

**டயஸ்கோரியா :** மாசு படிதல், கசப்பு ருசி.

டிஜிடாலிஸ்: நாக்கு சுத்தமாகவிருத்தல்.

தராக்ஸகம்: வெண்மையான மெல்லிய ஏடை போன்ற மாசு படிதல், ரணம், மாசு பிய்ந்து கீழே சிவந்த ரணங்களை யுண்டாக்குதல், கசப்பு ருசி, ஏப்பம் அதிக உமிழ் நீருற் பத்தி. பித்த உபரியில் நாக்கில் மாசு படிதல்.

தூஜா: நுனியில் வலி, நாக்கின் பக்கங்களில் முக்யமாக அடிப்பாகத்தில் சிறு கொப்புளங்கள். இவைகளில் வலி.

தெரிபிந்த்: சிவந்த கண்ணாடி போன்ற பளபளப்பான நாக்கு (டைபாய்டு ஜுரத்தில்) வழவழப்பு.

நக்ஸ் மாஸ்சாடா: நாக்கு வாயின் மேல் பாகத்தில் ஒட்டிக் கொள்ளுதல், ஆனால் கொஞ்சமும் தாகமின்மை,

நக்ஸ் வாமிகா: வெண்மை அல்லது மஞ்சள் நிற மாசு படிந்தி ருத்தல். கசப்பு ருசி, புளித்த நாற்றம்.

நேட்ரம் கார்ப்: காய்ந்திருத்தல், நுனியில் எரிச்சல், ருசியறியும் சக்தி மாறி விடுதல்.

நேட்ரம் பாஸ்: ஈரப்பசை, மெல்லிய மாசு, அடிப்பாகத்தில் கெட்டியான மஞ்சள் நிற மாசு படிதல். வாயின் மேற் பாகத்தில் கெட்டியான மஞ்சள் நிற மாசு படிதல்.

நேட்ரம் மூரி: உப்புக் கரிப்பு அல்லது கசப்பு ருசி, நாக்கு உலர்ந்தும் கனமாகவுமிருத்தல், நாக்கில் சிறு கொப்புளங் கள், மயிர் சிக்கிய உணர்ச்சி, கோடுகள் வரையப்பட்டது போலிருத்தல், உணர்ச்சியற்றிருத்தல்

நேட்ரம் ஸல்ப்: சிவந்திருத்தல், நுனியில் எரிச்சலுடன் கொப்பு ளங்கள், பழுப்பு நிறமும் கசப்பு ருசியுமுள்ள கெட்டியான மாசு படிதல்.

நைக்டாந்தஸ்: மஞ்சள் நிற மாசு.

**பாப்டீஷியா:** வீங்கித் தடித்திருத்தல், நடுவில் காய்ந்தும் சிவந்தும்ருத்தல். பேச முடியாமை, மஞ்சள் நிற நாக்கு, நடுவில் மஞ்சளாகவும் ஓரங்களில் சிவந்து பளபளப்பாகவுமிருத்தல், வெடிப்பு, காலையில் காய்ந்தும் பழுப்பு நிறமாகவுமிருத்தல்.

**பாரிடா கார்ப்:** வயதானவர்கட்கு நாக்கு விரைப்பாகவிருத்தல், வாதத்திலிழுத்திருத்தல், பேசமுடியாமை.

**பாரிடா முரியாடிகா:** வெண்மையாகவும் வெடித்துமிருத்தல்.

**பாரிஸ்:** வரட்சி, ஆனுல் தாகமின்மை,

**பாஸ்பரஸ்:** நாக்கில் ரணங்கள், பால் குடித்தபின் புளிப்பு ருசி, நாக்கு உலர்ந்து வீங்கி அசைக்க முடியாமலிருத்தல், கருப்புநிறப் பொருக்குகள் படிந்திருத்தல், வெல்வெட்டுப் போன்ற மாசு படிந்திருத்தல்: வெடிப்புகளுடன் காய்ந்து சுருங்கி நடுவில் மஞ்சள் அல்லது வெண்மை நிறமாகவிருத்தல்.

**பிஸ்மத்:** வெண்மை, வீக்கம், அதிக உமிழ்நீர், தித்திப்பு அல்லது உலோக ருசி.

**பெர்பெரீஸ் அக்யூபோலியம்:** மஞ்சள் பழுப்பு கலந்த கெட்டியான மாசு.

**பெர்பெரீஸ் வல்கேரிஸ்:** சிறு கொப்புளம், புண்.

**பெர்ரம் பாஸ்:** ரத்தங் கசிவது போன்ற ருசி.

**பெர்ரம் மெடாலிகம்:** ஆகாரங்களெல்லாம் கசப்பாக விருப்பது போல் தோன்றுதல்.

**பெல்லடோன்னு:** அழர்ச்சி, அதிக வீக்கம், நடு நாக்கில் நல்ல சிவப்பு, ஓரத்தில் மங்கின சிவப்பு,

**பெல்லாண்ட்ரியம்:** எதுவுங் தித்திப்பாகவே இருத்தல்.

**பைடோலக்கா:** சொர சொரப்பு, வெண்மையான மாசு, நுனி சிவப்பு. விழுங்கும்போது அடி நாக்கில் அதிகத் தாங்க முடியாத வலி, நாக்கின் அடிப்பாகத்தில் கனமான மாசு, நாக்கை நீட்டும்போது அடி நாக்கில் வலி.

**பைரோஜினியம் :** சிவப்பு, காய்ந்திருத்தல். குமட்டல், வாந்தி. நாக்கு சுத்தமாகவும், வழவழப்பாகவும், நல்ல சிவப்பாக வும், வார்னிஷ் தடவியது போலவுமிருத்தல், தித்திப்பு ருசி, நாற்றம்.

**போடோபில்லம் :** எரிச்சல் உணர்ச்சி.

**போராக்ஸ் :** நாக்கின்மேல் புண்கள், ரணங்களிலிருந்து ரத்தங் கசிதல்.

**பிரையோனியா :** உலர்ந்திருத்தல். மஞ்சள் நிறமாகவோ, பழுப்பு நிறமாகவோ யிருத்தல். வயிற்றுக் கோளாறு களில் வெண்மை நிறமாகவிருத்தல், மாசு படிதல். கசப்பு ருசி.

**ப்ரோமியம் :** நாக்கிலிருந்து வயிறு வரை எரிச்சல்.

**ப்ளம்பம் :** நடுங்குதல், ஓரம் சிவப்பு, பக்ஷவாதம்போல் நீட்ட முடியாமை.

**ப்ளாண்டகோ :** அதிக உமிழ்நீருற்பத்தி.

**மங்கானம் :** சிறு கழலைக் கட்டிகள்.

**மெக்னீஷியா கார்ப் :** திடீரென்று பேச்சு திக்கல், கசப்பு புளிப்பு ருசி, உலர்தல், ரத்தமய உமிழ்நீர்.

**மெக்னீஷியா பாஸ் :** வீங்குதல்.

**மெர்க்குரியஸ் ஐயோ ப்ளேவஸ் :** அடியிலும் நடுவிலும் கனமான மஞ்சள் நிற மாசு, ஓரம் சிவத்தல்.

**மெர்க்குரியஸ் கரோஸிவஸ் :** தடித்தல், வீக்கம், அதிக உமிழ்நீர், தாக வரட்சை.

**மெர்க்குரியஸ் டல்ஸிஸ் :** கருத்தல்.

**மெர்க்குரியஸ் ஸொலுபுலிஸ் :** வீக்கம், கெட்டி, உலர்தல், விரைப்பு, கறுப்பு அல்லது கருஞ்சிவப்பு, எரிச்சல், பற்க ளால் அழுத்தினால் நாக்கில் குழி விழுதல். பேச்சு வேக மாகவுந் திக்கலுடனுமிருத்தல். அல்லது பேசவே முடியாமை.

**மைரிகா :** கனமான மெழுகுபோன்ற மஞ்சள் நிற மாசுபடிதல்.

**ரஸ்டாக்ஸ் :** காலை நேரங்களிலும், ஆகாரம் உட்கொண்ட பின்னும் களிம்பு நாற்றமடித்தல், ஆகாரம் கசந்த ருசி. நாக்கு உலர்ந்து வெடித்து நுனியில் முக்கோணச் சிவப்பு நிறத்துடனிருத்தல், கொப்புளங்கள். ரணம், சிவத்தல், வெடிப்புகள், ரத்தக் கசிவு. தூங்கிக்கொண்டிருக்கும் போது சில சமயங்களில் ரத்தங் கலந்த உமிழ்நீர் வருதல்.

**ரூமக்ஸ் :** மஞ்சள் நிற மாசு படிதல்.

**ரோஹிடாக் :** நடுப்பாகம் வரட்சி. கசப்பு ருசி, ஆகாரம் உண்ட பின் சமனம்.

**லாக்கெஸிஸ் :** தோலைப் போலிருத்தல், கஷ்டத்துடன் பேச முடிதல் அல்லது எப்போதும் ஏதாவது பேசிக்கொண்டே யிருத்தல், நாக்கை வெளியே நீட்ட எத்தனிக்கும்போது அதன் பலஹீனத்தால் அது வெளியே வராமல் பற்களுக்கு அடியில் மாட்டிக் கொள்ளுதல், நுனி நாக்கில் சிவந்த நிறக் கொப்புளங்கள், சாப்பிடும் ஆகாரங்களெல்லாம் புளிப்பாயிருப்பதுபோன்ற ருசி. வெளியே நீட்டும்போது நடுங்குதல், உலர்தல், கருத்த நிறம்.

**லெப்டாண்டிரா :** மஞ்சள் நிறம்.

**லைகோபோடியம் :** ஊசலாடுதல், கனம் விரைத்தல், பேசக் கஷ்டம், புரியாத பேச்சு, நாக்கின் மேலுங் கீழும் ரணம். நுனி நாக்கில் கொப்புளம்.

**வலேரியானு :** நாற்றம், கனமான மாசு, குழகுழப்பு, கொழுப்பு நாற்றம்.

**வெராட்ரம் விரைட் :** நடுவில் ஒரு சிவப்புக் கோடு நெருப்பால் சுடப்பட்டது போலிருத்தல்.

**ஜெல்ஸிமியம் :** மறத்திருத்தல், வெளியே நீட்ட முடியாமை, நடுங்குதல், சிவந்த ரணம், அதிகக் கனமாகவிருப்பதால் பேச முடியாமை.

**ஸபடில்லா :** வெள்ளை அல்லது மஞ்சள் நிற மாசு படிதல், சிறு கொப்புளங்கள்.

**ஸல்பர்:** உலர்தல், வெடித்தல்.

**ஸிகூடா விரோஸா:** வீக்கம், பேசமுடியாமை, துடித்தல்.

**ஸிங்கம் மெடாலிகம்:** தித்திப்புருசி அல்லது ரத்தத்தின் ருசி.

**ஸிபிலினம்:** மாசு படிதல், நாற்றம், ஒரு பக்க பக்ஷவாதம்.

**ஸிலிகா:** மயிர் சிக்கிய உணர்ச்சி, ஓரங்களில் சதையைத் தின்னும் ரணம், அதிக தாகம்.

**ஸீகேல்:** பக்ஷவாத நிலைமை, பேச்சுத் தடுமாற்றம், மனம், மஞ்சள் கலந்த வெண்மையான மாசு, உலர்தல், வெடித்தல் மைபோன்ற ரத்தக்கசிவு, விரைத்தல் குருகுருத்த உணர்ச்சி.

**ஸெபீயா:** நாற்றம், கசப்பு, உப்புருசி, வெண்மை நிறம், மாதவிடாயில் மட்டும் நாக்கு சுத்தமாக விருத்தல்.

**ஸைக்ளமென்:** நுனி சிவத்தல், ருசி தெரியாமை, தாகவரட்சையின்மை,

**ஸ்டானம்:** மஞ்சள் நிறமான மாசு.

**ஹயாஸ்யாமஸ்:** சிவப்பு, பழுப்பு, உலர்தல், வரட்சி, வெடித்தல், சுட்ட தோல்போல் வலுவிழத்தல். பேச முடியாமை, நீட்டவும் உள்ளேயிழுக்கவும் முடியாமை.

**ஹைட்ராஸ்டிஸ்:** பெருத்திருத்தல், வெண்மை மாசு, தடிப்பு, ரணம், நுனி வெடிப்பு.

**ஹைபெரிகம்:** அடியில் வெண்மையான மாசு, நுனி சுத்தமாக விருத்தல்.

# காது

**அகேரிகஸ்:** பனி வெடிப்பு போலிருத்தல், அதிக அரிப்பு, எரிச்சல் செவிடு அல்லது கேட்கும் சக்தியதிகரித்தல், காலையில் உபாதிகள் சமனம், மாலையில் உபாதிகள் அதிகம்.

**அகோனைட் :** சங்கீதத்தில் அதிக வெறுப்பு, எரிச்சல். கொட்டுங் கிழிக்கும், வெட்டும் வலி, கர்ஜிக்கும் சப்தம், சப்தத்தால் உபாதிகள் அதிகரித்தல்.

**அக்னஸ் காஸ்டஸ் :** கர்ஜித்தல், கணீரென்று ஒலிகள், காது கேளாமை.

**அபிஸ் மெல்லிபிகா :** நடுக்காதில் அழர்ச்சி, சிவந்து வீங்கியிருத்தல்.

**அமோனியா கார்ப் :** அரிப்பு, சீழ், குடைதல், வலது காது வீக்கம். காது கேட்க சிரமப்படுதல்.

**அமோனியா மூரி :** வலது காதில் கொட்டுதல், குடைதல், எரிச்சல், சீழ்வருதல், குளிர் காற்றில் பிடிப்பு வலிகள், கேளாமை, சொரிந்தாலும் சமனப்படாத அரிப்பு, குளிர் காற்றில் காதில் எரிச்சல்.

**அம்ப்ரா க்ரிஸியா :** பிற்பகலில் ஊதும் குடையும் உணர்ச்சி, கெடிகாரத்திற்குச் சாவி கொடுப்பது போல் சப்தம், ஊறுதல், அரித்தல், சில்லிப்பு, மந்தம், வலக்காதில் கடுமையான கிழிக்கும் வலி, மேல் வாயிலிருந்து இடது காது வரை வலி.

**அயிலாந்தஸ் :** விழுங்கும்போது வலி.

**அர்ஜண்டம் நைட்ரிகம் :** காதுகளில் பஸ் என்ற ஒலி, கிறுகிறுப்பு.

**அலுமினு :** குடைதல், மணி அடிப்பதுபோன்ற ஓசை, ஏராளமான அதிக சீழ் வெளியாதல், மாலையில் ஒரு காது மட்டும் சிவப்பு, சூடு, காதுகளைச் சுற்றித் துணியிருக்கும் உணர்ச்சி, விழுங்கினுல் அதிகமாதல், விழுங்கும்போது அல்லது அரைக்கும்போது காதுகளில் படக்கென்ற ஒடியும் சப்தம், இரவில் பிடிப்பு வலி.

**அல்லியம் ஸீபா :** நீர் சீழ் முதலியவை வெளியாதல், கிண்கிண்ணென்ற சப்தம், நெற்றியிலிருந்து பிடிப்பு வலி.

**அனகார்ட்டியம் ஓரியண்டேல் :** இடது காதின் துவாரத்தில் வலிப்புபோல் சுருங்கிக் கொள்ளுதல்.

**அஸபோடிடா:** நாற்றமுள்ள பதார்த்தம் வடிதல், காது கேளாமை, உள்ளிருந்து வெளிப்புறம் செல்லும் வலி.

**அஸ்குலஸ் ஹிபோ:** எரிச்சல், அமுக்குதல், வலக் காதில் கிண் கிண்ணென்று ஒலித்தல்.

**அண்டிமோனியம் க்ரூடம்:** சப்தங் கேட்டவுடன் விழித்துக் கொள்ளல், குடைதல், வலி, சீழ் வடிதல், வலது காது கேளாமை.

**ஆண்டிமோனியம் டார்ட்டாரிகம்:** இடது காதில் படபடப்பு, குடைதல்.

**ஆரம் மூரியாடிகம்:** காதுகளின் பின் பக்கத்தில் பொறுக்கு, கணகணவென்ற சப்தம், செவிடு, காதுகளின் உட்புறம் அகன்றும் காலியாகவுமிருக்கும் உணர்ச்சி.

**ஆரம் மெடாலிகம்:** குடைதல், காதிலும் மூக்கிலும் வரட்சி, காது கேளாமை, நாற்றமுள்ள சீழ் வெளியாதல், கோளங் களில் வீக்கம், தொட்டால் வலி.

**ஆர்னிகா:** அடிபட்டதால் காது கேளாமை, பஸ் என்ற சப்தம், குடைதல், செவிடு, காது கேளாமை.

**ஆர்ஸனிகம் ஆல்பம்:** அதிநுட்பமாகச் சப்தம் கிரஹித்தல் அல்லது காது கேளாமை, மனிதர்கள் பேசுவது மட்டும் காது கேளாமை, காதிலிருந்து கெட்டதாகவும் ஏராள மாகவும் பட்டவிடங்களைப் புண்ணாக்கும் நீர் வெளியாதல், காதில் வலி, பலத்த இரைச்சல்.

**ஆஸிட் ஆக்ஸாலிக்:** காதுகளில் திருகு ஆணியிருப்பதுபோல் தோன்றுதல்.

**ஆஸிட் நைட்ரிக்:** டான்ஸில்கள் பெருத்ததனுல் காது கேளாமை, யூஸ்டேகியன் குழாய்களில் அடைப்பு, காது களின் எலும்புகள் துவண்டு போதல்.

**ஆஸிட் பிக்ரிக்:** ஓசை, கிருகிருப்பு, காதுக்குள் சிரங்குகள்.

**ஆஸிட் பென்ஸாயிக்:** காதுகளின் பின் வீக்கம்.

**ஆஸிட் ப்ளூவாரிக் :** அரிப்பையுண்டாக்கும் காரமுள்ள நீர் வெளிப்படுதல்.

**ஆஸிட் மூரி :** கேளாமை, அதிக சப்தம் பொறுக்கமுடியாமை.

**இக்கிநேஷியா :** குடைதல், கணகணவென்ற சத்தம், சங்கீதம் கேட்பதால் சௌகர்யம், பலமான காற்றடிப்பதுபோல் சப்தம்.

**இபிகாக்உனு :** சப்தம் சகிக்க முடியாமை.

**ஐயோடியம் :** டான்ஸில் அமுர்ச்சியுடன் குடைதல், காது கேளாமை.

**ஐரிஸ் வர்ஸிகோலர் :** காதில் கிண்ணென்ற ஒலி.

**ஓலியாண்டர் :** நெற்றியிலும் காதுகளின் பின்னும் எரிச்சல், கடித்தல் முதலிய உணர்ச்சி.

**ஓநோஸ் மோடியம் :** காதுகளில் கிண்ணென்ற ஒலி.

**கல்கேரியா கார்பானிகா :** காது கேளாமை, தண்ணீரில் வேலை செய்ததனுலேற்பட்ட செவிட்டுத்தனம், வாயை மெல்லும் போது கடக் கடக்கென்று தாடையில் ஓசை, காதுகளில் கிறுகட்டிகள், உமிழ்நீர்க் கோளங்களில் வீக்கம், காதுகளிலிருந்து நாற்றமுள்ள சீழ் ஏராளமாக வெளிவருதல்.

**கல்கேரியா ப்ளோரிகா :** செவிடு, குடைதல், கிண் கிண்ணென்ற ஒலிப்பு, காதின் உள்ளே பல நாட்களாகச் சீழ் பிடித்திருத்தல்.

**கல்கேரியா ஸல்ப் :** காது கேளாமை, சீழ் வடிந்து கொண்டேயிருத்தல், காதுகளைச் சுற்றிலுஞ் சிறு கொப்புளங்கள், சிரங்குகள். மஞ்சளாகவும் கட்டியாகவுமுள்ள வஸ்து வெளியாதல்.

**கன்னபிஸ் இண்டிகா :** புடைக்கும் வலி, கணீரென்ற ஓசை, இரைச்சல்.

**கன்னபிஸ் ஸடைவா :** கணீர் கணீரென்று ஒலித்தல்.

**காக்குலஸ் :** தண்ணீர் வேகமாக ஓடிவருதல் போலிருத்தல், செவிடு.

**காப்பியா க்ரூடா :** சிறு சப்தங்களையும் நன்கு கிரஹித்தல்.

**காப்ஸிகம் :** சீழ் வடிதலால் ஏற்படும் செவிட்டுத்தனம், இருமும்போது வலி, புறஜவ்வில் குழிவிழுதல், குழிகளில் கெட்டியான மஞ்சள்நிறமுள்ள சீழ் நிறைந்திருத்தல், நடுக்காதில் நீடித்த சீழ், காதுகளின் கீழ்க்கோளங்களில் வீக்கம், வலி, சூடான காதுகள்.

**காமொமில்லா :** குடைதல், வலி, புண், சூடும், வீக்கமும் நோயாளிக்கு அதிக கோபத்தையுண்டாக்கும். பிடிப்பு வலி, தாடையிலேற்படும் பிடிப்பு வலி உட்காதுகளுக்கும் பற்களுக்கும் பரவுதல்.

**கார்பன் ஸல்ப் :** சீழ் ரத்தங்கலந்த நாற்றமுள்ள போக்கு, குடைதல். கணீர் கணீரென்ற சப்தம், முதலில் சிறிய சப்தத்தையும் கிரஹிக்கும் தன்மை, பிறகு அரைச்செவிடு அல்லது, முழுச்செவிடு, மலங்கழித்தபின் வலது காதில் பிடிப்பு வலி.

**கார்போ அனிமாலிஸ் :** எந்தப் பக்கத்திலிருந்து சப்தம் வருகிறதென்று அறிய முடியாமை, காதுக்கோளங்கள் வீங்கியும் வலியுடனுமிருக்கும். செவிடு, காதுகளிலிருந்து பட்டவிடங்களைப் புண்ணுக்கும் சீழ் வடிதல்.

**கார்போவெஜி :** சில சரும உபாதிகளின் பின் காதில் சீழ் வடிய ஆரம்பித்தல், காதுகள் காய்ந்திருத்தல், குறும்பி தாறுமாறாக ஏற்படுதல். வெளிக் காதில் தோலுரிந்து கொண்டேயிருத்தல், காதுகளில் கிண் கிண்ணென்ற ஒலியுடனும் குமட்டலுடனும் கிறுகிறுப்பு.

**காலாடியம் :** காது துடித்தல்,

**காலீ கார்ப் :** பிடிப்பு வலி, அரிப்பு, வெடிப்பு, குடைதல், கிண் கிண்ணென்ற சப்தம்.

**காலீ பாஸ் :** குடைதல், பஸ்ஸென்ற ஒலி,

**காலீ பைக்ரோ :** கிழிக்கும் வலியுடன் வீக்கம், கெட்டியான கம்பிபோன்ற மஞ்சள் நிறமான போக்கு. இடது காதில் கடுமையான பிடிப்பு வலி,

**காலீ மூரி:** நடுக்காதில் நீடித்த சீழ்வருதல், காதுகளின் கீழ்க் கோளங்களில் வீக்கம். காதில் அடைப்பும் சப்தமும்.

**காலீ ஸல்ப்:** யூஸ்டேகியன் குழாய் சம்பந்த செவிடு. மஞ்சள் நிறமான வஸ்து வெளியாதல்,

**காலோஸிந்திஸ்:** காதுகளில் எதிரொலியுண்டாதல்.

**காஸ்டிகம்:** செவிடு, குடைதல், கிண்கிண்ணென்ற ஒலி, துடித்தல். வார்த்தைகளும் நடக்குஞ் சப்தமும் எதிரொலித்தல், நடுக்காதில் நீடித்த சீழ்க்கட்டுதல். குறும்பி அதிகமாகச் சேருதல்.

**கோனியம்:** காது கேளாமை, ரத்தம் போன்ற பதார்த்தம் வெளி வருதல்.

**க்ராபைடிஸ்:** காதுகளின் பின்புறத்தில் பச்சைப் புண், கசகசப்பு, சிரங்குகள். காதினுட்புறங் காய்ந்திருத்தல், சாப்பிடும்போது காதில் மடக்கென்று ஒடியும் சப்தம், காதுகேளாமை, சந்தடி நிறையவிருக்குமிடங்களில் காது நன்றாக கேட்டல், மெல்லிய வெண்மையான பொருக்குகள்.

**க்ரிஸோட்:** காது கேளாமை, மாதவிடாயின் முன்னும் பின்னும் குடைதல்.

**க்ரோடேலஸ் ஹாரிடஸ்:** கடுமையான ரத்தப்பெருக்கு.

**க்வாய்கம்:** இடது காதில் கிழிக்கும் வலி, வலிகள் விட்டு விட்டு வருதல்.

**க்ளோனுயின்:** காதுகளில் கிண்ணென்ற ஒலி, காது கேளாமை.

**சின்னினம் ஸல்ப்யூரிகம்:** மணியடிப்பது, இஞ்சின் ஊதுவது, சமுத்திர அலை, இவைகளைப் போன்றும், கடுமையான இரைச்சலும் காதில் கேட்பதுபோலிருத்தல், செவிட்டுத் தனம்.

**செனபோடியம்:** காதில் துப்பாக்கிவெடிக்கும் சப்தம், பல்வலி காதுகளுக்குப் பரவுதல்.

**ஸைனு :** கிண் கிண்ணென்ற ஒலி, சப்தத்தில் காது கேளாமை, வெளிக் காதைத் தொட்டால் வலி.

**டல்கமாரா :** வலி, நடுக்காதில் ரணம், காதுகளின் அடியி லுள்ள கோளங்கள் வீங்குதல்.

**டிஜிடாலிஸ் :** கொதிக்குந் தண்ணீரிலிருந்து உண்டாகும் சப்தம்போல் மளமள வென்ற ஓசை.

**டெல்லூரியம் :** காதுகளின் பின்புறம் படைகள், நடுக்காதில் ரணம், தண்ணீர் போன்ற காரமான நாற்றமான நீர் வெளிவருதல், அரிப்பு, வீக்கம், துடிப்பு, காது கேளாமை, ஜவ்வு கிழிந்து விடுதல், திடீரென்று ஏதோ காதை அடைத்துவிட்ட உணர்ச்சி.

**ட்யூபர்குலீனம் :** இடைவிடாத நாற்றமுள்ள சீழ் வெளிவருதல், காதின் ஜவ்வு கிழிந்துவிடுதல்.

**தூஜா :** நீடித்து சீழ் வருதல், ஏராளமான சீழ் வருதல், விழுங் கும் போது வெடிக்குஞ்சப்தங் கேட்டல்.

**தெரிபிந் :** மணியடிப்பது போன்ற ஒலி கேட்டல்.

**நக்ஸ் வாமிகா :** மணியடித்தல்போல், உஸ் என்ற சப்தம், வலி, அரிப்பு.

**நேட்ரம் ஆர்ஸனிகம் :** உஷ்ணம், அரிப்பு, பலவிதமான சப்தங் கள் கேட்டல், காதுகளின் பின்புறம் தாங்கமுடியாத அரிப்பு.

**நேட்ரம் கார்பானிகம் :** சரிவரக் கேளாமை, சப்தத்தைக்கேழ்க்க சகிக்காமை, செவிடு, காதுகளின் கீழ்க்கோளங்கள் நிரந் தரமாகப் பருத்திருத்தல், சங்கீதங்கேட்டால் உடனே தற்கொலை செய்துகொள்ள வேண்டுமென்ற எண்ண முண்டாதல்.

**நேட்ரம் மூரியாடிகம் :** கேட்பதற்குக் கஷ்டம், பஸ் என்ற சத்தம் தேனீயின் ரீங்காரம், மணி அடிப்பது வெடிப்பதுபோன்ற சப்தம் கேட்டல், சீழ் வெளிப்படல், பற்களை அசைக்கும் போது காதுகளில் வெடிப்பதுபோன்ற சத்தம்.

**நேட்ரம் ஸல்ப் :** மணியடிப்பதுபோன்ற ஓசை கேட்டல், அடைபட்டது போலிருத்தல், வலது காதில் சீழ் வருதல்.

**நேட்ரம் ஸாலி :** எப்போதும் இரைச்சல், படுத்தால் அதிகமாதல், காதுக்கோளாறுகளால் ஏற்படும் கிறுகிறுப்புக்குக் குறைந்த வீர்யம் பயன்படும். காதுக்கோளாறுகளுக்கு உயர்ந்த வீர்யம் பயன்படும்.

**பல்லாடியம் :** ஒரு காதிலிருந்து உச்சந்தலை வழியாக மறு காதுக்குச் செல்லும் வலி.

**பல்ஸடில்லா :** மஞ்சள் கலந்த பச்சை நிறமும் கெட்டியான நாற்றமுள்ள சீழ் போன்ற நீர் வெளியாதல், காதுகள் அடைபட்டது போன்ற செவிடு, இரவுகளில் காதில் அதிக வலி, பகலில் வலி யிருப்பதில்லை. காதிலிருந்து ஏதோ வெளியேற சிரமப்படுவது போன்ற வலி.

**பாரிடா கார்ப் :** சப்தம் கிரகிக்கும் நரம்புகளின் கோளாறுகளினால் வியாதியஸ்தர்கட்கேற்படும் செவிட்டுத்தனம், சரியானபடி கேழ்க்காமை, "பஸ்ஸ்" என்ற சப்தம், வெடிப்பதுபோல், தட்டுவதுபோல், கர்ஜிப்பதுபோல் சப்தம், இவைகள் உள் சுவாசம் இழுக்கும்போது அதிகம், காதுகளில் சொறி சிரங்குகள்.

**பாரிடா மூரியாடிகா :** செவிட்டுக்கு மிகக் குறைந்த வீர்யங்களில் கொடுக்கவும். காதுகளின் கீழ்க் கோளங்கள் பருத்தல், நாற்றமுள்ள சீழ் காதிலிருந்து வெளிப்படல், மூக்கும் நடுக்காதும் அழற்சியுற்றிருத்தல், காதுகளின்பின் சிரங்குகள், கண் மூக்கு காதுகளிலிருந்து நீர் வடிந்து கொண்டேயிருத்தல், இரைச்சல்.

**பாஸ்பரஸ் :** காது கேளாமை, முக்யமாகப் பிறர் பேசுவது கேளாமை, இரவுகளில் அதிக வலியுடன் காதுகளிலிருந்து சீழ் வெளிப்படல், அதிக ரத்தத் தேக்கத்தால் காதுகளில் இரைச்சல்.

**புபோ :** பிரதி சிறு சப்தத்திலும் சங்கீதங் கேழ்ப்பதிலும் வெறுப்பு.

**பெட்ரோலியம் :** காதுகளின்பின், அக்குள், கைகளில் படைகள், அதிக அரிப்பு. எரிச்சல், கெட்டியான பிசுக்கான நீரை வெளிப்படுத்துதல். பூந்தசைத் தடிப்பால் செவிட்டுத்தனம்.

**பேர்பெரீஸ் அக்யூபோலியம் :** காதுகளுக்குச் சிறிது மேல் ஒரு பட்டையை வைத்து இறுக்குவது போலிருத்தல்.

**பேர்ரம் பிக்ரிகம் :** நீடித்த செவிடு.

**பேர்ரம் மெடாலிகம் :** வலது காதில் மணி அடிக்கும் ஓசை, இடது காதில் நாற்றமான சீழ் வருதல். சிறு சப்தமும் சகிக்க முடியாமை.

**பெல்லடோன்ன :** வலது கோள வீக்கம், வலி.

**பைடோலக்கா :** காதுகளுக்குப் பக்கத்திலிருக்குங் கோளங்கள் வீங்குதல்.

**போராக்ஸ் :** சப்தங் கிரஹிக்க மந்தம், இரண்டு காதிலும் சீழ், நீர் வருதல், சிறு சத்தமுங்கேட்க சகிக்காமை.

**ப்ரையோனியா :** காதுகளின் கோளாறுகளால் தலை சுற்றல். "பஸ்ஸ்" என்ற சப்தம், இரைச்சல்.

**ப்ளாட்டின :** மறத்தல், முறுக்குவலி, கெண்டையேறுதல், இரைச்சல்.

**ப்ளாண்டகோ :** சிறு சப்தங்களைக் கேட்கச் [illegible] சக்தி. அதிக சப்தம் கேட்க சகிக்காமை, குத்து வலி, நரம்பு வலி, ஒரு காதிலிருந்து மறு காதுக்கு உள்ளே செல்லும் வலி. பல் வலியுடன் காதில் சீழ் வருதல், காதுக்கும் பல்லுக்கும் மாறி மாறி வலி வருதல் நடுக்காதுரணம்.

**மங்கானம் :** "விஸ்" சப்தம், வேகமான காற்று செல்லும் சப்தம், மூக்கு சிந்தும்போதும், விழுங்கும்போதும் காதில் உடையும் சப்தம். நாற்ற சீழ் வருதல். இடது பக்க உட்கோளம் வீங்குதல், சிவத்தல், விழுங்கும்போது இரண்டு காதுகளிலும் வலி.

**மெக்னீஷியா கார்ப் :** விஸ்; படபட, சப்தம், அழற்சி, வலி, சிவத்தல்.

**மெக்னீஷியா பாஸ்:** நரம்புக் கோளாறுல் வலி. (வலது காதில்) (குளிர் காற்ருலுங் குளிர்ந்த நீரால் கழுவினுலும் அதிகம்.)

**மெர்குரியஸ் டல்ஸிஸ்:** யூஸ்டேகியன் குழாய் ரணம், அடைப்பு இதனுல் காது கேளாமை.

**மெர்க்குரியஸ் ஸொலுபுலிஸ்:** உள்ளே, வெளியே அழற்சி. கொட்டுங் கிழிக்கும் வலி சீழ் போன்ற பசுமையாகவும் நாற்றமாகவும் நீர் வெளி வருதல். சப்தம் கிரகிக்கும் சக்தி மந்தமாதல். இது மூக்கு சிந்துவதாலும் விழுங்குவதாலும் தற்காலிக சமனம். பற்களைத் தொட்டால் வலி, காது தலைக்குச் செல்லுதல்.

**மெலிலோடஸ்:** ரத்தத் திரட்சி.

**ரஸ் டாக்ஸ்:** சீழ், இரவில் வலி, சீழும் ரத்தமும் வருதல். கேட்பது மந்தம் பக்கக் கோளம், தாடையின் கீழ்க் கோளம் பருத்தல்.

**ரானங்குலஸ்:** பிடிப்பு வலி.

**ரிஸிநஸ்:** காது இரைச்சல்.

**ரோடோடெண்ட்ரன்:** பூச்சி ஊறும் உணர்ச்சி, "பஸ்ஸ்" சப்தம், மணி அடிக்கும் ஓசைபோல், புயற்காற்றின் வலி.

**ரோஹிடாக்:** சூடு, எரிச்சல்.

**லாக்கஸிஸ்:** இடியிடித்தல் போல், தண்ணீரை வேகமாக அடித்தல்போல், காட்டு மிருகங்களின் சப்தம், ஊளையிடுதல் போல், பாடுதல்போல் சப்தங்களைக் கேட்டல். செவிடு, விழுங்கும்போது தொண்டையிலிருந்து காது வரை வலி, தொண்டை ரணத்துடன் காது நோய்கள், யூஸ்டேகியன் குழாய் அடைப்பு உஷ்ணமான ஆகாரங்களை உண்டால் காது வரை பரவும் பல் வலி.

**லாபீஸ் ஆல்பஸ்:** அழற்சி, சீழ் வருதல்.

**லாரோஸிராஸஸ்:** அரிப்பு, குருகுருத்த உணர்ச்சி, கேட்க கஷ்டப்படுதல்.

**லேடம் பாலஸ்திரி:** மணி அடிக்கும் ஓசை, காற்று வீசுவது போல் இரைச்சல், உடனே ரத்தக் கசிவு.

**லைகோபோடியம்:** விஸ், உறுமல் சத்தம், ரீங்கார சத்தம். சிறிய சப்தங்களைக் கேட்க முடிதல். மஞ்சள் நிறமான கெட்டியான நாற்றமுள்ள சீழ்.

**வலேரியானு:** அதிக கூர்மையான சப்தம் கிரகிக்கும் சக்தி. மணி அடிக்கும் சப்தம், விஸ்ஸென்ற சப்தம், சில்லிப்பால் காது வலி.

**ஸல்பர்:** ஆரம்பத்தில் அதிக உணர்ச்சி, பின் காது மந்தம், இரைதல் சீறுதல், ரீங்காரம், நீர் வடிதல், இடது காதில் குத்தும் வலி. மிக நாற்றமுள்ள சீழ், காதுகள் சிவந்திருத்தல்.

**ஸாங்குனேரியா:** காதுகளில் எரிச்சலுடன் முகம் சிவத்தல்.

**ஸிகூடாவிரோஸா:** கிழவர்களின் காது மந்தம், ரத்தங்கசிதல்.

**ஸிபிலினம்:** கேட்கும் நரம்பு பக்ஷவாதம். கூரான ஆயுதத்தால் குத்துவது போன்ற வலி, சீழ் போன்ற நீர் வருதல்.

**ஸிலிகா:** நீடித்த நாற்றமுள்ள சீழ் வருதல். நடுக்காது அழற்சி. தூரத்தில் துப்பாக்கிவெடிக்கும் சப்தம், சப்தம் கேட்பதில் வெறுப்பு பிரதிஅமாவாசை சமீபத்திலும் காதுகேளாமை, நீடித்து சீழ் வந்துகொண்டேயிருத்தல்.

**ஸிஸ்டஸ்:** காதின் கீழ்க்கோளம் வீங்குதல். நாற்றமுள்ள சீழ் வெளிப்படுதல்.

**ஸீகேல்:** இரைச்சல் மந்தம்.

**ஸெபியா:** காது, கழுத்தின்பின் படை, முதலில் ரீங்காரம், பின் செவிடு. தண்ணீர் போன்ற நீர் அல்லது நாற்றமுள்ள சீழ்வருதல்.

**ஸைக்ளமென்:** பஞ்சு வைத்து அடைத்ததுபோல் மந்தமான செவிடு. மணி அடிப்பதுபோல், ரீங்காரம், இரைச்சல்.

**ஸோரினம்:** வெளிக் காதில் நீர் கசியும் ரணம், பொருக்கு. மஞ்சளாகவும் மிக நாற்றமாகவும் சீழ் வருதல், காதிலும், காதுகளின் பின்னும் படைகள் சிறு கொப்புளங்கள்.

12

ஸ்டாபிஸாக்கிரியா : காதுகளின் பின்புறத்தில் ஈரப் பசையுள்ள படைகள், அவைகளில் நீர் வடிதல்.

ஹீபர் ஸல்பர் : "விஸ்" சத்தம், மூக்கு சிந்தினால் காதில் வெடி சப்தம் நாற்றமான சீழ், மஞ்சள் நிறம், ரத்தங்கலந்த சீழ், காதின் மேலும் பின்னும் படைகள்.

ஹெல்லிபோரஸ் : உறுமுதல், மணியடித்தல்.

ஹைடிராஸ்டிஸ் : இரைச்சல், சீழ் வடிதல், செவிடு.

# வலது காது

அமோனியா கார்ப் : வலது காது வீக்கம்.

அமோனியா மூரி : கொட்டுதல், குடைதல், எரிச்சல், சீழ் வருதல், அரிப்பு, குளிர் காற்றில் உபாதிகள் அதிகரித்தல்.

அம்ப்ரா க்ரிஸியா : கடுமையான கிழிக்கும் வலி.

அஸ்குலஸ் ஹிபோ : கிண் கிண்ணென்று ஒலித்தல்.

ஆண்டிமோனியம் க்ரூடம் : வலது காது கேளாமை.

கார்பன் ஸல்ப் : பிடிப்பு வலி, (மலங்கழித்த பின்.)

நேட்ரம் ஸல்ப் : சீழ் வருதல்.

பெர்ரம் மெடாலிகம் : மணி அடிக்கும் ஓசை.

பெல்லடோன்னு : வலதுகோள வீக்கம், வலி.

மெக்னீஷியா பாஸ்: நரம்புக்கோளாறால் வலி. குளிர்காற்றிலும் குளிர்ந்த நீரால் முகங்கழுவினாலும் உபாதிகள் அதிகமாதல்.

# இடது காது

**அனகார்டியம் ஓரியண்டேல்:** துவாரத்தில் வலிப்பு போல் வருதல், சுருங்கிக் கொள்ளுதல்.

**ஆண்டி டார்டாரிகம்:** இடது காதில் படபடப்பு, குடைதல்.

**காலீ பைக்ரோ:** இடது காதில் கடுமையான பிடிப்பு வலி.

**க்வாய்கம்:** கிழிக்கும் வலி, விட்டு விட்டு வருதல்.

**பெர்ரம் மெடாலிகம்:** நாற்றமான சீழ் வருதல்.

**மங்கானம்.** உட்கோளம் வீங்குதல். சிவத்தல்,

**ஸல்பர்:** குத்தும் வலி. மிக நாற்றமுள்ள சீழ் வருதல்.

# கன்னங்கள்

**அகோனைட்:** ஒரு கன்னம் வெளுப்பு, மறு கன்னம் சிவத்தல்.

**அக்னஸ் காஸ்டஸ்:** கன்னங்களைக் கரைக்கும் அரிப்பு, இடது கன்னத்திலிருந்து மூக்கின் மேற்புறம் பரவும் அக்கி.

**அமோனியா கார்ப்:** கடின வீக்கம், கொப்புளங்கள்.

**அமோனியா மூரி:** கன்னம் தாடைக் கோளங்களில் வீக்கம். பருக்கள்.

**அர்ஜண்டம் நைட்ரிகம்:** வட்டமாகச் சிவத்தல்.

**அர்ஜண்டம் மெடாலிகம்:** தலையில் ரத்தப் பெருக்கால் கன்னங்கள் சிவத்தல்.

**ஆண்டிமோனியம் க்ருடம்:** சீழ்க்கொள்ளும் ஆருத புண்கள்.

**ஆர்னிகா:** ஒரு கன்னம் சிவந்தும் எரிந்துகொண்டுமிருத்தல். குழி விழுதல்.

**ஆஸிட் அஸடிக்:** ஜுரத்தில் இடது கன்னம் சிவத்தல்.

**ஆஸிட் மூரி:** கன்னத்தில் உட்புறஞ் சிவத்தல்.

**இக்னேஷியா:** ஒரு பக்கத்துக் கன்னமுங் காதுஞ் சிவந்துஞ் சூடாகவுமிருத்தல்.

**கன்னபிஸ் ஸடிவா:** இடது கன்னஞ் சிவந்தும் வலது கன்னம் வெளுத்துமிருத்தல்.

**கல்கேரியா ப்ளோரிகா:** தாடையெலும்புப் பக்கமாகக் கன்னத்தில் கடின வீக்கம்.

**காக்குலஸ்:** கதகதப்பான அறையிலிருக்கும்போது கன்னங்கள் சிவந்திருத்தல்.

**காப்ஸிகம்:** கொழுத்த தொள தொளத்த சரீரங்களில் ஒரு சமயம் கன்னங்கள் சிவத்தல். மறுசமயம் வெளுத்தல். சிவந்திருக்கும்போது கன்னங்களில் சூடின்மை.

**காலீ மூரி:** கன்னங்களில் வீக்கம் வலி.

**க்வாய்கம்:** வலது தாடை யெலும்புகளிலும் கன்னவெலும்பு களிலும் பிடிப்பு வலி. மாலை 6 மணி முதல் விடியற்காலை 4 மணி வரை உபாதி அதிகம்.

**செலிடோனியம்:** கன்னம் மூக்கு மஞ்சள் நிறமடைதல்.

**பெர்பெரீஸ் வல்கேரிஸ்:** கன்னங் குழி விழுதல்.

**ப்ளம்பம்:** குழி விழுதல்.

**ரானங்குலஸ்:** மாலையில் சிவந்த கன்னங்கள்,

**ஸாங்குநேரியா:** கன்னத்தில் சிவந்த வளையம் (ஒரு கன்னத்தில் அல்லது இரண்டு கன்னங்களிலும்) வலது கன்னத்தில் சிவப்பு நிறம். வட்டமாகத் தெரிதல்.

**ஸ்டானம்:** ஒரு கன்னம், உஷ்ணம், சிவப்பு. வெளுத்து குழி விழுந்த கன்னங்கள்.

# தாடை

**அகோனைட் :** கீழ்த் தாடை வீக்கம்.

**அக்னஸ் காஸ்டஸ் :** கீழ்த்தாடை வலது பக்கக் குழியில் பிளக்கும் கிழிக்கும் வலி.

**அபிஸ் மெல்லிபிகா :** தாடையெலும்பில் கொட்டும் வலி. இடது தாடையெலும்பின் மேல் பாகத்தில் குத்தும் வலி.

**அமோனியா மூரி :** தாடைக் கோளங்களில் வீக்கம், பருக்கள்.

**ஆண்டிமோனியம் டார்ட்டாரிகம் :** வலது பொட்டில் இழுக்கும் வலி, தாடை வரை பரவுதல்.

**ஆரம் ட்ரிபில்லம் :** தாடைக் கோளங்களில் வீக்கம்.

**ஆரம் மெட்டாலிகம் :** நிறைந்த நாடியுடன் தாடைக்கோள வீக்கம்.

**ஆஸிட் அஸடிக் :** கீழ்த் தாடை கோளங்கள் வீங்குதல்.

**ஆஸிட் நைட்ரிக் :** தாடையெலும்புகள் உளுத்தல், பற்களை அசைக்கும் போது தாடைகளில் கடக் கடக்கென்ற சப்தம்.

**ஆஸிட் மூரி :** கீழ்த்தாடை தொங்குதல்.

**இக்னேஷியா :** பேசும்போது அடிக்கடி தாடைகள் மூடிக் கொள்ளுதல்.

**ஐயோடியம் :** தாடைக் கோளங்கள் வீங்குதல்.

**ஓபியம் :** கீழ்த் தாடை தொங்குதல்.

**கந்தாரிஸ் :** தாடைத் தசைகள் சுருங்குவதால் தாடையை அசைக்க முடியாமை.

**கல்கேரியா ஐயோ :** கீழ்த் தாடை உமிழ்நீர்க் கோளங்களில் அழற்சி.

**கல்கேரியா கார்ப் :** வாயை மெல்லும்போது தாடையில் கடக் கடக் என்று ஓசையுண்டாதல், கீழ்த் தாடைக் கோளங்களில் வலியுள்ள வீக்கம்.

**கல்கேரியா பாஸ் :** மேல் தாடையெலும்புகளில் வலதுபுற மிருந்து இடது புறஞ் செல்லும் வலி.

**கல்கேரியா ப்ளோரிகா:** தாடையெலும்புப் பக்கமாகக் கன்னத்தில் கடின வீக்கம். (ஈறுகளில் புண்ணுடன்)

**காமோமில்லா :** ஒரு தாடை சிவந்து சூடாகவும், மறு தாடை வெளுத்து சில்லிட்டுமிருத்தல். தாடையிலேற்படும் பிடிப்பு வலி, உட்காதுகளுக்கும் பற்களுக்கும் பரவுதல்.

**காலீ க்ளோரிகம் :** கீழ்த் தாடை கோள வீக்கம்.

**கால்மியா :** தாடை முகவெலும்புகளில் பிடிப்பு வலி.

**காஸ்டிகம் :** தாடைகளில் வலி. கீழ்த் தடையில் வாதம்:

**குப்ரம் மெட்டாலிகம் :** வாயில் நுரையுடன் தாடைகளில் இழுப்பு

**க்வாய்கம் :** வலது தாடையெலும்பிலும் கன்னவெலும்பு களிலும் பிடிப்பு வலி. மாலை 6-மணி முதல் விடியற்காலம் 4-மணி வரை உபாதி அதிகம்.

**செனபோடியம் :** பல் வலி தாடைக்குப் பரவுதல்.

**டல்கமாரா :** தாடை வலி, கண் காதுகளின் நடுவில் பாய்தல். வலிகளில் சில்லிடல், குளிர் காற்றுப் பட்டால் வலி.

**நக்ஸ் வாமிகா :** கீழ்த்தாடை தொங்குதல். காதுகளின் கீழ்க் கோளங்களில் வீக்கம்,

**நேட்ரம் ஸல்ப் .** தாடைகளில் பருக்கள் தொட்டால் எரிச்சல்.

**பல்ஸடில்லா :** தாளம்மை-

**பாப்டீஷியா :** தாடை உப்புதல்.

**பாஸ்பரஸ் :** கீழ்த் தாடையெலும்புகள் உளுத்துப் போதல்.

**ப்ரோமியம் :** இடது பக்கத் தாளம்மை.

**ப்ளாண்டகோ :** தாடை வீக்கம்.

**மெர்க்குரியஸ் ஸொலுபுலிஸ் :** தாடையெலும்புகளில் சொத்தை விழுதல்.

**லாக்கஸிஸ் :** தாடைப் பிடிப்பு, வாயை மூட முடியாமை,

**லைகோபோடியம் :** கீழ்த் தாடை தொங்குதல்.

**ஸபடில்லா :** படக் படக் என்ற சத்தம்,

**ஸிகூடா :** இறுக்கப்பட்டிருத்தல்.

**ஸிலிகா :** கீழ்த் தாடையெலும்பு சொத்தை விழுதல், தாடைகளில் படை உஷ்ணமாகவிருத்தல்.

**ஸிஸ்டஸ் :** கீழ்த் தாடையெலும்பு சொத்தை விழுதல்,

**ஸெபீயா :** தாடைகளின் கீழ்க்கோள வீக்கம்.

**ஸோரினம் :** கீழ்த் தாடை தொங்குதல், கோள வீக்கம், தொட்டால் வலி.

**ஸ்டிக்டா :** கீழ்த்தாடையில் கூரான ஆயுதத்தை உட் செலுத்துவது போன்ற வலி.

**ஸ்ட்ரமோனியம் :** தொங்குதல்.

**ஸ்பாஞ்சியா :** தாடை, கோளம் வீங்குதல்.

**ஸ்பைஜீலியா :** கீழ்த் தாடையில் கிழிக்கும் வலி ஆரம்பித்து காதுவரை செல்லுதல், தாடையெலும்பில் நம நமவென்ற வலி.

**ஹயாஸ்யாமஸ் :** கீழ்த் தாடை தொங்குதல்.

# டான்ஸில்

**அபீஸ் மெல்லிபிகா :** டான்ஸிலில் நீர்ச்சுரப்பு, உள்நாக்கு பை போல் தொங்குதல். இதனால் மரணாவஸ்தை நேரிடல், வாயும் தொண்டையும் காய்ந்திருத்தல், விழுங்கும்போது கொட்டும் வலிகள்.

**அமோனியம் கார்ப் :** அழற்சி.

**அயிலாந்தஸ் :** சிவப்பு, பழுப்பு, வீக்கம், நீர்க்கட்டு, ரணம், வெளிக் கழுத்தில் அதிக வலி, வீக்கம், கெட்டுப்போன கருத்த ரத்தம் அல்லது நாற்றமுள்ள நீர்க்கசிவு. ஆனால் தொண்டையிலிருந்து யாதொன்றும் வெளிவராது.

தொண்டையிலும் டான்ஸிலிலும் அழற்சி, டான்ஸில்களில் நிறைந்த கடூரமான ரணங்கள். டான்ஸில்கள் நிறைந்தவைபோல் ரணப்பட்டிருத்தல், தொண்டையிலும் டான்ஸில்களிலும் அழற்சி, ரணம்.

**அலுமன் :** குழிப்புண், ஓரம் கடினமடைதல்.

**அலுமினு :** உள்நாக்கு நீண்டு போனதால் மூச்சுத் தடைப்படுதல்.

**அஸ்குலஸ் ஹிப்போகாஸ்டானம் :** கறுத்து வீங்கியிருத்தல், இடப் பாகத்தில் அதிகம்.

**ஆஸிட் நைட்ரிக் :** டான்ஸில்கள் பெருத்ததினுல் காது கேளாமை.

**ஆஸிட் ப்ளூவாரிக் :** டான்ஸிலில் சிவந்த ரணங்கள்.

**ஆஸிட் மூரி :** டான்ஸில்களும் உள்நாக்கும் வீங்கியிருத்தல்.

**இக்னேஷியா :** சிறிய குழிப்புண்களுடன் கடினமாகவும் அழற்சியுடனும் உள்ள டான்ஸில்கள் மிகப் பெரிதாதல், அதில் சிறிய ரணங்கள், விழுங்கும்போது சிரமம்.

**ஐயோடியம் :** டான்ஸில்களும் உள்நாக்கும் வீங்கி நீண்டிருத்தல்.

**கல்கேரியா ஐயோடேட் :** டான்ஸில் பருத்தல், உள்நாக்கு வளர்ச்சி.

**கல்கேரியா கார்ப் :** உள்நாக்கும் டான்ஸில்களும் வீங்குதல், கொழுத்த தொள தொளத்த சரீரம்.

**கல்கேரியா பாஸ் :** நீடித்த வியாதி, எலும்புகளும் பாதிக்கப் படுதல்.

**கல்கேரியா ஸல்ப் :** டான்ஸில்களில் சீழ்ப்பிடித்து சீழ் வருதல்.

**காப்ஸிகம் :** இடது டான்ஸிலில் அழற்சியும் வலியும்.

**கார்போ அனிமாலிஸ் :** கடினமாகவும் எரிச்சலாகவுமுள்ள டான்ஸில்கள்.

**காலீ ஐயோடேட்டம்:** உள்நாக்கு தளர்ந்து தொங்குதல்.

**காலீ பைக்ரோமிகம்:** உள்நாக்கு அழற்சியுடன் சிவப்பாக மாறுதல், காய்ந்து சொரப்பாகவிருத்தல், தளர்ந்து கண்ணீர் கொப்புளங்கள்போல் வீங்கியிருத்தல்.

**காலீ ப்ரோமேடம்:** உள்நாக்கில் ரத்தத் திரட்சி, உணர்ச்சி யின்மை.

**காலீ மூரியாடிகம்:** டான்ஸிலிடிஸ். டான்ஸில்களில் அழற்சி, மிக வளர்ந்து விடுவதால் சுவாசிக்கக் கஷ்டம் தொண்டையிலும் டான்ஸில்களிலும் பழுப்பான புள்ளிகள்.

**கோக்கஸ் காக்டி:** உள்நாக்கு வளர்ச்சியால் அடிக்கடி கனைத்தல்.

**கோனியம்:** வயதானவர்கட்கு டான்ஸில்கள் பருத்தல். ஆனால் சீழ்ப்பிடிப்பதில்லை.

**க்வாய்கம்:** டான்ஸிலிடிஸ் என்னும் தொண்டைச் சதை நோய்.

**நக்ஸ் வாமிகா:** உள்நாக்கு வீங்கியிருத்தல்.

**நேட்ரம் ஆர்ஸனிகம்:** தொண்டை நீலநிறமாகவும் அதிக வீக்கத்துடனும் அதிக வலியில்லாமலும் உள்நாக்கு தண்ணீர் நிரம்பிய பைபோல் தொங்குவதும் பலஹீனமான தாறுமாறான நாடியுடனும் சரீரம் சில்லிட்டு வியர்வையுடனுமிருத்தல், உள்நாக்கு நல்ல சிவப்பு நிறமாகவிருத்தல்.

**நேட்ரம் ஸல்ப்:** டான்ஸில்களில் ரணம்.

**பாரிடா கார்ப:** குளிர் காற்று தாக்கியதாலும் ஈரமுள்ள இடங்களிலிருந்தாலும்வலது பக்கத்துடான்ஸில்அழற்சியுறுதல். டான்ஸில்கள் வீங்கிப் பழுத்து சீழ்ப்பிடித்தல், டான்ஸில்களில் நோய், டான்ஸில்களும் உள்நாக்கும் கறடுதட்டி வீங்கியிருத்தல், பருத்திருத்தல், அடிக்கடி சீழ்பிடித்தல், பிரதி தடவை சளி பிடிக்கும்போதும் டான்ஸில்களில் சீழ் பிடித்தல்.

**பாரிடா மூரியாடிகா:** டான்ஸில்களில் சீழ் பிடித்தல், டான்ஸில்கள் பருத்திருத்தல்,

**பாஸ்பரஸ்:** தொண்டையில் இரு பக்கங்களிலுமுள்ள டான்ஸில்ஸ் என்னுங் கோளங்களும் உள்நாக்கும் வீங்கியிருத்தல். உள்நாக்கு நீண்டு வறண்டு எரியும் உணர்ச்சியுடனிருத்தல்.

**பெல்லடோன்ன:** கழுத்து வீங்குதல், தலை கனம், தொண்டை சிவந்திருத்தல், வலதுபக்க டான்ஸில் வீங்கியழற்சியுற்றிருத்தல்.

**பைடோலக்கா:** டான்ஸிலிடிஸ் நோயில் மிகப் பயன்படும் ஔஷதம். உள்நாக்கு வீங்கிப் பெருத்துத் தொங்குதல் டான்ஸில்கள் வீங்கிப் பெரிதாகி நீல நிறமாகி ரணப்பட்டிருத்தல்.

**ப்ரோமியம்:** டான்ஸில்கள் நல்ல சிவப்பாகவும் ரத்தங் கசிந்து கொண்டுமிருத்தல்.

**மெர்க்குரியஸ் ஐயோ ப்ளேவஸ்:** வலது டான்ஸில் வீங்குதல், பருத்தல், விழுங்கும்போது வலி.

**மெர்க்குரியஸ் ஐயோடேடஸ் ரூபர்:** இடது டான்ஸிலில் அழற்சி வீக்கம்

**மெர்க்கூரியஸ் கரோஸிவஸ்:** டான்ஸில்கள் வீங்கி ரணப்பட்டிருத்தல், உள்நாக்கு வீங்கித் தொங்குதல், நீண்டிருத்தல்.

**மெர்க்குரியஸ் ஸொலுபுலிஸ்:** உள்நாக்கு வீக்கம், நீண்டிருத்தல். டான்ஸில் வீங்கிச் சீழ் பிடித்து வருதல். டான்ஸில் ரணம், கருஞ் சிவப்பு நிறம். வாயில் அதிக உமிழ் நீருற்பத்தி, துர்நாற்றம். நாக்கு தடித்திருத்தல்.

**ரஸ்டாக்ஸ்:** வலது பக்க டான்ஸிலின் மேல் மஞ்சள் நிற மாசு படிந்திருத்தல்.

**லாக் கானினம்:** வலது புறமும் இடது புறமுமாக மாறி மாறி டான்ஸில் உபாதிகள்.

**லாக்கெஸிஸ்:** உள்நாக்கு நீண்டிருத்தல், பக்கங்கள் நீலநிறமாகவும் வீங்கியும் ரணப்பட்டுமிருத்தல், இறுக்க உணர்ச்சி, விழுங்கும்போது திணறுதல், இடது பக்கம் முதலில் பாதிக்கப்பட்டு அதன் பின் வலது பக்கம் பாதிக்கப்படும்

டான்ஸில் நோய். இடது பக்க டான்ஸில் நோய், (தொண்டை, கழுத்தில் பார்க்க.) தண்ணீர் குடிக்கும் போது அடைக்கும் உணர்ச்சி, சரீரத்தில் மேல் துணி படுவது சகிக்காமை.

**லைகோபோடியம்:** வலது பக்க டான்ஸில்கள் பாதிக்கப்படுதல் அல்லது உபாதி முதலியவை வலது பக்கத்தில் ஆரம்பித்து அதன் பின் இடது பக்கத்துக்கு, செல்லுதல், விக்கல், சீழ்ப் பிடித்தல், நீடித்துப் பெரிதாகியிருத்தல், முதலில் வலது டான்ஸில் பருத்து அதன் பின் இடது டான்ஸில் பாதிக்கப்படுதல்.

**வைதியா:** உள்நாக்கு வளர்ந்து தொங்குதல், ரணம் எரிச்சல் அடிக்கடி கனைத்தல்.

**ஸல்பர்:** டான்ஸில்கள் பெருத்து நல்ல சிவப்பு நிறமாகவும் சீழ்பிடித்துமிருத்தல், அடிக்கடி நோய் வருதல்.

**ஸிலிகா:** அடிக்கடி டான்ஸில்களில் சீழ் பிடித்தல், டான்ஸில்களில் குண்டூசியால் குத்துவதுபோன்ற உணர்ச்சி.

**ஹீபர் ஸல்பர்:** டான்ஸில்கள் மிகப் பெரிதாதல், அதிசீக்கிரத்தில் வீங்கிச் சீழ்ப் பிடித்தல், வீக்கம், தொண்டையில் கொக்கிமாட்டியிருப்பது போன்ற உணர்ச்சி.

# குரல்வளை

**அர்ஜண்டம் மெடாலிகம்:** குரல்வளையின் மேற்பாகத்தில் இருமும் போது வலி, விழுங்கும்போது வலி தெரியாது. பேசினாலும் பாடினாலும் வலியதிகரித்தல், க்ஷயசம்பந்த வியாதிகள், சிரித்தால் கோழையுண்டாகி இருமுதல், நீடித்த தொண்டை யழற்சி, பாடகர், பிரசங்கிகளின் தொண்டைக் கரகரப்பு, உரக்கப் படித்தால் தொண்டை கமருதல்.

**அல்லியம் ஸீபா:** குரல்வளையில் வெடிப்பு ஏற்படுதல், இருமலை அடக்க முயற்சித்தல், குரல்வளையைப் பிடித்துக் கொள்ளுதல்.

**ஆரம் ட்ரிபில்லம்:** பேசும்போதோ அல்லது பாடும்போதோ குரல் கம்முதல், அதிகமாகத் தொண்டையை உபயோகப் படுத்திப் பேசுவதாலும், பாடுவதாலும் ஏற்படும் கொற கொறப்பு, பாடகர்களின் அல்லது பிரசங்கிகளின் வலி யுள்ள தொண்டை, தொண்டையில் அதிகக் கோழை, ஆனால் கோழையை வெளியேற்ற தொண்டையில் நாற்ற முள்ள குழிப்புண்கள்.

**கந்தாரிஸ்:** குரல்வளையில் பலஹீனத்துடன் கம்மிய குரல்.

**காலீ மூரி:** குரல் கம்முதல்.

**க்ராபைடிஸ்:** குரல்வளையைத் தன்னிஷ்டம்போல் அடக்கியாள முடியாமை.

**ஸ்பாஞ்சியா:** குரல்வளையில் நன்கு வேலை செய்யும் ஔஷதம்.

# தொண்டை

**அகோனைட்:** சிவத்தல், உலர்தல், கட்டுதல், அழற்சி, காதுக் குழாய்களின் பக்கத்தில் குத்தல், வலியாலும் எரிச்சலா லும் அடிக்கடி விழுங்குதல்.

**அக்டியா ரஸிமோஸா:** தொண்டைக் குழியில் கூச்சம்.

**அக்னஸ் காஸ்டஸ்:** அரிப்பு.

**அபிஸ் மெல்லிபிகா:** டான்ஸிலில் நீர்ச் சுரப்பு, உள்நாக்கு பை போல் தொங்குதல், இதனால் மரணாவஸ்தை நேரிடல், சிவப்பு, விழுங்கும்போது கொட்டும் வலி, சதை வளர்ச்சி, வேக்காடு, குளிர்ந்த பானத்தால் சமனம், கெட்டியான கோழை, கரகரப்பு, கெட்டியான ஆகாரங்களை உண்ண முடியாமை, தொண்டையின் பின் சிறு கொப்புளங்கள், அபாயகரமான வலியில்லாத தொண்டை வீக்கம்.

**அபோஸினம் :** கோழை வெளியாதல்.

**அமில் நைட்ரேட் :** இறுகிய உணர்ச்சி, சூரிய இடியில் அடைப்பு.

**அமோனியா கார்ப் :** தொண்டை, டான்ஸில் அழற்சி, தொண்டையில் சிக்கிய உணர்ச்சி, விழுங்க முடியாமை, சதை வளரும் நோய், வெளித்தொண்டை வீக்கம்.

**அமோனியம் மூரியாடிகம் :** அரிப்பு, எரிச்சல், ரத்தம் கக்குதல், தொண்டைக்குழியில் எரிச்சல். பிடிப்பு, டான்ஸில் வீக்கம். ஜலதோஷத்தின் பின் விழுங்க முடியாமை. ரணம், பிசின்போன்ற கோழை, இது வெளிவராமை.

**அம்ப்ரா க்ரிஸியா :** காலையில் தாகமில்லாத வரட்சி, காலையில் விரைப்பு காற்றடித்த பின் வரட்சி.

**அயிலாந்தஸ் :** சிவப்பு அல்லது பழுப்பு நிறம். வீக்கம், நீர்க் கட்டு தொண்டையிலிருந்து எதுவும் வெளிவராமை, தொண்டையிலும் டான்ஸிலிலும் அழற்சி, ரணங்கள், டான்ஸில்களில் மறைந்த கடூரமான ரணங்கள். கெட்டுப் போன கறுத்த ரத்தம் அல்லது மெல்லிய நாற்றமுள்ள நீர் கசிதல்.

**அரலியா ரஸி மோஸா :** "இஸ்" சத்தம்.

**அர்ஜண்டம் நைட்டிரிகம் :** சங்கீதம் பாடுபவர்களுக்கு இருக்கும் நீடித்த தொண்டைப்புண், தொண்டையில் ஏதோ சிறு சிலாம்பு இருக்கும் உணர்ச்சி, கயிறுபோன்ற கோழை இருமும்போது வெளியாதல், குளிர்ந்த பானங்களால் சமனம். விழுங்குவதற்குக் கஷ்டம், சருமத்தின்மேல் சதை வளருதல், தொண்டைக் கம்மல், வீக்கம், குளிர்ந்த வஸ்துக்களையே உண்ணப் பிரியம். குளிர் காற்றினால் சௌகர்யம். உள்நாக்கு வளர்ந்து தொங்குதல், சுவாசக் குழாயில் ஆகாரம் நுழைதல், திரவ ஆகாரங்களையே விழுங்க முடிதல்; கெட்டியான ஆகாரங்களை விழுங்க முடியாமை.

**அர்ஜண்டம் மெடாலிகம் :** ரணம், நீடித்த ரணம், சதை வளரும் நோய். இருமும்போதும் வெளிமூச்சு விடும்போதும்

தொண்டையில் வலி, புண்ணிருப்பது போன்றிருத்தல். ஆனால் விழுங்கும்போது ஒன்றுமிருக்காது, பழுப்பு நிற முள்ள பாகுபோன்ற கோழை, இருமினால் சுலபமாக வெளிவருதல். நீடித்த தொண்டை அழற்சி. பாடக, பிரசிங்கிகளின் தொண்டைக் கரகரப்பு, உரக்கப்படித் தால் தொண்டை கம்முதல், (குரல்வளையில் பார்க்க)

**அலுமினு:** தொண்டையில் ஏதோ சதை தொங்கும் உணர்ச்சி யால் மூச்சு தடைபடுதல். இருமினாலும் தொண்டைக் குழியிலிருக்கும் கோழை வெளிவராமை, வலி, வரட்சி, கம்மல், பச்சைப்புண் வலி, வரட்சையுடன் தொண்டை யில் உருண்டையான வஸ்து இருக்கும் உணர்ச்சி. மாலை யில் கெட்டியான பிசுக்கென்ற கோழையை அடிக்கடி உமிழ நேரிடல். உட்கொள்ளும் ஆகாரம் உள்ளேயே போகாததுபோல் தொண்டையிலிருக்கும் உணர்ச்சி, சிவத்தல், பாடகர்களின் தொண்டைக்கம்மல், விழுங்கும் போது ஒட்டிக்கொள்ளுதல்.

**அல்லியம் ஸீபா:** காதுகளிலிருக்கும் குழாய்வரை பரவும் வலி. தொண்டை சுருங்குதல், மாலை வரை சூட்டுடன் தாகம். இருமலால் தொண்டையில் வெடிப்பு. பேசும்போது வலி, ஜலதோஷத்தால் தொண்டைக்கம்மல். குறுகுறுத்த உணர்ச்சி.

**அஸபோடிடா:** சங்காதோஷத்தில் வயிற்றில் ஒரு பந்து உண்டாகி தொண்டைக்கு வரும் உணர்ச்சி.

**அஸ்குலஸ் ஹிபோகாஸ்டானம்:** நீடித்த தொண்டை ரணம், காய்ந்தும் எரிச்சலுடனுமிருத்தல். விழுங்குவதற்கு சிரமம், கயிறு போன்று சற்று இனிப்பான கோழை, இருமும்போது வெளியாதல். தொண்டையில் குத்தும் உணர்ச்சி, ஏதோ சிக்கியிருப்பது போன்ற உணர்ச்சி, வரட்சி, எரிச்சல், தொண்டை சுருங்குதல், அழற்சி, உள் நாக்கு கறுத்தும் வீங்கியுமிருத்தல். இடப்பாகத்தில் அதிகம். அடிக்கடி விழுங்க நேரிடுதலும், மந்தமான வலியும் நெருப்புப் போன்ற எரிச்சலும், அடிக்கடி வரும் நரம்பு சம்பந்த வலி.

**அஸ்க்ளிபியாஸ் ட்யூபரோஸா :** இறுக்கம், வரண்ட இருமல்

**ஆண்டிமோனியம் க்ரூடம் :** கெட்டியான மஞ்சள் நிறக் கோழை தொண்டைக்குழியில் பலவீனம். பலஹீனமான குரல் அல்லது அடியோடு போய்விடுதல். (இரவில் ஸ்நானம் செய்ததால் அல்லது வெய்யிலில் அதிக நேரம் நின்றதால் இக்குறிகளுண்டாதல்) இளைப்பாறினால் சமனம்.

**ஆண்டிமோனியம் டார்ட்டாரிகம் :** தொண்டைக் குழியில் கொர கொரப்பு இருமும்போதோ மூச்சு விடும்போதோ கள களப்பு சத்தத்துடன் கோழை. பிறருக்கும் கேட்கும் கள களப்பு சத்தம், கோழையுடன் சிறு சிறு சுவாசம் விழுங்க சிரமம் அல்லது விழுங்க முடியாமை.

**ஆரம் ட்ரிபில்லம் :** பச்சைப்புண். விழுங்கமுடியாமை, கொர கொரப்பு. பாடும்போதோ, பேசும்போதோ குரல் மாறுதல், தொண்டையில் நாற்றமுள்ள குழிப்புண்கள், பாடகர்கள் பிரசங்கிகளின் தொண்டை வலி, அதிக கோழை ஆனால் கோழையை வெளியேற்ற முடியாமை. அதிக தொண் டையை உபயோகப்படுத்தி பேசுவதாலோ ஏற்படும் கொற கொறப்பு.

**ஆரம் மூரியாடிகம் :** தொண்டையில் குருகுருப்பு, இருமிய பின் சூடு. அடிக்கடி விழுங்குதல், தொண்டையில் ஏதோ முளை சிக்கிய உணர்ச்சி. தாடைக்கோளங்களில் வீக்கம்.

**ஆரம் மெட்டாலிகம் :** விழுங்கும்போது தைக்கும் வலி.

**ஆர்ஸனிகம் ஆல்பம் :** காற்றுக்குழாய், தொண்டைக் குழி முதலியவற்றில் எரிச்சல். தொண்டையில் சதை வளரும் நோய்.

**ஆர்ஸனிக் ஐயோடைட் :** ஆர்ஸனிகம் ஆல்பத்தின் தொண்டை குறிகளை மூக்கிலிருந்து புண்ணுண்டாக்கும் கடுமையான நீர்வடிதல்.

**ஆஸிட் அஸடிக் :** தொண்டையில் தயிர் கடைவதுபோல் கள களப்பு சப்தம், அழற்சியுடன் இருமல், முகம் சிவந்திருத் தல், தொண்டைக் கம்மல், விழுங்குவதற்கு சிரமமாக விருப்பதால் மெதுவாக ஆகாரம் உட்கொள்ளல், அழற்சி வேக்காடுடன் வலிக்குந் தொண்டை.

**ஆஸிட் ஆக்ஸாலிக் :** இறுக்கும் வலி. தொண்டைக் குழியில் கொர கொரப்பு, பேசும்போது தொண்டையில் அடைக்கும் உணர்ச்சி, மலம் போன பின் தொண்டை வரட்சி, விழுங்க சிரமம். புளித்த ஏப்பம், கெட்டியான கோழை வெளிவருதல். நீடித்த தொண்டை ரணம். திறந்த வெளியில் நடக்கும்போது தொண்டையில் குருகுருப்பால் இருமல். தொண்டைக்குழி வீங்கியிருப்பதுபோல் தோன்றுதல்.

**ஆஸிட் கார்பாலிக் :** தொண்டைமுழுவதும் எரிச்சல். டிப்தீரியாவில் மூக்கையும் வாயையும் பிடித்தல்.

**ஆஸிட் நைட்ரிக் :** குத்துவலி. முள்ளிருப்பது போன்ற உணர்ச்சி மீனின் முள் சிக்கிய உணர்ச்சி விழுங்கும்போது காதுகள் வரை வலிபரவுதல். ஆகாரம் உட்கொள்ளும்போது தொண்டையில் அடைப்பு. தொண்டைக்கம்மல், பேச முடியாமை, ரணம். கிழிந்து போனதுபோன்ற ரணங்கள். தொண்டையில் மஞ்சள்நிறப் புற்றுகள். மூத்திரம் குதிரை மூத்திரம்போல் நாறுதல்.

**ஆஸிட் பென்ஸாயிக் :** காலையில் தொண்டைக்கம்மல். விழுங்கும்போது தலையில் கடக்கென்ற சப்தம்:

**ஆஸிட் ப்ளுவாரிக் :** கிரந்தி நோயால் தொண்டையில் சிவந்த ரணம் விழுங்கும்போது வலி.

**ஆஸிட் மூரியாடிகம் :** தொண்டையிலிருந்து மார்புவரை எரிச்சல் எதையாவது விழுங்க எத்தனித்தால் மார்பில் பிடிப்பும் தொண்டையடைப்பது போலிருத்தலும்.

**ஆஸிட் லாக்டிக் :** வயிற்றிலிருந்து தொண்டைவரை எரிச்சல். ஏப்பம் அடிக்கடி சளியை காறி உமிழ்தல். தொண்டையில் ஏப்பம் உஷ்ணம். காரமான நீர் வருதல்.

**இக்னேஷியா :** வலி, கொற கொறப்பு, இறுக்குதல் அடிக்கடி சுருங்குதல். தூசியிருப்பதுபோன்ற உணர்ச்சி, அருவருப்பு இருந்துகொண்டேயிருத்தல். விழுங்கும் சமயத்தில் தைக்கும்வலி விழுங்காமலிருக்கும்போது தொண்டையில் ஏதோ

உருண்டையோ அல்லது மீனெலும்போ சிக்கியவுணர்ச்சி, இவ்வுணர்ச்சி பானங்கள் அருந்தும்போதுமிருக்கலாம், கெட்டியான உணவு உட்கொள்வதால் சௌகர்யம். வெற்றெனவிழுங்கும் போது வலி, உஷ்ணமான ஈரநப் புள்ள பருவங்களில் தொண்டையழற்சி, புண், கெட்டியான ஆகாரங்களை உட்கொள்வதால் சமனம்.

**இபிகாக்உஞ :** சில்லிப்பின் பின் தொண்டைக் கொர கொரப்பு, இருக்கும்.

**ஐயோடியம் :** அடிக்கடி காறிக்கொண்டிருத்தல். விழுங்குதல், கொர கொரப்பு, பிடிப்பு விரைப்பு, குழிப்புண் சிறுத்திருத்தல்.

**ஐரிஸ் வர்ஸிகோலர் :** தொண்டையில் குரு குருப்பும் எரிச்சலும், வாந்தியெடுத்தால் புண் எரிச்சலேற்படுதல்.

**கந்தாரிஸ் :** குரல்வளையில் பலவீனத்துடன் கம்மியகுரல், தொண்டை எரிச்சல், சுருங்குதல், தொண்டையினுட்புறத்தில் வெண்மையான குழிப்புண்கள், திரவபதார்த்தங்களை உட்கொள்ள மிகவும் சிரமப்படுதல்.

**கல்கேரியா கார்பானிகா :** தொண்டைக்குழி:– க்ஷயரோக சம்பந்தத் தொண்டையுபாதிகள், காலையில் கொர கொரப்பு வலியின்மை, மாலையில் படுத்தவுடன் "விஸ்" என்று நெஞ்சில் கடைதல். நீடித்த தொண்டைரணம் வலியால் குரல்வளை பாதிக்கப்படுதல். மாதவிடாயாகும்போது தொண்டைவலி, காதுக்குப் பரவுதல், மேல்வாயில் வீக்கத்துடன் விழுங்கும்போது தொண்டையில் சுருங்குவது போன்ற உணர்ச்சி: உள்நாக்கு வீங்குதல், கீழ்த் தாடைக்கோளங்கள் வலியுடன் வீங்கியும் கடினமாகவுமிருத்தல்.

**கல்கேரியா பாஸ் :** இரவு பகல் எப்போதுந் தொண்டையில் கொர கொரப்பு, வரட்டிருமல், பேசவாரம்பிக்குமுன்னல் தொண்டையைக் கனைத்து விழுங்க வேண்டிவருதல் க்ஷயரோக சம்பந்தத் தொண்டையழற்சி, தொண்டை வலியுடனிருமல்.

**கல்கேரியா ப்ளோரிகா :** எரிச்சல், சூடான பானங்களால் சமனம்.

**கல்கேரியா ஸல்ப் :** மஞ்சளானவஸ்து வெளியாதலுடன் தொண்டை வலி. தொண்டையில் முளையிருக்கும் உணர்ச்சி டான்ஸில்கள் சீழ்க்கொண்டு சீழ்வருதல், தொண்டையை அடைத்தல்.

**கன்னபிஸ் இண்டிகா :** காய்தல், அதிக தாகம், குளிர்ந்த தண்ணீரில் பிரியம்

**கன்னபிஸ் ஸடீவா :** காற்று அல்லது கசப்பான தொண்டையை ரணமாக்கும் ஏப்பங்கள், தொண்டை காய்ந்திருத்தல்,

**காக்குலஸ் :** பக்ஷவாயு, தொண்டைச்சதை வளரும் நோய்க்குப் பின் விழுங்க முடியாமை, வரட்சி, எரிச்சல்.

**க்ரக்டஸ் க்ராண்டி :** மூச்சுத் திணறும்படியான இறுக்கம் அடிக்கடி விழுங்கப் பிரியப்படுதல்.

**காப்ஸிகம் :** (உள்நாக்கில் பார்க்க) தொண்டை யழற்சியுடன் கறுத்த சிவப்பாகவும் வரண்ட அல்லது புள்ளிகள் போன்ற குழிப்புண்களுடனிருத்தல். அதிக எரிச்சல்; விழுங்குவதற்கு சிரமம், தொண்டை, குடல், மூத்திரப்பை முதலியவைகளிலிருந்து ரத்தங்கலந்த கோழை, சீழ், சீதம் வெளியாதல், இறுக்கும் உணர்ச்சி.

**காமோமில்லா :** தொண்டைக்குழியில் ரணம்; கொர கொரப்பு, கீழ்த் தாடைக்கோளங்களும் வீங்குதல், ஏதோ முளையிருப்பது போல் இறுக்கவுணர்ச்சி, வலி.

**கார்பன் ஸல்ப் :** தொண்டைக்குழியில் அதியுணர்ச்சி, ஈரநப் புள்ள பருவங்களில். தொண்டைக் கொர கொரப்பு. (ஆஸ்துமாவில் பார்க்க) எப்போதும் ஏதோ உருண்டையான வஸ்து தொண்டையிலிருக்கும் உணர்ச்சி இருமியவுடன் எரிச்சலும் விழுங்கியவுடன் வலியும், சதைவளரும் நோய் நாற்ற சுவாசம், தண்ணீர் குடித்தால் எதுக்களித்தல்.

**கார்போ அனிமாலிஸ்:** கடினமாகவும் எரிச்சலுமுள்ள டான்ஸில்கள்.

**காலாடியம்:** தொண்டைக்குழியிலிறுக்க உணர்ச்சி.

**காலின்ஸோனியா:** தொண்டையை அதிகமாக உபயோகித்ததால் இருமல்.

**காலி ஐயோ:** தொண்டையின் பக்கங்களிலுள்ள கோளங்கள் வீங்கியும் பருத்துமிருத்தல், உள்நாக்கு தளர்ந்து தொங்குதல்.

**காலி கார்ப்:** வறட்சி, உலர்தல், சொர சொரப்பு, எலும்பு சிக்கியது போன்ற வலி, விழுங்க சிரமம், ஆகாரம் மெதுவாக உட்செல்லுதல், காலையில் கோழை சேருதல், குரல் கம்முதல், கொர கொரப்பு (இருமலில் பார்க்க.)

**காலி பாஸ்:** கொஞ்ச உணவும் தொண்டையை யடைத்தல், அழுகிய வலியுள்ள தொண்டை, குரல்வளையின் பக்ஷவாதம்.

**காலி பைக்ரோ:** குரல் கம்முதல் மாலையில் அதிகரிப்பு, தொண்டையில் கிசு கிசுப்பு உணர்ச்சி, உள்நாக்கு அழற்சியுடன் சிவப்பாக மாறுதல், காய்ந்து சொர சொரப்பாக விருத்தல், தளர்ந்து தண்ணீர் கொப்புளங்களைப்போல் வீங்கியிருத்தல். அதிக களைப்புடனும் மிருதுவான நாடியுடன் தொண்டைச் சதை வளரும் நோய், வாயிலிருந்தும் தொண்டையிலிருந்தும் வெளியாகும் போக்கு கெட்டியாகவும் கம்பி போன்றுமிருத்தல்.

**காலி ப்ரோமேடம்:** தொண்டைக்குப் பரவும் ஜலதோஷம் முக்கியமாகத் திரவ பதார்த்தங்களை விழுங்க முடியாமை.

**காலி முரி:** தொண்டைக் குழியில் பிசின் போன்ற பதார்த்தம் மூடிக்கொண்டிருத்தல், டான்ஸில்களில் அழற்சி, டான்ஸில்கள் மிக வளர்ந்துவிடுவதால் சுவாசிக்க கஷ்டம், தொண்டையிலும் டான்ஸில்களிலும் பழுப்பான புள்ளிகள், குரல் கம்முதல்.

**காலீ ஸல்ப்:** தொண்டை ஆபரேஷனின் பின் குறட்டை விடுதல், வாயால் மூச்சு விடுதல் (நீடித்த)

**காஸ்டிகம்:** பாடகர்கள், பிரசங்கிகளுக்கு ஏற்படும், குடல் கோளாறுகள், தொண்டையில் பந்து ஏறும் உணர்ச்சி.

**குப்ரம் மெடாலிகம்:** தண்ணீர் குடிக்கும்போது தொண்டையில் கொப்பளிக்கும் சப்தமேற்படுதல்.

**கொரால்லியம் குப்ரம்:** தொண்டையில் காற்றுப்பட்டாலும் இருமல் உண்டாதல். இடது பக்கத் தாடைக் கோளங்கள் வீங்கி வலித்துக்கொண்டிருத்தல். இது விழுங்கும் போதும் தலையை முன்புறமாகக் குனியும்போதும் அதிகரித்தல்.

**கோக்கஸ் காக்டி:** கிசுகிசுப்பு. தொண்டைக்கு அப்பாலுள்ள விடத்தில் ஏதோ ஒரு சிறு துணுக்குயிருக்கும் உணர்ச்சி. அடிக்கடி விழிங்கநேரிடல் கெட்டியான வெண்மை நிறக் கோழை, தொண்டையை யிறுகப் பிடித்துவிடுவதுபோல் சிரமத்துடன் வெளியாதல்.

**கோனியம்:** தொண்டை வறட்சியால் இருமல்.

**க்ராபைடிஸ்:** குரல்வளையைத் தன்னிஷ்டம்போல் அடக்கியாள முடியாமை.

**க்ரிஸோட்:** தொண்டையில் சதை வளரும்நோய் தொண்டையில் ஏதோ ஊரும் உணர்ச்சியுடன் மாலையில் இருமல். தொண்டைக் குழியில் வலி. கொர கொரப்பு.

**க்ளோனுயின்:** தொண்டை காய்ந்துங் குறுகியுமிருத்தல்.

**செலிடோனியம்:** இறுக்கும் உணர்ச்சி, விழுங்க சிரமப்படுதல்.

**செனபோடியம்:** அதிகக் கோழை.

**டபாகம்:** இறுக்கம்.

**டல்கமாரா:** தொண்டை வரட்சி, குறு குறுப்பு, கம்மல்.

**டுக்ரியம்:** தொண்டையில் ஏதோ இருப்பது போன்ற உணர்ச்சி.

**டெல்லூரியம்:** தொண்டைக் கம்மல், (மூக்கில் பார்க்க.)

**ட்ரோஸிரா :** தொண்டையை அதிகமாக உபயோகித்ததால் (இதே தொழிலால் ஏற்படுங் கர கரப்பு, கம்முதல்) தொண்டையில் சில கூழாங்கற்கள் அல்லது இறகு இருக்கும் உணர்ச்சி. தொண்டை கம்மி அடியிலிருந்து சிரமப்பட்டுப் பேசுதல்.

**நக்ஸ்வாமிகா :** காதுகளின் கீழ்க்கோளங்கள் வீங்கியிருப்பதால் ஆகாரத்தை விழுங்கும்போது கொட்டும் வலிகள், ரண மாகவும் பச்சைப் புண்ணுகவுமிருத்தல் உள்நாக்கு வீங்கி யிருத்தல், விழுங்கும்போது கொட்டும் வலிகள், காது வரை பரவுதல்.

**நேட்ரம் ஆர்ஸனிகம் :** தொண்டை காய்ந்திருத்தல், இறுக்க உணர்ச்சி, எரிச்சல், வலி காலையிலும், புகையிலும், குளிர் காற்றிலும் அதிகம். வலி, எச்சிலை விழுங்கும்போது வலி ஆனுல் ஆகாரமோ தண்ணீரோ விழுங்கும்போது யாதொரு கஷ்டமுங் கிடையாது. தொண்டை உள்நாக்கு முதலியவை நல்ல சிவப்பு நிறமாயிருத்தல், அன்னப்பை யில் அடைப்பு, இறுக்க உணர்ச்சி.

**நேட்ரம் கார்பானிகம் :** காய்ந்து, கறடு முறடாக, விழுங்கும் போது வலியுடனிருத்தல், மஞ்சள் நிறச்சளி தொண்டை யில் சேருதல், மிகவுங் கெட்டியான கோழையைக் காறித்துப்புதல்.

**நேட்ரம் மூரியாடிகம் :** காய்ந்திருத்தல், கண்ணுடி போன்ற கோழையைக் காறி உமிழ்தல், தொண்டையில் முள் அல்லது முளையிருக்கும் உணர்ச்சி, பூந்தசைகள் காய்ந் திருத்தல், கோழிமுட்டையின் வெள்ளைக்கரு போன்ற சளி, பிரதி பருவமாறுதலிலும் உபாதிகள்.

**நேட்ரம் ஸல்ப் :** உலர்ந்திருத்தல் ஆனுல் தாகமின்மை, எரிச்சல் கொப்புளங்கள், குளிர்ந்த பானங்களைக் குடிப்பதால்' சமனம். ரணம், விழுங்கும்போது பிடிப்பதுபோலிருத்தல், கெட்டியான ஆகாரங்களை உட்கொள்ளும்போதும், பேசும்போதும் வலி, தொண்டையுங் கழுத்தும் வீங்கி யிருத்தல்.

**பல்ஸடில்லா :** பச்சைப்புண், விழுங்கும்போது, வலி.

**பாடியாகா :** ரணம், விழுங்கும்போது வலி.

**பாப்டீஷியா :** கருஞ்சிவப்பு நிறம், அழுகிய நாற்றமுள்ள ரணங்கள், சிவந்து வீங்கியிருத்தல், ஆனால் வலியின்மை, திரவங்களையே விழுங்க முடிதல், கெட்டியான ஆகாரங்களை விழுங்க முடியாமை அது தொண்டையை அடைத்துக் கொள்வது போலிருத்தல் தொண்டையில், உறுத்தல் உணர்ச்சியுடன் இருமல்.

**பாரிடா கார்ப் :** வீங்கியிருத்தல், தொண்டையில் ஏதோ முளையிருப்பது போன்ற உணர்ச்சி கெட்டியான ஆகாரங்களை விழுங்க முடியாமை, ஒரு கவளம் அன்னம் சுவாசக்குழாயில் சிக்கியிருப்பது போன்ற உணர்ச்சி. அன்னக்கவளம் உட்சென்று வெளியே வந்து விடுதல், தொண்டையில் அடைத்தல். அடிக்கடி தொண்டை உபாதியுடன் சளி பிடித்தல், (உள்நாக்கில் பார்க்க.)

**பாரிடா மூரியாடிகா :** விழுங்க சிரமப்படுதல் அடிக்கடி தொண்டையில் அழற்சியேற்படுதல்.

**பாஸ்பரஸ் :** மாலையில் தொண்டை காய்ந்திருக்கும் உணர்ச்சி. தொண்டையில் பஞ்சு ஒட்டிக்கொண்டிருக்கும் உணர்ச்சி தொண்டையிலும் அன்னக் குழாயிலும் எரிச்சல் உணர்ச்சி, கம்மல், இருமல், மாலையில் தொண்டை நொந்த உணர்ச்சி, பாடகர்கட்கும் அதிகமாகப் பேசுபவர்கட்கும் ஏற்படுக் தொண்டைக் கம்மல்.

**பொர்பெரீஸ் வல்கேரிஸ் :** கம்மல்.

**பேர்ரம் மெடாலிகம் :** கம்மல்.

**பெல்லடோன்னு :** குறுகியிருக்கும் உணர்ச்சி, பச்சைப் புண்ணுகவும் எரிச்சலுடனுமிருத்தல், அடிக்கடி விழுங்கிக் கொண்டே யிருக்க நேரிடல், தொண்டை அதிக சிவப்பாகவும் பளபளப்பாகவும் இருத்தல், திரவரூபமான வஸ்துக்களை விழுங்கும்போது வலி, தொண்டைக் கம்மல் வரட்சி, அழற்சி, தொண்டையில் குருகுருத்த உணர்ச்சியுடனிருமல், தொண்டை உலர்தல், எரிச்சல், பிடிப்பு.

**பெல்லாண்ட்ரியம்:** கம்மல்.

**பைடோலக்கா:** தொண்டைக்குறிகள் மிகமுக்கியம். வரட்சி, ரணம் தொண்டையில் சதைபோன்ற கோள உபாதிகளில் மிக முக்கியமான ஔஷதம், பாசி படர்ந்தது போன்ற சதை வளர்ச்சி. ஒரு நெருப்பு உருண்டை அங்கேயிருப்பதுபோல் எரிச்சல், நொந்திருத்தல். (முக்கியமாய் வலது பக்கம்) உமிழ் நீரையும் விழுங்க முடியாமை. உள் நாக்கு வீங்கிப் பெருத்துத் தொங்குதல். தொண்டையில் ஒரு முளையிருக்கும் உணர்ச்சி, சூடான உணர்ச்சி, காதுகளின் பக்கத்திலிருக்கும் கோளங்கள் வீங்குதல்.

**ப்ரையோனியா:** காய்ந்திருத்தல், விழுங்கும்போது ஏதோ சிக்கிய உணர்ச்சி, கெட்டியான பிசுக்கென்ற கோழை ஒட்டிக்கொண்டிருத்தல். மிகவும் சிரமப்பட்டு வெளியேற்ற வேண்டியிருத்தல் தொண்டையிலும் சுவாசக் குழாய்களிலும் வலி, வெளிக்காற்றில் தொண்டை கம்முதல்.

**ப்ரோமியம்:** மாலை நேரங்களில் தொண்டை பச்சைப்புண்ணாக விருப்பதுடன் தொண்டைக்கம்மல். விழுங்கும்போது தொண்டையில் வலி, சரீரம் உஷ்ணமானால் தொண்டை கம்மல் ஏற்படுதல் டான்ஸில்கள் நல்ல சிவப்பாகவும் ரத்தம்கசிந்து கொண்டுமிருத்தல், தொண்டைக்கோளங்கள் கல்போல் கெட்டியாதல், தொண்டையடைத்து விடுவது போலிருத்தல்.

**மங்கானம்:** தொண்டை காய்ந்திருத்தல் ரணம், விழுங்கும் போது வலியின்மை, ஆனால் விழுங்காமலிருக்கும்போது வலி. விழுங்கும்போது இரண்டு காதுகளிலும் வலி, நீடித்த தொண்டைக் கம்மல். காலையில் தொண்டை புண்ணான உணர்ச்சி, கம்மல் அடிக்கடி கனைத்துக் கொண்டேயிருக்க நேரிடல்

**மெக்னீஷியா கார்ப்:** மாலை நேரங்களிலும், இரவுகளிலும் தொண்டையில் குருகுருத்த உணர்ச்சி, எரிச்சல், குத்து வலி, காய்ந்த உணர்ச்சி.

**மெக்னீஷியா மூரியாடிகா:** பச்சைப்புண்ணாக இருத்தல், காய்ந்திருத்தல். குரு குருத்தவுணர்ச்சியுடன் வரட்டிருமல்.

**மெடோரீனம்:** ரணம், வீக்கம், விழுங்கமுடியாமை.

**மேர்க் ஐயோ பளேவஸ்:** வலது பக்கக் கோளங்கள் கருங்கல் போல் கெட்டியாதல். கரடுதட்டுதல், உலர்தல், எரிச்சல், ஒட்டிக்கொண்டிருக்குங் கோழை. கோழையை வெளியேற்றக் காறினால் தொண்டையை யடைக்கும் உணர்ச்சி. வலது டான்ஸில் வீங்குதல் பருத்தல். விழுங்கும்போது வலி.

**மேர்க் ஐயோ ரூபர்:** இடது டான்ஸில் அழற்சி வீக்கம்.

**மெர்க்கூரியஸ் கரோஸிவஸ்:** ஏராள வீக்கம், விழுங்க சிரமம், தொண்டையில் ஊசி குத்தும் உணர்ச்சி. தொண்டையில் ரணம் அகலமாகிக் கொண்டே போதல். விழுங்க முடியாமை. விழுங்கும்போது வலி எரிச்சலை உண்டு பண்ணும்படியாக தொண்டை ரணமாகவிருத்தல்.

**மேர்க்குரியஸ் டல்ஸிஸ்:** ரணத்தினால் கஷ்டப்பட்டு விழுங்குதல்.

**மைரிகா:** பிசுக்கென்று தொண்டையில் சளியிருப்பதால் ஆகாரம் விழுங்க முடியாமை, தொண்டையில் ஆகாரஞ் சென்றதுங் குமட்டல்.

**மோஸ்சஸ்:** பந்துபோன்ற வஸ்து மேலே ஏறும் உணர்ச்சி. அடைப்பு களகளப்பு, மூச்சுத்திணறல்.

**யூபடோரியம் பர்போலியேடம்:** காலையில் தொண்டைக் கம்மல்.

**ரஸ்டாக்ஸ்:** கெட்டியான ஆகாரங்களை விழுங்க முடியாமை. தொண்டை குறுகிய உணர்ச்சி காதுகளுக்கும் கீழ்த்தாடைக்கும் அடியிலிருக்குங்கோளங்கள் வீங்கிப்பருத்தல், ஆகாரமுட்கொள்ள வாரம்பிக்கும்போது சிறிது நேரத்திற்கு வலி, வலது பக்க டான்ஸிலின் மேல் மஞ்சள் நிற மாசு படிந்திருத்தல் அதிகமாய்த் தொண்டையையுபயோகித்ததாலேற்பட்ட தொண்டைக்கம்மல், முதன் முதலில் பாடவாரம்பிக்கும்போது தொண்டையில் கரகரப்பு, கொஞ்சநேரம் பாடினால் இது சரியாகிவிடுதல்.

**ரானங்குலஸ்** : அழற்சி எரிச்சலுடன் வலி

**ரூமக்ஸ்** : அருவும் உணர்ச்சி, கபம் உற்பத்தியாதல். காறுவதாலும் விழுங்குவதாலும் சமனப்படாமல் அங்கு ஏதோவிருக்கும் உணர்ச்சி, தொண்டையில் ஏதோ குத்துவது போன்ற உணர்ச்சியுடனிருமல், இருமும்போது காற்றுக் குழாயும் அன்னக்குழாயும் வரண்டவுணர்ச்சி,

**ரோஹீடாக்** : தொண்டையை அருவும் உணர்ச்சி.

**லாக்கஸிஸ்** : (உள்நாக்கில் பார்க்க) விழுங்கும்போது வலி தொண்டையிலிருந்து இடது காதுக்குப்பாயுதல், உஷ்ணபானங்களையுட்கொள்ளமுடியாமை. தொண்டையிலுங் கழுத்திலும் ஒன்றும்பட முடியாமை தொண்டையைத் தொட்டால் வலி. அடைக்கும் உணர்ச்சி, குரு குருத்த உணர்ச்சி. (இருமலில் பார்க்க).

**லாரோஸிராஸிஸ்** : விழுங்கமுடியாமல் தொண்டை யிறுக்கப்படல் தண்ணீர்குடிப்பது அன்னக்குழாயின் வழியாகச்செல்லுஞ் சத்தங்கேட்டல்.

**லேடம்பாலஸ்திரி** : தொண்டையில் கட்டையடைத்தது போலிருத்தல். விழுங்கும்போது கொட்டும் வலி.

**லைகோபோடியம்** : வலதுடான்ஸில்கள் பாதிக்கப்படுதல் அல்லது உபாதிமுதலியவை வலது பக்கத்தில் ஆரம்பித்து அதன் பின் இடது பக்கத்திற்குச் செல்லுதல், வீக்கம், சீழ்ப்பிடித்தல்; நீடித்துப்பெரிதாகியிருத்தல், தொண்டையில் இருக்கவுணர்ச்சி. தூங்கியெழுந்தவுடனேயும் சில்லிப்பான தண்ணீர்குடிப்பதனாலும் தொண்டையுபாதிகள் அதிகப்படல். தொண்டையில் கீழிருந்து ஒரு பந்துமேலே எழும்பும் உணர்ச்சி. உட்கொள்ளும் ஆகாரங்களும் பானங்களும் மூக்கின் வழியாக வெளியே வருதல்.

**லொபீலியா இன்ப்ளேட்டா** : குறுகியவுணர்ச்சி, குரு குருத்த உணர்ச்சி, கர கரப்பு. ஏதோ சிக்கியிருக்கும் உணர்ச்சி, காசநோய் ஆரம்பிக்குமுன் ஏதோ ஓர் கட்டியிருக்கும் உணர்ச்சி,

**வலேரியானு :** தொண்டையிலிருந்து ஒரு நூல் தொங்குவது போன்ற உணர்ச்சி, ஏராள நீர் உற்பத்தியாதல், வாந்தி, தொண்டையில் அடைப்பு உணர்ச்சி, தூங்க வாரம்பிக்கும் போது தொண்டையடைத்தல்.

**வெராட்ரம் ஆல்பம் :** இறுக்கவுணர்ச்சி, தாகவரட்சி, குடிக்கும் தண்ணீர் அன்னக்குழாயின் வழியாகச்செல்வதில்லை போலவும் வெளியே ஓடுவதுபோலவும் உணர்ச்சி. தொண்டையிலிருக்குங் காய்ந்த உணர்ச்சி எவ்வளவு தண்ணீர் குடித்தாலுஞ் சமன மாவதில்லை.

**வைதீயா :** தொண்டையிலேற்படும் நோய்கள். உள்நாக்கு வளர்ந்து தொங்குதல், ரணம், எரிச்சல், அடிக்கடி கனைத்தல், காறுதல், பாடகர்கள், மீட்டிங்குகளில் அதிகம் பேசுபவர்களின் தொண்டைக்கோளாறுகள், தொண்டை காய்தல், வரட்சி, உஷ்ணம் பகல் 11 மணிக்குக் குளிர்.

**ஜஸ்டீஷியா ஆடாதோடா :** கம்மல், வரட்சி, விழுங்கும்போது கத்தியால் சுரண்டும் உணர்ச்சி.

**ஜெல்ஸிமியம் :** பேச்சடைப்பு, வலி காதுகளுக்குச் செல்லுதல், எரிச்சல், தொண்டையில் ஓர் கட்டியிருக்கும் உணர்ச்சி,

**ஸபடில்லா :** ரணம், இடது பக்கத்தில் அதிகம், குளிர்ந்த ஆகாரங்களை விழுங்கும்போது வலி, உஷ்ணமான ஆகாரங்களை உண்பதால் சமனம், வரட்சி, அடிக்கடி விழுங்கநேரிடல், தாகவரட்சியின்மை, தொண்டையில் சதை பிய்ந்து தொங்குவதுபோல் உணர்ச்சி.

**ஸல்பர் :** கீழேயிருந்து பந்துபோல் எழும்பி தொண்டையடைக்கப்படும் உணர்ச்சி. வரட்சி, விழுங்கும்பொது பிடிப்பு வலி, ரணம், எரிச்சல், வலிக்கும் உணர்ச்சி, (உள்நாக்கில் பார்க்க.)

**ஸாங்குநேரியா நைட்ரிகா :** ரணம், மஞ்சள் அல்லது ரத்தங் கலந்த தித்திப்பான கபம். அருவருப்பு. எரிச்சல், பரு போன்ற நினைப்பு, தொண்டை ரணத்திற்குச் சிறந்தது.

**ஸிகூடா விரோஸா :** விழுங்க முடியாமை, விழுங்கியவுடன் அன்னக் குழாய் விரைத்து அதனுல் சுவாசம் நின்று விடும் போன்ற நிலைமை

**ஸிபிலினம் :** குரல்வளை ரணம், வலி.

**ஸிலிகா :** குளிர் தாக்கினுல் உடனே தொண்டைக் கோளாறு களேற்படுதல், விழுங்கும்போது கொட்டும் வலி, ஆகா ரத்தை விழுங்கும்போது அது மூக்கின் வழியாக வெளியே வருதல்,

**ஸிஸ்டஸ் :** குளிர் காற்று சுவாசிக்கப்பட்டால் தொண்டை யில் அழற்சியேற்படல், இரவுகளில் வரண்டிருத்தல், மணல் ஒட்டிக்கொண்டிருப்பது போன்ற உணர்ச்சி. வரட்சியை நிவர்த்திக்க உமிழ் நீரை விழுங்கவேண்டி வருதல். சுவாசக் குழாய்கள் குறுகிய உணர்ச்சி, தொண்டையில் அரிக்கும் உணர்ச்சி, பிடிப்பு, கபம் வெளி யேறிய பின் ரண உணர்ச்சி.

**ஸீகேல் :** எரிச்சல், குருகுருத்த உணர்ச்சி.

**ஸீனு :** அடிக்கடி விழுங்கிக் கொண்டேயிருத்தல், திரவ பதார்த்தங்களை விழுங்கமுடியாமை, தொண்டை யிலிருந்து வயிறுவரை களகளவென்ற ஒரு சீசாவி லிருந்து தண்ணீரை ஊற்றுவதுபோல் சப்தம், இது பிரதி தடவை இருமியபின்னும் ஏற்படல்.

**ஸெபீயா :** தொண்டை வரட்சி, முளையிருக்கும் உணர்ச்சி,

**ஸெலீனியம் :** குரல்வளை கம்முதல், ரத்தம் வெளியேறுதல், பிரதி தினம் காலையில் கண்ணுடி போன்ற கோழை வெளியேறுதல்.

**ஸெனகா :** வரண்ட தொண்டைக் கம்மல், எரிச்சல் ரண வுணர்ச்சி.

**ஸெனஸியோ :** வாய் தொண்டை யுலர்தல். விழுங்கும்போது வலி கம்மல்.

**ஸைக்லமென் :** தொண்டையுலர்தல், எரிச்சல்.

**ஸ்டானம் :** குரல்வளை. பலஹீனம்; எரிச்சல், அருவருப்பு, பல ஹீனமான பேச்சு, கம்மல். இது இருமுவதனுல் சமனம்.

**ஸ்ட்ரமோனியம் :** உலர்ந்திருத்தல், விழுங்க எத்தனித்தால் தொண்டை யடைத்தல், தண்ணீரில் வெறுப்பு, தண்ணீரைக் கூட விழுங்குஞ் சக்தியை யிழத்தல்.

**ஸ்பாஞ்ஜியா :** எரிச்சல், குத்துதல், வரண்டு ரணப்பட்டிருத்தல், ரணம், (கழுத்தில் பார்க்க.) தொண்டையில் ரண வுணர்ச்சி, முளையிருக்கும் உணர்ச்சி, குரல்வளையில் வேலை செய்யும் ஔஷதம்.

**ஹயாஸ்யாமஸ் :** தொண்டைக் கம்மல், வரண்டு எரிச்சலுட னிருத்தல், விழுங்கக் கஷ்டம், திரவபதார்த்தங்கள் பயத்தையுண்டு பண்ணுதல்.

**ஹீபர் ஸல்பர் :** குளிர் தாக்கியதாலேற்பட்ட தொண்டைக் கம்மல், மார்பில் களகளப்பு, கடைதல், காறினால் கபம் வெளியேறுதல், தொண்டையை வழிக்கும் ரணம். விழுங்கும்போது காதுவரை வலி. தொண்டையில் முள் சிக்கிய வுணர்ச்சி, களகளத்த சளி, டான்ஸில்கள் வீங்கிப் பருத்தல், குளிர்காற்று சகிக்காமை, கையோ அல்லது காலோ சரீரத்தின் எப்பாகமாயினும் திறந்திருந்து அப்பாகத்தில் குளிர் காற்றுப்பட்டாலும் உடனே இருமல் ஆரம்பித்தல்.

**ஹைட்ராஸ்டிஸ் :** ரணம், மஞ்சள் நிறச்சளி.

# கழுத்து

**அகேரிகஸ் :** விரைப்பு, முழுதும் வலி.

**அகோனைட் :** பிடரியில் கிழிக்கும் வலி; விரைப்பு; கழுத்திலிருந்து தோள்பட்டைக்குச் செல்லும் வலி, முதுகு அசைவால் உபாதி அதிகம்.

**அக்டியா ரஸிமோஸா :** விறைத்திருத்தல், தலையை அசைத்தால் கழுத்து சொருகுதல், வலி. குளிரால் விறைத்த கழுத்து, கழுத்துப்பாக முள்ளெலும்பிலும் மேல்பாக முள்ளெலும்பிலும் அதியுணர்ச்சி, கழுத்து, தலை உள்ளிழுக்கப்படல், வாதவலி. கழுத்திலிருந்து உச்சியில் மந்தமான ஆணி யடிக்கும் உணர்ச்சி,

**அக்னஸ் காஸ்டஸ் :** கனம், அமுக்கம்.

**அபிஸ் மெல்லிபிகா :** விரைப்பு, வலது பக்கக் கழுத்து வாதம்.

**அமோனியா கார்ப் :** குழந்தைகளின் கண்டமாலை.

**அமோனியம் மூரி :** பிடரிக் கழுத்தில் சுண்டியிழுக்கும் வலி. வலது புறம் அரிப்புடன் சிறு கொப்புளம், விரைப்பு, தோள்பட்டை நடுவில் சுளுக்கு போலிருத்தல்,

**அம்ப்ரா க்ரிஸியா :** பிடரிக் கழுத்தில் அமுக்கும், கிழிக்கும், இழுக்கும் வலி.

**அயிலாந்தஸ் :** வெளிக் கழுத்து மிருதுவாகவும் அதிக வலியுடனும் வீங்கியுமிருத்தல், கழுத்தின் பின்புறத்திலும், தலையிலும் வலி தோள்பட்டைகளின் நடுவே வலி.

**அர்ஜண்டம் நைட்ரிகம் :** கோளங்கள் கடினமாதல்.

**அலுமினு :** வலப்பாகத்தில் குத்துவலி.

**அஸ்குலஸ் ஹிபோ :** கழுத்தில் முடக்கம்.

**ஆண்டிமோனியம் க்ரூடம் :** கழுத்துக் கோளங்களில் வீக்கம், காலையிலும் கீழே படுத்தபின்னும் பின் கழுத்து, தோள் பட்டை இவைகளிலுமிருத்தல், குனிவது தலையை இடது பக்கமாகத் திருப்புவது முதலியவைகளால் அதிகரித்தல்.

**ஆண்டிமோனியம் டார்ட்டாரிகம் :** இழுப்பு.

**ஆரம் மூரியாடிகம் :** விரைப்பான கழுத்து, எரிச்சல்,

**ஆரம் மெடாலிகம் :** கோளங்களில் வீக்கம்.

**ஆர்ஸனிகம் ஆல்பம் :** இடுப்பிலிருந்து கழுத்து வரை இழுக்கும் வலி, முதுகுப் புறமாகப் படுக்க முடியாமை. (முதுகில் பார்க்க) பின்கழுத்தும் முள்ளந்தண்டும் விரைப்பாகவிருத்தல்.

**ஆஸிட் நைட்ரிக் :** கோளங்கள் வீங்குதல், கழுத்தைச் சுற்றிலுமிருக்கும், கோளங்கள் பருத்தல், பிடிப்பு,

**ஆஸிட் பிக்ரிக் :** பிடரி வலி, வேலை செய்தால் அதிகம்.

**இக்னேஷியா :** பின் கழுத்தில் விரைப்பு.

**இபிகாக்உனு :** பின் தலையிலும் பின் கழுத்திலும் தலைவலி.

**ஐயோடியம் :** கடினமான முண்டுகள் தோன்றுதல், கழுத்துக் கோளங்கள் பருத்துக் கடினமாகவிருத்தல்.

**ஓநோஸ்மோடியம் :** பிடரித் தலைவலி, நெற்றி பின் கழுத்திற்குச் செல்லுதல்.

**கந்தாரிஸ் :** பின் கழுத்திலிருந்து நெற்றி வரை தலைவலி.

**கல்கேரியா கார்பானிகா :** கழுத்திலும் முதுகிலும் உள்ள முள்ளெலும்புகளில் வீக்கம், அவை வளைந்து விடுதல், கழுத்துக் கோளங்களில் கடின வீக்கம், பின் கழுத்தில் விரைப்பு, எலும்பு நொறுங்குவது போன்ற சப்தம்.

**கல்கேரியா பாஸ் :** கழுத்திலும் முதுகிலும் வாதவலி, விரைப்பு, குளிர்ந்த காற்றில் அதிகம்.

**கல்கேரியா ப்ளோரிகா :** கழுத்துக் கோளங்கள் கடினமாதல்.

**கன்னபிஸ் இண்டிகா :** நிமிர்ந்து நடக்க முடியாமை, கூனிக் கொண்டு நடத்தல்,

**கன்னபிஸ் ஸடைவா :** கழுத்திலிருப்பது போன்ற வலி, மேலே செல்லுதல். (முதுகில் பார்க்க.)

**காக்குலஸ் :** கழுத்தை அசைக்கும்போது விரைப்பாகவும் வலியுடனுமிருத்தல், தலையின் கனத்தைத் தாங்கக் கழுத்துக்குப் பலமின்மை.

**காமோமில்லா :** தசைகளில் விரைப்பு.

**கார்பன் ஸல்ப் :** கழுத்திலும், கடைசி முள்ளெலும்பிலும் தோள்பட்டைகளினிடையிலும் வலி.

**கார்போ அனிமாலிஸ் :** கழுத்துக் கோளங்கள் கடினமாக வீங்கியும் அழற்சி, எரிச்சல், வலியுடனிருத்தல்.

**காலீஸல்ப் :** (கையில் பார்க்க) பிடரிக்கழுத்து, முதுகில் வலி.

**கால்மியா :** கழுத்திலிருந்து கைகளுக்குச் செல்லும் வலி. நெற்றிப் பொட்டுகளில் வலி, கழுத்திற்கும் பற்களுக்கும் பரவுதல்.

**காஸ்டிகம் :** பிடரிக் கழுத்தில் மந்தமான வலி.

**க்ராபைடிஸ் :** கழுத்தில் பச்சைப்புண், பிடரிக்கழுத்தில் வலி.

**க்வாய்கம் :** தலையிலிருந்து கழுத்துக்குச் செல்லும் வலி, அசைவதாலும் உஷ்ணத்தாலும் அதிகரித்தல், கழுத்திலிருந்து ஒருபக்கத்து முதுகுவரை அதிக விரைப்பு. அசைவதினுல் அதிகமாதல்.

**க்ளோனுயின் :** பின் கழுத்து விரைப்பாகவும் தலைவலியுடன் வீங்கியுமிருக்கும். கழுத்தில் கெண்டையேறுதல்.

**சின்னியம் ஆர்ஸனிகம் :** நெற்றியிலும் பிடரியிலும் மந்த வலி.

**சின்னியம் ஸல்ப்யூரிகம் :** முள்ளெலும்பு வலி கழுத்திற்கும் தலைக்கும் பரவுதல்.

**செலிடோனியம் :** பிடிப்பு வலி.

**டல்கமாரா :** விரைப்பாயிருத்தல், ஈரத்தில் நடந்தாலும், தண்ணீரில் நனைந்தாலும் கழுத்திலும் தோள்பட்டையிலும் பிடிப்பு வலிகள்.

**ட்யூபர் குலீனம் :** கழுத்திலும் முள்ளந்தண்டிலும் விறைத்த உணர்ச்சி.

**நக்ஸ்வாமிகா :** குளிர் தாக்கியதால் கழுத்து விரைத்தல், கழுத்திலும் முதுகிலுங் கயிற்றைக் கட்டியிருப்பது போன்ற இழுப்பு வலிகள். காலையில் கழுத்தில் பிடிப்பு.

**நேட்ரம் ஆர்ஸனிகம் :** பிடரியில் வலி, கழுத்தைத் திருப்ப முடியாமை, பிடிப்பு.

**நேட்ரம் கார்பானிகம் :** கழுத்தின் பக்கக் கோளங்கள் வீங்குதல் கண்டமாலை. பிடிப்பு, தலையையசைக்கும்போது கழுத்துப் பாகம் முள்ளந்தண்டில் சொருகிக் கொள்ளுதல்.

**நேட்ரம் மூரி :** கழுத்தும் சப்பைப் பாகங்கள் மட்டும் இளைக்க வாரம்பித்தல், கழுத்தின் இருபக்க கோளங்களும் வீங்கியிருத்தல், கழுத்தினிடது பக்கத்தில் ஒரு ஆணி வைத்து அடிப்பது போன்ற தலைவலி.

**நேட்ரம் ஸல்ப் :** தொண்டையும் கழுத்தும் வீங்கியிருத்தல்

**பாப்டீஷியா :** கழுத்துத் தசைகள் விரைப்பாக விருத்தல், கழுத்தில் வலி பலவீனம் அதனுல் தலையை நிமிர்த்தி வைத்துக் கொள்ள முடியாமை.

**பாரிடா கார்ப் :** வலது பக்கக் கழுத்துக் கோளங்கள் வீங்குதல். கரடு தட்டுதல், கழுத்து விரைப்பாயிருத்தல் கோளங்கள் பருத்துக் கரடு தட்டியிருத்தல். கண்டமாலை.

**பெர்பெரீஸ் அக்யூபோலியம் :** தலையில் ஏற்பட்ட கொப்புளங்கள் கழுத்துக்குப் பரவுதல், அரிப்பு.

**பெர்பெரீஸ் வல்கேரிஸ் :** பிடிப்பு வலி, (கண், முதுகில் பார்க்க.)

**பைடோலக்கா :** வலதுபக்கத்துக் கோளங்கள் கெட்டியாக வீங்கியிருத்தல், கழுத்தைத் திருப்ப முடியாமை.

**ப்ரையோனியா :** கழுத்திலும், இடுப்பிலும், வலியுடன் கூடிய பிடிப்புகள், திடீரென்று ஏற்பட்ட சீதோஷ்ண மாறுதல் களாலுமேற்பட்டதாகவிருக்கலாம்.

**ப்ரோமியம் :** கோளங்கள் கல்போல் கெட்டியாக விருத்தல்.

**மங்கானம் :** பிடிப்பு.

**மெர்க்குரியஸ் ஸொலுபிலிஸ் :** கழுத்தில் கில்வாதப் பிடிப்புகள்.

**மைரிகா:** கழுத்தின் பின் வலி.

**ரஸ் டாக்ஸ்:** முதன் முதலில் அசையும்போது கழுத்தில் பிடிப்பினுல் வலி.

**ரோடோடெண்ட்ரன்:** பிடிப்பு வலிகள்.

**லாக் கானினம்:** பிடிப்பு.

**லாச்செஸிஸ்:** கழுத்து விரைப்பாகவிருத்தல் தொண்டையிலுங் கழுத்திலும் ஒன்றும் படமுடியாமை. சட்டையின் கழுத்துப் பொத்தானைக்கூட போடமுடியாமை. போர்வை கழுத்தில் படுவது சகிக்க முடியாமை. கழுத்தின் பக்கத்திலிருக்குங் கோளங்கள் வீங்கியிருத்தல்.

**லாரோஸிராஸஸ்:** இடது பக்கத்தில் பிடிப்பு.

**லில்லியம் டிக்ரினம்:** மந்த வலி, இறுக்க உணர்ச்சி.

**லைகோபோடியம்:** ஒரு பக்கம் மட்டும் வீங்கிப் பிடிப்புடனிருத்தல்.

**ஸரஸபரில்லா:** இளைத்துக் குச்சிபோலிருத்தல்.

**ஸல்பர்:** கழுத்தும் முதுகும் விரைப்பாகவிருத்தல்.

**ஸிங்கம் மெடாலிகம்:** பின் பாகத்தில் பலஹீன உணர்ச்சி.

**ஸிலிகா:** கழுத்துப் பிடிப்புடன் தலைவலி.

**ஸிஸ்டஸ்:** கழுத்தைச் சுற்றிலுமுள்ள கோளங்கள் சீழ்ப் பிடித்தல். முடிச்சுகள் போன்ற வீக்கம். கழுத்தின் வீக்கத்தால் தலை ஒரு பக்கமாக இழுக்கப்பட்டிருத்தல்.

**ஸெபியா:** வலி, பலஹீனப் பிடிப்பு தோள்பட்டைகளுக் கிடையே சில்லிட்ட உணர்ச்சி, ஏப்பம் விடுவதால் வலிகள் சமனம்.

**ஸைக்ளமென்:** கழுத்துப் பிடிப்பு இடது பக்கத்தில் கீல் வாதவலிகள்.

**ஸோரினம்:** விரைத்திருத்தல், கோளங்கள் வீங்கி வலியுட னிருத்தல் கழுத்திலிருந்து தலைக்குச் செல்லும் வலி.

**ஸ்டிக்டா:** (பிடரியில் பார்க்க.)

**ஸ்பாஞ்சியா**. பிடிப்பு, வீக்கம், கோளங்கள் பருத்திருத்தல். மார்பு கழுத்தில் அதிக ரத்தமேறுதல்.

**ஹயாஸ்யாமஸ்** : கழுத்தின் தசைகள் முறுக்கிக்கொண்டு தலை கோணலாக இழுக்கப்பட்டிருத்தல்.

**ஹீபர் ஸல்பர்** : கோளங்களில் வீக்கம்.

# பிடரி

**அகோனைட்** : கிழிக்கும் வலி.

**அமோனியம் மூரியாடிகம்** : பிடரிக் கழுத்தில் சுண்டியிழுக்கும் வலிகள்.

**அம்ப்ரா க்ரிஸியா** : பிடரிக் கழுத்தில் அமுக்கும், கிழிக்கும், இழுக்கும் வலிகள்.

**அயிலாந்தஸ்** : வலிகள்.

**அவீனு ஸடீவா** : பிடரித் தலைவலி.

**ஆண்டிமோனியம் க்ருடம்** : காலையிலுங் கீழே படுத்த பின்னும் பின் கழுத்து, தோள்பட்டையிவைகளில் வீக்கம்.

**ஆரம் ட்ரிபில்லம்** : பிடிப்பு வலி.

**ஆர்ஸனிகம் ஆல்பம்** : கடுமையான வலியால் மயக்கம் வருதல்.

**ஆஸிட் பாஸ்பாரிக்** : கனத்துடன் வலி.

**ஆஸிட் பிக்ரிக்** : வலி, வேலை செய்தால் அதிகரித்தல்.

**ஆஸிட் ப்ளூவாரிக்** : பிடரி பொட்டுகளில் அமுக்கும் வலி.

**இக்னேஷியா** : மலங்கழிக்கும்போது பிடரியில் வலி, பின் கழுத்தில் விரைப்பு.

**ஓநோஸ்மோடியம்**: பிடரித் தலைவலி, நெற்றி, பின் கழுத்துக்குச் செல்லுதல்.

**கல்கேரியா பாஸ்** : பிடரித் தலையில் வலி.

**காலீ ஸல்ப்** : பிடரிக்கழுத்து, முதுகில் வலி.

**காஸ்டிகம்** : பிடரிக்கழுத்தில் மந்தவலி.

**கோக்கஸ் காக்டி:** பிடரித்தலைவலி.

**கோல்சிகம்:** பிடரித்தலையில் குடையும் வலி, காலையில் அதிகம். குனியும்போதும் மனோ வேலையாலும் அதிகம்.

**கோனியம்:** காலையில் எழுந்திருக்கும்போது பிடரித்தலையில் மந்தவலி.

**க்ராபைடிஸ்:** பிடரிக்கழுத்தில் வலி.

**க்ரீஸோட்:** மாதவிடாய் நாட்களில் பிடரித்தலையில் வலி.

**சின்னியம் ஆர்ஸனிகம்:** நெற்றியிலும் பிடரியிலும் மந்தவலி.

**செலிடோனியம்:** சில்லிப்பு, கனம்.

**டல்கமாரா:** பிடரிவலி, பேசினால் சமனமாதல்.

**நேட்ரம் ஆர்ஸனிகம்:** வலி, கழுத்தைத் திருப்பமுடியாமை, பிடிப்பு.

**பாரிஸ்:** பிடரியில் மந்தவலி, கனம்.

**பெட்ரோலியம்:** நடக்கும்போது பிடரித்தலைவலி, நீடித்த பிடரித் தலைவலி.

**பெர்பெரீஸ் வல்கேரிஸ்:** முதுகிலும் பிடரியிலும் சில்லிட்ட உணர்ச்சி.

**பெர்ரம் பிக்ரிகம்:** அதிக உழைப்பால் பிடரித் தலைவலி.

**பெர்ரம் மெட்டாலிகம்:** திடீரென்று தலையை யசைத்தால் விண்ணென்று தெறிக்கும் பிடரித்தலைவலி, இருமினால் பிடரித்தலைவலி.

**பெல்லாண்ட்ரியம்:** பிடரிவலி.

**மங்கானம்:** பிடரியில் சில்லிட்டவுணர்ச்சி.

**மெக்னீஷியா மூரி:** பிடரியில் அமுக்கினால் வலி.

**மேனியாந்தஸ்:** பிடரியில் கன உணர்ச்சி. மேலிருந்து கீழே அமுக்குவதால் பிடரியிலிருந்து நெற்றி வரை வலி அதிகரித்தல், குனிவதாலும் அமுக்குவதாலும் உபாதி அதிகம்.

யூபடோரியம் பர்போலியேட்டம்: தலைவலியில் பிடரியில் சூடு.

ரானங்குலஸ்: நெற்றி பிடரியில் அமுக்கும் வலி.

ரினிநஸ்: வலி.

லாக்கனிஸ்: பிடரியில் அலையலையாக மேலே செல்லும் வலி அதிகமான துடிக்கும் வலி.

லேடம் பாலஸ்திரி: நமநம வென்று பிடுங்கும் வலி.

வெராட்ரம் ஆல்பம்: பிடரியும் பொட்டுகளும் பனிக்கட்டியால் அமுக்கப்படுவது போன்ற உணர்ச்சி. பிடரியில் பூச்சிகள் ஊறுவதுபோன்ற உணர்ச்சி.

ஜெல்ஸிமியம்: பிடரியிலும், பொட்டிலும் சம்மட்டியால் அடிப்பது போன்ற தலைவலி.

ஸரஸபரில்லா: பிடரியிலிருந்து தலைவலி ஆரம்பித்து வலது அல்லது இடது பொட்டுக்குச் செல்லுதல். நடக்கும் போது பிடரியில் தெறிக்கும் வலி.

ஸிபிலினம்: வெடிக்கும் வலி.

ஸிலிகா: அடிக்கடி பிடரி நெற்றியில் தலைவலி கடுமையாக வேற்படுதல். பிடரியில் வலி, குளிர் ஓக்காளத்துடன் ஆரம்பித்து தலைவலியாகவந்து கண்களின்மேல் தங்குதல்

ஸிகேல்: பலமற்ற உணர்ச்சி.

ஸ்டிக்டா: கூரான ஆயுதத்தைச் செலுத்துவது போன்ற வலி,

ஸ்பைஜிலியா: தலைவலி இடது பிடரியில் ஆரம்பித்தல்.

ஹைபெரிகம்: வலி.

# கைகள்

அகேரிகஸ்: பனி தாக்கியதுபோல் எரிச்சல், சூடு, வீக்கம், நடுக்கம், விரல்கள், கைகள் விகாரமாக அசைதல், கையிலுள்ள பொருள்கள் தானுகவே நழுவிக் கீழே விழுதல். இடதுபுறம் அதிக வலி, சில்லிட்டல், பக்ஷவாயு, தோள் பட்டைகளில் வலி.

**அகோனைட்:** தோள்பட்டை, கைகள், விரல்களில் ஊறும் உணர்ச்சி, இடதுகை மறத்தல், பக்ஷவாதம், கைகள் தொங்கிப் போதல், உஷ்ணம், கட்டைவிரல் சூடாக விருத்தல்.

**அக்டியா ரஸிமோஸா:** சில்லிப்பு, எழுதும்போது நடுக்கல், வியர்வை. மூட்டுகளில் வீக்கம், சூடு, வலி, பிடிப்புவலி, பருத்த தசைப் பாகங்களில் வாதம். இருதய வலியுடன் இடதுகை மறத்தவுணர்ச்சி, மறத்தல், உடம்புடன் இறுகக் கட்டியிருக்கும் உணர்ச்சி, பக்ஷவாதம்.

**அக்னஸ் காஸ்டஸ்:** வலது அக்குள் கைகளில் மேல்பாகம் இவைகளில் கடினமான அமுக்கும் வலி, அசைவு, தொடுதலால் உபாதி அதிகம்.

**அபிசிந்தியம்:** தூக்கித் தூக்கிப் போடுதல்.

**அபிஸ் கனடென்ஸிஸ்:** சில்லிடல், கசகசப்பு. குளிர்ந்த நடுக்கம்,

**அபிஸ் மெல்லிபிகா:** தன்னையறியாமல் வஸ்துக்கள் கீழே விழுதல், புஜங்களில் பலமின்மை, புஜங்களில் வாதம், எரிதல், கொட்டுதல், நீர்ச்சுரப்பு, தடிப்பான நகச்சுற்றி, நீலநிறம், கைகளைத் தலைக்குக் கொண்டு செல்லுதல்.

**அபொஸினம்:** பக்ஷவாதம்.

**அப்ரோடேனம்:** முதலில் வலது கைவிரலில் ஆரம்பித்துப் பின் இடது கைவிரலுக்கு வரும் வலி, புஜத்திலிருந்து முழங்கை வரை வலி, வாதம், கைமுடக்கம், விரல்மூட்டு நுனிகளில் குத்துவலி, கைகள் இழுத்துக் கொள்ளுதல்.

**அமோனியா கார்ப்:** அக்குள்கோள வலி, வீக்கம், தோள்பட்டையில் காயம், கிழிப்பதுபோன்ற வலி, வலதுகை பலமின்மை, பின்புறம் இழுக்கப்படல், கைகளில் வீக்கம், அசைந்தால் சதை வெடித்தல், முழங்கையெலும்பு உடைதல், உள்ளங்கைகளில் தோலுரிதல், விரல் நுனி அழற்சி, நகச்சுற்றி, விரல்கள் மடங்கிக் கொள்ளல்.

**அமோனியம் மூரியாடிகம்:** அக்குள் கோளவீக்கம், அரையிடுக்கில் சுளுக்கு, மூட்டுவாதம், சந்துவாதம், உட்கார்ந்தால் அதிகமாதல்.

**அம்ப்ரா க்ரிஸியா:** வாத சம்பந்த கிழிக்கும் வலி, இடதுகை மறத்தல், ஓய்வு நேரத்தில் கைகள் சோர்தல், விரல் நுனி சுருக்கம், உள்ளங்கை அரிப்பு, தசை முறுக்கிக்கொள்ளுதல், கெண்டையேறுதல்.

**அயிலாந்தஸ்:** கை, உள்ளங்கைகளில் எரிச்சல் சரீரம் முழுவதும் கட்டை விரல்களிலும், விரல் நகங்களிலும், பெரிய கொப்புளங்கள் அல்லது வேர்க்குரு போன்று வெடித்தல். மூளையிலிருந்து கைகால்களுக்கு மின்சார விசைபோல் உணர்ச்சி ஓடுதல், தளர்ச்சி, களைப்பு.

**அரேனியா டயாடிமா:** முன்கை மேற்கையெலும்பு வலி, கையில் அதிக, வீக்கம் போன்ற உணர்ச்சி.

**அலூமினு:** தானுகவே அசைதல், இஷ்டப்படி யசைக்க முடியாமை, பாரிச வாதம், கைகளில் கனத்தல், உணர்ச்சி யற்றுத் தூங்குவது போலிருத்தல், நகச்சுற்றி.

**அல்லியம் ஸீபா:** கைகள் தளர்ந்தும் வலியுடனுமிருத்தல், இடது நடு விரலிலும் கட்டை விரலின் மிருதுவான பாகங்களிலும் வலி, ஜலதோஷத்தில் கைகளில் நடுக்கம்.

**அஸபோடிடா-** கைகால்களில் பிடிப்பு வலி, குதித்தல் வாதம்.

**அஸ்குலஸ் ஹிபோ-** இடது கையுங்காலும் கனமாகவும் வீங்கியுமிருத்தல், வலதுகை பக்ஷ வாயுவால் பீடிக்கப்படுவதால் அக்கையைத் தூக்க முடியாமை. மூட்டுகள் விரைப்பாகவும், வாதமுள்ளதாகவும் உஷ்ணத்தால் சௌகர்யமடைந்துமிருத்தல், கைகளை கழுவின பின் குத்தல்.

**அனகார்டியம் ஓரியண்டேல்:** உள்ளங்கையில் தோலுரிதல்.

**ஆண்டிமோனியம் க்ரூடம்:** முழங்கை மூட்டுகளில் அசைக்கும்போது முறிதல், விரல் நகங்கள் வளருவதில்லை நகத்தினடியிலிருக்கும் தோல் வலியுள்ளதாக இருத்தல், வெடிப்பு.

**ஆண்டிமோனியம் டார்ட்டாரிகம் :** கைகால்களில் நடுக்கம், விரல் நுனிகள் உணர்ச்சியற்று கடினமாகக் காய்ந்திருத்தல், கைகள் நழுவுதல்.

**ஆரம் மூரியாடிகம் :** கைகால்களிலிருக்கும் கிழிக்கும் வலி, அடி பட்ட வுணர்ச்சி. இடது தோள்பட்டையில் கிழிக்கும் வலி. கைகளில் மின்சாரவிசை தாக்குவது போன்ற உணர்ச்சி. கைகளை மடக்க முடியாமை. விரல் மூட்டு கள் விரைப்பாகவிருத்தல், சாப்பிட்டபின் நடுவிரலில் கிழிக்கும் வலி.

**ஆரம் மெடாலிகம் :** இடது தோள்பட்டையில் வீக்கம், குடை தல். கைகள் கனமாகவுந் தூக்க முடியாமலுமிருத்தல், வலது முழங்கை யெலும்பில் வலி. விரலெலும்பு மூட்டு களில் குடைதல். காலையில் கைகால்கள் வீக்கம். முன் கை யெலும்புகளுந் துடை யெலும்புகளும் வீங்குதல்.

**ஆர்னிகா மொண்டானு :** கைகளைத் தொங்கவிடுவதாலும் அல்லது அதிக வேலையாலுங் கைகள் வீங்குதல்.

**ஆர்ஸனிகம் ஆல்பம் :** நடுக்கம், முன் கை கறுப்பாகவும் கன்றியு மிருத்தல். விரல்களில் எரியுங் குழிப்புண்கள், மார்பு முழுதும் வலி இடது கைக்கு பரவுதல்.

**ஆலோஸோகோட்ரினு :** சூடான கைகள் சில்லிட்ட கால்கள் அல்லது சூடான கால்கள் சில்லிட்ட கைகள், இவை மாறி மாறி வருதல். களைப்பு, முன் கைகளில் அடிப் பட்ட வலி.

**ஆஸிட் ஆக்ஸாலிக் :** தோள்பட்டைகளின் கீழும் தோள்பட்டை யினிடையிலும் வலி. மார்பிலிருந்து தோள்பட்டைக்குச் செல்லும் வலி. முள்ளெலும்பு அழற்சியாலேற்படும் பாரிச வாயு, கைகால்களில் விரைப்பு. புஜங்களிலிருந்து விரல்கள்வரை மறத்தல், கைகளில் பிணம் போன்ற சில்லிப்பு, விரலெலும்புகள் சேருமிடங்களில் அழற்சி, வலி, வலது மணிக்கட்டுகளில் சுளுக்கு, கைகளில் வைத் திருக்கும் சாமான்களை வைத்திருக்கவோ அல்லது விரல் களை அசைக்கவோ முடியாமை, விரல்கள் முறுக்கிக் கொள்ளுதல்.

**ஆஸிட் நைட்ரிக் :** வலது தோள்பட்டையிலுங் கையிலும் வலி, கைகள் சுளுக்கு விழுந்தது போல் வலி, புஜங்களும் கால்களும் இளைத்தல். முன் கையிலும் விரல்களிலும் கீல் வாத வலிகள், மறத்தாற்போலிருத்தல். நடுங்குதல், ஊசிகளால் குத்துவதுபோலிருத்தல். இவைகள் முக்கியமாக வலது முன் கையில் அதிகம். விரல்களின் மூட்டுகளில் வீக்கமும் குத்து வலியும். புறங்கையில் பெரிய பெரிய பாலுண்ணிகள். விரல்களின் இடுக்குகளின் படைகள்.

**ஆஸிட் பாஸ்பாரிக் :** இடது புஜத்திலும் கையிலுங் கிழிக்கும் வலிகள். நீண்டவெலும்புகளில் வலி. அசைவினால் அதிகம் மூட்டுகளில் பிடிப்பு கெண்டையேறுதலும் எழுதும்போது கைகள் நடுங்குதல். கைகால்களில் பல ஹீனம். கைகள் சில்லிப்பாகவும் கால்கள் உஷ்ணமாகவுமிருத்தல்.

**ஆஸிட் ப்ளூவாரிக் :** வலது தோள்பட்டையில் வலி. இரண்டு கைகளிலும் வாயு வலியுடன் சக்தியின்மை, நகங்கள் அதிசீக்கிரமாக வளர்ந்து உடைதல்.

**ஆஸிட் ஸல்ப்யூரிக் :** கைகள் கெண்டையேறுவது போலிழுத்துக்கொள்ளல். எழுதிக்கொண்டே யிருக்கும்போது விரல்களிழுத்துக் கொள்ளுதல்.

**இக்னேஷியா :** கைகால்களில் நடுக்கம்.

**இபிகாக்உனு :** ஒரு கை சில்லிப்பு மற்றொரு கை சூடு. மாலை 4 மணிக்கு வலி வருதல். கைகளிடைவிடாமல் துடித்தல்.

**எதூஸா ஸைனபியம் :** காக்கை வலிப்பில் கைக் கட்டை விரல்கள் இறுக மூடிக்கோள்ளல்.

**ஐயோடியம் :** காலை வேளைகளில் கைகளில் அதிக பலவீனம். பாரிச வாயுவால் பீடிக்கப்பட்டதுபோல் அதிக பலவீனம், கைகால்கள் சில்விடல். கைகளில் நடுக்கம்.

**ஐரிஸ் வர்ஸிகோலர் :** வாத சம்பந்த வலி முக்கியமாக வலது கையைத் தூக்கும்போது வலி. அசைவால் அதிகரித்தல்,

**ஓலீயாண்டர்:** கைகள் முடக்கு வாயுபோல் முடங்கிக் கொள்ளுதல். பக்ஷ வாயு. விரைப்பாக பாரிச வாயு. பீடிக்கப்படுதல். எழுதும்போது கைகள் நடுங்குதல் கைகளில் உள்ள அசுத்த ரத்தக் குழாய்கள் வீங்குதல்.

**ஓபியம்:** கைகள் முறுக்கிக் கொள்ளுதல்.

**ஓஸீமம் ஸாங்டம்:** கைகால் வலியுடன் தலைவலி.

**கந்தாரிஸ்:** சில சமயங்களில் மட்டும் கைகளில் முறுக்குதல். சுரத்தில் கைகால்களில் சில்லிப்பு.

**கல்கேரியா ஐயோடைட்:** இளைத்தல் (மலத்தில் பார்க்க.)

**கல்கேரியா கார்பானிகா:** கைகளுக்கு மேல் எலி ஓடும் உணர்ச்சி கைகள் வளைந்து குறுகிப்போதல். (வாதம் அல்லது மூட்டில் பார்க்க.) புஜங்களில் வாதம். கைகால்களில் எப்போதும் சில்லிட்ட வியர்வை.

**கல்கேரியா பாஸ்:** புஜங்களில் வாதவலி. கைகளை உயரத் தூக்க முடியாமை. நகங்களைச் சுற்றிலும் வலி, முறிந்த வெலும்புகள் ஒன்று சேராமை.

**கல்கேரியா ப்ளோரிகா:** விரலெலும்பு மூட்டுகள் வாதத்தால் வீங்குதல் நகச் சுற்றி.

**கல்கேரியா ஸல்ப்:** சில்லிட்ட கைகால்கள் (மூட்டுகளில் பார்க்க.)

**கல்கேரியா ஹைபோபாஸ்:** கைகால் அசதி. குழந்தையின் கை கால் சில்லிடல். இரவில் வியர்வை.)

**கன்வலேரியா:** கைகளைக் கீழேயூன்றிக்கொண்டு உட்காருதல்.

**கன்னபீஸ் இண்டிகா:** வலது கையில் பாரிச வாயு, இளைப்பாறுவதால் சமனம்.

**கன்னபீஸ் ஸடீவா:** கைகள், விரல் நுனிகள், நடுங்குதல்.

**காக்குலஸ்:** கைகள் ஒன்று மாற்றியொன்று மறத்துப்போதல் அல்லது ஒரு சமயம் கைகளும் மறு சமயங் கால்களுந்

தூங்கிப்போதல், கைகள் சிலசமயம் சில்லென்றுஞ் சில சமயஞ் சூடாகவுமிருத்தல். சாப்பிடும்போது கைகளில் நடுக்கம். தோள்பட்டைகளிலும் கைகளிலும் காயம் பட்ட உணர்ச்சி. மறத்துப்போதல் வலியுடன் முடங்கிக் கொள்ளுதல். அசைவால் அதிகரித்தல்.

**காக்டஸ் க்ராண்டி**: இடது கையில் மறமறப்புடன் இருதயத்தில் வலி, நீர் வீக்கம். கைகளில் கனத்த உணர்ச்சி, ஜந்துக்கள் ஊறும் உணர்ச்சி, மூட்டுகளில் கடுமையான அழற்சியுடன் வாதம் முதன் முதலில் கைகளில் ஆரம்பித்தல், இறுக்குவதுபோல்ற உணர்ச்சி கைகளிலும், இடது கால்களிலும். பாதங்களிலும் நீர் வீக்கம், சில்லிப்பு. வலி இடது கை வழியாகத் தெறிப்பது போன்ற வலி.

**காட்மியம் ஸல்ப்**: கைகள் தூக்கிப் போடுதல், உட்கார்ந்திருந்தாலுஞ் சாப்பிட்டாலும் சமனம்.

**காபியா க்ருடா**: மனவெழுச்சிக்குப்பின் கைகால் சில்லிப்பு (குழந்தைகள்) கைகால்களில் நடுக்கம்.

**காம்போரா**: விரைப்பு, நடுக்கம், சில்லிடல், நீலம் பூரித்தல்' கைகால்களில் கெண்டை யேறுதல், தலையிலிருக்கும் வலி விரல்களின் நுனிக்குச் செல்லுதல்.

**கார்டூஸ் மரியேனஸ்**: வலது தோள்பட்டையின் கீழ் வலி, அசைவால் அதிகரித்தல்.

**கார்பன் ஸல்ப்**: நீர் வீக்கம், காயம்பட்டது போல் வலி, உணர்ச்சியின்மை. இளைப்பு, பாரிச வாதம், கைகால்களில் கெண்டையேறுதல், விரைப்புடன் வலி. மின்னல் போல் தோன்றி மறைதல். மறத்த உணர்ச்சியும், நடுங்குதலும் விரல்கள் வீங்கியும் உணர்ச்சியற்றும் விரைப்பாகவுமிருத்தல். உணர்ச்சி குறைதல். நீர் வீக்கம்.

**கார்போ அனிமாலிஸ்**: கைகளைத் தொட்டாலும் வலியேற்படுதல் கொஞ்சங்கனமுள்ள சாமான்களைத் தூக்கினாலும் கூட மூட்டுகளில் சுளுக்கு ஏற்படல். கைகால்கள் நீலநிறமாகவிருத்தல்.

**கார்போ வெஜி :** கனம், விரைப்பு, பாரிச வாயுவால் பீடிக்கப் பட்டதுபோல் தோன்றுதல், தசைகளில் வலுவின்மை. மூட்டுகளில் பலவீனம். கை கால்களில் மறமறப்பு, வியர்வை எலும்புகளிலுங் கை கால்களிலும் எரிச்சல், வலி.

**காலீ ஐயோடேட்டம் :** இடது தோள்பட்டையில் அடிபட்டது போல் வலி.

**காலீ கார்ப் :** கை கால்கள் விரைவில் தூங்கவாரம்பித்தல், விரல்களின் நுனியில் வலி.

**காலீ ப்ரோமேடம்:** துறுதுறுவென்றிருக்குங் கைகள். விரல்களை வெகு வேகமாகப் பின்னிக்கொண்டேயிருத்தல், தசைகளில் முறுக்குதல், குதித்தல், கை கால்களில் உணர்ச்சியின்மை.

**காலீ மூரி :** எழுதும்போது கைகள் விரைத்தல்.

**காலீ ஸல்ப் :** முதுகிலும் கை கால்களிலும் பக்ஷவாயு போன்ற பலவீனம் உழைப்பால் அதிகரித்தல். பிடரிக் கழுத்து, முதுகு கை கால் வலி, உஷ்ண அறையில் அதிகமாதல், அடிக்கடி இடம் மாறும் வலி.

**காலோபில்லம் :** விரல்கள் சிறு வெலும்பு மூட்டுகளில் கடுமையான இழுக்கும் வலி, மணிக்கட்டுகளில் இசிப்பு வலி, கைகளை மூடினால் வெட்டும் வலி, பிரதி நிமிஷமும் இடம் மாறிக்கொண்டேயிருக்கும் வலி.

**காலோஸிந்திஸ் :** தசைகள் சுருங்குதல், வலது தோள்பட்டைத் தசையில் வலி, வலியுள்ள பாகத்தைக் கீழே வைத்துப் படுத்தல்.

**கால்மியா :** கழுத்திலிருந்து கைகளுக்குச் செல்லும் வலி, தோள்பட்டைத் தசையில் (முக்கியமாக வலது) வாத ரோகம், கைகால்களில் பலவீனம், சுண்டுவிரலில் வலி.

**காஸ்டிகம் :** கைகளிலும் புஜங்களிலும் மந்தமான கிழிக்கும் வலி, கனத்த உணர்ச்சி, பலவீனம். முன் கைத் தசை பலவீனம், கைகளில் மறத்த வுணர்ச்சி அல்லது உணர்ச்சியற்றிருத்தல், தசைநார்கள் குறுகுதல்.

**குப்ரம் மெடாலிகம் :** கைகளில் சில்லிப்பு.

**கோல்சிகம் :** சாமான்களைக் கையில் வைத்திருக்க இயலாமை, விரல்களின் நுனியில் ஊறும் உணர்ச்சி. கை, கால், பாதங்களில் நீர் வீக்கம், பிரதி மூட்டிலிருந்தும் முக்கியமாகத்தோள்பட்டை சப்பையில் வலி, பாரிசவாயு சம்பந்த வலி.

**கோனியம் :** கனம், களைப்பு, பக்ஷவாதம் பிடித்தல், நடுங்குதல், கைகள் ஸ்திரமாக இருக்க முடியாமை, கைகளில் வியர்வை தோள்பட்டைகளினிடையே வலி.

**க்ராபைடிஸ் :** கைகளில் வளைந்தவிடங்களில் பச்சைப் புண்ணுயிருத்தல், விரல்களின் நடுவில் வெடிப்புகள், தோள் பட்டைகளில் வலி, இடது கை மறத்தல், கைகள் தூங்குதல். விரல் நகங்கள் கனமாகவும் கறுப்பாகவும் கரடுமுரடாகவும் மாறுதல்.

**க்ரிஸோட் :** இடது கைக் கட்டை விரலில் சுளுக்கேற்பட்டது போல் வலி, விரைப்பு.

**க்ரோடன் டிக்லியம் :** இடது மார்பு வழியாகத் தோள் பட்டைக்குச் செல்லும் இழுக்கும் வலி.

**க்ரோடேலஸ் ஹாரிடஸ் :** கைகால் வீக்கம்.

**க்வாய்கம் :** கைகளில் நீடித்த வாதம், வலது தோளிலும் வலது கட்டை விரலிலும் பிடிப்பு வலி, இடது கையில் வாதசம்பந்த வலிகள், தலைவலி தவிர எல்லா வலிகளும் நடத்தலாலும் உஷ்ணத்தாலுமதிகரித்தல், கை கால்கள் முடக்கம், வேலை செய்தபின் துடை கால்களில் ஓய்ச்சல், கை கால்கள் முடங்குதல், கீல்வாயு, வாதம், கைகால்கள் விரைப்பு, இளைப்பு

**க்ளமேடிஸ் எரெக்டா :** பலவீனம், கனம், களைப்பு, காயமிருக்கும் உணர்ச்சி, உள்ளமுக்கப்பட்ட வெட்டையால் ஏற்பட்ட வாதம், விரல் மூட்டுகளில் வீக்கம்

**க்ளோனுயின் :** இடது கையில் மறத்த உணர்ச்சி, கை விரல் களில் வாதவலி, விரல்களிலேயே நாடி பார்க்க முடியும்

கைகளில் ரத்த ஓட்டம் தடைப்பட்டது போன்ற கன உணர்ச்சி. மரமரப்பு, கைகள் இறுக மூடியிருத்தல், தோல்களைக் குலுக்குதல்.

**செலிடோனியம் :** வலது தோள்பட்டை யெலும்பின் கீழ்ப்பாகத்தில் வலி.

**செனபோடியம் :** இடது தோள்பட்டை யெலும்பின் கீழ்வலி.

**சைனு :** ஒரு கை சில்லிப்பு, ஒருகை சூடு, மூட்டுகளிலும் கைகால்களிலும் சுளுக்கு விழுந்தது போன்ற வலி மெதுவாகத் தொட்டால் வலி. நன்ருக அமுக்கினுல் வலி சமனமாதல். அதிக பலஹீனம். நடுங்குதல். மறத்தது போன்றிருத்தல். அவயவங்களை அசைக்கப் பிரியமின்மை. காலையிலும் உட்கார்ந்திருக்கும்போதும் அதிகம். கைகால்களில் கயிற்ருலிறுக்கியிருப்பது போன்ற உணர்ச்சி, மூட்டுகள் வீங்கியும் அதிக வலியுடனுமிருத்தல்.

**டபாகம் :** (கால்களில் பார்க்க.)

**டயஸ்கோரியா :** உடையும் நகங்கள். மார்பெலும்பில் வலிஆரம்பித்துக் கைகளுக்குச் செல்லுதல்.

**டல்கமாரா :** பாரிசவாயு, கீல்வாத வலிகளும் வயிற்றுப்போக்கும், மாறி மாறி வருதல். சரும வியாதிகளமுக்கப்பட்டதாலேற்பட்ட கீல்வாதம்.

**டாரண்டுலா குபான்ஸிஸ் :** கைகால் நடுங்குதல், ரத்தம் சுரந்திருத்தல்.

**டிஜிடாலிஸ் :** கைகால் சில்லிடல், விரல்கள் மறத்துப்போதல், சரீரம் முழுதும் நீர்ச்சுரப்பு.

**டூக்ரியம் :** நகச்சுற்று, ரணங்கள் (எலும்புகளில் வலி—நடப்பதால் சமனம்.) திடீரென்று வலது மணிக்கட்டுக்குச் சற்றுமேலேயுள்ள தசைகளில் வெட்டுவதுபோன்ற வலி.

**ட்யூபர்குலீனம் :** கைகால்களிலும் மூட்டுகளிலும் இடம்விட்டு இடம் மாறும் வலிகள் பிடிப்புகள். அசைக்க முடியாமை. வலிகள் உஷ்ணத்தால் சமனம், அசைவினுல் அதிகம் பிடிப்புவலிகள்.

**ட்ரொஸிரா:** கைகால்களில் வலி,

**தெரிபிந்த்:** கைகால்களில் சில்லிப்புடன் வியர்வை.

**நக்ஸ்மாஸ்சாடா:** மறத்துப்போதல் ஊசிகளால் குத்துவது போலிருத்தல், பாரிச வாயு போன்ற பலஹீனம். ஈரகப் புள்ள பருவங்களில் வலியதிகரித்தல்.

**நக்ஸ் வாமிகா:** குத்துவலியுடன் பாரிச வாதம், காலை நேரங் களில் கைகால்களிலும் முதுகிலும் குளிர்ந்த உணர்ச்சி. கைகால்கள் நடுங்குதல் (இருதயத்தில் பார்க்க)

**நாஜா:** கை, கால் ஊதிக் கனத்தல்.

**நேட்ரம் ஆர்ஸனிகம்:** மூட்டுகளில் பிடிப்புகள், அங்குமிங்கும் தோன்றும் கீல்வாயு வலிகள், வலது தோள்பட்டை கை விரல்கள் முதலியவைகளில் கீல்வாதம், கைகளும் கால் களும் சில்லென்றிருத்தல்.

**நேட்ரம் கார்ப்:** தோள்பட்டையிலும், கைகளிலும் முழங்கை யிலும் கீல்வாயு வலி, பலஹீனம். காலை நேரங்களில் கைகள் நடுங்குதலும், மாலை நேரங்களில் வீங்குதலும்.

**நேட்ரம் மூரியாடிகம்:** தோள்பட்டை மூட்டில் வலி. எழுதும் போது கைகள் நடுங்குதல், கைச்சருமமும் நகங்களும் உலர்ந்திருத்தல், கைகால்களெல்லாம் தூங்கிவிட்டது போலிருத்தல். தசைகள் தாறுமாருக இறுக்கிக்கொண்டு அதனுல் கை கால்கள் இழுத்துக்கொள்ளுதல்.

**நேட்ரம்ஸல்ப்:** தூங்கியெழுந்தவுடனும் எழுதும்போதும் கைகள் நடுங்குதல். நகச்சுற்றி.

**பல்ஸடில்லா:** தோள்பட்டை மூட்டுகளில் வலி, கைகளிலிருக் கும் அசுத்த ரத்தக் குழாய்கள் வீங்கியிருத்தல். நோயுற்ற உறுப்புகள் இழுத்தல்.

**பாப்டீஷியா:** இடது தோள்பட்டையிலிருந்து வலியாரம்பித்து கைகளுக்குச் செல்லுதல். இடது கை மறத்துப் போயிருத்தல்.

கைகள் பெரிதாயிருப்பது போன்ற உணர்ச்சி, கைகள் நடுங்குதல், இடதுகையும் காலும் உணர்ச்சியற்றிருத்தல், கைகால்கள் படுக்கையில் தனித் தனியே பிரிந்து சிதறிக் கிடப்பது போன்ற உணர்ச்சி. இவைகளை ஒன்று சேர்க்க கைகளையும் கால்களையும் அடித்துக் கொள்ளல்.

பாரிடா காரப்: வயோதிகர்களின் மனக் குழப்பம் கைகால் நடுக்கம்.

பாரிடா மூரியாடிகா: கைகள் வீங்குதல், உஷ்ணமாயிருத்தல், திடீரென்று (இரவில்) கையிழுத்துக் கொள்ளுதல், (காலில் பார்க்க.)

பாரிஸ்: விரல்களில் சுரணையின்மை.

பாஸ்பரஸ்: முகம் கை கால்களில் நீர்ச்சுரப்பு, இடது புறத்தில் கிழிக்கும் வலி, கைகள் மெலிந்து போதல். அடிக்கடி விரல்கள் இழுத்துக் கொள்ளுதல். உள்ளங்கைகளில் எரிச்சல், அக்குளின் கோளங்கள் வீங்குதல், தலையிலும் உள்ளங்கைகளிலும் வியர்வை. அசைத்தால் கைகால்கள் நடுங்குதல். சில்லென்றிருத்தல், கைகால்கள் பலஹீனம், நீடித்த ஜுரத்தின் பின் கைகால்களில் வீக்கம், குத்துவலி.

பிஸ்மத்: இடது கையிலும் இருதயத்தைச் சுற்றிலும் வலி, வலது கையில் பக்ஷவாயு போன்ற பலஹீனம், கைகால்கள் கெண்டையேறுதல், சில்லிடல்.

பெர்பெரீஸ் வல்கேரிஸ்: தோள்பட்டை கை விரல்களில் கீல் வாயு சம்பந்த வலிகள்.

பெர்ரம் மெடாலிகம்: தோள்பட்டைகளிலும் கைகளிலும் வலி, இது முக்யமாய் படுக்கும்போது அதிகமாயிருக்கும். தோள்பட்டை மூட்டுகளில் கீல்வாயு பிடிப்பு சரீர தாது நீர்கள் அதிகமாக வெளியேறிய பின்னேற்படும் நீரதைப்பு.

பெல்லாண்டிரியம்: நடக்கும்போது தளர்ந்து தள்ளாடுதல்.

பைடோலக்கா: (வாதத்தில் பார்க்க),

**பைரோஜீனியம்:** கைகள், கால்கள், பாதங்களிவைகள் மறத்துப்போதல் காலையில் எழுந்தவுடன் அதிக பல ஹீனம், கைகால்கள் சில்லிட்டு உணர்ச்சியற்றிருத்தல்.

**போடோபில்லம்:** தோள்பட்டைக்கு நடுவே வலி, இடது பக்க பக்ஷவாதம்.

**போவிஸ்டா:** கைகளுக்கு பலமில்லாமை.

**ப்ரோமியம்:** கைகளில் சிரங்குகள்.

**ப்ளம்பம்:** பிரதி தசைகளிலும் பக்ஷவாதம், கைகளால் ஒரு சாமானையும் பிடித்துத் தூக்கமுடியாமை, நன்ருக நீட்ட முடியாமை, கைகளின் பக்ஷவாத த்திற்கு சிறந்த ஔஷதம்

**மங்கானம்:** தோள்பட்டையிலிருந்து விரல்கள் வரை கீல்வாயு. வலிகள்.

**மெக்னீஷியா கார்பானிகா:** உள்ளங் கைகளில் வெடிப்புகள், விரல்கள் சிவந்தும் நீர் சுரந்துமிருத்தல்.

**மெக்னீஷியா பாஸ்:** கைகள் நடுங்குதல், குமாஸ்தாக்களின் கை நடுக்கம்.

**மெக்னீஷியா மூரி:** தோள்பட்டைகளில் கீல்வாத வலிகள், இவ்வலிகள் கைகளினுள்ளே விரல்களுக்குச் செல்லுதல், அசைவிஞல் சமனப்பட்டிருத்தல். காலையில் எழுந்திருந்த வுடன் கைகள் மறத்துப்போதல், கைகால்களில் இழுக்கும் வலிகள்.

**மெக்னீஷியா ஸல்ப்:** காலையில் இடது கையும் காலும் மறத்தல் இரவுகளில் கீல்வாத வலிகள்.

**மெடோரினம்:** இரு தோள்பட்டை எலும்புகளுக்கு நடுவில் வலி, மணிக்கட்டுகளில் வீக்கம்.

**மெர்க்குரியஸ் ஸொலுபுலிஸ்:** கைகளில் குடைசல் வலி, கைகள் நடுங்குதல், சிறு உழைப்பிலும் கைகளில் வைத்திருக்கும் வஸ்துக்கள் தன்னுணர்வின்றி கீழே விழுந்துவிடுதல்.

**யூபடோரியம் பர்பூரியம்:** தலை சுற்றலுடன் இடது தோள் பட்டையிலிருந்து பிடரிவரை வலி.

**யூபடோரியம் பர்போலியேட்டம்:** குளிரில் கைகளும் விரல்களும் விரைத்தவுணர்ச்சி, வலது தோள்பட்டையிலும் இடது மார்பிலும் ஆழமான இடத்தில் வலி, மணிக்கட்டுகள் உடைந்த அல்லது நசுக்கப்பட்டது போன்ற வலி.

**ரஸ் டாக்ஸ்:** சுளுக்கு ஏற்பட்டதுபோல் புஜங்களில் வலி, தோள்பட்டை கைகள், மணிக்கட்டுகள், விரல்களில் அடிக்கடி பிடிப்புகள் கிழிக்கும் வலி, எரிச்சலுண்டாதல், மழைக்காலங்களிலும் படுக்கையிலும், அசையாமலிருக்கும்போதும், அதிகமாக இருக்கும். கைகால்களில் நடுக்கல்கள். இருதய நோயுடன் இடது கையில் வலி. பக்ஷவாதம், உணர்ச்சியின்மை, விரல்களில் வீக்கம், கைகள், உள்ளங்கைகள், விரல்கள் முதலியவைகளில் மறத்த உணர்ச்சி, ஊசிகள் குத்துவது போன்ற உணர்ச்சி, பூச்சிகள் ஊறுவதுபோன்ற உணர்ச்சி.

**ரானங்குலஸ்:** கீல்வாத வலி, பிடிப்பு வலி, உள்ளங்கைகளில் தீ சுட்டதுபோல் கொப்புளங்கள்.

**ரியம்:** கைகளில் தசைகள் துடித்தல்.

**ரூடா:** கைகால்களில் வலி, மூட்டுகள் விலகுதல், பலஹீனம், இடது தோள்பட்டையில் அடிப்பதுபோன்ற வலி, மணிக்கட்டுகளில் சுளுக்கேற்பட்டது போல் வலி, கைகள் மறத்தல், விரல்கள் குறுகிய உணர்ச்சி

**ரோடோடேண்ட்ரன்:** கைகளில் இழுக்கும் வலிகள், இரவிலும் மழைக்காலங்களிலும் அதிகம், அப்போது அங்கே ரத்த ஓட்டம் நின்று விட்டதுபோன்ற உணர்ச்சி.

**ரோபினு:** அன்னப்பையிலும் தோள்பட்டை நடுவிலும் எரிச்சல்.

**ரோஹிடாக்:** உள்ளங்கையில் சூடு எரிச்சல், முள்ளந்தண்டுக்கும் வலது தோள்பட்டை எலும்புக்கிடையில் வலி.

**லாக்கனிஸ் :** நடுங்குதல், அக்குள் கோளங்கள் வீங்கிப் பருத்திருத்தல், இடது தோள்பட்டையும் கையும் நொண்டியாகி விட்டது போலிருத்தல். இரவுகளில் உள்ளங்கைகளும் உள்ளங்கால்களும் எரிதல்.

**லாரோஸிராஸஸ் :** கைகளில் வெயின்கள் தடித்தல்.

**லேடம் பாலஸ்திரி :** கைகால்கள் வீங்கியிருத்தல், பாண்டு வீக்கம் பாதிக்கப்பட்ட பாகங்கள் முதலில் வீங்கியதன் பின் இளைத்தல், மாலையில் உள்ளங்கையில் உஷ்ணமான உணர்ச்சி, வியர்வை கசிதல்; அடிபட்டதாலேற்பட்ட நகச்சுற்றுக்கள்.

**லைகோபோடியம் :** வலது தோள்பட்டை மூட்டிலும் இடது இடுப்பிலும் கீல்வாதப் பிடிப்புகள், கைகளும் விரல்களும் மறத்துப்போதல்.

**வலேரியானு:** கைகளிலும் தோள்பட்டைகளிலும், முகத்திலும் வலி, யாதொரு ஆழ்ந்த வியாதியுமில்லாமல், கைகள் இழுத்துக்கொள்ளுதல், அசையாமலிருக்கும் போது கைகால்களில் கிழிக்கும் வலிகள், அசைய ஆரம்பித்தால் மேலும் கீழும் ஏறியிறங்கும் கிழிக்கும் வலிகள்.

**வெராட்ரம் ஆல்பம் :** பக்ஷவாத பலஹீனம் வலி, (கால்களில் பார்க்க.)

**ஜெல்ஸிமியம் :** இழுக்கும் வலிகள், கைகள் சில்லென்றிருத்தல்.

**ஸபீனு :** கைகளைத் தொங்கவிடுவதால் மணிக்கட்டுகளில் பிடிப்பும் வலியும்.

**ஸரஸபரில்லா :** அசையும்போது பிடிப்புகள், விரல்களில் ஆழமான வெடிப்புகள், இரவுகளில் எலும்பு வலிகள். இரவு மழைக்காலங்களில் அதிக வலி, கைகால்கள் நடுங்குதல்.

**ஸல்பர் :** இடது தோள்பட்டையில் சுளுக்கு ஏற்பட்டது போன்ற வலி. கைகளில் கிழிக்கும் வலிகள், உள்ளங்கைகளிலும் விரல்களின் இடுக்குகளிலும் வெடிப்புகள்,

கைகள் நடுங்குதல், அக்குளில் நாற்றமுள்ள வியர்வை உற்பத்தியாதல்.

**ஸாங்குநேரியா:** வலது கையைத் தூக்கி பிடரியில் வைக்க முடியாமை, உள்ளங் கைகளில் எரிச்சல், வலது தோள் பட்டையிலும் கையிலும் கீல்வாத வலிகள். வலியுள்ள பாகத்தைத் தொட்டால் வலி நின்று விடுதல்.

**ஸாம்புகஸ்:** கைகள் பாதங்கள் உப்புதல்.

**ஸிகூடாவிரோஸா:** பலவிதமாக இழுக்கப்படுதல், அடிக்கடி கைகளிலும் கால்களிலும் திடீரென்று தூக்கிப் போடும் உணர்ச்சி.

**ஸிங்கம் மெடாலிகம்:** கைகளில் தோல் வெடித்தல், வரட்சி, எழுதும்போது கை நடுங்குதல், ஒரு பக்கம் அல்லது இரு பக்க பக்ஷவாதம், கைகள் நடுங்குதல். எதையோ பிடிக்கப் போவது போல் கைகளால் செய்தல். உள்ளங்கையில் எரிச்சலுடன் தாகவரட்சை,

**ஸிபிலினம்:** தோள்பட்டைகளில் கீல்வாதம், நீண்ட எலும்பு களில் கடுமையான வலி.

**ஸிலிகா:** கைகளில் நடுக்கம், முன் கைகளில் பக்ஷவாதம் போன்ற பலஹீனம், நகங்களின் கோளாறுகள், கைகள் பாதம் அக்குள்களில் நாற்ற வியர்வை. விரல்களின் நுனி யில் நகச்சுற்றுகள் ஏற்படுவதுபோல் வலி.

**ஸிஸ்டஸ்:** ரணங்களைச் சுற்றிலும் கறடுதட்டிய வீக்கங்கள்.

**ஸெபியா:** எல்லா உறுப்புகளிலும் துடிப்புகள். இழுப்புகள். உள்ளங்கைகளில் தோலுரிதல், (கால்களில் பார்க்க)

**ஸெலீனியம்:** கைகால் இளைத்தல், நடுக்கல்.

**ஸைக்ளமென்:** கைகளிலிருக்கும் சாமான்கள் கீழே விழுந்து விடுதல்.

**ஸோரினம்:** வலது தோள்பட்டையில் பலஹீனம், நீடித்த கீல் வாதம், நகங்களைச் சுற்றிச் சீழ் பிடித்தல்.

**ஸ்க்வில்லா:** கைகளும் பாதங்களும் சில்லென்றிருத்தல், (வாதத்தில் பார்க்க.)

**ஸ்டாபிஸாக்ரியா:** விரல்களின் எலும்புகளில் அழற்சி, நுனிகள் மறத்துப் போயிருத்தல், நொந்த வலி, பலஹீனம், கைகள் நடுங்குதல், கைகால்களிலும் இருதயத்திலும் வலி. காய மேற்பட்டால் அதிகரித்தல்.

**ஸ்டானம்:** அசையாமலிருக்கும்போது கைகளின் தசைகள் வெட்டியிழுத்தல், எழுதுவதற்காகப் பேனவைப் பிடிக்கும் போது விரல்களிழுத்துக் கொள்ளுதல். கைகளில் பல ஹீனம், கனம், முக்யமாக வலது பக்கத்திலதிகம், மாலை நேரங்களில் கைகளும் கணுக்கால்களும் வீங்குதல், கை கால்களில் பக்ஷவாத பலஹீனம், கனம்.

**ஸ்டிக்டா:** கைகளிலும் விரல்களிலும் குத்து வலி, கை கால் களில் வீக்கம், இறுக்க உணர்ச்சி. வலி தாங்க முடியா மல் பிதற்றிக் கொண்டேயிருத்தல்.

**ஸ்ட்ரமோனியம்:** கைகள் சில்விடல், கைகளால் எதையோ தேடுவதுபோன்ற சேஷ்டைகளை செய்து கொண்டே யிருத்தல், கைகள் அசைந்துகொண்டும் கால்கள் அசையா மலுமிருத்தல் (பெண்:—கைகளை எப்போதும் பெண்குறி யில் வைத்துக் கொண்டிருத்தல்.)

**ஸ்பாஞ்சியா:** வலது கட்டை விரலில் முறுக்கும் வலி, இது பகற்காலங்களிலதிகம். இடது தோள்பட்டை மூட்டில் துடிப்புகள்.

**ஸ்பைஜீலியா:** மூட்டுகளில் பிடிப்புவலி, குத்து வலி. இருதயத் திலிருந்து வலியாரம்பித்து இடது கைக்குச் செல்லுதல். இடதுகை மறத்தல், பலஹீனம்.

**ஹயாஸ்யாமஸ்:** விரல்களால் சேஷ்டைகள் செய்தல்.

**ஹிபர் ஸல்பர்:** நகச்சுற்று நகங்கள் கெட்டிப்பட்டு உடையும் தன்மையுடையவையாக விருத்தல்.

**ஹெல்லிபோரஸ்:** ஒரு கையும் ஒரு காலும் ஒரே மாதிரியாக அசைந்து கொண்டேயிருத்தல். (வலிப்பில் பார்க்க.)

கைகள் தன்னுணர்ச்சியின்றி, ஆடிக்கொண்டேயிருத்தல், எப்பொழுதும் ஒரு கையும் காலும் ஆடிக்கொண்டே யிருத்தல்.

**ஹைடிராஸ்டிஸ் :** உட்கார்ந்து எழுந்திருக்கும்போது கைகளின் உதவியால்தான் எழுந்திருக்க முடியும். இடது மார்பி லிருந்து இடது தோள்பட்டை வரை வலி.

**ஹைபெரிகம் :** தோள்பட்டை வலி, விரல்களில் வலி, கை கால்களில் பூச்சிகள் ஊறும் உணர்ச்சி. அடிபட்டதா லேற்படும் உபாதிகள், விரல்கள் நசுங்குதல்.

# வலது கை

**அக்னஸ் காஸ்டஸ் :** வலது அக்குள், கைகளில் மேல்பாகம் இவைகளில் கடினமான அமுக்கும் வலி, அசைவு. தொடுதலால் உபாதி அதிகம்.

**அப்ரோடேனம் :** முதலில் வலதுகை விரலில் ஆரம்பித்துப் பின் இடதுகை விரலுக்கு வரும் வலி.

**அமோனியா கார்ப் :** பலமின்மை, பின்புறமிறுக்கப்படல்.

**அஸ்குலஸ் ஹீபோ :** பக்ஷவாயுவால் பீடிக்கப்படுவதால் தூக்க முடியாமை.

**ஆரம் மெட்டாலிகம் :** முழங்கையெலும்பில் வலி.

**ஆஸிட் ஆக்ஸாலிக் :** மணிக்கட்டுகளில் சுளுக்கு.

**ஆஸிட்நைட்ரிக் :** தோள்பட்டையிலும் கையிலும் வலி, முன் கையில் அதிகம். மறத்தல், நடுங்குதல், ஊசிகளால் குத்துவதுபோலிருத்தல்.

**ஐரிஸ் வர்ஸிகோலர் :** தூக்கும்போது வலி, அசைவாலதிகரித்தல்

**கன்னபிஸ் இண்டிகா :** பாரிசவாயு, இளைப்பாறுவதால் சமனம்.

**செலிடோனியம்:** வலது தோள்பட்டை யெலும்பின் கீழ்பாகத்தில் வலி.

**டுக்ரியம்:** வலது மணிக்கட்டுக்குச் சற்று மேலேயுள்ள தசைகளில் வெட்டுவதுபோன்ற வலி.

**நேட்ரம் ஆர்ஸனிகம்:** வலதுதோள்பட்டை, கைவிரல்கள் முதலியவைகளில் கீல்வாதம்.

**பிஸ்மத்:** வலதுகையில் பக்ஷவாயுபோன்ற பலஹீனம்.

**பூபடோரியம் பர்போலியேட்டம்:** வலது தோள்பட்டையிலும் இடது மார்பிலும் ஆழமானவிடத்தில் வலி.

**ரோஹிடாக்:** முள்ளந்தண்டுக்கும் வலதுதோள்பட்டைஎலும்புக்கிடையில் வலி,

**லைகோபோடியம்:** வலது தோள்பட்டை மூட்டிலும் இடது இடுப்பிலும் கீல்வாதப் பிடிப்புகள்.

**ஸாங்குநேரியா:** வலதுகையைத் தூக்கிப் பிடரியில் வைக்க முடியாமை, வலது தோள்பட்டையிலும் கையிலும் கீல் வாத வலிகள்.

**ஸோரினம்:** வலது தோள்பட்டையில் பலஹீனம்.

# இடது கை

**அகேரிகஸ்:** அதிக வலி.

**அகோனைட்:** மறத்தல்.

**அக்டியா ரஸிமோஸா:** இருதய வலியுடன் இடதுகை மறத்தல்.

**அப்ரோடேனம்:** முதலில் வலதுகை விரலில் ஆரம்பித்துப் பின் இடதுகை விரலுக்கு வரும் வலி.

**அம்ப்ரா க்ரிஸியா:** மறத்தல்.

**அல்லியம்ஸீபா:** (விரல்களில் பார்க்க.)

**அஸ்குலஸ் ஹிபோ:** இடது கையும், காலும் கனமாகவும். வீங்கியுமிருத்தல்.

**ஆரம் மூரியாடிகம்:** இடது தோள்பட்டையில் கிழிக்கும் வலி

**ஆரம் மெடாலிகம்:** தோள்பட்டையில் வீக்கம், குடைதல், கனமாகவும் தூக்கமுடியாமலுமிருத்தல்.

**ஆர்ஸனிகம் ஆல்பம்:** மார்பு முழுதும் வலி, இடது கைக்குப் பரவுதல்.

**ஆஸிட் பாஸ்பாரிக்:** இடது புஜத்திலும். கையிலும் கிழிக்கும் வலிகள்.

**காக்டஸ் க்ராண்டி:** இடது கையில் மறமறப்புடன் இருதயத்தில் வலி. நீர்வீக்கம், இடதுகை வழியாக தெறிப்பதுபோன்ற வலி.

**க்ராபைடிஸ்:** மறத்தல், கை தூங்குதல்,

**க்ரிஸோட்:** இடதுகைக் கட்டை விரலில் சுளுக்கேற்பட்டது போல் வலி, விரைப்பு.

**க்வாய்கம்:** வாத சம்பந்த வலிகள்,

**க்ளோனுயின்:** இடது கையில் மறத்த உணர்ச்சி.

**செனபோடியம்:** இடது தோள்பட்டை யெலும்பின் கீழ் வலி.

**பாப்டீஷியா:** இடது தோள்பட்டையிலிருந்து வலியாரம்பித்துக் கைகளுக்குச் செல்லுதல், இடதுகை மறத்துப் போயிருத்தல், இடதுகையுங் காலும் உணர்ச்சியற்றிருத்தல்.

**பாஸ்பரஸ்:** இடது புஜத்தில் கிழிக்கும் வலி.

**பிஸ்மத்:** இடது கையிலும் இருதயத்தைச் சுற்றிலும் வலி.

**மெக்னீஷியா ஸல்ப்:** காலையில் இடது கையுங் காலும் மறத்தல். இரவுகளில் கீல்வாத வலிகள்.

**யூபடோரியம் பர்பூரியம்:** தலை சுற்றலுடன் இடது தோள் பட்டையிலிருந்து பிடரி வரை வலி.

ரஸ்டாக்ஸ் : இருதய நோயுடன் இடது கையில் வலி.

ருடா : இடது தோள்பட்டையில் அடிப்பது போன்ற வலி.

லாக்களிஸ் : இடது தோள்பட்டையுங் கையும் கொண்டியாகி விட்டது போலிருத்தல்.

ஸல்பர் : இடது தோள்பட்டையில் சுளுக்கேற்பட்டது போன்ற வலிகள். கிழிக்கும் வலிகள்.

ஸ்பாஞ்சியா : இடது தோள்பட்டை மூட்டில் துடிப்புகள்.

ஸ்பைஜீலியா : இருதயத்திலிருந்து வலியாரம்பித்து இடது கைக்குச் செல்லுதல், இடது கை மறத்தல், பலஹீனம்.

ஹைட்டிராஸ்டிஸ் : இடது மார்பிலிருந்து இடது தோள்பட்டை வரை வலி.

# புஜங்கள்

அகேரிகஸ் : தோள்பட்டைகளில் வலி.

அகோனைட் : ஊறும் உணர்ச்சி.

அபிஸ் மெல்லிபிகா : பலமின்மை, வாதம்.

அப்ரோடேனம் : புஜத்திலிருந்து முழங்கை வரை வலி.

அமோனியா கார்ப் : காயம் கிழிப்பது போன்ற வலி.

ஆரம் மூரியாடிகம் : இடது தோள்பட்டையில் கிழிக்கும் வலி.

ஆரம் மெடாலிகம் : இடது புஜத்தில் வீக்கம், குடைதல்.

ஆஸிட் ஆக்ஸாலிக் : மார்பிலிருந்து தோள்பட்டைக்குச் செல்லும் வலி, புஜங்களிலிருந்து விரல்கள் வரை மறத்தல்.

ஆஸிட் நைட்ரிக் : வலது தோள்பட்டையிலும் கையிலும் வலி. புஜங்களும் கால்களும் இளைத்தல்.

**ஆஸிட் பாஸ்பாரிக்:** இடது புஜத்திலும் கையிலும் கிழிக்கும் வலிகள்.

**ஆஸிட் ப்ளூவாரிக்:** வலது தோள்பட்டையில் வலி.

**கல்கேரியா கார்பானிகா:** வாதம்.

**கல்கேரியா பாஸ்:** வாத வலி. கைகளை உயரத் தூக்க முடியாமை.

**காக்குலஸ்:** புஜங்களிலும் கைகளிலும் காயம்பட்ட உணர்ச்சி.

**கார்டூஸ் மரியேனஸ்:** வலது புஜத்தின் கீழ் வலி, அசைவால் அதிகரித்தல்.

**காலீ ஐயோடேடம்:** இடது புஜத்தில் அடிபட்டதுபோல் வலி.

**காலோசிந்திஸ்:** வலது புஜத் தசையில் வலி. வலியுள்ள பாகத்தை கீழே வைத்துப் படுத்தல்.

**கால்மியா:** வலதுபுஜத் தசையில் வாதம்.

**காஸ்டிகம்:** மந்தமான கிழிக்கும் வலி, கனத்தவுணர்ச்சி, பலஹீனம்.

**கோல்சிகம்:** பிரதி மூட்டிலிருந்தும் முக்கியமாகத் தோள் பட்டை சப்பையில் வலி, பாரிசவாயு சம்பந்த வலி.

**கோனியம்:** தோள்பட்டைகளினிடையே வலி.

**க்ராபைடிஸ்:** தோள்பட்டைகளில் வலி.

**க்ரோடன் டிக்லியம்:** இடது மார்பு வழியாகத் தோள்பட்டைக்குச் செல்லும் இழுக்கும் வலி.

**க்வாய்கம்:** வலது தோளிலும் வலது கட்டைவிரலிலும் பிடிப்பு வலி.

**க்ளோனயின்:** தோள்களைக் குலுக்குதல்.

**செலிடோனியம்:** வலது தோள்பட்டை யெலும்பின் கீழ்பாகத்தில் வலி.

**செனபோடியம்:** இடது தோள்பட்டை யெலும்பின் கீழ் வலி.

**நேட்ரம் ஆர்ஸனிகம்:** வலது தோள்பட்டை கை விரல்கள் முதலியவைகளில் கீல்வாதம்.

**நேட்ரம் கார்பானிகம்:** தோள்பட்டை, கைகள், முழங்கையில் கீல்வாயு வலி.

**நேட்ரம் முரியாடிகம்:** தோள்பட்டை மூட்டில் வலி.

**பல்ஸடில்லா:** தோள்பட்டை மூட்டுகளில் வலி, கைகளிலிருக்கும் அசுத்த ரத்தக் குழாய்கள் வீங்கியிருத்தல். நோயுற்ற உறுப்புகள் இழுத்தல்.

**பாப்டிஷியா:** இடது தோள்பட்டையிலிருந்து வலி ஆரம்பித்துக் கைகளுக்குச் செல்லுதல்.

**பாஸ்பரஸ்:** இடது புஜத்தில் கிழிக்கும் வலி.

**பெர்பெரீஸ் வல்கேரிஸ்:** தோள்பட்டை கைவிரல்களில் கீல் வாயு சம்பந்த வலிகள்.

**பெர்ரம் மெடாலிகம்:** புஜங்களிலும் கைகளிலும் வலி, இது முக்யமாகப் படுக்கும்போது அதிகமாகவிருக்கும். புஜங்களில் கீல்வாயு பிடிப்பு.

**போடோபில்லம்:** தோள்பட்டைக்கு நடுவே வலி, இடதுபக்க பக்ஷவாதம்.

**மங்கானம்:** புஜத்திலிருந்து விரல்கள் வரை கீல்வாயு வலிகள்.

**மெக்னீஷியா முரியாடிகா:** புஜங்களில் கீல்வாத வலிகள், இவ்வலிகள் கைகளினூடே விரல்களுக்குச் செல்லுதல்.

**மெடோரினம்:** இருபுஜ எலும்புகளுக்கு நடுவில் வலி.

**யூபடோரியம் பர்பூரியம்:** தலை சுற்றலுடன் இடது தோள் பட்டையிலிருந்து பிடரிவரை வலி.

**யூபடோரியம் பர்போலியேடம்:** வலது தோள்பட்டையிலும் இடது மார்பிலும் ஆழமானவிடத்தில் வலி.

**ரஸ் டாக்ஸ்:** சுளுக்கு ஏற்பட்டதுபோல் புஜங்களில் வலி, புஜங்களில் பிடிப்புகள்.

**ருடா:** இடது தோள்பட்டையில் அடிப்பதுபோன்ற வலி.

ரோபினு : அன்னப்பையிலும் தோள்பட்டை நடுவிலும் எரிச்சல்.

லாக்களிஸ் : இடது தோள்பட்டையும் கையும் நொண்டியாகி விட்டது போலிருத்தல்.

லைகொபோடியம் : வலது தோள்பட்டை மூட்டிலும் இடது இடுப்பிலும் கீல்வாதப் பிடிப்புகள்.

வலேரியானு : வலி.

ஸாங்குநேரியா : வலது தோள்பட்டையிலும் கையிலும் கீல் வாத வலிகள்.

ஸிபிலினம் : தோள்பட்டைகளில் கீல்வாதம்.

ஸோரினம் : வலது தோள்பட்டையில் பலஹீனம்.

ஸ்பாஞ்சியா : இடது தோள்பட்டை மூட்டில் துடிப்புகள்.

ஹைட்ராஸ்டிஸ் : இடது மார்பிலிருந்து இடது தோள்பட்டை வரை வலி.

ஹைபெரிகம் : தோள்பட்டைவலி.

# முழங்கை

அப்ரோடேனம் : புஜத்திலிருந்து முழங்கை வரை வலி.

அமோனியா கார்ப் : எலும்பு உடைதல்.

ஆண்டிமோனியம் க்ரூடம் : அசைக்கும்போது மூட்டுகள் முறிதல்.

ஆரம் மெட்டாலிகம் : வலது முழங்கையெலும்பில் வலி.

நேட்ரம் கார்ப் : கைகளிலும் முழங்கையிலும் கீல்வாயு வலி.

# முன்கை & மேற்கை

**அரேனியா டயாடிமா :** முன்கை, மேற்கையெலும்பில் வலி.

**ஆரம் மெட்டாலிகம் :** முன்கையெலும்புகள் வீங்குதல்.

**ஆர்ஸனிகம் ஆல்பம் :** முன்கை கருப்பாகவும் கன்றியுமிருத்தல்

**ஆலொ ஸைகோட்ரினு :** முன்கைகளில் அடிபட்ட வலி.

**ஆஸிட் நைட்ரிக்:** முன்கையிலும் விரல்களிலும் கீல்வாத வலிகள். மறத்தாற் போலிருத்தல். நடுங்குதல். ஊசிகளால் குத்துவது போலிருத்தல், இவை முக்கியமாக வலது முன் கையில் அதிகம்.

# மணிக்கட்டு

**ஆஸிட் ஆக்ஸாலிக் :** வலது மணிக்கட்டில் சுளுக்கு

**டூக்ரியம் :** திடீரென்று வலது மணிக்கட்டுக்குச் சற்று மேலே யுள்ள தசைகளில் வெட்டும் வலி.

**மெடோரினம் :** மணிக்கட்டுகளில் வீக்கம்.

**யூபடோரியம் பர்போலியேட்டம் :** மணிக்கட்டுகளில் உடைந்த அல்லது நசுக்கப்பட்டது போன்ற வலி.

**ரூடா :** மணிக்கட்டுகளில் சுளுக்கேற்பட்டது போல்வலி.

**ஸபீனு :** கைகளை தொடுவதால் மணிக்கட்டுகளில் பிடிப்பும் வலியும்.

# உள்ளங்கையும், புறங்கையும்

**அமோனியா கார்ப்:** தோலுரிதல்.

**அம்ப்ரா க்ரிஸியா :** அரிப்பு.

**அயிலாந்தஸ் :** எரிச்சல்.

**அனகார்டியம் ஓரியண்டேல்:** தோலுரிதல்.

**ஆஸிட் நைட்ரிக்:** புறங்கையில் பெரிய பெரிய பாலுண்ணிகள்.

**எதூஸா ஸைனபியம்:** குழந்தைகளுக்கு உள்ளங்கை நீலநிற மடைதல்.

**காம்பொரா:** விரைப்பு, நடுக்கல், சில்லிடல். நீலம் பூரித்தல்,

**பாஸ்பரஸ்:** உள்ளங்கைகளில் எரிச்சல், தலையிலும் உள்ளங் கைகளிலும் வேர்வை.

**புபோ:** உள்ளங்கால், உள்ளங்கைகளில் கொப்புளங்கள்.

**மங்கானம்:** உள்ளங்கை வெடிப்பு, ரணம், அரித்தல்.

**மெக்னீஷியா கார்பானிகா:** உள்ளங்கைகளில் வெடிப்புகள்.

**ரஸ்டாக்ஸ்:** உள்ளங்கைகளில் மறத்த உணர்ச்சி, ஊசிகள் குத்துவதுபோல் அல்லது பூச்சிகள் ஊறுவது போன்ற உணர்ச்சி.

**ரானங்குலஸ்:** உள்ளங்கைகளில் தீ சுட்டதுபோல் கொப்பு ளங்கள்.

**ரோஸிடாக்:** உள்ளங்கையில் சூடு, எரிச்சல்.

**லாக்கஸிஸ்:** இரவுகளில் உள்ளங்கைகளும் உள்ளங்கால்களும் எரிதல்.

**லேடம் பாலஸ்ட்ரி:** மாலையில் உள்ளங்கையில் உஷ்ணமான உணர்ச்சி, வியர்வை கசிதல்.

**ஸல்பர்:** உள்ளங்கைகளிலும் விரல்களின் இடுக்குகளிலும் வெடிப்புகள்.

**ஸாங்குநேரியா:** உள்ளங்கைகளில் எரிச்சல்.

**ஸிங்கம் மெடாலிகம்:** உள்ளங்கையில் எரிச்சலுடன் தாக வரட்சை.

**ஸெபியா:** உள்ளங்கைகளில் தோலுரிதல்.

# கை விரல்கள்

**அகேரிகஸ் :** விகாரமாக அசைதல். வஸ்துக்கள் தானுகவே நழுவிக் கீழே விழுதல்.

**அகோனேட் :** ஊறும் உணர்ச்சி, கட்டை விரல்கள் சூடாக விருத்தல்.

**அக்டியா ரஸிமோஸா :** எழுதும்போது நடுக்கல்.

**அபிஸ் மெல்லிபிகா :** தன்னையறியாமல் வஸ்துக்கள் கீழே விழுதல், தடிப்பான நகச்சுற்றி, (எரிதல், கொட்டுதல், நீர்ச்சுரப்பு )

**அப்ரோடேனம் :** முதலில் வலதுகை விரலில் ஆரம்பித்துப் பின் இடதுகை விரலுக்கு வரும் வலி, விரல் மூட்டு நுனிகளில் குத்து வலி.

**அமோனியா கார்ப் :** மடங்கிக் கொள்ளல், நகச்சுற்றி, விரல் நுனிகளிற் அழற்சி.

**அம்ப்ரா க்ரிஸியா :** நுனிகளில் சுருக்கங்கள்.

**அயிலாந்தஸ் :** கட்டை விரல்களிலும் விரல் நகங்களிலும் பெரிய கொப்புளங்கள் அல்லது வேர்க்குரு போல் வெடித்தல்.

**அலுமினு :** நகச்சுற்றி.

**அல்லியம் ஸீபா :** இடது நடுவிரலிலும் கட்டை விரலின் மிருதுவான பாகங்களிலும் வலி.

**ஆண்டிமோனியம் க்ரூடம் :** நகங்கள் வளராமை, வெடித்தல், நகத்தினடியிலிருக்கும் தோலில் வலி.

**ஆண்டிமோனியம் டார்ட்டாரிகம் :** நுனிகள் உணர்ச்சியற்றுக் கடினமாகக் காய்ந்திருத்தல், நழுவுதல்.

**ஆரம் முரியாடிகம் :** மூட்டுகள் விரைப்பாக இருத்தல், சாப்பிட்ட பின் நடுவிரலில் கிழிக்கும் வலி.

**ஆரம் மெடாலிகம் :** விரல் எலும்பு மூட்டுகளில் குடைதல்.

**ஆர்ஸனிகம் ஆல்பம்:** எரியும் குழிப்புண்கள்.

**ஆஸிட் ஆக்ஸாலிக்:** புஜங்களிலிருந்து விரல்கள் வரை மறத்தல், விரல் எலும்புகள் கூடுமிடங்களில் அழற்சி, வஸ்துக்களை வைத்திருக்கவோ அல்லது விரல்களையசைக்கவோ முடியாமை. விரல்கள் முறுக்கிக்கொள்ளுதல்.

**ஆஸிட் நைட்ரிக்:** கீல்வாத வலிகள், மூட்டுகளில் வீக்கம், குத்து வலி. விரல்களின் இடுக்குகளில் படைகள்.

**ஆஸிட் பாஸ்பாரிக்:** எழுதும்போது நடுங்குதல்.

**ஆஸிட் ப்ளுவாரிக்:** நகங்கள் அதிசீக்கிரமாக வளர்ந்து உடைதல்,

**ஆஸிட் ஸல்ப்யூரிக்:** எழுதிக்கொண்டேயிருக்கும்போது விரல்கள் இழுத்துக் கொள்ளல்.

**ஏதுஸா ஸைனுபியம்:** கட்டை விரல்கள் இறுக மூடிக்கொள்தல், (உள்ளங்கைகள் நீலநிறமடைதலும் நுனி விரல்கள் சுருங்கிக் காய்ந்துமிருத்தல்.)

**ஓலியாண்டர்:** எழுதும்போது நடுங்குதல்.

**கல்கேரியா பாஸ்:** நகங்களைச் சுற்றிலும் வலி.

**கல்கேரியா ப்ளோரிகா:** விரலெலும்பு மூட்டுகள் வாதத்தால் வீங்குதல், நகச்சுற்றி.

**கன்னபீஸ் ஸடீவா:** நுனிகள் நடுங்குதல்.

**காக்குலஸ்:** சாப்பிடும்போது நடுக்கம்.

**காம்போரா:** தலையிலிருக்கும் வலி விரல் நுனிக்குச் செல்லுதல்.

**கார்பன் ஸல்ப்:** வீக்கம். உணர்ச்சியின்மை, விரைப்பு, நீர் வீக்கம்.

**காலீ கார்ப்:** நுனியில் வலி.

**காலீ ப்ரோமேடம்:** விரல்களை வெகுவேகமாக பின்னிக்கொண்டேயிருத்தல்.

காலீ மூரியாடிகம் : எழுதும்போது விரைத்தல்.

காலோபில்லம் : சிறு எலும்பு மூட்டுகளில் கடுமையான இழுக்கும் வலி. மணிக்கட்டுகளில் இசிப்பு வலி, கைகளை மூடினால் வெட்டும் வலி.

கால்மியா : சுண்டுவிரலில் வலி.

கோல்சிகம் : வஸ்துக்களை வைத்திருக்க இயலாமை, நுனியில் ஊறும் உணர்ச்சி.

க்ராபைடிஸ் : விரல்களின் நடுவில் வெடிப்புகள், விரல் நகங்கள் கனமாகவும் கருப்பாகவும் கரடுமுரடாகவும் மாறுதல்.

க்ரிஸோட் : இடதுகைக் கட்டைவிரல் சுளுக்கேற்பட்டது போல் வலி, விரைப்பு.

க்வாய்கம் : வலது கட்டை விரலில் பிடிப்பு வலி. (வலது தோளில் வலியுடன் )

க்ளமெடிஸ் எரெக்டா : உள்ளமுக்கப்பட்ட வெட்டையால் ஏற்பட்ட வாதம். விரல் மூட்டுகளில் வீக்கம்.

க்ளோனயின் : வாதவலி. விரல்களிலேயே நாடி பார்க்க முடியும், கைகள் இறுக மூடியிருத்தல்.

டயஸ்கோரியா : உடையும் நகங்கள்.

டிஜிடாலிஸ் : விரல்கள் மறத்துப் போதல்.

டுக்ரியம் : நகச்சுற்று, ரணங்கள். (எலும்புகளில் வலி, நடப்பதால் சமனம்.)

நேட்ரம் ஆர்ஸனிகம் : வலது தோள்பட்டை கைவிரல்கள் முதலியவைகளில் கீல் வாதம்.

நேட்ரம் மூரியாடிகம் : எழுதும்போது கைகள் நடுங்குதல், கைச் சருமமும் நகங்களும் உலர்ந்திருத்தல்.

**நேட்ரம் ஸல்ப்:** தூங்கி யெழுந்தவுடனும், எழுதும்போதும் கைகள் நடுங்குதல், நகச்சுற்றி.

**பாரிஸ் க்வாட்ரிபோலியோ:** விரல்களில் சுரணையின்மை.

**பாஸ்பரஸ்:** அடிக்கடி விரல்கள் இழுத்துக் கொள்ளுதல்.

**பெர்பெரிஸ் வல்கேரிஸ்:** தோள்பட்டை கை விரல்களில் கீல் வாயு சம்பந்த வலிகள்.

**ப்ளம்பம்:** ஒரு சாமானையும் பிடித்து தூக்க முடியாமை. நன்றாகக் கைகளை நீட்ட முடியாமை. (கைகளின் பக்ஷ வாதத்திற்குச் சிறந்தது)

**மங்கானம்:** புஜத்திலிருந்து விரல்கள் வரை கீல்வாயு வலிகள்.

**மெக்னீஷியா கார்பானிகா:** விரல்கள் சிவந்தும் நீர் சுரந்து மிருத்தல், வெடித்தல்.

**மெக்னீஷியா பாஸ்:** கைகள் நடுங்குதல்; குமாஸ்தாக்களின் கை நடுக்கம்.

**மெக்னீஷியா மூரியாடிகா:** புஜங்களில் கீல்வாத வலிகள் கைகளினூடே விரல்களுக்குச் செல்லுதல். அசைவினால் சமனப்பட்டிருத்தல்.

**மெர்குரியஸ் ஸொலுபுலிஸ்:** கைகளில் வைத்திருக்கும் வஸ்துக்கள் தன்னுணர்வின்றி கீழே விழுந்துவிடுதல்.

**யூபடோரியம் பர்போலியேடம்:** குளிரில் கைகளும் விரல்களும் விறைத்த உணர்ச்சி.

**ரஸ்டாக்ஸ்:** விரல்களில் அடிக்கடி பிடிப்புகள், கிழிக்கும் வலி எரிச்சல், மழைக் காலங்களிலும், படுக்கையிலும், அசையாமலிருக்கும் போதும் உபாதிகள் அதிகம். விரல்களில் மறத்தவுணர்ச்சி, வீக்கம், ஊசி குத்துவதுபோல் அல்லது பூச்சிகள் ஊறும் உணர்ச்சி.

**ரூடா:** விரல்கள் குறுகிய உணர்ச்சி.

**லேடம் பாலஸ்திரி:** அடிபட்டதாலேற்பட்ட நகச்சுற்றுகள்.

**லைகோபோடியம்:** கைகளும் விரல்களும் மறத்துப்போதல்.

**ஸரஸபரில்லா:** ஆழமான வெடிப்புகள்.

**ஸல்பர்:** உள்ளங்கைகளிலும் விரல்களின் இடுக்குகளிலும் வெடிப்புகள்.

**ஸீலிகா:** நகங்களின் கோளாறுகள், விரல்களின் நுனியில் நகச்சுற்று ஏற்படுவது போல் வலி. விரல்களின் நுனி வெடித்தல்.

**ஸைக்ளமென்:** கைகளிலிருக்கும் சாமான்கள் கீழே விழுந்து விடுதல்.

**ஸ்டாபிஸாக்ரியா:** விரல்களின் எலும்புகளில் அழற்சி, நுனி மறத்துப் போயிருத்தல்.

**ஸ்டானம்:** எழுதுவதற்காகப் பேனாவைப் பிடிக்கும்போது விரல்கள் இழுத்துக் கொள்ளுதல்.

**ஸ்டிக்டா:** விரல்களில் குத்துவலி.

**ஸ்பாஞ்ஜியா:** வலது கட்டைவிரலில் முறுக்கும் வலி. இது பகற் காலங்களில் அதிகம்.

**ஹயாஸ்யாமஸ்:** விரல்களால் சேஷ்டைகள் செய்தல்.

**ஹீபர் ஸல்பர்:** நகச்சுற்று, நகங்கள் கெட்டிப்பட்டு உடையும் தன்மை உடையனவாகவிருத்தல்.

**ஹைபெரிகம்:** விரல்களில் வலி. விரல்கள் நசுங்குதல்.

# மார்பு

**அகோனைட்:** எரிச்சல் மார்பைச்சுற்றி கயிறுசுற்றிய உணர்ச்சி, எலும்புக்கூட்டின் கீழ் அல்லது இடது சுவாசாசயத்தின் மேல், பாரம், எரிச்சல், அமுக்கம்,

**அக்டியா ரஸிமோஸா:** எலும்பு வலி, நரம்புகளிடையில் வலி, பிடிப்பு வலி.

**அபொஸினம் :** மார்பு அமுக்கத்தால் பேச முடியாமை, துடிப்பு. நீர்ச்சுரப்பு.

**அப்ரோடேனம் :** குறுக்கே செல்லும் வலி.

**அமோனியா கார்ப் :** எரிச்சல்.

**அமோனியம் மூரி :** துடித்தல், பிடிப்பு வலியுடன் விக்கல், சிறு இடங்களில் எரிச்சல்.

**அம்ப்ரா க்ரிஸியா :** இறுக்க உணர்ச்சி, உருண்டை போன்ற அடைப்பிருக்கும் உணர்ச்சி.

**அரலியா ரஸிமோஸா :** மார்பு விரிவதற்காக தோள்பட்டை உயருதல், நடு மார்பில் ரணவலி, மார்பு கட்டப்பட்டது போலிருத்தல்.

**அர்ஜண்டம் நைட் :** மார்பில் எரிச்சல் கனம், மார்பைச் சுற்றி இறுகக் கட்டியிருக்கும் உணர்ச்சி, அதனல் மார்பை இரு கைகளாலும் அமுக்கிக் கொள்ளுதல்.

**அர்ஜண்டம் மெடாலிகம் :** அதிக பலஹீனம், இடது பக்கத்தில் அதிகம், விலாவெலும்புக்குப் பக்கத்தில் கொப்புளம்.

**அலுமின :** மார்பில் வலி, இரவில் அதிகம். இறுக்க உணர்ச்சி, சரீரத்தை வளைத்தாலோ, குனிந்தாலோ அதிகம். நடக்கும் போதும், உடம்பை நிமிர்த்தி வைத்துக்கொள்ளும் போதும், சமனம். பேசினல் மார்புவலி யதிகமாதல், வண்டி சவாரி செய்தால் மார்பில் வலி.

**அஸபோட்டிடா :** அமுக்குவதும் எரிச்சலும் உள்ள பிடிப்பு வலி. மார்பினுள்ளிருந்து வெளிப் பக்கம் செல்லல். மார்பில் இறுக்க உணர்ச்சியால் மார்பைப் பெரிதாகாமல் தடுத்தல்.

**அஸ்க்ளிபியாஸ் ட்யூபரோஸா :** நடுப்பாகம் அமுக்கினல் மிருதுவாகவிருத்தல். ப்ரையோனியாவால் தீராத பிடிப்பு வலி.

**அனகார்டியம் ஓரியண்டேல் :** மூளையை வைத்து அழுத்துவது போன்ற வலி.

**ஆண்டிமோனியம் ஆர்ஸனிகம் :** களகளப்பு சளி.

**ஆண்டிமோனியம் க்ரூடம் :** மார்பில் சூட்டுடன் வலி, அமுக்கம் மார்பில் வலி.

**ஆரம் மூரியாடிகம் :** வலது மார்பில் கிழிக்கும் வலி, உள்மூச்சு விடும்போது அதிகரித்தல்.

**ஆரம் மெடாலிகம் :** மார்பில் தைக்கும் வலி, குத்தும் வலி.

**ஆர்ஸனிகம் ஆல்பம் :** வலி, மார்பு பூராவும் இடது கைக்கும் பரவுதல், மார்பை முன்னால் வளைத்துக்கொண்டு படுக்கையிலிருந்து குதித்து விடுதல், உட்காரவேண்டி வருதல், மார்புக்கு மேலாக புகை வரும் உணர்ச்சி, மார்பிலும், வயிற்றிலும் இறுக்கம், மாடிப்படி யேறும்போது மார்பில் இறுக்கம்.

**ஆர்னிகா :** மார்பின் நடுபாகத்திற்குக் கீழாக அமுக்கும் உணர்ச்சி.

**ஆஸிட் ஆக்ஸாலிக் :** மந்தமான கனமான இரணமிருப்பது போல் மார்பு வலி, வலியுள்ள மார்பு, மார்பிலிருந்து தோள்பட்டைக்குச் செல்லும் வலி.

**ஆஸிட் நைட்ரிக் :** வலது மார்பினூடே குத்துவலி, குளிர்ந்த பருவங்களில் சமனம்.

**ஆஸிட் பாஸ்பாரிக் :** மார்பில் பலவீனமும், எரிச்சலும். இது இருமுவதனாலும் பேசுவதனாலும் அதிகமாதல், மார்பில் கர்முர் என்றிழுத்தல், ஆனால் இருமலிருப்பதில்லை. வயிற்றுப்போக்கு ஆரம்பித்தால் இது சமனப்படுதல் மார்பெலும்புக்குப் பின் கனமான உணர்ச்சி.

**ஆஸிட் பென்ஸாயிக் :** காச இருமலில் தொட்டால் வலி.

**ஆஸிட் மூரி :** மார்பில் களகளப்புடன் இருமல், மார்பில் குறுகுறுத்த உணர்ச்சியுடன், கக்குவாய் இருமல், பிரதி தடவை இருமிய பின்னும், மார்பில் உறுமல் சப்தங்களும், தண்ணீர் கீழே இறங்கும் சத்தமும்.

**இக்னேஷியா:** மார்பில் கனமான வஸ்து இருக்கும் உணர்ச்சி, நடு மார்பில் அரிப்பு.

**இபிகாக்உனு:** மார்பில் அதிக கனம்.

**ஐயோடியம்:** மார்பில் இறுக்கம், பட்டினி கிடந்தால் மார்பில் வலியேற்படுதல்.

**கந்தாரிஸ்:** மார்பில் எரிச்சல், பிடிப்பு வலி.

**கல்கேரியா கார்ப்:** மார்பில் அதிக வலி.

**கல்கேரியா பாஸ்:** இருமலுடன் மார்பில் பிடிப்பு வலி, ரணவலி, களகளப்பு, இருமல், (சுவாசத்தில் பார்க்க.)

**கல்கேரியா ஸல்ப்:** மார்பில் வலி, இருமல் (கபத்தில் பார்க்க.)

**கன்னபிஸ் ஸடைவா:** நடு மார்பில் மேல் பக்கமாக இசிவு வலி.

**காக்டஸ் க்ராண்டி:** காலை அல்லது 11 மணிக்குத் தோன்றும் மார்பு உபாதிகள், கஷ்ட சுவாசம், இறுக்கும் உணர்ச்சி, மார்பின் நடுவில் இறுக்க உணர்ச்சி, மார்பைச் சுற்றிலும் கயிறு போட்டு கட்டியிருக்கும் உணர்ச்சியால் மார்பின் சுபாவ அசைவுகள் தடைபடல்.

**காமோமில்லா:** மார்பில் மூச்சுத் திணறும்படியான இறுக்கம் குழந்தைகளின் மார்பில் தயிர் கடையும் சப்தம்.

**கார்டுஸ் மரியேனஸ்:** வலது மார்பெலும்புகளுக்குக் கீழேயும் முன் பக்கத்திலும் பிடிப்பு வலிகள்.

**கார்பன் ஸல்ப்:** மார்பில் சில்லென்ற உணர்ச்சி, மார்பில் சூடு, சுவாசாசயங்களிலிருந்து ரத்தப்பெருக்கு, அரிப்பும் அமுக்கும் உணர்ச்சியும், புண் இருப்பதுபோல் தோன்றுதல். மார்பின் நடுப்பாகத்தில் எரிச்சல்.

**கார்போ அனிமாலிஸ்:** மார்பில் சில்லென்ற உணர்ச்சி.

**காலி ஐயோ:** நடக்கும்போது நடுமார்பிற்கும் பின்புறமாக வலி, நிமோனியாவுக்கு இது ஒரு நல்ல ஔஷதம். வேறு

ஔஷதங்களின் நிச்சயமான குறிகள் இல்லாவிடில் இது கொடுக்கப்படலாம்.

**காலீ கார்ப்:** மார்பில் வெட்டும் வலி, வலது புறம் படுத்தா லதிகம், மார்பில் நீர் வீக்கம், முன் பக்கமாக சாய்ந்தால் மார்பு உபாதி சமனம். மார்பில் சில்லிப்பு, விஸ் சப்தம் பிராங்கைடிஸ் உபாதியில் அதிக வலி,

**காலீ நைட்ரிகம்:** எரிச்சல், பிடிப்பு வலி.

**காலீ பைக்ரோ:** நடு மார்பில் வலியுள்ள இருமல்.

**காலீ ஸல்ப்:** மார்பில் கபம் கடைதல்.

**காஸ்டிகம்:** நடுமார்பில் கபம் இருத்தல், அதை வெளியேற்ற முடியாமை, இரவில் படுக்க முடியாமை மார்பில் வலியுடன் கொர கொரப்பு. பச்சைப் புண்ணுணர்ச்சியுடன் இருமல்

**கோல்சிகம்:** மார்பில் கனம்.

**கோனியம்:** மார்பில் இறுக்கும் வலி:

**க்ராபைடிஸ்:** மார்பில் இறுக்கம், இருமல், இசிவு வலி முதலியவைகளுடன் நடு மார்பில் வலி.

**க்ரிஸோட்:** பழுக்கக் காய்ந்த இரும்புபோல் எரிச்சல் அழுக்கு வதால் பிடிப்பு வலிகள், சமனம். இடது மார்பில் பிடிப்பு வலிகள். நடுமார்பில் கனத்த உணர்ச்சி.

**க்ரோகஸ் ஸடீவா:** ஏதோ குதிப்பது போன்ற உணர்ச்சி.

**க்ரோடன் டிக்லியம்:** மார்பில் இருபக்கங்களிலும் நிறைந்த உணர்ச்சி. இடது மார்பின் வழியாக முதுகுக்கு அல்லது தோள்பட்டைக்குச் செல்லும் இழுக்கும் வலி.

**க்வாய்க்கம்:** க்ஷயரோகமும் வாத ரோகமும் உள்ளவர்களுக்கு ஏற்படும் மார்பு வலி உபாதி அதிகம். திறந்த காற்றில்

போய்வருவதாலதிகரித்தல், மார்புத் தசைகளில் வாதம். சுவாசம், அசைவுதால் அதிகரித்தல்.

**சேனபோடியம்:** (முதுகில் பார்க்க.)

**டபாகம்:** மேல் மார்பில் இறுக்கம், மார்பெலும்பின் கீழ் முள்ளிருக்கும் உணர்ச்சி.

**டயஸ்கோரியா:** மார்பெலும்பில் வலியாரம்பித்து, கைகளுக்குச் செல்லுதல். மார்பினுள் இறுக்க உணர்ச்சி, வலி, மூச்சு இழுக்கும்போது மார்பு விரியாதது போன்ற உணர்ச்சி.

**நக்ஸ் மாஸ்சாடா:** பிரதி ஆகாரமும் காற்ருக மாறி மார்பில் அமுக்குவது போலிருத்தல்.

**நக்ஸ் வாமிகா:** மார்பில் கனம், விலாவெலும்புகளுக்கிடையிலுள்ள பாகத்தில் வலி.

**நேட்ரம் கார்ப்:** மார்பில் பிடிப்பு வலிகள், வலது மார்பில் எரிச்சலுடன் பச்சை நிறமுள்ள உப்புக்கரித்த கோழையை வெளியேற்றும் இருமல், காலைகளில் மார்பினுள்ளே பச்சைப் புண்ணுக விருக்கும் உணர்ச்சி.

**நேட்ரம் ஸல்ப்:** இருமுவதால் மார்பில் வலி அதனுல் எழுந்து உட்கார்ந்து இரண்டு கைகளிஞலும் மார்பை பிடித்துக் கொள்ள நேரிடல். இடது மார்பின் கீழ்பக்கத்தில் வலி, இடது மார்பின் பால் காம்புக்குக் கீழே வலி.

**பல்ஸடில்லா:** மாலைகளில் மார்பிலும் இருதயத்திலும் கனத்த உணர்ச்சி.

**பாப்டீஷியா:** மார்பில் அமுக்க உணர்ச்சி.

**பாஸ்பரஸ்:** மார்பெலும்பில் கனம். மார்பில் இறுக்க உணர்ச்சி.

**பெர்பெரீஸ் வல்கேரிஸ்:** பிடிப்பு வலிகள்.

**பேர்ரம் பாஸ்:** காற்றுக் கொப்புளங்கள் உடைவதுபோல் களகளப்பு காலையிலும் மாலையிலும் வறட்டு இருமல் ஆரம்பித்தல். குமட்டல் குளிர் பெருமூச்சு வாங்குதல்

அடிக்கடி வேகமாகச் செல்லும் நாடி, மார்பு இறுக்கப் படுதல்.

**பேர்ரம் மெட்:** சரீரத்திலுள்ள எல்லா ரத்தமும் மார்பில் வந்து இறுக்கும் உணர்ச்சி.

**பெல்லடோன்ன:** மார்பில் இறுக்க உணர்ச்சி.

**பெல்லாண்ட்ரியம்:** மார்பின் நடுவெலும்பிலிருந்து வலதுபுறமாகப் பின்புறத்து தோள்பட்டையெலும்பு வரை பிடிப்பு வலி.

**போராக்ஸ்:** மார்பு பிடிப்பாயிருத்தல். இருமும்போதும், சுவாசம் விடும்போதும், சோம்பல் முறிக்கும்போதும் மார்பில் பிடிப்பு வலிகள்.

**போவிஸ்டா:** வயதான, ஆனல் கல்யாணமாகாத ஸ்திரீகளின் படபடப்பு.

**ப்ரையோனியா:** இருமும்போது மார்பில் பிடிப்பு வலிகள். மார்பை விரிய வைத்துப் பெருமூச்சு இழுக்க பிரியம். இருமும்போது மார்பு பல துண்டுகளாக உடைந்துவிடுவது போலிருத்தல், ஆகையால் கைகளால் மார்பை அமுக்கிக் கொள்ளுதல். மார்பு வலிகளில் அசைந்தாலதிகரித்தல்.

**ப்ரோமியம்:** மார்பெலும்புக்குப்பின் எரிச்சலுடன் இருமல், மார்பில் கெண்டையேறும் வலிகள், மார்பு வலிகள் ஏறுதல்.

**ப்ளாட்டா ஓரியண்டாலிஸ்:** சளியுடன் காசம்.

**மங்கானம்:** நடு மார்பில் குறுகுறுத்த உணர்ச்சியுடன் விடா இருமல், மார்பின் மேல் பாகத்தில் நொந்தவலி. பிடிப்புகள் மேலும் கீழும் செல்லுதல்.

**மில்லிபோலியம்:** மார்பிலிருந்து தலைக்கு ரத்தமேறுதல் இறுக்கம், படபடப்பு.

**மெக்னீஷியா பாஸ்:** இறுக்கத்துடன் காசம்.

**மெக்னீஷியா மூரியாடிகா:** எரிச்சல், வலி இவைகளுடன் மாலைகளிலும் இரவுகளிலும் இருமல், மார்பில் அமுக்க உணர்ச்சி, கனம், சமுத்திர ஓரங்களில் சென்றால் எல்லா மார்புக் கோளாறுகளுமதிகரித்தல்.

**மெடோரினம்:** மார்பு ஸ்தன காம்புகளில் வலி.

**மெபைடிஸ்:** தண்ணீர் குடித்த பின்னும், பேசினாலும் உரக்கப் படித்தாலும் மார்பில் வலியுடன் பலமான இருமல், மார்பு பிடிப்புடன் காசம், இடது மார்பில் வலி. நொந்த உணர்ச்சி, மேல் மார்பில் கள களப்புடன் கக்குவாய் இருமல்.

**மெர்க்குரியஸ் கரோஸிவஸ்:** மார்பில் பிடிப்பு வலிகள்.

**மெர்க்குரியஸ் ஸல்பேட்:** ஏராள நீர் அதைப்பு, எரிச்சல். அதிக மூச்சுத் திணறல்.

**மெர்க்குரியஸ் ஸொலுபுலிஸ்:** மார்பில் எரிச்சல், மார்பிலிருந்து முதுகு வரை பிடிப்பு வலி இருமும்போது மார்பிலும் தலையிலும் வலி.

**மைர்டஸ் கம்யூனிஸ்:** இடது மார்பு முதல் தோள்பட்டை எலும்பு வரை எரிச்சல், பிடிப்பு வலி, காலை நேரங்களில் உபாதி அதிகம்.

**மோஸ்சஸ்:** மார்பில் அமுக்க உணர்ச்சி. இதனால் சுவாசிக்க முடியாமை.

**யூபடோரியம் பர்போலியேடம்:** இறுக்கம், வலி. நடு மார்பின் எலும்புக்குக் கீழே நொந்த வலி. இருமும்போது மார்பில் நொந்த வலி, இடது மார்பில் இறுக்க உணர்ச்சி, இடது மார்பிலும் வலது தோள்பட்டையிலும் ஆழமான இடத்தில் வலி.

**ரஸ்டாக்ஸ்:** அசையாமலிருக்கும் போது மார்பில் படபடப்பு, பிடிப்பு வலி. காற்று ஊத வேண்டிய சங்கீதக் கருவிகளை உபயோகிப்பவர்களுக்கேற்படும் அடிமார்பில் வலியுடன் ரத்தங் கக்குதல்.

**ரானங்குலஸ்:** பிடிப்பு வலி நொந்த வலி, அடிபட்டதுபோன்ற உணர்ச்சி, அமுக்குதல், அசைதல், சரீரத்தை திருப்புவதால் அதிகரித்தல். குளிர் தாக்கியதால் பிடிப்பு வலி, இடது மார்பில் ஸ்தனகாம்புக்கு சற்று கீழே பிடிப்புவலி. இது முக்கிய குறி. இது அசைவாலும் சுவாசத்தை யிழுப்பதாலும் அதிகமாதல்.

**ருமக்ஸ்:** அன்னப்பையிலிருந்து மார்புக்குப் பாயும் வலி, இடது மார்பில் கூரான ஆயுதத்தால் குத்தும் வலி.

**ரோஹிடாக்:** நெஞ்செரிவு (வயிற்றில் பார்க்க).

**லாக்கஸிஸ்:** மார்பில் கனமான அமுக்க உணர்ச்சி, படபடப்பு இவைகளுடன் முறுக்கும் வலிகள். மார்பில் எரிச்சல்.

**லாபிஸ் ஆல்பஸ்:** மார்பில் எரிச்சல், குத்து வலி.

**லாரோஸிராஸஸ்:** மார்பு உபாதிகளில் நரம்புகள் ஜீவசக்தி யற்றுப்போதல், மார்பில் இறுக்கத்துடன் மூச்சுத் திணறல். இது படுத்தால் அதிகமாதல்.

**லில்லியம் டிக்ரினம்:** மார்பின் கீழ் பாகத்தில் காலை நேரங்களில் அமுக்கும் உணர்ச்சி.

**லைகொபோடியம்:** துடிப்பு, எரிச்சல், குறுகுறுத்த உணர்ச்சி.

**லொபீலியா இன்ப்ளேடா:** இறுக்கத்துடன் மூச்சுத் திணறல் கனமான உணர்ச்சி.

**வலேரியான:** மார்பினுள்ளேயிருந்து ஏதோ வெளியே தள்ளப் படுவதுபோல் அடிக்கடி உதறுதல், இழுத்தல், பிடிப்பு. இது மார்பின் அடிபாகத்தில் அதிகமாகவிருக்கும்.

**வெராட்ரம் ஆல்பம்:** மார்பில் இறுக்கம்

**ஜஸ்டிஷியா ஆடாதோடா:** களகளப்பு சத்தம், இறுக்க உணர்ச்சி, தொட்டால் வலி.

**ஸல்பர்:** பிடிப்பு வலி, மார்பிலிருந்து ரத்தத் தேக்கம், மேலே யேறி வியர்வையை உண்டாக்குதல், மார்பெலும்பில் வலி, இறுக்க உணர்ச்சி, எரிச்சலுடன் வறட்டிருமல், களகளப்பு சத்தம் இது கபம் வெளியேறினல் அதிகரித்தல்.

**ஸாங்குநேரியா :** வலது மார்பிலிருந்து தோள்பட்டை வரை வலி. மார்பில் எச்ரிசல், மாலைநேரங்களில் கஷ்ட சுவாசம், மார்பெலும்புக்கடியில் வலி.

**ஸாம்புகஸ் :** வயறு கனத்துடன் மார்பில் இறுக்க உணர்ச்சி.

**ஸிகூடா விரோஸா :** மார்பில் அதிக சூடு, மார்பில் இறுக்க உணர்ச்சியால் சுவாசம் தடைபடல்.

**ஸிபிலினம் :** நெஞ்செரிவு.

**ஸிலிகா :** மார்பில் பொதுவான பலஹீனம்.

**ஸிஸ்டஸ் :** ஏராளச் சளி,

**ஸெபீயா :** மார்புக்கு அதிக ரத்தம் ஏறும் உணர்ச்சி. காலையிலும் மாலையிலும் மார்பில் இறுக்க உணர்ச்சி, மார்பில் சூன்ய உணர்ச்சி. கைகளை வைத்து அமுக்குவதால் சமனம்.

**ஸெனகா :** நீர் சுரப்பு. மார்பு குறுகிய உணர்ச்சி. மேலே யேறும்போது மார்பில் இறுக்க உணர்ச்சி, தசைகளிலும் சுவர்களிலும் நொந்த உணர்ச்சி.

**ஸெனஸியோ :** பிடிப்புவலி, மந்த உணர்ச்சி.

**ஸைக்ளமென் :** மார்பில் அதிக ரத்தத் தேக்கம் இறுக்க உணர்ச்சியுடன் சுவாசம் தடைபடுதல். மார்பின் இடது பக்கத்தில் பிடிப்புகள்.

**ஸ்டானம் :** இறுக்க உணர்ச்சி. கீழ் மார்பில் சூன்ய உணர்ச்சியும் மேல் மார்பில் இறுக்க உணர்ச்சியும். மார்பின் பலஹீனத்தால் பேச முடியாமை, சுவாசம் இழுக்கும் போதும், இடது பக்கமாக படுத்தாலும் மார்பில் பிடிப்புகள்.

**ஸ்ட்ரமோனியம் :** அமுக்கப்படும் உணர்ச்சி.

**ஸ்ட்ரோண்டியா கார்ப் :** இறுக்க உணர்ச்சி.

**ஸ்பாஞ்சியா :** மார்பில் இறுக்க உணர்ச்சி, இருமும்போது மார்பில் வலி.

**ஸ்பைஜீலியா:** கடுமையான துடிப்பு. கடுமையான கண்களுக்குத் தெரியும் துடிப்பு. இடது புறம் படுத்தால், நடந்தால் அதிகமாதல் மார்பை ஆட்டும் படபடப்பு. கஷ்ட சுவாசத்துடன் மார்பில் இறுக்க உணர்ச்சி. மார்பில் கத்தியை சொருகியிருப்பதுபோல் வலி. இடது மார்பில் ஸ்தனக் காம்பின் கீழ் பிடிப்பு வலி. இது அசைவு சுவாசிக்கும்போது அதிகமாதல். இவ்வலி கழுத்து தோள்பட்டை, இடது கைக்குப் பாயுதல்.

**ஹமாமெலிஸ்:** இறுக்க உணர்ச்சி.

**ஹீபர் ஸல்பர்:** மார்பில் களகளவென்று கடைதல்.

**ஹைடிராஸ்டிஸ்:** பச்சைப்புண் நொந்தது போல், எரிச்சல், இடது மார்பிலிருந்து இடது தோள்பட்டை வரை வலி.

# இருதயம்

**அகேரிகஸ்:** கண் உழைப்பால் ரத்தப் போக்கு அல்லது கெட்டியான கோழை, இருமல். இருமியபின் கபம் இல்லாத தும்மல். இருதயத்திலிருந்து தோள்பட்டைக்குச் செல்லும் வலி எரிச்சல் காலை மாலையில் துடிப்பு, திடுக்கிடல், அதிர்ச்சி. முதுகு அல்லது இடதுபுறம் படுத்தால் இருமல், ஏப்பம்வருதல், உள் மூச்சில் இருமல், தும்மலால் உபாதி அதிகம்.

**அகோனைட்:** அதிக அழற்சி அழுக்கம். திக் என்பது போன்ற பட படப்பு. இருதயத்தைப்பற்றிய கவலை, மார்பில் கொதிக்கும் தண்ணீர் கொட்டும் உணர்ச்சி. தலையைத் தூக்கிக்கொண்டு முதுகைக் கீழே வைத்துப் படுப்பதால் சமனமாகும் இருதய நோய்கள்.

**அக்டியா ரஸிமோஸா:** வலி இருதயத்திலிருந்து மார்பு முழுதும் இடது கையிலும் பரவுதல்.

**அடோனிஸ் வர்னலிஸ்:** தசைக் கதவில் உண்டாகும் நோய்கள். நீரதைப்பு, பலஹீனம், ஒழுங்கின்மை.

**அபிஸிந்தியம் :** பின்புறத்தில் நடுக்கம்.

**அபிஸ் மெல்லிபிகா :** பலஹீனம்.

**அபொஸினம் :** பிடிப்பு வலி, இருதயக் கோளாறுல் நீர்ச்சுரப்பு.

**அப்ரோடனம் :** இருதய வாதம், வாதம் கடைசியில் இருதயத்தைத் தாக்குதல்.

**அமில் நைட்ரேட் :** இருதய வலி. இறுகிய உணர்ச்சி, ஏப்பத்தால் சமனம்.

**அமோனியா கார்ப் :** அசைவு, ஸ்நானத்தால் அதிகத் துடிப்பு. இருதய நோய், நிற்கும்போல் தோன்றுதல். தூங்கிய பின் அதிகமாதல். மயக்கம், இருதயம் நிற்கும் நிலைமை. கரிப்புகையால் உண்டான கோளாறுகளுக்கு 3 வீரியத்தில் 15 நிமிஷத்திற்கொரு முறை கொடுத்து ஜன்னல் அறைக் கதவுகளை திறந்து வைக்க வேண்டும். இருதயத் துடிப்பு, கஷ்ட சுவாசம் வந்துவிடும் என்ற பயத்தால் நடக்க முடியாமை, இறந்துவிடுவோமென்று கவலை, குளிர்ந்த வியர்வை, கண்ணீர் தானுகவே வடிதல், பேசமுடியாமை உறக்கம், கை நடுங்குதல்.

**அமோனியா மூரியாடிகம் :** இடது கைக்குச் செல்லும் கிழிக்கும் வலி, அனல் வீசுதல், பின் வியர்வை உண்டாதல்.

**அர்ஜண்டம் நைட்ரிகம் :** இருதய நோய், வலி, மூச்சடைத்துவிடுமோ என்ற பயம்; மார்பைச் சுற்றி இறுகக் கட்டிய உணர்ச்சி. மாடிக்குச் செல்லும்போது அதிக வலி. அதனுல் மார்பை இரு கைகளாலும் அமுக்கிக் கொள்ளுதல். வலது பக்கமாக படுக்கும்போது துடிப்பு அதிகமாகுதல். சரீரம் முழுதும் துடித்தல், எரிச்சல், மூச்சுத் திணறல்.

**அனகார்டியம் ஓரியண்டேல் :** கிழவர்களின் துடிப்பு, குறைவான ஞாபகம், மார்பில் பிடிப்பு வலி.

**அஸபோட்டிடா :** இருதயம் நிறைந்தும், பெரிதாகவும் இருக்கும் உணர்ச்சி, துடிப்பு.

**அஸ்குலஸ் ஹிபோ :** இருதயத்தில் எரிச்சல். பாயும் வலிகள் நிறைந்த உணர்ச்சி, துடிப்பு, வலி, எரிச்சல், சரீரம் முழுதும் துடிப்பு கைகால்களிலும் துடிப்பு, தூங்கும் போது இருதயத் துடிப்பு நன்கு தெரியும்.

**ஆண்டிமோனியம் டார்டாரிகம் :** இருதயத்தைப் பற்றி கவலைப் படுதல். கோழை பித்தம் வாந்தியெடுத்தல்; (நாடியில் பார்க்க) இருதயத்திலிருந்து சூடான உணர்ச்சி.

**ஆரம் மூரியாடிகம் :** நடுமார்புவரை தைக்கும் வலிகள் பரவுதல், அசைந்தாலும் ஆழ்ந்து சுவாசித்தாலும் அதிகரித்தல், குடைதல்.

**ஆரம் மெடாலிகம் :** இருதயத்தில் அதிக ரத்தம் கூடுவதால் ஆஸ்த்மா தோன்றுதல். சூடு முதலானவைகளுடன் மந்தமான தைக்கும் வலி. இருதயத்தைப்பற்றி அடிக்கடி கவலைப்படுதல். நடுக்கம். பயம், அடிக்கடி இடம் மாறிக் கொண்டேயிருத்தல். இதய அமுக்கம். அசைந்தாலும், நடந்தாலும் சவாரி செய்தாலும், அதிகமாதல். இருதயத் துடிப்பால் நிற்கவேண்டி வருதல். இருதயம் அளவு மீறிப் பெரிதாகுதல், இருதய வலி இடது கைக்கும் விரல் களுக்கும் பரவுதல், மூட்டுக்கு மூட்டு தாவிக்கொண்டே யிருக்கும் வலிகள், கடைசியாக இருதயத்தில் ஸ்திரமாக வந்தடைதல். இருதயம் நின்று விட்டதுபோன்ற உணர்ச்சி. பிறகு கடுமையாக ஒரு தரம் அடித்தல். இருதயத்தில் வந்தடைந்த வாத ரோகம்.

**ஆர்ஸனிகம் ஆல்பம் :** பலஹீனம், நடுக்கம், துடிப்பு. முதுகுப் புறமாய்ப் படுக்க முடியாமை, இரவு 2 மணிக்கு அதிக மாகுதல் இருதய வியாதிகள், இருதயத்தைச் சுற்றி திடீரென்று இறுக்கும் உணர்ச்சி. வலி மார்பு பூராவும் இடதுகைக்கும் பரவுதல்.

**ஆர்னிகா மொண்டானு :** நசுங்குவது போன்ற வலி மார்பின் நடு பாகத்திற்குக் கீழாக அமுக்க உணர்ச்சி. இரவில் இருதய தொந்தரவுகளுடன் அந்த நிமிஷமே மரணம் சம்பவிக்கு மென்ற பயம். வேகமாக ஓடினதால் ஏற்பட்ட உபாதிகள். கைகளால் இருதயத்தை நன்ருகப் பிடித்துக்கொண்டிருப்

பதுபோல் தோன்றுதல், இருதய உபாதிகள் அதிகப் பிரயாசையால் இருதயத் தொந்தரவுகள்.

**ஆஸிட் ஆக்ஸாலிக் :** இருதயக்கோளாறுகள், வலி, ரணம், பின் பக்கத்திலிருந்து முன் பக்கம் வரும் பிடிப்பு வலிகள், அல்லது மேலிருந்து கீழ்வரும் வலிகள், வாத சரீரமுள்ள வர்களின் அதிக நாடித்துடிப்பு, அதைப்பற்றி நினைத்தால் அதிகமாகுதல், இருதயத்திலும் இடது சுவாசாசயத்திலும் திடீரென்று தோன்றும் கடுமையான வலிகள், மேல் வயிறு வரை சென்று சுவாசம் விடமுடியாமல் செய்யும். இருதய வியாதிகள் நினைத்தவுடன் திரும்பி வருதல். ஒழுங்கீனமான விட்டு விட்டடிக்கும் நாடி, பிசுபிசுத்த வியர்வை பொதுவாக நாடியும் இருதயமும் பலஹீன மாகவேயிருத்தல்.

**ஆஸிட் நைட்ரிக் :** ஆகாரத்தை விழுங்கும்போது இருதயத்தில் வலி, பலவீன ஹிருதயம்.

**ஆஸிட் பென்ஸாயிக் :** காச இருமலில் இருதய பாகத்தில் வலி.

**ஐயோடியம் :** இருதயம் அளவுக்கு மீறிப் பெருத்தல்.

**ஓலியாண்டர் :** சூன்ய உணர்ச்சியுடன் படபடப்பு.

**கந்தாரிஸ் :** இருதயத்தைச் சுற்றியிருக்கும் பூந்தசைப் பையில் அழற்சி.

**கல்கேரியா ஆர்ஸனிகம் :** இரவில் படுக்கையில் மூச்சுத்திணறல்' துடிப்பு இருதய உபாதிகள். இறுக்கப் பிடிக்கும் உணர்ச்சி, காலராவில் ரத்தம் கட்டி தட்டுவதால் இருதயத்தில் வலி, இருதய பலவீனம்,

**கல்கேரியா கார்பானிகா :** துடிப்பு, சாப்பிடுதல், அசைதல் முதலி யவைகளால் அதிகரித்தல்.

**கல்கேரியா பாஸ் :** பவுத்திரமும் இருதயத் தொந்திரவுகளும் மாறி வருதல்.

**கன்வலேரியா :** சிறந்த ஒளஷதம், துரிதத்துடிப்பு இருதயத்தி லிருந்து ஏற்பட்ட நீரதைப்பு, கஷ்டசுவாசம், டிஜிடாலிஸ் போன்ற குணமுள்ளது. ஆனால் பயமின்றி உபயோ கிக்கலாம். மூச்சுத் திணறல் கீழே படுக்க முடியாமை, கைகளைக் கீழே ஊன்றிக் கொண்டு உட்கார்ந்து விடுதல்,

நடக்கும்போதும் மாடிப்படி யேறும்போதும் கீழே படுக்கும்போதும் கஷ்டசுவாசம்.

**கன்னபிஸ் இண்டிகா :** தூங்கும்போதும் தூங்கியெழுந்திருக்கும் போதும் இருதயத் துடிப்பு இருதயத்திலிருந்து துளித் துளியாக ஏதோ விழுந்து கொண்டிருக்கும் உணர்ச்சி, மந்தமான நாடி, இருதயத்தைச் சுற்றிலும் அமுக்குவது போன்ற உணர்ச்சி.

**கன்னபிஸ் ஸடீவா :** இருதயத்தில் அல்லது இருதயத்திலிருந்து, தண்ணீர் சொட்டும் உணர்ச்சி. குனிந்தாலும் அசைந்தாலும் இருதயப் பக்கமாக கதகதப்புள்ள உணர்ச்சியுடன் இருதயத் துடிப்பு.

**காக்டஸ் க்ராண்டி :** இருதயத்தைச் சுற்றிலும் இரும்புப் பட்டையை வைத்து இறுக்கும் உணர்ச்சி, அதனால் அதன் சுபாவ வேலைகள் தடைப்படல், நீடித்த ரத்தத் தேக்கம், உபாதிகள் இடம் மாறும் தன்மை அதாவது முழங்காலி லிருக்கும் வாதரோகம் இருதயத்தைப் பீடித்தல், இடது பக்கமாக படுக்க முடியாமை, இடது கையில் மரமரப் புடன் இருதயத்தில் வலி, நீர் வீக்கம், கீழே படுக்க முடியாமை. இருதயத் தொந்திரவுகளால் ஏற்படும் ரத்தப் பெருக்கு, இருதய உபாதியுடன் ஒழுங்கற்ற வயிற்றுப் போக்கு, இருதயத் துடிப்பு அசைவதாலும் அமுக்குவ தாலும் இடது பக்கமாக படுப்பதாலும் அதிகரித்தல்.

**காம்பொரா :** கவலை, துடிப்பு, சாப்பிடுவதால் அதிகரித்தல், இருதயம் நடுங்குதல்.

**கார்பன் ஸல்ப் :** தளர்ச்சி, கவலை அசுத்த ரத்தக் குழாய்களின் ரத்தத் தேக்கம் நன்கு தெரிதல். இருதயத்தில் இறுகிய உணர்ச்சி

**கார்லீ ஐயோடேட்டம் :** நடந்தாலும் அசைந்தாலும் படபடப்பு ஏற்படுதல், சில சமயங்களில் நாடி மெதுவாகவும், சில சமயங்களில் வேகமாகவும் செல்லுதல்.

**காலீ கார்ப் :** இருதயத்தை யெடுத்து விட்டது போன்ற உணர்ச்சி, இருதயப் பக்கத்தில் துடிப்பு, எரிச்சல், பலஹீனமான துரித நாடி, இருதயம் நின்றுவிடுமோ என்று சந்தேகிக்கும் நிலைமை.

**காலி பைக்ரோ:** துடிப்பு, இருதயத்தைச் சுற்றிலும் குளிர்ந்த உணர்ச்சி.

**காலோபில்லம்:** (பெண்களுக்கு) இருதய வலி.

**கால்மியா:** துடிப்பு, முன்புறம் உடலை வளைத்தால் அதிகமாதல், வாதரோகம். மற்ற அவயவங்களிலிருந்து இருதயத்துக்குத் தாவுதல். இருதயத்துக்கு மேல் பக்கமாக மார்பு வழியே தோள்பட்டை எலும்புகளுக்குப் பாயும் வலி.

**குப்ரம் மெடாலிகம்:** இருதய உபாதிகள், துடிப்பு, வலி, இருதயத் துடிப்பு, (நாடியில் பார்க்க.)

**கோக்ஸ் காக்டி:** எல்லா அவயவங்களும் இருதயத்தின் பக்கமாக வந்து அதை நசுக்கும் உணர்ச்சி.

**கோல்சிகம்:** கடுமையான வாத ரோகத்தின் பின் ஏற்படும் இருதய உபாதிகள் (நாடியும் இருதயத் துடிப்பும் பார்க்க.)

**க்ரிடேஜஸ்:** சிறந்த ஔஷதம், இருதய உபாதிகள், தசைக் கதவுகளில் முறு முறுக்கும் சத்தம். கொழுப்பு, இருதய வலி.

**க்வாய்கம்:** துடிப்பு, திடீரென்று இருதயத்தில் ஏதோ அடைக்கப்பட்டிருக்கும் உணர்ச்சி, மூச்சுத்தடை தூங்கும் போது வருதல்.

**க்ளோனயின்:** (சுவாசத்தில் பார்க்க,) இருதயத்துக்கு ரத்தம் வேகமாகச் சென்று அதனல் இடது மார்பில் உஷ்ணமும் கொதிக்கும் உணர்ச்சியுமேற்படல். இருதயம் இறுக்கப் பட்டது போன்ற உணர்ச்சி. கடுமையான வலி. துடிப்பு, சரீரம் முழுவதும் துடிப்பு, உஷ்ண அறைகளில் அதிகரிப்பு. முகத்தில் உஷ்ணத்துடனும் விரல்களின் நுனியில் நாடித் துடிப்புடனும் கூடிய இருதயத் துடிப்பு, இடதுபக்கமாகப் படுக்கும்போது இருதயத்தில் பர்ரென்ற ஓசை.

**சின்னியம் ஆர்ஸனிகம்:** படபடப்பு, இருதயம் நின்றுவிட்டது போன்ற உணர்ச்சி. அடிக்கடி மூச்சுத்திணறல், இதனல் திறந்த வெளிக்குச் செல்லவேண்டி வருதல். மாடிப்படி

யேறினல் இருதய சம்பந்த மூச்சுத் திணறல், கொடிய வியாதிகளின் பின் ரத்தவோட்டக் குறைவால் ஏற்படும் கோளாறுகள், தசைகளில் பலஹீனம்.

சைனு : மயக்கம் மாரடைப்பு, ரத்த சோகையால் சரீரம் வீங்குதல்.

டிஜிடாலிஸ் : (இருதயத் துடிப்பில் பார்க்க) இருதய பாகத்தில் குத்து வலி. இருதயத்தை மூடியிருக்கும் தசைப் பையில் நீர் சுரத்தல். இருதய மூடிகளில் கோளாறுகள். மாலை 6 மணிக்கு உபாதிகளதிகரித்தல்.

தெரிடியன் : உபத்ரவம், வலி, சுற்றிலும் வலி.

நக்ஸ் மாஸ்சாடா : ரத்தம் திடீரென்று இருதயத்துக்கும் தலைக்கும் ஓடி மறுபடி சரீரம் பூராவும் வியாபிப்பது போன்ற உணர்ச்சி.

நக்ஸ்வாமிகா : ஆகாரத்திற்குப் பிறகும், படித்தாலும் மார்பில் படபடப்பு அமிதமாக புகையிலை உபயோகித்ததால் ஏற்படும் படபடப்பு, இருதயத்திலிழுப்பது போன்ற உணர்ச்சி. மறத்தாற்போலிருத்தல், துடிப்புகள், நடுக்கல்கள் முதலியவைகள், குளிரால் அதிகரித்தல்.

நாஜா : இருதய கோளாறுல் ஏற்படும் காச நோய், படுக்க முடியாமை. இருதயம் நின்றுவிடும் போலிருத்தல் கீல் வாதம் இருதயத்தைத் தாக்குதல், துடிப்பு, சமீபத்தி விருப்பவருக்கும் கேட்கும், குத்துவலி, படபடப்பு நீடித்த சுரம் முதலிய நோய்களால் இருதயம் கெட்டுப்போதல், சங்கடம், அமுக்குவது போலிருத்தல்.

நேட்ரம் ஆர்ஸனிகம் : சரீரம் அசைந்தாலும் இருதயத்திலிறுக்க உணர்ச்சி, இருதய ஓசைகள் சரீரத்தில் எல்லா இடங்களிலும் கேட்டல். (நாடியில் பார்க்க).

நேட்ரம் கார்ப் : இடது பக்கமாகப் படுத்தாலும் படிகளின் மேலேறினுலும் கடுமையான படபடப்பு, புளிப்பு பித்த வாயு. மனக் குழப்பம், இருதய படபடப்பு.

**நேட்ரம் முரியாடிகம் :** படபடப்பு, துடிப்பு சில்லென்ற உணர்ச்சி. நாடியும் இருதயமும் விட்டு விட்டுச் செல்லுதல். (இது முக்யமாய் படுத்திருந்தால்) சில சமயங்களில் சரீரத்தையே அசைக்கும் தன்மையுள்ள இருதய படபடப்பு.

**பல்ஸடில்லா :** கனமான ஆகாரத்தின் பின் படபடப்பு, மாலை நேரங்களில் மார்பிலும் இருதயத்திலும் அமுக்க உணர்ச்சி

**பாரிடா கார்ப் :** உழைப்பால் படபடப்பு. இடதுபுறமாகப் படுப்பதாலும் அதை நினைத்துக் கொள்வதாலும். இருதய பாகத்தில் நொந்த வலி, ரத்த சோகையுள்ள பெண்களுக்கு படபடப்பு, படபடப்புடனும் துடிப்புடனும் வேகமாக ரத்தம் தலைக்கேறுதல்.

**பாரிடா முரியாடிகா :** ரத்தக்குழாய்கள் பருத்தலால் படபடப்பு (சுமார் 6 மாதங்களுக்கு 1x, 2x. வீரியங்களில் கொடுத்தால் குணமாகும்.) இருதயத்தின் வால்வுகள் சிறுத்தல்.

**பாஸ்பரஸ் :** இடதுபுறமாகப் படுத்தாலும் அல்லது சற்று வேகமாக நடந்தாலும் படபடப்பு, இருதயம் தளர்ந்திருத்தல், இருதய வால்வு மூடிகளில் கோளாறுகள்.

**பிஸ்மத் :** இடது கையிலும் இருதயத்தைச் சுற்றிலும் வலி.

**புபோ :** இருதயம் மிகவும் பெரிதாகவிருக்கும் உணர்ச்சி, இறுக்க உணர்ச்சி. இருதயம் தண்ணீரில் மிதப்பது போன்ற உணர்ச்சி, படபடப்பு.

**பெட்ரோலியம் :** இருதயத்தில் குளிர்ந்த உணர்ச்சி.

**பெர்பெரீஸ் வல்கேரிஸ் :** பிடிப்பு வலிகள்.

**பெர்ரம் பால் :** சுவாசக் குழாய்களில் அழற்சியாலேற்படும் சுரங்கள் பிராங்கோ–நிமோனியா.

**பெர்ரம் மெட்டாலிகம் :** படபடப்பு அசைவதாலும் நடப்பதாலும் அதிகரித்தல். இருதயத்தை அமுக்கும் உணர்ச்சி, ரத்த சோகையாலேற்படும் இருதய உறுமல்கள்.

**பைரோஜினியம் :** இருதயத்தில் பலஹீன உணர்ச்சி. படபடப்பு, இருதயத்தில் அதன் சக்திக்கு மேற்பட்ட ரத்தமிருப்பது

போன்ற உணர்ச்சி. இருதய சப்தங்கள் தன் காதில் ஒலித்தல். செப்டிக் சுரத்தில் இருதயம் நின்று விடும் போன்ற கட்டத்தில் மிகவும் பயன்படும்.

**ப்ரையோனியா:** இருதய பாகத்தில் பிடிப்புகள்.

**ப்ரோமியம்:** அதிக தேகாப்பியாசம் செய்ததினுல் இருதயம் கெட்டியாகி விடுதல்.

**ப்ளம்பம்:** இருதய பலஹீனம்.

**மில்லிபோலியம்:** படபடப்பு.

**மெக்னிஷியா மூரியாடிகா:** உட்கார்ந்திருக்கும்போது படபடப்பு. பிடிப்பு வலிகள் நடக்கவாரம்பித்தால் இவைகள் போய் விடுதல்.

**ரஸ்டாக்ஸ்:** அதிக தேகாப்பியாசம் செய்ததினுல் இருதயம் கெட்டிப்பட்டுவிடுதல், குத்துவலியும் நொந்த உணர்ச்சியு முள்ள இருதய நோய்கள். இருதய நோயுடன் இடது கையில் வலி. இருதயமே துடிப்பது போன்ற உணர்ச்சி.

**லாக்களிஸ்:** இருதய நோயில் தூங்கவாரம்பித்ததும் மூச்சு நின்று போய்விடுவது போன்ற திணறலுடனும், பயத் துடனும் எழுந்திருத்தல். சிறிது அசைந்தாலும் படபடப்பு ஏற்படுதல். வலதுபக்கமாகவேதான் படுக்க முடியும், இடது கையில் மறமறத்த உணர்ச்சியுடன் கீழே படுத் தால் மூச்சு அடைப்பது போன்ற உணர்ச்சியும், மயக்கம் வருவது போலிருத்தலும்.

**லாரோஸிராஸஸ்:** இருதயம் ரத்தவோட்டம் பலஹீனம், இருதய வியாதிகளிலும், சுவாசகோச வியாதிகளிலும், எந்த ஔஷதங்களும், வேலை செய்யாமலிருக்கும்போது இது கொடுக்கப்படலாம். இருதயத்தைப் பிடித்து அமுக்கிக் கொள்ளுதல். டிஜிடாலிஸ் என்னும் அல்லோபதி ஔஷதம் அதிகமாகக் கொடுக்கப்பட்டு, அதனுல் இருதயம் நின்று விடும்போன்ற நிலைமையில், இது கொடுக்கப்படலாம். இருதயம் படபடவென்று துடித்தல், தாறுமாருக வேலை செய்தல், ரத்தவோட்டம் மிக பலஹீனமாக இருத்தல், நாடியே கைக்குத் தென்படாமை. இருதய வால்வுகள்

சரிவர மூடாமல் ரத்தம் வெண்ட்ரிகளிலிருந்து ஆரி களுக்கு பின்னோக்கி ஓடுதல்.

**லிதியம்கார்ப்:** கீல் வாதத்தால் இருதயம் பாதிக்கப்படுதல், இருதயத்தில் நொந்த வலி, மூத்திரம் விடும்போதும், குனியும் போதும் இருதயத்தில் கடுமையான வலி.

**லில்லியம் டிக்ரினம்:** இருதயத்தில் துடிக்கும் உணர்ச்சி. இரவு களில் மந்தமான அழுக்கும் வலி, இருதயத்தை இரு பலகைகளுக்கு மத்தியில் வைத்து அழுக்கும் உணர்ச்சி. அழுக்கி அழுக்கி விடுவதுபோன்ற உணர்ச்சி, பக்கங் களைக் கீழே வைத்துப் படுத்தாலும் நடந்தாலும் பட படப்பு ஏற்படுதல். இருதயத்தில் அதிக ரத்தத்தேக்கம் ஏற்படுதல், வெடித்து விடுமோவென்று நினைக்கும் அளவிற்கு ரத்தத்தேக்கம் இருதயத்தில் நன்கு வேலை செய்யும் ஔஷதம். இருதயத்தில் விரல்களால் அழுக்கு வது போன்ற உணர்ச்சி.

**லைகபோஸ் வர்ஜினியா:** இருதயம் பெருத்தல், வலி, படபடப்பு வால்வு மூடிகளின் கோளாறுகள் கீல்வாத சுரத்தில் இருதயம் பாதிக்கப்படுதல்.

**லைகோபோடியம்:** இருதய பாகத்தில் துடிப்புகளும், காற்றுக் கொப்புளங்கள் உண்டாகும் உணர்ச்சியும் இருதயத்தில் குத்தும் உணர்ச்சியால் சுவாசம் தடைபடல்.

**லோபீலியா இன்ப்ளேடா:** இருதயம் நின்றுவிடுதல் இருதய பலஹீனம்.

**வலேரியானு:** இருதய பிடிப்பு (நாடியில் பார்க்க.)

**வெரட்ராம் விரைட்:** சுரத்தில் ஹிருதய பலஹீனமுள்ளவர் களுக்கு சுரத்தை குறைக்க உபயோகிக்கக்கூடாது.

**ஜெல்ஸிமியம்:** தான் அசைந்து கொண்டேயில்லாவிட்டால் இருதயம் நின்றுவிடும் என்று தோன்றுதல், இருதய பல ஹீனம். மெது, மந்தம், தாறுமாறாகச் செல்லுதல்.

**ஸைபீனு:** அசைந்தால் படபடப்பு, சரீரத்தின் எல்லா ரத்தக் குழாய்களிலும் நாடித்துடிப்புகள் தென்படுதல்.

**ஸரஸபரில்லா:** பகற்காலங்களில் மட்டும் படபடப்பு.

**ஸல்பர்:** மாடிப்படியேறும்போதும், மலைகளின் மேலேறினாலும் படபடப்பு. இருதயம் பெருத்திருப்பது போன்ற உணர்ச்சி.

**ஸாங்குநேரியா:** இருதய வால்வுகளின் கோளாறுடன் சுவாச கோசங்களும் பாதிக்கப்பட்டிருத்தல்.

**ஸிகூடா விரோஸா:** சில்லிடல், நடுங்குவது போன்ற படபடப்பு அதிக பலஹீனத்துடன் இருதயம் நின்றுவிடுமோ என்ற பயம்.

**ஸிபிலினம்:** இரவில் இருதயத்தில் வலி, காற்றுக் குழாயில் வலி.

**ஸிலிகா:** தலையில் அதிக ரத்த ஏற்றத்துடன் சரீரத்தில் துடிப்புகள்.

**ஸெபியா:** கடுமையாக ஆனால் விட்டு விட்டேற்படும் படபடப்பு, எல்லா ரத்தக் குழாய்களும் துடித்தல், இடதுபுறம் படுத்தால் படபடப்பு அதிகரித்தல், மார்புக்கு ஏராள ரத்தம் ஏறும் உணர்ச்சி. இருதய கோளாறுகளால் ஏற்படும் பாண்டு வீக்கம்.

**ஸைக்ளமென்:** இருதயத்தில் ஒரு உயிருள்ள வஸ்து நடமாடுவதுபோல் படபடப்பு.

**ஸோரினம்:** சிறிய உழைப்பாலும் படபடப்பு. படுத்திருந்தால் சமனம். (நாடியில் பார்க்க) இருதய உறுமல்கள்.

**ஸ்டாபிஸாக்ரியா:** நடுங்குதல் பிடிப்பு, படபடப்பு, இவை அசைவு சங்கீதம் கேட்பது சிறிய தூக்கத்தின் பின்னும் அதிகமாதல். நாடி நடுங்குவதுபோல் செல்லுதல்.

**ஸ்ட்ரமோனியம்:** படபடப்பு, அசைவாலும் பேசுவதாலும் இருதயம் வேகமாகச் செல்லுதல்.

**ஸ்ட்ரோபாந்தஸ்:** இருதயத் தசைகளில் கோளாறுகள் துரிதமாகச் செல்வதை நிதானப்படுத்தி ரத்தவோட்டத்தை சரிவர நடத்தச் செய்யும். இருதயத்தின் வேலை பலஹீன

மாகவும். தாறுமாறுகவுமிருத்தல். இருதயக்கோளாரா லேற்பட்ட பாண்டு வீக்கத்தில் மூத்திர உற்பத்தியை அதிகப்படுத்தி, வீக்கத்தை வடியவைக்கும் புகையிலை, டீ, சாராயம் இவைகளை அதிகமாக உபயோகித்ததால் ஏற் பட்ட கோளாறுகள். (1x, 2x, 3x, வீரியங்களில்.)

**ஸ்பாஞ்சியா:** இருதயத்தில் வேலை செய்ய வல்லது. இருதயத்தி லிருந்து முகம் தலைஇவைகளுக்கும் ரத்தமேறுதல். இருதயத் தசை மூடிகளில் கோளாறுகள். இருதயத்தில் வலி மயக்கம் வருவது போலிருத்தல். இருதயம் வேக மாகவும் திடீர் திடீரென்றும் செல்லுதல். அவ்வப்போது இருதயத்தில் வலி ஏற்படுதல். இருதய சம்பந்த மூச்சுத் திணறல். இருதயம் பெருத்தல், ஏஓர்டாவின் கோளாறு கள். இருதயத்தின் வால்வுகள் சரிவர வேலை செய்யாமை, ரத்தம் பின்னேக்கி ஓடுதல். கீல்வாயுவால் ஏற்பட்ட இருதயக் கோளாறுகள். பிரதி இருதயத் துடிப்பு சத்தத்துடன் விஸ் விஸ் என்ற ஊதும் சத்தமும் கேட்டல். மார்பில் இறுக்கும் வலி, மயக்கம், கவலை யுடன் கூடிய வியர்வை வலது பக்கமாகப் படுத்தாலும் தலையைக் கீழே வைத்து தலையணையில்லாமல் படுத் தாலும் இருதயத்தில் வலி.

**ஸ்பைஜீலியா:** இருதயத்திலிருந்து இடது கைக்குச் செல்லும் வலி, இருதய அழற்சி, சகல இருதய நோய்கள், இருதயப் பிடிப்பு. இறுக்க உணர்ச்சி, இருதயத்தின் மேல் கையை வைத்தால் உறுமும் உணர்ச்சி, கீல் வாதத்தால் ஏற்பட்ட இருதய நோய், முன் பக்கம் குனிந்தாலும், கீழே உட்கார்ந் தாலும் படபடப்பு அதிகமாதல், சட்டையின் மேலும் தென்படும் துடிப்புகள். வயிற்றிலும் தென்படும் துடிப்புகள், மார்பை ஆட்டும் படபடப்பு.

**ஹெல்லிபோரஸ்:** இருதயத் துடிப்பைவிட நாடித் துடிப்பு எண்ணிக்கையில் குறைவாகவிருத்தல்.

# நாடி & இருதயத் துடிப்பு

**அகேரிகஸ்:** துரித நாடி.

**அகோனைட்:** துள்ளிக் குதித்தல், கெட்டி, நிமிர்ந்து உட்கார்ந்தால் கடினமான நிறைந்த நாடி, நூல் போன்ற நாடி, திக் திக்கென்ற இருதயத் துடிப்பு.

**அக்டியாரஸி:** துடித்தல், நடுங்குதல், இருதயத் துடிப்பு அசைந்தால் அதிகம். திடீரென்று நின்றுவிடுதல்.

**அடோனிஸ் வர்னுலிஸ்:** இருதயத் துடிப்பு ஒழுங்கின்மை.

**அபிஸிந்தியம்:** தோள்பட்டையில் நன்ருகக் கேட்கும் இருதயத் துடிப்பு.

**அபிஸ் மெல்லிபிகா:** உணர முடியாத, கடின, துரித நாடி.

**அபொஸினம்:** நாடி 45, ஒழுங்கின நாடி.

**அப்ரொடனம்:** சிறிய பலவீன நாடி.

**அமில் நைட்ரேட்:** இருதயத் துடிப்பு அதிகம், வலிப்பில் பலமான இருதயத் துடிப்பு. சூரிய இடியில் நாடித் துடிப்பு.

**அமோனியம் கார்ப்:** பலஹீன நாடி, அசைவு, ஸ்நானத்தால் அதிகமாதல். இருதயம் நின்றுவிடும் போன்ற நிலைமை, நின்றுவிடுதல் அல்லது அதிகத் துடிப்பு.

**அம்ப்ரா க்ரிஸியா:** திறந்த வெளியில் நடந்தால் நாடித் துடிப்பு அதிகம் மார்பில் அழுக்கத்துடன் அதிகத் துடிப்பு, இருதயப் படபடப்பு.

**அர்ஜண்டம் நைட்ரிகம்:** தூக்கத்திலும் விழிப்பிலும் வலது பக்கமாகப் படுத்தால் துடிப்பு அதிகமாதல்.

**அர்ஜண்டம் மெடாலிகம்:** விட்டு விட்டு அடித்தல், மல்லார்ந்து படுத்தலால் அதிகம்.

**அனகார்டியம் ஓரி:** கிழவர்களின் துடிப்பு.

**அஸ்குலஸ் ஹிபொ:** தூங்கும்போது இருதயத் துடிப்புகள் நன்ருகத் தெரியும்

**ஆண்டிமோனியம் ஆர்ஸனிகம்:** ஒடுங்கிய மெதுவான நாடி.

**ஆண்டிமோனியம் டார்ட்:** கடின, வேகமானநாடி, இருதயத்தைப்பற்றி கவலை, நிமோனியாவின் கடைசி நிலைமையில் பலவீன நாடி.

**ஆண்டிமோனியம் க்ருடம்:** கடுமையான இருதயத் துடிப்பு, ஒழுங்கீன நாடி.

**ஆரம் மூர் நேட்ரம்:** நிற்கும்போது கடுமையான, வேகமான இருதயத் துடிப்பு, குனியும்போது ஒழுங்கற்ற துடிப்பு.

**ஆரம் மெடாலிகம்:** வேதனையுள்ள துடிப்பு, இருதயத் துடிப்பால் நிற்கவேண்டி வருதல், சவாரி செய்தல், நடத்தல், முதுகுப் புறமாகப் படுத்தல் முதலியவைகளால் துடிப்பு அதிகமாதல், இருதயம் நின்றுவிட்டதுபோன்ற உணர்ச்சி, பிறகு கடுமையாக ஒரு தரம் அடித்தல், கடுமையான நாடித் துடிப்பு வேலை செய்தால் அதிகமாதல்.

**ஆர்ஸனிக் அயோடைட்:** நிமோனியாவில் வேகமான நாடி.

**ஆர்ஸனிகம் ஆல்பம்:** காலையில் துரிதநாடி கடுமையான வியாதிகளில் நாடி கைக்குத் தென்படாமை, நாடி பலஹீனம்.

**ஆஸிட் ஆக்ஸாலிக்:** வாத சரீரமுள்ளவர்களின் கடுமையான நாடித் துடிப்பு, அதைப்பற்றி நினைத்தால் அதிகமாகுதல், ஒழுங்கீனமான விட்டு விட்டு அடிக்கும் நாடி, இருதயமும் நாடியும் பலவீனம்.

**ஆஸிட் நைட்ரிக்:** மனவெழுச்சி, படியேறுதலால், அதிக படபடப்பு, இருதய பலஹீனம், முதல் சாதாரணம், இரண்டாவது வேகம், மூன்றாவது விட்டு விட்டு இவ்விதமாக நாடி இருத்தல் – தாறுமாறான நாடி.

**ஆஸிட் மூரி:** மூன்றாவது ஐந்தாவது நாடித் துடிப்பு நின்று நின்று செல்லல், 3. 4, 5-வது நாடித் துடிப்பு நின்று விடுதல். பலக் குறைவான நாடி.

**இக்னேஷியா:** இரவிலும், காலையிலும் இருதயம் துடித்தல் மாறிக்கொண்டே இருக்கும் நாடி.

**எதுஸா ஸைனபியம்:** கடினமான, சிறிய, அதிகமான நாடி.

**ஐயோடியம் :** அசைந்தால் நாடித் துடிப்பு அதிகமாதல்.

**ஓலியாண்டர் :** மந்தமான ஒழுங்கற்ற நாடி, இருதய படபடப்பு.

**ஓபியம் :** ஒழுங்கற்ற மெதுவாகச் செல்லும் மந்த நாடி, அடிக்கடி முறுக்கல் அல்லது வலிப்புடன் கூடிய இருதயத் துடிப்பு.

**கந்தாரிஸ் :** வேகமான சிறிய விட்டு விட்டடிக்கும் நாடி.

**கல்கேரியா அஸடிகா :** பலஹீன நாடி.

**கன்வலேரியா :** இருதயம் துரிதமாகத் துடித்தல்.

**கன்னபிஸ் இண்டிகா :** தூங்கும்போதும் தூங்கியெழுந்திருக்கும் போதும் இருதயத் துடிப்பு.

**கன்னபிஸ் ஸடீவா :** குனிந்தாலும் அசைந்தாலும் இருதயப் பக்கமாக கதகதப்புள்ள உணர்ச்சியுடன் இருதயத் துடிப்பு.

**காபியா க்ருடா :** கடுமையான ஒழுங்கீனமான துடிப்பு, சிறிய பலவீன நாடி, கைகால் நடுக்கம்.

**காம்போரா :** பலஹீனம் கைக்குப் பிடிபடாத நாடி, இருதயத் துடிப்பு. சாப்பிடுவதால் அதிகம் இருதயம் நடுங்குதல்.

**கார்பன் ஸல்ப் :** துடிப்பு, மந்தமான நாடி.

**கார்போ வெஜ் :** கைக்குத் தென்படாத நாடி.

**காலீ ஐயோடேட் :** நடந்தாலும் அசைந்தாலும் படபடப்பு ஏற்படுதல், சில சமயங்களில் நாடி மெதுவாகவும் சில சமயங்களில் வேகமாகவும் செல்லுதல்.

**காலீ கார்ப் :** மிருதுவான நாடி, பலஹீன துரித நாடி, ஜீரணக் கோளாறுகளில் விட்டு விட்டடித்தல், இருதயம் நின்று விடுமோ என்று சந்தேகிக்கும் நிலைமை.

**காலீ பைக்ரோ :** துடிப்பு, தொண்டையில் சதை வளரும் நோயில் மிருதுவான நாடி.

**கால்மியா :** பலவீனமான, மெதுவான நாடி. கவலையுடன் இருதயத்தில் படபடப்பு, இருதயத் துடிப்பு, விரைவாகவும் கண்களுக்கு தெரியும் வண்ணமும் இருக்கும்.

**காஸ்டிகம் :** குளிர்ந்த வறண்ட காற்று பட்டதால் மந்தமான நாடி.

**குப்ரம் மெடாலிகம் :** மந்தமான அல்லது கடினமான நிறைந்த துரிதமாகச் செல்லும் நாடித்துடிப்பு.

**கோல்சிகம் :** கடுமையான துடிப்பு, இருதயத் துடிப்புகள் சரிவர பிடிபடாமை,

**க்ரிடேஜஸ் :** மெதுவான நாடி.

**க்வாய்கம் :** துடித்தல்.

**க்ளோனுயின் :** துரித நாடி, விட்டுவிட்டடிக்கும் நாடி. நாடி ஏறிக்கொண்டும், இறங்கிக் கொண்டும் இருத்தல். தலைவலியின்போதும் நடக்கும்போதும் நாடி ஏறும். சூரிய இடியில் இறங்கிவிடும். இருதயத் துடிப்பு சரீரம் முழுதும் துடித்தல். இது சூடான அறையில் அதிகமாதல் முகத்தில் உஷ்ணத்துடனும் விரல்களின் நுனியில் நாடித் துடிப்புடனும் கூடிய இருதயத் துடிப்பு.

**சைனு :** ஒழுங்கீனமான துடிப்பு, அதாவது ஒரு சமயம் பலஹீனமான துடிப்பு வேகமாக அடிப்பதும் மறு சமயம் கெட்டியான துடிப்பு மெதுவாகச் செல்வதுமாக இருக்கும்.

**டபாகம் :** இருதயப் படபடப்பு, இடது புறம் படுத்தால் படபடப்பு அதிகம், வலது புறம் படுத்தால் சமனம். இரவுகளில் படபடப்பு.

**டயஸ்கோரியா :** கஷ்ட சுவாசம்; இருதய பலவீனம்.

**டிஜிடாலிஸ் :** பலமாக அடிக்கும் இருதயத் துடிப்பு, ஆனால் மெதுவாகச் செல்லுதல், விட்டுவிட்டுச் செல்லுதல் சற்று அசைந்தாலும் வேகமாகச் செல்லுதல், தான் அசைந்தால் இருதயம் நின்று விடும் என்ற பயம். இருதயத்தின் முதல் துடிப்பு சப்தத்துடன் ஊதுவது

போன்ற சப்தம். 3, 5, 7 துடிப்புக்கு ஒரு தடவை விட்டு விட்டுச் செல்லுதல். மிக குறைந்த நாடி 50 அல்லது இதற்கு குறைவு, பலவீனம்.

**ட்யூபர்குலீனம் :** மாலையில் துரித நாடி, இரவு ஆகாரத்தின் பின் மார்பில் படபடப்பு.

**தேரிபிந்த் :** துரிதம், பலஹீனம், கம்பிபோன்ற நாடி.

**நக்ஸ் வாமிகா :** ஆகாரத்தின் பின்னும், படித்தாலும் இருதயப் படபடப்பு. அதிகமாகப் புகையிலையை உபயோகித்த தால் ஏற்படும் படபடப்பு.

**நாஜா த்ருபூடியன்ஸ் :** இருதயத்துடிப்பு, சமீபத்திலுள்ளவர் கட்குக் கேட்கும் நாடி வேகக் குறைவு, நூல் போல் பல வீனம், பலக்குறைவு, தாறுமாறான நாடி, சரியாக கவனிக்க முடியாமை.

**நேட்ரம் ஆர்ஸனிகம் :** இருதயம்,—சரீரம் அசைந்தாலும் இருதயத்தில் இறுக்க உணர்ச்சி. இருதய ஓசைகள் மார்பின் எல்லாவிடங்களிலும் கேட்டல், நாடி:—மெது, தாறுமாறு, அடிக்கடி மாறுபட்டுக்கொண்டே யிருத்தல்.

**நேட்ரம் கார்பானிகம் :** இடதுபக்கமாகப் படுத்தாலும் படிகளின்மேல் ஏறினாலும் கடுமையான இருதயப் படபடப்பு.

**நேட்ரம் பாஸ் :** இருதயப் படபடப்பு.

**நேட்ரம் மூரி :** இருதயப் படபடப்பு, துடிப்பு, சில சமயங்களில் சரீரத்தையே அசைக்கும்படியான இருதயத் துடிப்பு, நாடியும் இருதயமும் விட்டு விட்டுச் செல்லுதல். இது முக்யமாகப் படுத்திருந்தால் அதிகம்.

**பல்ஸடில்லா :** கனமான ஆகாரத்தின் பின் படபடப்பு.

**பாரிடா கார்ப் :** இருதயப் படபடப்பு.

**பாரிடா மூரி :** ரத்தக் குழாய்கள் பருத்தலால் இருதயப் படபடப்பு (1x. 2x. 6மீ. கொடுக்கவும்)

**பாஸ்பரஸ்:** இடது புறமாகப் படுத்தாலும் அல்லது சற்று வேகமாக நடந்தாலும் படபடப்பு. இருதயம் தளர்ந்திருத்தல். வால்வு மூடிகளின் கோளாறுகள். நாடி பலஹீனமாகவும் வேகமாகவும் இருத்தல்.

**பெர்ரம் பாஸ்:** அடிக்கடி வேகமாகச் செல்லும் நாடி அகோணைட்டுக்கும் ஜெல்ஸிமியத்துக்கும் நடுவான நிலைமை.

**பெர்ரம் மெட்:** இருதயப் படபடப்பு அசைவதாலும் நடப்பதாலும் அதிகமாதல். ரத்தசோகையால் ஏற்படும் இருதய உறுமல்கள். நாடி கெட்டியாக இருப்பினும் விரல்களால் அமுக்கினுல் மிருதுவாகவும் தேக்கமாகவும் ஆகி விடுதல். சிற்சில சமயங்களில் நாடி மெல்லியதாகவும் பலஹீனமாகவும் செல்லுதல். சரீரத்தின் பல பாகங்களிலும் நாடித் துடிப்புகள் தென்படலாம்

**பெல்லடோன்னு:** கெட்டியான துள்ளிக் குதிக்கும் நாடி,

**பைரோஜீனியம்:** இருதயப் படபடப்பு. இருதய சப்தங்கள் தன் காதில் ஒலித்தல். (செப்டிக் ஜுரத்தில் இருதயம் நின்றுவிடும் போன்ற நிலைமை, நாடி அதிக துரிதம், தாறுமாறு, படபடப்பு. சரீர உஷ்ணம் ஏராளமாக இருத்தல் அல்லது மிகக் குறைவாக இருத்தல்)

**ப்ளம்பம்:** இருதய பலஹீனம். மிருதுவான கம்பி போன்ற நாடி.

**மங்கானம்:** இருதயத்தில் கடுமையான படபடப்பு, நாடி தாறுமாருக மிருதுவாக அதிக பலஹீனமாகச் செல்லுதல்.

**மில்லிபோலியம்:** படபடப்பு

**மெர்குரியஸ் கரோ:** சுரத்தில் விட்டுச் செல்லும் நாடி,

**மோஸ்ச்சஸ்:** படபடப்பு துடித்தல்.

**ரானங்குலஸ்:** மாலையில் துரித நாடி கெட்டி, விம்மல்.

**லாரோஸிராஸஸ்:** படபடப்பு. துடித்தல், தாறுமாருன இருதயம் நாடி மாறிமாறிச் செல்லுதல் அல்லது நாடியே கைக்குத் தென்படாமை.

**லிதியம் கார்ப்:** மனவெழுச்சியால் இருதயம் துடித்தல்.

**ஸைகபோஸ் வர்ஜீனியா:** இருதயப் படபடப்பு, பலஹீன நாடி, தாறுமாறான நாடி.

**ஸைகோபோடியம்:** மாலை நேரங்களிலும் ஆகாரம் உண்ட பின்னும் நாடி துரிதமாகச் செல்லுதல்.

**வலேரியானு:** நாடி துரிதமாகச் செல்லுதல், இருதயத்துடிப்பு.

**வெராட்ரம் விரைட்:** சுரத்தில் கெட்டியும், பலமும், வேகமுமான நாடி, (அதிக சுரம்.)

**ஜஸ்டீஷியா ஆடாதோடா:** சுரத்தில்கெட்டியான வேகமானநாடி.

**ஜெல்ஸிமியம்:** இருதய பலஹீனம் தாறுமாறான, மெதுவான அதாவது கண்டுபிடிக்கவே முடியாத நாடி, அசைவால் துரிதமடைதல். தசைகளை நினைத்தபடி உபயோகிக்க முடியாமை, மோட்டார் நரம்புகள் பாதிக்கப்படுதல், முள்ளந்தண்டில் குளிர்ந்த உணர்ச்சி, மேலும் கீழும் ஏறி இறங்குதல்.

**ஸபீனு:** அசைந்தால் இருதயப் படபடப்பு, சரீரத்தின் எல்லா ரத்தக் குழாய்களிலும் நாடித் துடிப்புகள் தென்படுதல். நாடித் துடிப்புகள் பலமாக இருத்தல்.

**ஸரஸபரில்லா:** பகற்காலங்களில் மட்டும் இருதயப் படபடப்பு.

**ஸல்பர்:** கெட்டியாகவும் வேகமாகவும் செல்லுதல். சில சமயங்களில் தாறுமாருகச் செல்லல்.

**ஸிங்கம் மெட்:** சரீரம் முழுதும் நாடித் துடிப்பு.

**ஸீகேல்:** இரவுகளில் படபடப்பு. நாடி மெதுவாக விட்டு விட்டுச் செல்லுதல். சிலசமயங்களில் வேகமாகவும் மிகவும் மெல்லியதாகவும் செல்லுதல்.

**ஸோரினம்.** சிறிய உழைப்பினுலும் படபடப்பு ஏற்படுதல். படுத்திருந்தால் சமனம். இருதய உறுமல்கள், பலஹீன நாடி தாறுமாருகச் செல்லும் நாடி.

**ஸ்டாபிஸாக்ரியா:** படபடப்பு, நாடி நடுங்குவது போல் செல்லுதல்.

**ஸ்ட்ரமோனியம் :** இருதய படபடப்பு அசைவதாலும் பேசுவதாலும் இருதயம் வேகமாகச் செல்லுதல். நாடி ஒடுங்கிக் கொண்டே வருதல்.

**ஸ்பாஞ்சியா :** வேகமாகவும் திடீர் திடீரென்றும் இருதயம் செல்லுதல். படபடப்பு பிரதி இருதயத் துடிப்பு சப்தத்துடனும் விஸ் விஸ் என்ற ஊதும் சப்தமும் கேட்டல்.

**ஸ்பைஜீலியா :** தாறுமாருன நாடி. பலமான நாடி. ஆனுல் மெதுவாகச் செல்லுதல்.

**ஹெல்லிபோரஸ் :** இருதயத் துடிப்பைவிட நாடித்துடிப்பு எண்ணிக்கையில் குறைவாக இருத்தல். (வேகம், மிருது, விட்டுவிட்டு, நின்று விடுவதுபோல் செல்லும் நாடி.)

# சுவாசாசயம்

**அகேரிகஸ் :** சுவாசாசயத்தின் வலது பாகத்தில் பிடிப்பு வலி அமுக்குவது போன்ற உணர்சி.

**அகோனைட் :** ரத்தம் உமிழ்தல். அடிக்கடி சிறு இருமல், கூவுதல், கனைத்தல் முதலியவைகளாலும் ரத்தம் வருதல். வாய் நிறைய ரத்தம் அல்லது பூந்தசைகளில் சிவந்த பிரகாசமான ரத்தந்தோய்ந்திருத்தல். சுவாசாசயம் திக் திக்கென்று அடித்துக் கொள்ளல். குளிர் காலத்திலேற்படும் சுவாசாசய உபாதிகள். பிடிப்பு வலிகளால் வலது பக்கமாய் படுக்க முடியாமை. மார்பெலும்புக் கூட்டின் கீழாக அல்லது இடது சுவாசாசயத்தின் மேல் பாகத்தில் அமுக்கும் பாரம் எரிச்சல்.

**அமோனியா கார்ப் :** விடியற்காலை 3—4 மணிக்கு அதிகமாகும் ஆஸ்த்மா. குழந்தை, கிழவர்களின் கோழை வெளி வர சிரமப்படுதல். கபத்துடன் ரத்தக் கலப்பு, கிழவர்களின் நீடித்த பிராங்கைடிஸ், வறண்ட இருமல், காலையில் மார்பு சுருங்குதல், உயர ஏறினுல் சுவாசத்தடை, இடது புறம் படுக்க முடியாமை, மார்பில் பிடிப்பு வலி.

**அமோனியம் மூரி :** எரிச்சல் கொர கொரப்பு, இருமலில் சிறு உருண்டையான கோழை. திறந்த வெளியில் நடந்தால் மார்பு வலி, அமுக்கம். பகலில் வறட்டிருமல். இரவில் தளர்ந்த இருமல். வலதுபுறம் படுத்தாலும் பக்கம் மாறிப் படுத்தாலும் அதிக இருமல், குளிர்ந்த ஆகாரத்தால் உபாதி அதிகம்.

**அம்ப்ரா க்ரிஸியா :** அரிப்பு அமுக்கம் மார்பில் எரிச்சல்.

**அயிலாந்தஸ் :** ரண வலி, வலது பக்கத்தில் எரிச்சல்.

**அரலியா ரஸீமோஸா :** (ஆஸ்த்மாவில் பார்க்க) "இஸ்" சப்தம். உட்காருவதில் பிரியம். முதலில் தூங்கும்போது இருமலால் எழுந்திருத்தல். மார்பு கட்டப்பட்டதுபோலிருத்தல். ரத்தப்பெருக்கு. நடு மார்பில் ரண வலி. உள் மூச்சில் ஆஸ்த்மா உபாதி அதிகம்.

**அர்ஜண்டம் நைட்ரிகம் :** பூந்தசைகளில் அழற்சி. சங்கீதம் பாடுபவர்களுக்கு இருக்கும் நீடித்த தொண்டைப்புண்.

**அர்ஜண்டம் மெடாலிகம் :** சுவாசம் செல்லும் வழிகளில் கோளாறுகள்.

**அஸ்க்லிபியாஸ் ட்யூபரோஸா :** இடதுபுற அடியில் இறுக்கத்துடன் வறண்ட இருமல்.

**ஆண்டிமோனியம் டார்டாரிகம் :** நிறைந்த கபம். வெளியேற்ற சக்தியின்மை. அதிகக் களகளப்பு. சுவாசாசயங்களில் நீர் வீக்கம். இருதயத்திலிருந்து சூடான உணர்ச்சி கைகள் நழுவுதல். பொதுவான பலஹீனம், சுவாசகோசங்களிலிருந்து ரத்தப்பெருக்கு ஏற்பட்டவுடன் ரத்தங் கலந்த குழகுழப்பான சீழ்போன்ற வஸ்து வெளியாதல்.

**ஆரம் மெடாலிகம் :** மார்பில் குத்தும் வலி கஷ்ட சுவாசம் இருதயத்தில் சூடு. மந்தமான தைக்கும் வலி. உள் மூச்சு இழுக்கும்போது மந்தமான தைக்கும் வலி.

**ஆர்ஸனிகம் ஆல்பம் :** பொய்ச் சதை வளருதல் இரவுகளில் மூச்சடைத்து விடும்போலிருத்தல் (ஆஸ்த்மா, இருமல், மார்பு, சுவாசத்தில் பார்க்க )

**ஆர்ஸனிக் ஐயோடைட் :** குழிகள், க்ஷயம். சீழ்க் கட்டிகள். கப வாத ஜ்ுரம், செவிகள் நார்போல் உருமாறுதல்.

**ஆஸிட் ஆக்ஸாலிக் :** இடது சுவாச கோசத்தில் திடீரென்று குத்தும் வலி தோன்றுதல், இதனால் மூச்சுவிட சிரமம் இடது சுவாச கோசத்தின் அடியில் ரத்தத் திரட்சி, அழற்சி, வலி. இடது சுவாசகோசத்தில் வாதசம்பந்தவலி, படுத்தால் சமனம், வலது பக்கத்தில் அதிக 'விஸ்' சப்தம்.

**ஆஸிட் நைட்ரிக் :** இருமும்போது மார்பில் அமுக்கும் உணர்ச்சியும், வலியும். வலது புறத்தில் பிடிப்பு வலிகளும் நிறைந்திருக்கும் உணர்ச்சியும், களகளப்பு சத்தம், சுவாசகோசம் தன் வேலையை நிறுத்திவிடும் போன்றிருத்தல்.

**இபிகாக்உனு :** குடைதல், நுரைத்த கோழையுடன் ரத்தப் பெருக்கு, பிராங்கைல் குழாய்களில் குடைதல்.

**ஐயோடியம் :** சுவாசகோசங்களின் நுனியை மட்டும் பீடிக்கும் (பாஸ்பரஸ் சுவாசகோசங்களின் பக்கங்களைத் தாக்கும்.) கடுமையான பிடிப்பு வலி, உயரமான இடங்களுக்குச் செல்லும்போது மூச்சுத் திணறல், எரிச்சல், சுவாசகோசத்தின் வலது பாகத்தில் மேற்பகுதியில் அழற்சி, (ஜ்ுரத்தில் பார்க்க).

**ஐரிஸ் வர்ஸிகொலர் :** வரண்ட இருமல், தொண்டையில் குறு குறுப்பும் எரிச்சலும், இடது பக்கத்தில் வெட்டும் வலி.

**கந்தாரிஸ் :** மார்பில் எரிச்சலும் பிடிப்பு வலியும். சுவாசாசயங்கள் சுடுதல், நாற்றமுள்ள கபம், சுவாசகோசத்திலிருந்து வெளியாகும் பதார்த்தம் தண்ணீர்போல் மெல்லியதாகி ரத்தந் தோய்ந்திருத்தல், எரிச்சலுடன் பிசுக்கென்ற கோழை, ப்ளூரஸி நோயில் கஷ்ட சுவாசம், வறண்ட குரைக்கும் இருமல், துடிப்பு, குறைவான மூத்திரம், ஏராள வியர்வை, குரல்வளையில் பலஹீனத்துடன் கம்மிய குரல், மார்பில் எரிச்சல்.

**கல்கேரியா கார்பானிகா :** வலது சுவாசகோசத்தில் நடுவிலும் மேல் பாகத்திலும் உபாதிகள். மார்பில் ரண வலி, மாடிப் படி ஏறும்போதும் மூச்சையிழுக்கும்போதும் அதிகரித்தல்.

**கல்கேரியா ப்ளோரிகா:** கொரகொரப்பு, மஞ்சளான கோழை, கட்டி கட்டியாக வெளியாதல், கீழே படுத்தவுடன் இருமல் ஆரம்பித்தல்.

**கன்னபிஸ் ஸடீவா:** மழைக் காலங்களில் ஆஸ்த்மா. உட்கார வேண்டி வருதல், தானிருக்கும் அறையின் கதவுகளையும் ஜன்னல் கதவுகளையும் திறந்து வைத்துக்கொள்ள விருப்பம்.

**காக்டஸ் க்ராண்டி:** சுவாசாசயங்களிலிருந்து அதிக ரத்தத் திரட்சியால் ரத்தப் பெருக்கு.

**காப்ஸிகம்:** நாள்பட்ட குரகுரப்பு, கஷ்ட சுவாசம், சுவாசத்தில் நாற்றமின்மை, ஜலதோஷம். (இருமலில் பார்க்க)

**காமொமில்லா:** கொரகொரப்பு.

**காம்பொரா:** ஆஸ்த்மா. உழைப்பால் அதிகரித்தல், சில்லிட்ட சுவாசம் மார்பில் சில்லிட்ட உணர்ச்சி.

**கார்பன் ஸல்ப்:** சீழ்க் கட்டுதல், மார்பில் சூடும் சுவாசாசயங் களிலிருந்து ரத்தப் பெருக்கும்,

**கார்போ அனிமாலிஸ்:** கொரகொரப்பு, மாலையில் அதிகரித்தல், குழிப்புண்களும் சுவாசாசயக் (வலது) கெபி அழிவும் ஏற்படும். (கடைசி நிலைமை) கபவாத ஜ்ுரம்.

**கார்போ வெஜி:** சுவாசாசயங்களிலிருந்து ரத்தப் பெருக்கு.

**காலாடியம்:** சுவாசம் தடைபடுதல், தொண்டைக்குழி இறுகிய உணர்ச்சி, ஜலதோஷத்துடன் காசம். சுலபமாக கோழை வெளி வராமை, நோயாளி தூங்கப் பயப்படுதல்.

**காலீ மூரி:** குரல் கம்முதல், ஜீரணக் கோளாறுகளுடன் ஆஸ்த்மா, இருமி வெளியேற்ற முடியாத வெண்மையான கடுமையான கபம்.

**காலீ ஸல்ப்:** கோரகொரப்பு, மார்பில் அடையும் கபம்.

**காஸ்டிகம்:** தொண்டைக்குழி ரணமாயிருத்தல், மார்பில் கொரகொரப்பு பச்சைப் புண் உணர்ச்சியுடன் இருமல். கொஞ்சமான கோழை விழுங்க நேரிடல், உபாதிகள்

மாலையில் படுக்கைச் சூட்டிலும் அதிகரித்தல். இடது புறத்தில் அதிக உபாதிகள், குளிர்ந்த தண்ணீர் குடிப்பதால் உபாதிகள் சமனமாதல்.

**கோக்கஸ்காக்டி:** இருமல், கக்குவாய் இருமல் எதிர்காற்றில் நடந்தால் மூச்சுவிட முடியாமை.

**க்ராபைடிஸ்:** மார்பைத் தன்னிஷ்டம்போல் அடக்கியாள முடியாமை.

**க்ரிஸோட்:** சுவாசகோசங்கள் அழுகுதல்.

**க்ரோடன் டிக்லியம்:** தன் சுவாசாசயங்களை அகலமாகச் செய்ய முடியாதென்று நினைத்தல்.

**செலிடோனியம்:** வலது பாகத்தில் பிடிப்பு, ப்ளூரா பாதிக்கப்பட்டிருத்தல். வலதுபுற சுவாசாசயத்தின் கீழ்பாகத்தில் வலி. மஞ்சட்காமாலையுடன் கூடிய வலது பக்கத்து நிமோனியா.

**சைனு:** தளர்ச்சியுடன் கூடிய இன்ப்ளூயன்ஸா ஜுரம் தலையை உயரமாக வைக்கவிடாமல் மூச்சுத் திணறுதல். அடிக்கடி நெஞ்சடைப்பு. நெஞ்சை அடைக்கும் கபம், மார்பில் களகளப்பு. ஆகாரம் உட்கொண்டபின் கடுமையான இருமல். சுவாசாசயத்திலிருந்து ரத்தம் வெளியேறுதல். இடது சுவாசாசயத்தில் வலி, மூச்சுத்திணறல். மழைக் காலத்தில் அதிகரிக்கும் காசநோய்.

**டயஸ்கோரியா:** மார்பில் இறுக்க உணர்ச்சி. மூச்சு இழுக்கும் போது மார்பு விரியாமை போன்ற உணர்ச்சி.

**ட்யூபர்குலீனம்:** இடதுபக்க சுவாசாசயத்தின் முனையில் க்ஷயம் ஆரம்பித்தல்.

**ட்ரோஸிரா:** சுவாச சம்பந்த உறுப்புக் கோளாறுகளுக்கு முக்ய ஔஷதம்.

**தெரிடியன்:** இடதுபுற சுவாசகோசத்தில் மேல்பாகத்தில் க்ஷய அழற்சி. வலி.

**நக்ஸ் வாமிகா:** மார்பில் கனம். இடதுபுற விலாவெலும்புகளுக்கு இடையிலுள்ள பாகத்தில் வலி.

**நேட்ரம் ஆர்ஸனிகம் :** சுவாசாசயங்கள் அமுக்கப்படுவதுபோன்ற உணர்ச்சி. வலி.

**நேட்ரம் ஸல்ப் :** முடிச்சுகள் இருப்பதுபோன்ற உணர்ச்சி.

**பாஸிலீனம் :** வயதான கிழவர்களில் சுவாசகோசக் கோளாறுகள், இறுக்கவுணர்ச்சி, மூச்சுவிட சிரமம், காசம். களகளப்பு, கெட்டியான சீழ் போன்ற கோழை.

**பாஸ்பரஸ் :** இடது சுவாசாசயத்தில் பிடிப்பு, வலது புறமாகப் படுத்தால் சமனம். சுவாசக்குழாய்கள் வறண்டிருத்தல், சுவாசகோசங்கள் அழற்சி.

**பெர்ரம் பாஸ் :** மூச்சுவிட சிரமம், வறண்ட அலைக்கழிக்கும் இருமல், கபத்துடன் ரத்தம் வெளியேறுதல், ஆனல் அகோனைட்போல் தலைக்குறிகளும் பிதற்றலும் கிடையாது.

**பெல்லாண்ட்ரியம் :** சுவாசகோசக்கோளாறுகள்.

**ப்ரோமியம் :** சுவாசக்குழாய்களின் கோளாறுகள்.

**மில்லிபோலியம் :** ரத்தப் பெருக்கு, ரத்தம் துப்புதல். (நல்ல சிவந்த ரத்தம்)

**மெக்னீஷியாகார்ப் :** இறுக்கும் வலி, எரிச்சல்.

**மெபைடிஸ் :** தண்ணீர் குடிக்கும்போது ஒவ்வொரு தடவையும் சுவாசக்குழாய்க்குள் செல்லுதல்.

**யூர்டிகா யூரன்ஸ் :** ரத்தம் வெளியேறுதல்.

**ரானங்குலஸ் :** சுவாசகோசத்தில் ஓரிருடத்தில் ரணம் இருப்பது போன்ற உணர்ச்சி.

**லாரோஸிராஸஸ் ,** இருதயம் சுவாசகோச வியாதிகளில் எந்த ஔஷதமும் வேலை செய்யாமலிருக்கும்போது இது கொடுக்கப்படலாம். ரத்தத்திற்கு வேண்டிய அளவு ஏராள வாயுவை கிரஹிக்கும் சக்தி. சுவாச கோசத்தில் குறைந்து விடுதல்.

**லேடம் பாலஸ்த்திரி :** சுவாசகோசங்களில் சீழ் பிடித்தல்.

**ஜஸ்டீஷியா ஆடாதோடா :** சுவாசகோசங்களில் நல்ல வேலை செய்யவல்லது.

**ஸல்பர் :** நிமோனியாவுக்குப் பின் சுவாசகோசங்களில் ஏற்பட்டிருக்கும் நீர் தேக்கத்தை வெளியேற்ற உபயோகப்படும்.

**ஸாங்குனேரியா :** இருதய வால்வுகளில் கோளாறுகளுடன் சுவாசகோசங்களும் பாதிக்கப்பட்டிருத்தல்.

**ஸிலிகா :** குளிர் காற்றுத் தாக்கினால் சுவாசகோசங்கள் நோயுறல், சுவாசகோசங்களில் வலி.

**ஸெனகா :** சுவாசகோசங்களில் நீர் உபாதியுடன் கூடிய கோளாறுகள். பின்புறமாக அழுக்கும் உணர்ச்சி.

**ஹீபர் ஸல்பர் :** களகளத்த சளி.

# வயிறு

**அகோனைட் :** குடல் அழற்சி, கோடைகால வயிற்றுக்கோளாறுகள், வயிற்றிலிருந்து அன்னக் குழாய் வரை எரிச்சல், கிழிக்கும் வலி, கடுமையான திடீரென்று தோன்றும் கல்லீரல் அழற்சி.

**அக்டியா ரஸிமோஸா :** குமட்டல், வாந்தி.

**அபிஸ் கனடன்ஸிஸ் :** பசி, மேல் வயிறு தளர்ந்த உணர்ச்சி.

**அபிஸ் நைக்ரா :** வயிறு நிறைய உண்டபின் வயிற்று வலி, வயிற்றின் மேல் பாகத்தில் உருண்டை அல்லது வெந்த முட்டையிருக்கும் உணர்ச்சி.

**அபிஸ் மெல்லிபிகா :** அதிக தாகம், குழியில் வலி. புளிப்பு, எரிச்சல் அழுக்கினால் அதிக வலி.

**அப்ரோடனம் :** எரிச்சல், வெட்டும், கடிக்கும் வலி, இரவில் அதிக உபாதி, புளிப்புத் தட்டல் குளிர்ந்த தண்ணீரில் வயிறு தொங்கும் உணர்ச்சி.

**அமோனியா கார்ப்:** உண்டபின் கனம். வலி, வெற்று ஏப்பம் சூன்யம், நடுங்குதல் நிறைந்தது போன்ற உணர்ச்சி.

**அமோனியா மூரியாடிகம்:** பசி, உருள்வது போலிருத்தல், காலில் புழுவிருப்பதுபோல் பிடுங்குதல், எரிச்சல். பிடிப்பு வலி, பிறகு கைகளின் மேல் பாகம் அக்குளுக்குச் செல்லுதல். உபாதி அதிகம். காலையாகாரத்தின் பின் வயிற்று வலி அதிகம்.

**அம்ப்ரா க்ரிஸியா::** வயிற்றில் சூன்ய உணர்ச்சி அமுக்கம், எரிச்சல், பிடிப்பு வலி, விரைப்பு, மலம் கழிந்தபின் பலஹீனம், ஏப்பத்தால் உபாதி சமனம்.

**அயிலாந்தஸ்:** சூன்ய உணர்ச்சி, தாகம், சாப்பிட்ட பின் வாந்தி.

**அர்ஜண்டம் நைட்ரிகம்:** வயிற்றில் புண்கள், மார்புக்கும் தோள் பட்டைக்கும், அடி வயிற்றுக்கும் செல்லும் வலி. அதிக தாகம். ஐஸ்க்ரீம் சாப்பிட்ட பின் வயிற்று வலி, வலி எல்லாப் பக்கங்களுக்கும் பரவுதல். சாப்பிட்ட பின் அதிகமாதல், வயிற்றில் வாயு, சாப்பிட்ட பின் வயிறு அதிகமாக வெளித் துறுத்துதல் குளிர்ந்த பானங்களால் சமனம். அமுக்கும் தலைவலியுடனும், வயிற்றில் அமுக்கத்துடனும், நடு இரவில் விழித்துக் கொள்ளுதல், வயிற்று வலி ஏப்பத்தால் சமனம். வயிற்றில் உப்புசம். வாயு மேல் நோக்குதல். கடைசியில் மிக வேகமாக வாயு வெளியேறுதல். வாயாலெடுப்பும், வயிற்றுப் போக்கும் ஒரே சமயத்திலேற்படுதல் இவைகளுடன் பலவீனம். ஏப்பம் விடுவதால் சமனம்.

**அர்ஜண்டம் மெடாலிகம்:** வாயு வலி, சாப்பிட்ட பிறகும் பசி. அதிகப் பசி, கவலை, வயிற்றுக் குழியில் அமுக்கும் உணர்ச்சி, மார்பு வரை எரிச்சல்.

**அலுமினு:** குழிப்புண் வயிற்றிலிருந்து வலி மேற்புறமாக மார்புக்கும் தொண்டைக்குஞ் செல்லுதல்.

**அஸபோட்டிடா:** ஏப்பம், வாயு உப்புசம் சாப்பிட்டவுடன் வயிற்றிலிருந்து பந்து போன்ற உருண்டையான வஸ்து தொண்டைக்கு ஏறி தொண்டையை அடைக்கும் உணர்ச்சி, சங்காதோஷத்திலும் இதேவிதம்.

**அஸ்குலஸ் ஹிபோ:** வயிற்றில் கல்லிருப்பதுபோன்ற தோற்றம், ஏப்பம் புளிப்பாகவோ அல்லது கசப்பாகவோ இருத்தல். எரிச்சல், ரணம், வாந்தி, குமட்டல், காலையில் வயிற்றில் சூன்யஉணர்ச்சி, இருதயத்தில் எரிச்சல் சாப்பிட்டபின் எதுக்களித்தல், வயிற்றிலிருந்து கல்லீரலின் வலப்பாகத்தின் கீழ்வரை வலி, வலப்பக்கம் மிருதுவாக இருத்தல், தலைவலிக்குப்பின் பிடிப்பு வலி, வலப்பக்கத்தில் ஊசிகுத்துவது போலவும், மூச்சு வாங்கும்போது முதுகில் வலி, கல்லீரலில் நெருக்கமும், அதிக வலியுள்ள மூலங்களும்.

**அனகார்டியம் ஓரியண்டேல்:** பசியாயிருக்கும்போது வயிற்றிலும் தலையிலும் வலி, சாப்பிட்டால் சமனம், மறுபடி பசியாரம்பித்தால் வலியாரம்பிக்கும்.

**ஆண்டிமோனியம் டார்ட்டாரிகம்:** வயிற்றில் கனம், வயிற்றில் அதிக கனமிருப்பதுபோன்ற உணர்ச்சி.

**ஆரம் மூரி நேட்ரம்:** குடல் வயிற்றில் அதிக நீரை உற்பத்தி செய்தல், அசையாவிடில் வயிறு குடல்களில் எரிச்சல்.

**ஆரம் மெடாலிகம்:** அதிகப் பசி, இடது மார்பெலும்புகளின் கீழ் மேல் வயிற்றில் ஏராளமான வாயு கூடி, வலியை உண்டாக்குதல், மேல் வயிற்றின் வலது பாகத்தில் தீ போன்ற எரிச்சல், வெட்டும் வலி, பித்தப்பை கடினமாதல், இருதயக் கோளாறுகளுடன் சம்பந்தப்பட்ட பித்தப்பை கோளாறுகள்.

**ஆர்ஸனிகம் ஆல்பம்:** மார்பிலும் வயிற்றிலும் இறுக்கம், வயிற்றில் ஏராள உஷ்ணம், எரிச்சல், தண்ணீர் வயிற்றில் தங்கமுடியாமை.

**ஆலோஸோகோட்ரினு:** வலி, நிறைந்தவுணர்ச்சி.

**ஆஸிட் அஸடிக்**: சுரத்தின்போது தாகமின்மை, நீரிழிவிலும் உடம்பில் நீர் சுரந்திருக்கும்போதும் அதிக தாகம், வயிற்றில் சங்கடத்துடன் தாகம், பிரதி தடவை ஆகாரம் உட்கொண்ட பின்னும் வாந்தி, அதிக தாகம், விக்கல், வயிற்றிலும் மார்பிலும் கடுமையான எரிச்சல், வலி, நெற்றியில் வியர்வை எரிச்சல், மல்லார்ந்து படுத்தால் உபாதி அதிகம், மாதவிடாய் தடைப்பட்டபின் குடல்களிலிருந்து ரத்தப் பெருக்கு.

**ஆஸிட் ஆக்ஸாலிக்**: கிறு கிறுப்பு, பசியின்மை, குமட்டல் வலி முதலியவைகளுடன் தாகம், சர்க்கரை தின்பதால்வயிற்று வலி அதிகரித்தல், சாப்பிட்டபின் ஏப்பம், குமட்டல், தொப்புழில் வலி, கடபுடா சத்தம், வெளிக்கு வருதல், பலஹீனம், காலியுணர்ச்சி, சாப்பிட வேண்டுமென்று தோன்றுதல், சாப்பிடுவதால் வலி குறைதல், நெஞ்செரிவு, வயிற்றிலும் தொண்டையிலும் எரிச்சலுடன் வலி, சாப்பிட்டவுடன் வாயு உப்புசம், வயிற்றிலும் குடலிலும் அழற்சி, களைப்பு, குடலில் ஏற்படுங்கோளாறுகள்.

**ஆஸிட் நைட்ரிக்**: ஆகாரத்திற்குப் பின் வயிற்றில் கனம், படபடப்பு, பால் ஒத்துக்கொள்ளாமை, வயிற்றிலிருந்து தொண்டைவரையில் உஷ்ண உணர்ச்சி, வயிற்றினுள் ரணம், மஞ்சட்காமாலை, கல்லீரல் வாந்தி.

**ஆஸிட் பாஸ்பாரிக்**: புளிப்பு, காரப் பதார்த்தங்களை உட்கொண்டபின் வயிற்றுக் குறிகள் எல்லாமதிகரித்தல்.

**ஆஸிட் பென்ஸாயிக்**: அன்னப்பையில் அமுக்க வுணர்ச்சி. வயிற்றில் கல்லிருப்பது போன்ற கனம்.

**ஆஸிட் ப்ளூவாரிக்**: வயிற்றில் கனம் இறுக்கவுணர்ச்சி. சற்று ஆகாரப்பிசகு ஏற்பட்டாலும், ஏப்பம், பித்த வாந்தி, ஆகாரத்தின் பின் வயிற்றில் கனம்.

**ஆஸிட் லாக்டிக்**: வயிற்றுப் புளிப்பு, வயிற்றிலிருந்து தொண்டைவரை எரிச்சல், ஏப்பம்.

**ஆஸிட் ஸல்ப்யூரிக்**: நெஞ்செரிதல், புளித்த ஏப்பங்கள், தண்ணீர் குடித்தால் வயிற்றில் சில்லென்றவுணர்ச்சி, சூடான

ஒற்றிடங்களால் சமனம், வயிறு தொங்கும் உணர்ச்சி, வயிற்றில் சூன்ய உணர்ச்சி. அன்னப்பையில் அதிக புளிப்பு, நீர் உற்பத்தி.

**இக்னேஷியா :** சங்காதோஷத்தில் தொண்டையில் முக்ய உபாதிகள். வயிறு துறுத்துதல். தொண்டைக்குப் பந்து ஏறுதல். விழுங்கினுல் சமனம், பலஹீனம், ஒன்றுமேயில்லாதவுணர்ச்சி, காலியாயிருப்பது போல் தோற்றுதல், வலி உப்புசம், இரவில் வயிறு சுருங்குதல். சாப்பிடும்போது சௌகர்யம், சாப்பிட்டவுடன் அசௌ கர்யம்.

**இபிகாக்உனு :** குத்துவலி, இடது பக்கத்திலிருந்து வலது பக்கம் செல்லுதல், குமட்டலுடன் வெற்று ஏப்பங்கள் வயிறு தளர்ந்து கீழே தொங்கும் உணர்ச்சி.

**ஏதூஸா ஸைனுபியம் :** கடுமையான சுருக்கத்தால் வாந்தி தடை படல், வயிற்றின் அடியில் கிழிக்கும் வலி, இவ்வலி தொண்டை வரை பரவுதல்.

**ஐயோடியம் :** வயிற்றில் துடிப்பு, நடுக்கம், எரிச்சல், மிருதுத் தன்மை.

**ஐரிஸ் வர்ஸிகொலர் :** புளித்த வெற்று ஏப்பம், புளித்த வாந்தி தொண்டையில் புண், தலைவலி. வயிறு நாக்கு தொண்டையில் எரிச்சல், குளிர்ந்த தண்ணீரிலும் தணியாமை.

**ஒலியாண்டர் :** பசி, சாப்பிட்ட பின்னும் வயிற்றில் காலியான உணர்ச்சி.

**ஓபியம் :** சாப்பிட்டவுடன் அமுக்கம், கனம் அல்லது ஒன்றுமே சாப்பிடாத உணர்ச்சி.

**கந்தாரிஸ் :** வயிற்றில் எரிச்சல்

**கல்கேரியா ஆர்ஸனிக் :** குளிர்ந்த தண்ணீர் குடித்தபின் வயிற்றில் வலி, வயிற்றில் குழிப் புண்.

**கல்கேரியா கார்ப் :** வயிற்றின் பின்பக்கத்திலிருந்து குளிர்ந்த காற்று மேல் வருவதுபோன்றவுணர்ச்சி, உப்புசம், ஏப்பம் விடுதல், சாப்பிட்டபின் வயிற்றில் உப்புசம், பலஹீன ஜீரணம், இருதய எரிச்சல், வயிற்றில் புளிப்பு, வயிற்றில்

புழு உற்பத்தியாவதை இவ்வௌஷதம் கண்டிக்கும். மேல் வயிற்றில் வெட்டும் வலி.

**கல்கேரியா பாஸ் :** குளிர்ந்த தண்ணீர் உட்கொண்டபின்னும் சிறிதளவு ஆகாரம் உட்கொண்டாலும், வயிற்றில் பிசையும் வலி, ஏப்பம் விட்டால் வலி சமனம், மேல் வயிற்றில் எரிச்சலுடன் காலியாயிருக்கும் உணர்ச்சி. வயிற்றில் உயிருள்ள வஸ்து நகரும் உணர்ச்சி. பகல் நாலுமணிக்குப் பசி.

**கல்கேரியா ப்ளோரிகா :** ஜீரணமாகாத ஆகாரம் வாந்தியெடுத்தல், விக்கல், உப்புசம்.

**கன்னபிஸ் இண்டிகா :** அதிகப்பசி, வலி அமுக்கினுல் சமனம்.

**காக்குலஸ் :** குடல்களை இரு கற்களுக்கு நடுவில் வைத்து நசுக்குவது போன்று கெண்டை வாங்குதல், வயிற்றில் புழு ஊறும் உணர்ச்சி.

**காக்டஸ் க்ராண்டி :** வயிற்றிலும் குடலிலும் அழற்சி, கனத்த உணர்ச்சி, வயிற்றினுள்ளே துடித்தல், இறுக்கியவுணர்ச்சி.

**காட்மியம் ஸல்ப் :** வயிற்றில் தொந்தரவு, பிசையும் வலி, வெட்டும் வலி. (புற்றுகள், மலத்தில் பார்க்க.)

**காப்ஸிகம் :** வயிற்றில் குளிர்ந்த உணர்ச்சி, வயிற்று உப்புசம், வலி.

**காம்பொரா:** சில்லிட்ட வயிறு.

**காமொமில்லா :** நாற்றமுள்ள ஏப்பங்கள், காபி குடித்த பின் குமட்டல், ஆகாரம் அல்லது பானங்கள் உட்கொண்ட பின் வியர்த்தல். சூடான பானங்களில் வெறுப்பு, நாக்கு மஞ்சளாகவும், கசப்பு ருசியுடனுமிருத்தல். பித்த வாந்தி, ஆகாரம் எதுக்களித்தல்.

**கார்டுஸ் மரியேனஸ் :** டியூடனத்தின் ஒரு பாகம் தடிப்பதாலும் கல்லீரலில் அதிக ரத்தம் சேருவதாலும், மேல் வயிற்றில் வலப்பாகத்தில் நிறைந்த வுணர்ச்சி, கல்லீரல் சம்பந்த நீர் வீக்கம், இடது பக்கமாகப் படுக்கும்போது மேல் வயிற்றில் வலப்பாகத்திலிழுக்கும் வலி, பித்தகற்களால் உண்டாகும் வலி.

**கார்பன் ஸல்ப்**: சில்லிப்பான உணர்ச்சி. சாப்பிட்டபின் வயிறு வெளித் துறுத்துதல். வாந்தியின் பின்னும் ஏப்பம் விடுவதாலும் சமனம், நெஞ்செரிச்சல், அமுக்கினலதிகரித்தல்.

**கார்போ அனிமாலிஸ்** : அபரிமிதமான பசி அல்லது பசியின்மை, வயிற்றில் புற்றுநோய், நெஞ்செரிவு, ஏப்பம், அதிக நாற்றமுள்ள உப்புசம், குழந்தைகளுக்குப் பால் கொடுக்கும் போது அடிவயிற்றில் சூன்ய உணர்ச்சி,

**கார்போ வெஜ்** : (விருப்பு வெறுப்பில் பார்க்க) பால் குடித்தால் புளித்த ஏப்பம்: உப்புசமுண்டாதல். அடிக்கடி வெற்று ஏப்பங்களுண்டாதல், அதனுல் உபாதிகள் சற்று சமனம், மாலையில் ரத்தமோ, உணவோ, புளித்த அல்லது பித்தங் கலந்த பதார்த்தமோ வாந்தியெடுத்தல், வயிற்றில் எரிச்சல் கீழ் முதுகுக்கும் தோள்பட்டைக்கும் பரவுதல், டாம்பீகமான ஆகாரங்களை உட்கொண்டதாலேற்பட்ட உப்புசம், வாயில் கசப்பு ருசி, கொழுப்புள்ள ஆகாரங்களோ அல்லது பாலோ உட்கொள்ளப்பட்டால் மேல் வயிற்றில் அதிக உப்புசமேற்படுதல், வயிறு உடைந்துவிடுமோ என்று நினைக்கும்படியான உப்புசம், எவ்வளவு பிரயத்தனப்பட்டாலும் ஏப்பம் வராமல் கடைசியில் பெரிய ஏப்பங்கள் வந்து சௌகர்யமேற்படல், நோயாளி தன் வயிற்றின் வாயு உபத்ரவங்களைப்பற்றி எப்பொழுதும் குறைகூறிக் கொண்டேயிருத்தல்.

**காலாடியம்** : அன்னகோசத்தின் மேற்புறத்தில் கடிப்பது போன்ற உணர்ச்சி, வயிறு நிறைய காய்ந்த உணவு இருப்பது போன்ற உணர்ச்சி, சூடான பானங்களை வயிற்றில் தங்குதல்.

**காலீ ஆர்ஸனிகம்**: உருண்டையான வஸ்து மேலே வரும் உணர்ச்சி. இதனுல் மூச்சுத் திணறல்.

**காலீ ஐயோடேட்டம்** : வயிறு உப்பி அதன்பின் வயிற்றுப்போக் கேற்படுதல். வலி, அன்னப்பையில் சில்லென்றிருக்கும் பானங்கள்ஒத்துக்கொள்ளாமை,ஆனுல்சில்லென்றகாற்று மேலே படுவது ஒத்துக்கொள்ளும், அதிகப் பித்த நீர் உற்பத்தி, ஓக்காளம், எரிச்சல், எப்போதும் அதிக தாக வறட்சை,ஆனுல் தண்ணீர் குடிப்பது ஒத்துக்கொள்ளாது.

**காலீ கார்ப்:** மிகவும் மெலிந்த சரீரிகளுக்கும் ரத்த புஷ்டியில்லாதவர்களுக்கும் எந்த ஆகாரத்தை உட்கொண்டாலும் அது உடனே வாயுவாக மாறுதல், பிரதி ஆகாரத்திற்குப் பின்னும் வயிறு உப்புதல், உப்புசம், உருண்டையான வஸ்துவின் உணர்ச்சி, குமட்டல், வயதானவர்களின் அஜீர்ணம், எரிச்சலும் உப்புசமும். சில்லென்ற நீர் குடித்ததாலேற்பட்ட வயிற்றுக் கோளாறுகள். புளித்த ஏப்பங்கள், குமட்டல், படுத்தால் சமனம், வயிறுநிறையத் தண்ணீர் இருப்பதுபோன்று அடிக்கடி உணர்ச்சி. வயிற்றில் புடைக்கும் வெட்டும் வலிகள், வயிற்றைப் பற்றி கவலை, மேல் வயிற்றின் மேல் புறம் வலி, சாப்பிடும் போது சுலபமான மூச்சுத் திணறல், மேல் வயிற்று வலி, முதுகுக்குப் பாய்தல்

**காலீ பாஸ்:** சூன்ய உணர்ச்சி, சூன்ய உணர்ச்சியுடன் தலைவலி.

**காலீ பைக்ரோ:** மேல்வயிற்றின் வலப்பாகத்தில் இசிவு, வலி, ஆகாரம் ஜீரணமாகாமல் வயிற்றில் அப்படியே இருப்பது போலுணர்தல், வயிற்றில் பிசைதல், அஜீர்ணம், வயிற்றில் வட்டமான குழிப்புண்கள், சாப்பிட்ட பின் அஜீர்ண உபாதிகள் மறைந்து வ த உபாதிகள் ஆரம்பித்தல்.

**காலீ மூரி:** கொழுப்பு அல்லது சத்துள்ள ஆகாரத்தால் அஜீர்ணம், வெண்மையான பளபளப்பான கோழை வாந்தி, வயிற்றில் நீர் சுரத்தல், மலச்சிக்கலுடன் வயிற்றில் வலி. தண்ணீர் குடித்தால் பசி மறைதல்.

**காலீ ஸல்ப்:** கனத்த வுணர்ச்சி.

**காலோட்ரோபிஸ்:** கடுமையான வயிற்றுக் கடுப்பு. வயிற்றில் உஷ்ண உணர்ச்சி.

**காலோபில்லம்:** பெண்களுக்கு வயிற்றில் வலிப்பு இத்துடன் அஜீர்ணம்.

**கால்மியா:** மேல்வயிற்றில் கதகதப்பான உணர்ச்சி, குமட்டல் வாந்தி: வயிற்றின் குழியில் வலி, முன்பக்கமாக உடலை வளைத்தால் அதிகரிப்பு, நேராக உட்கார்ந்தால் சமனம், தலைவலி, கிறுகிறுப்பு, குமட்டலுடன் பித்தம் அதிகரித்த உபாதி.

**காஸ்டிகம்:** வயிற்றில் சுண்ணும்பு வேகுவது போன்ற வுணர்ச்சி. பச்சை மாமிசம் தின்ருல் உபாதி அதிகம், வறுத்த மாமிசம் ஒத்துக்கொள்ளுதல்.

**குர்ச்சி:** டைபாய்டு ஜுரத்தில் வயிறு பெருத்தல்.

**குப்ரம் மெடாலிகம்:** வயிற்று வலி

**கோல்சிகம்:** பசியின்மை, அதிக தாகம், உணவில் வெறுப்பு, உணவைப்பார்க்கவோ அதன் வாசனையையோ சகிக்காமை, கடுமையான குமட்டல், பிறகு ஏராள வாந்தியுண்டாதல், உட்கொண்ட ஆகாரமும் பித்தமும் வெளியாதல், கொஞ்சமும் அசையாமல் படுப்பதால் உபாதி சமனம், உணவின் வாசனை மயக்கத்தையுண்டாக்கும், வலியுடன் பனிக்கட்டி போன்ற சில்லிப்பு அல்லது சில்லிப்பு அதிகமாகும்போது உணவுகளால் வயிறு பெரிதாயிருக்கும்போதும் அதிகமாகும், வயிற்றை இரண்டாக மடித்தால் சமனம்.

**கோனியம்:** வலி, கடுமையான குமட்டல், நெஞ்செரிவு, ஏப்பங்கள், படுத்தவுடன் அதிகரிப்பு, வயிற்றில் வலியுடன் பிசைதல், உபாதி, சாப்பிட்டவுடன் சமனமடைந்து சில மணி நேரத்தில் பின் உபாதி அதிகரித்தல். சங்கா தோஷத்தில் வயிற்றில் பிடிப்பு. சுருங்கிக் கொள்ளுதல்.

**க்ராபைடிஸ்:** வயிற்றில் அமுக்கும் உணர்ச்சி வயிற்றில் எரிச்சல், அதனுல் பசியுண்டாதல் ஏப்பம் விடச் சிரமம், அடிக்கடி அஜீர்ணக் கோளாறுகளால் ஏற்படும் வலி, பொருமல், சாப்பிடுவதனுலும் உஷ்ணமான பானங்களைக் (முக்யமாகப் பால்) குடிப்பதனுலும், கீழே படுப்பதானுலும் சற்று சமனம், ட்யூடனத்தில் குழிப்புண்கள்

**க்ரோகஸ் ஸடீவா:** ஏதோ குதிப்பது போன்றவுணர்ச்சி,

**க்ரோடேலஸ் ஹாரிடஸ்:** கடுமையான ரத்தப் பெருக்கு.

**க்வாய்கம்:** பிற்பகலில் மாலையில் அகோரமான பசி, பால், ஆகாரம் முதலியவைகளில் வெறுப்பு, வயிற்றில் எரிச்சல்.

**சின்னினம் ஸல்ப்:** ஆகாரத்தின் பின் அன்னப் பையின் அடிப் பாகத்தில் கனம், வாந்தி, ஆகாரத்தில் வெறுப்பு, பித்த வாந்தி, (கல்லீரலில் பார்க்க.)

**செலிடோனியம்:** பித்த வயிற்று வலி.

**செனபோடியம்:** இரைச்சல் வலி, அடிக்கடி மலம் வரும்போல் தோன்றினாலும் வெளி வராமை.

**சைனு:** அமுக்கினால் ஜீரணமாகாமல் ஆகாரம் வாந்தியெடுத்தல், தாமதமான ஜீரணம், சாப்பிட்டபின் கனத்தவுணர்ச்சி, பசியில்லாமலேயே உணவு உட்கொள்ளப் பிரியம், பால் ஒத்துக்கொள்ளாமை, உப்புசம் எவ்வளவு ஏப்பம் விட்டாலும் தொந்தரவு குறைவதில்லை, பழங்கள் உட்கொண்டால உப்புசம் அதிகமாதல், விக்கல் அசைவினால் உப்புசம் குறைதல், அதிக வாயு தொந்தரவு, எவ்வளவு வெளியேறினாலும் குறைவதில்லை.

**டபாகம்:** அடிக்கடி பசி உணர்ச்சி. ஜீரண சம்பந்த வலி, வயிற்றிலிருந்து இருதயத்திற்குச் செல்லும் வலி, குளிர்ச்சி, சூன்ய உணர்ச்சி,

**டயஸ்கோரியா:** நாற்றமுள்ள அதிகக் காற்றுடன் ஏப்பம், அன்னப் பையில் நரம்பு சம்பந்த வலி, வாயில் அதிகப் பித்தநீர் உற்பத்தி, வயிற்று வலி, நிமிர்ந்து நடப்பதால் சமனம், விக்கல்.

**டாரண்டுலா குபான்ஸிஸ்:** அன்னப் பையில் வலி, கெட்டியாக விருத்தல்.

**டிஜிடாலிஸ்:** பசியின்மை வயிறு காலியாகவிருத்தல், ஆனால் அதிக தாகம், வயிற்றிலிருந்து தொண்டை வரையிலுள்ள அன்னக் குழாயில் எரிச்சல், வயிற்றில் சூன்ய உணர்ச்சி, இதனாலிறந்துவிடுவது போலிருத்தல், அன்னப் பையின் அடிப்பாகத்தில் வலி, வீக்கம்.

**ட்யூபர்குலீனம்:** வயிற்றில் ஒன்றுமேயில்லாதது போல், உணர்ச்சி.

**தராக்ஸகம்:** வயிற்று உப்புசம், சங்காதோஷத்தில் வயிறு பந்துபோல் உப்பிக்கொள்ளுதல்.

**தாலியம்:** வயிற்றிலும் குடலிலும் வலி.

**தூஜா:** பானங்கள் அருந்துவது, திடீரென்று அன்னப்பையில் விழுதல், சுத்தமாகப் பசியின்மை, புதிய மாமிசங்களிலும் உருளைக்கிழங்கிலும் வெறுப்பு, வெங்காயம் ஒத்துக்கொள்ளாமை, சிறிது சத்துள்ள ஆகாரங்களையுட்கொண்டாலும் ஏப்பம் வந்துகொண்டேயிருத்தல், வயிற்றில் வெட்டும் வலி. வயிற்றில் உப்புசம், ஆகாரத்தின்பின் வலி, அதிகடீ குடித்ததால் ஏற்பட்ட பித்தவாயு வலி. உபாதிகள், வயிற்றில் ஏதோ உயிருள்ள வஸ்து விருப்பதுபோன்ற பிரமை.

**தெரிடியன்:** இடதுபுறத்தில் மண்ணீரலுக்கு வெளிப்புறத்தில் கொட்டும் வலி, கப்பல் பிரயாணத்தால் ஏற்படுங் கோளாறுகள்.

**தெரிபிந்த்:** வயிறு பெருத்தல், வலியும் மலபந்தமும் மஹோதாரமும். வயிறு அதிகமாக பெருத்து வீங்குதல்.

**நக்ஸ் மாஸ்சாடா:** வயிற்றில் கடபுடா சத்தம், பசியுண்டு, ஆனால் அதிகமாக உண்ணமுடியாது, சாப்பிட்டவுடன் வயிற்றில் வலி, பிரதி ஆகாரமும் காற்றாக மாறி மார்பில் அழுக்குவதுபோலிருத்தல்.

**நக்ஸ்வாமிகா:** பசி, ஆனால் ஆகாரம் தண்ணீர். காபி முதலியவைகளைக் கண்டால் வெறுப்பு, பிராந்தி, கொழுப்பு வஸ்துக்கள், சாக்கட்டி அதிகக் கார வஸ்துக்கள் இவைகளில் பிரியம். பால் சாப்பிட்டால் அது வயிற்றில் புளித்துவிடுதல், ஆகாரம் உட்கொண்டபின் புளிப்புருசி, வயிற்றில் கல்லிருப்பதுபோன்ற கனம், கசந்த புளித்த ஏப்பங்கள், நெஞ்செரிவு. ஆகாரம் தண்ணீர், பித்தநீர், ஆகாரம் உட்கொண்ட இரண்டுமணி நேரங்கட்குப் பின் வயிற்றில் உப்புசம், கனம், கறுத்த ரத்தம் இவைகள் வாந்தி எடுக்கப்படுதல். ஒன்றிரண்டு தினங்கட்கு முன் உண்ட ஆகாரம் அப்படியே வாந்தியெடுத்தல், வயிற்றை அமுக்கினால் வலி, அதிகமான டானிக்குகள் முதலியவைகளையுட்கொண்டபின் ஏற்படும் அஜீர்ணம். பித்தக் கற்களும் மலபந்தமும், இடது பக்கத்துப் பெருங்குடலில், மண்ணீரல் பக்கத்தில், வாயுவும் கடபுடாசப்தமும், (கல்லீரலில் பார்க்க.) பித்த வாயுக் கோளாறுகள். வயிற்று வலி, ஆகாரம் உட்கொண்ட் சுமார் 2 மணி

நேரத்திற்குப் பின் ஏற்படுதல், ஆகாரம் ஜீரணமான பின் நின்றுவிடுதல், சங்காதோஷத்தில் உப்புசத்துடன் வயிறு துருத்துதல்.

**நேட்ரம் ஆர்ஸனிகம் :** அன்னப்பையில் அடைப்பு, இறுக்கவுணர்ச்சி, வயிற்றின் அடியில் சூன்யஉணர்ச்சி சிறிதளவு ஆகாரம் உட்கொண்டாலும் வயிறு நிரம்பியிருத்தல், உஷ்ணமான ஆகாரங்களை உட்கொண்ட பின் வலி.

**நேட்ரம் கார்பானிகம் :** காலை 5 மணிக்கும் பகல் 11 மணிக்கும் அமிதபசி, வயிற்றில் சூன்ய உணர்ச்சி, பால் ஒத்துக் கொள்ளாமை, பால், மாவு பதார்த்தங்கள் உட்கொண்டால் வயிற்றுப்போக்கு ஏற்படல், ஆகாரத்தின் பின் தாகம், புளிப்பு, ஏப்பம், கனம், படபடப்பு முதலியவை வெய்யிலில் சென்றதாலோ அல்லது மற்ற எந்தக் காரணத்தாலோ சரீரம் உஷ்ணமடைந்திருக்கும் போது சில்லென்ற பானங்களையுட்கொண்டதனுல் ஏற்பட்ட கோளாறுகள். சத்துள்ள ஆகாரங்களையுட்கொண்டதனுல் நெஞ்செரிவு. வயிற்றில் முணுமுணுவென்ற வலி, இது ஆகாரத்தின் பின் சற்று சமனப்பட்டும், விடியற்காலை 5 மணிக்கும் பகல் 11 மணிக்கும் அதிகமாகவும்இருத்தல், வயிற்றில் ஏராளகாற்றுஉற்பத்தி, பித்த வாயு உபாதி, எப்போதும் ஏப்பம் விட்டுக் கொண்டேயிருத்தல். எப்போதும் புளித்த வயிறு, கெட்டியாகவும் உப்பியுமிருத்தல். காற்று உப்புசம்.

**நேட்ரம் பாஸ் :** புளிப்பு, புளித்த ஏப்பம், புளித்த வாந்தி, இழுப்புகளுடன் கூடிய வயிற்று வலி.

**நேட்ரம் ஸல்ப் :** பித்த வாயு, புளிப்பு வயிற்றிலிருந்து அடிக்கடி புளித்த நீர் தொண்டைக்கு வருதல், வயிற்று வலியும் வாந்தியும், குமட்டல், வயிற்றில் அடிப்பதுபோன்ற வலி, வயிறு நிறைந்து மார்பில் முட்டுவதுபோன்ற உணர்ச்சி, அதனுல் சுவாசிக்க சிரமம், இடுப்பில் துணியையிறுக்கிக் கட்டஇயலாமை, சரீரத்தில் பித்த நீர் அளவுக்கு மிஞ்சி உற்பத்தியாகியிருத்தல், பித்தக் க்ற்களால் வலி.

**நைக்டாந்தஸ் :** எரிச்சல், குளிர்ந்த ஒற்றிடத்தால் சமனம்,

**பல்ஸடில்லா:** (பசியிலும், வாந்தியிலும்பார்க்க) வயிறு உப்பியிருத்தல், உட்கொள்ளும் ஆகாரம் அதிக உப்புகரிப்பாகவும்

கசப்பாகவுமிருத்தல், பலஹீனமான ஜீரண சக்தி, கார வஸ்துக்கள். பிராந்தி, பீர் போன்றவைகளில் விருப்பம், கொழுப்பு பதார்த்தங்கள், பால் ரொட்டி போன்றவைகளில் வெறுப்பு. சாப்பிட்ட ஆகாரமும் வாசனையும் ருசியுமுள்ள ஏப்பங்கள், பசியுடனிருக்கும்போது வயிற்றில் நமநம என்று பிடுங்கும் வலி. ஆகாரத்தின் பின் பல மணி நேரம் வரை வயிற்றிலோ அல்லது அன்னக்குழாயிலோ பந்து மிதப்பதுபோன்ற உணர்ச்சி, ஆகாரம் உட்கொண்ட ஒரு மணி நேரத்தின் பின் வயிற்றில் வலி.

**பாப்டீஷியா:** வயிற்றில் சூன்ய உணர்ச்சி, பசியின்மை.

**பாரிடாகார்ப்:** சரீரமும் அவயவங்களுமிளைத்தல், ஆனால் வயிறு மாத்திரம் பருத்தல், பசி உண்டு ஆனால் சாப்பிடமுடிவதில்லை, எவ்வளவு தண்ணீர் குடித்தாலும் தாகமடங்காமை, ஜீரணக் கருவிகளின் பலஹீனம், ஆகாரம் உட்கொள்ளும்போது குமட்டல், ரொட்டி உண்டால் வயிற்றில் கல்போட்டது போலிருத்தல், குளிர்ந்த ஆகாரம் உட்கொண்ட சில மணி நேரங்களின் பின் புளித்த ஏப்பங்கள் வருதல், ஆகாரத்தின் பின் வயிற்றில் வலி காலையில் நீடித்திருக்கும், குமட்டல்.

**பாரிடா மூரியாடிகா:** வயிற்றில் சூன்ய உணர்ச்சி, அன்னப்பையில் எரிச்சல்.

**பாஸிலினம்:** வயிற்று வலி.

**பாஸ்பரஸ்:** (பசி, தாகம், விருப்பு வெறுப்பில் பார்க்க) அடிக்கடி புளிப்புடன் கூடிய ஏப்பங்கள், குமட்டலின்றியே உட்கொண்ட ஆகாரம் வாயில் வருதல், சில்லென்று குடித்த தண்ணீர் வயிற்றிலிருந்து சற்று சூடேற்றபட்டவுடன் வாந்தியெடுத்தல், ஆகாரம் வயிற்றில்போய் சேர்ந்தவுடன் வாந்தி, கைகளைக் கதகதப்பான தண்ணீரில் வைத்தால் உடனே வாந்தியெடுத்தல், சூடான அறைகளிலிருக்கும் போதும் வாந்தி வருதல், எப்போதும் குமட்டலிருந்து கொண்டேயிருத்தல், வயிற்றில் கனம், அமுக்கவுணர்ச்சி, எரிச்சல், பசி, மந்தம், அதிக தாகம், அன்னப்பையிலிருந்து கல்லீரல்வரை இழுப்பதுபோன்ற வலி, குடலில்

களகள என்ற சத்தம், கீழ்நோக்கிச் சென்று தன்னுணர்வின்றியே மலம் வெளியேறுதல், ரத்தங்கக்குதல், வயிற்றில் சூன்ய உணர்ச்சி, கத்தியால் கிழிப்பதுபோன்ற வலி, நெஞ்செரிவுடன் கூடிய இரைப்பை, ரணங்கள், கான்ஸர் என்னும் புற்றுநோயில் எரிச்சலுடன் காப்பிப்பொடியை கரைத்தது போன்ற வாந்தி, இரைப்பையில் ரணங்கள்.

**பிஸ்மத்**: வயிற்றில் எரிச்சல், கனம்.

**பெர்பெரீஸ் வல்கேரிஸ்**: பித்தப்பை பக்கத்தில் பிடிப்பு வலி, இது அமுக்கினால் அதிகமாவதுடன் அன்னப்பை வரையில் செல்லும், பித்தப்பை யழற்சி, இதனால் மலபந்தம், சரீரம் மஞ்சள் நிறமாகவிருத்தல், குண்டிக்காய்களில் வலி ஆரம்பித்து அங்கிருந்து கல்லீரல், மண்ணீரல், அன்னப்பை, அக்குள் முதலிய இடங்களுக்குச்செல்லுதல், பித்த நீர் உற்பத்தியைக் கட்டுப்படுத்தி, இது சம்பந்த வேலைகளைச் சரிவர செய்யவைக்கும்.

**பெர்ரம் மெடாலிகம்**: கொழுப்புள்ள ஆகாரங்களை உட்கொண்டால் கசப்பு ருசியுள்ள ஏப்பம் வருதல், எரிச்சலும் புளிப்பு நாற்றமுள்ள ஏப்பம் விட்டால் வயிற்றிலிருக்கும் எரிச்சல் சமனம், சாப்பிட்டபின் வயிற்றில் கனம், வலி சகிக்க முடியாத அதிகப் பசி அல்லது பசியேயின்மை.

**பெல்லடொன்னு**: வயிற்றில் அமுக்குவது, பிடுங்குவது, இழுப்பது, வெட்டுவது போன்ற வலிகள், அசைதல் நடத்தல் முதலிய அதிர்ச்சிகளால் வலிகள் அதிகரித்தல், முன்பக்கமாக வளைந்து கொடுப்பதால் வலி சற்று சமனமாதல், பித்தக் கற்களின் உபாதியாலேற்படும் வலிகள், வயிற்றை தொட முடியாமை, சற்று அசைந்தாலும் தாங்கமுடியாத வலி ஏற்படுதல்.

**போடோபில்லம்**: உஷ்ணம், புளிப்பு, உப்புசம், குமட்டல், வாந்தி குப்புறப்படுத்தால் சமனம், கல்லீரல் பாகத்தில் வலி, இரைச்சல் காற்று அங்குமிங்கும் செல்லுதல், நெஞ்செரிவு, வயிற்றுவலி.

**ப்ரையோனியா**: வயிற்றைக் கையால் அமுக்கினால் வலி, ஆகாரம் உட்கொண்டபின் வயிற்றில் ஒரு கல்லிருப்பது

போன்ற கன உணர்ச்சி, இருமும்போது வயிற்றில் வலி, கோடை உஷ்ணகாலங்களில் ஜீரணக் கோளாறுகள், வயிற்றில் வலி, இரைப்பை வலி.

ப்ரோமியம்: நாக்கிலிருந்து வயிறுவரை எரிச்சல், கல் போட்டது போல் கனம். வயிற்று வலி, ஆகாரம் உட்கொள்வதால் சமனம். வயிற்றில் காற்று உப்புசம்.

ப்ளம்பம் : பிதற்றல்களும், வயிற்று வலியும் மாறிமாறி வருதல். அன்னக் குழாய் இரைப்பையில் இறுக்க உணர்ச்சி, கனம், விண்ணென்றிருத்தல் வயிற்று வலி கெட்டியான ஆகாரங்களை உண்ண முடியாமை.

ப்ளாட்டினு : புளிப்பு. அதிக வாயு, அதிகப் பசி, பலஹீனம்.

மங்கானம் : பச்சைப் புண்ணுயிருத்தல், தாக வரட்சையின்மை, குளிர்ந்த ஆகாரங்களையுட்கொண்டால் உடனே வயிற்று வலி, நெஞ்செரிவு, வயிற்றிலிருந்து எரிச்சலாரம்பித்து மார்பு வரை செல்லுதல், பித்தக் கற்களால் ஏற்பட்ட வலி.

மூரக்ஸ் : வயிற்றில் சூன்ய உணர்ச்சி.

மெக்னீஷியா கார்ப் : பால் ஒத்துக் கொள்ளாமை, அதனுல் பித்தவாயு உபாதிகள் ஏற்படுதல், வயிற்று உப்புசம், உருளைக்கிழங்கு, முட்டைகோஸ் முதலியவை உட்கொண்டால் சரீரத்துக்கு ஒத்துக்கொள்ளாமை, உடனே வயிற்று உப்பிசம் ஏற்படுதல், நெஞ்செரிவு அன்னப்பையில் ரணமிருப்பதுபோலவும் இறுக்குவதுமான வலி, அமுக்குவதனுல் வலி அதிகமாதல், மலம்போகுமுன் வயிற்றில் வலி

மெக்னீஷியா பாஸ் : காற்று உப்புசத்துடன் வலி, ஒரு இடத்திலிருந்து நாலா பக்கங்களுக்கும் செல்லும் வலி, எவ்வளவு ஏப்பம் விட்டாலும் வலி சமனமாகாமை, சரீரத்தை இரண்டாக வளைப்பதாலும், உஷ்ண ஒற்றிடங்களாலும், தேய்ப்பதாலும், உபாதிகள் சமனமாதல்.

மெக்னீஷியா மூரியாடிகா : பாதங்கள். கால்கள், வயிறு வீங்குதல், கனமான ஆகாரத்தின் பின் வயிற்றில் புளிப்புத் தட்டுதல், பால் குடித்தால் அது ஜீரணமாகாமை.

**மெர்க்குரியஸ் கரோஸிவஸ்:** வயிற்றை அமுக்கினால் வலி.

**மெர்குரியஸ் ஸொலுபிலிஸ்:** வயிற்றை அமுக்கும் உணர்ச்சி, பால் இனிப்புப் பண்டங்களை பிரியமாக உண்டாலும் ஒத்துக்கொள்ளாமல் வயிற்றில் புளித்து உடனே வாந்தியெடுத்தல்.

**யூபடோரியம் பர்போலியேட்டம்:** ஆகாரம் உட்கொண்டால் அது வாந்தியெடுக்கும்வரை வயிற்றில் வலி.

**யூரேனியம் நைட்ரிகம்:** ஆகாரம் உட்கொண்டவுடன் வாந்தி, அன்னப்பை, டியூடனம், இவ்விடங்களில் ரணம், எரிச்சல், வலி, வயிற்றில் வாயு உப்பிசம், அதிகப்பசி, அதிக தாகம், குமட்டல், வாந்தி.

**யூஸ்டிலாகோ:** வயிற்றிலிருந்து துடை வழியாக முழங் காலுக்குப் பாயும் வலி.

**ரஸ்டாக்ஸ்:** வயிற்றில் கூரான ஆயுதத்தால் குத்துவதுபோன்ற வலி, நாடித் துடிப்புகள், ஐஸ்க்ரீம் அல்லது ஐஸ் தண்ணீர் குடித்தால் உடனே வயிற்றில் வலி ஏற்படல், ஆகாரம் உட்கொண்டவுடன் வயிற்றில் கனவுணர்ச்சி.

**ராபேனஸ்:** உப்புதல், காற்று கொள்ளுதல், பெரிய பானை போலாகி விடுதல், காற்று மேலேயோ கீழேயோ செல்லாமை, இங்குமங்கும் வயிற்றில் வீக்கம், வாயு சப்தமில்லாத வயிற்றுப் போக்கு, ஆபரேஷன் செய்தபின் வயிறு உப்பிசம், வலி.

**ரானங்குலஸ்:** பிடிப்பு வலி, அமுக்கினால் வலி, நெஞ்செரிதல்.

**ரிஸினஸ்:** இரைச்சல், காலரா. (மலத்தில் பார்க்க)

**ரியம்:** வயிற்றில் வெட்டும் வலி, மலம் கழித்தபின் வயிற்று வலி, அபானக் கடுப்பு, அசைவால் வயிற்று வலி சமனம், வயிற்றிலிருந்து காற்று மார்புவரையெழும்புவது போலிருத்தல், கடுமையான வெட்டும் வலி; சரீரத்தை யிரண்டாக மடித்துக்கொண்டிருந்தாலும் நிற்பதாலும் வலி அதிகம், போர்வையைவிட்டு கையையோ காலையோ வெளியேயெடுத்தால் உடனே வயிற்று வலி.

**ரூடா:** உப்புசம்.

**ருமக்ஸ் :** அன்னப் பையிலிருந்து மார்புக்குப் பாயும் வலி.

**ரோடோடெண்ட்ரன் :** காலையிலும் மாலையிலும் மேல் வயிற்றில் உப்புசம், மூச்சுத் திணறல், வயிற்றில் இரைச்சல், நாற்றமுள்ள ஏப்பம், ஏப்பம் விடுவதால் வயிற்று உபாதிகள் சமனம். சிறிதளவு ஆகாரம் உட்கொண்டாலும் வயிறு நிரம்பிவிடுதல், குளிர்ந்த தண்ணீர் வாந்தியெடுத்தல், வயிற்றில் இழுக்கும் வலிகள்.

**ரோபினு :** வயிற்றில் புளிப்பு, வலி, காரமான ஏப்பம், புளித்த வாந்தி, அன்னப்பை, தோள்பட்டை நடுவில் எரிச்சல்.

**ரோஹிடாக் :** மேல் வயிற்றில் இடது பாகத்திலும் அதேயிடத்தில் முதுகு பாகத்திலும் மார்பு வரையில் செல்லும் வலி, வலது பாகத்தில் இதேபோல் ஏற்படும் வலிகள், உண்டால் சமனப்படுதல். அடிக்கடி ஏப்பும், வாயு பரிதல்.

**லாக்கெஸிஸ் :** சாப்பிடும் ஆகாரங்கள் எல்லாம் புளிப்பாயிருப்பது போன்ற ருசி, அதிக தாக வரட்சை, அன்னப்பை வீங்கி தொட்டால் வலியுடனிருத்தல்.

**லாபிஸ் ஆல்பஸ் :** எரிச்சல் குத்துவலி.

**லாரோஸிராஸஸ் :** கசப்பு ஏப்பங்கள், குமட்டல், வாந்தி, விக்கல், பேசமுடியாமையும், வலியும். ஆகாரம் உண்டபின் வயிற்றில் எரிச்சல், சகிக்க முடியாத தாகம், ஆகாரத்தில் வெறுப்பு.

**லிதியம் கார்ப் :** அன்னப்பை கோளாறுகள்.

**லெப்டாண்டிரா :** பித்த நீர்ப்பையில் எரிச்சல், வலி, வயிறு முழுதும் வலி, பொருமல் சப்தங்கள்.

**லைகொபோடியம் :** கல்லீரல் கோளாறுகளுடன் சம்பந்தப்பட்ட வாயு உப்புசம், குடலுடன் கீழ்ப் பாகமும் உப்புதல், பசியெடுக்கும் ஆனால் சில வாய்கள் உண்டவுடன் வயிறு நிரம்பியதுபோலாகி உப்பிவிடுதல், அடிக்கடி பசியெடுக்கும்போது தலைவலி, சாப்பிட்டவுடன் மயக்கம், பலவீனம். புளித்த ஏப்பங்கள், எவ்வளவு ஏப்பங்கள் விட்டாலும் வயிற்று உப்புசம் சமனப்படாமை, வயிற்றில்

காற்று உப்புசத்தால் கடபுடா சத்தம், (கல்லீரலில் பார்க்க) வயிற்றில் காற்று கீழ்ப்பாகமாகச் செல்லுதல்.

**லோபிலியா இன்ப்ளேட்டா :** வயிற்றில் வாயுக்கோளாறு இருப்பதால் காசமூச்சுத் திணறல் (உணர்ச்சியில் பார்க்க) ஓக்காளம், வாந்தி, சில்லிட்ட வியர்வை. புகையிலை சுருட்டால் ஏற்பட்ட பித்த வாயு, காலை நேரங்களில் குமட்டல் அதிக சாராயம் குடித்ததாலேற்பட்ட ஜீரணக் கோளாறுகள். வயிற்றிலிருந்து வாயு மேலெழும்பி எங்கு பார்த்தாலும் முள் முள்ளாகக் குத்தும் உணர்சி.

**வலேரியானு :** ஏராள பசி, காலையில் அழுகிய முட்டை நாற்ற மடிக்கும் ஏப்பம். வயிற்றுப் புளிப்பு. நெஞ்செறிவு, அன்னப்பையில் ஏதோ இருப்பது போலவும், அது கிழித்துக்கொண்டு வெளியே வந்துவிடும் போலவுமுள்ள அமுக்க உணர்ச்சி, வலி வயிற்றிலிழுப்பு ஏற்படும்போது சுவாசம் தடைப்படுதல். வயிற்றிலிருந்து தொண்டைக்கு ஒரு பந்து ஏறுவது போன்ற உணர்ச்சி, ஆங்காங்கு திடீரென்று வெட்டியிழுக்கும் வலிகள். சங்காதோஷத்தில் ஏதோ சூடான வஸ்து வயிற்றின் மேலாகயேறுதல்.

**வெராட்ரம் விரைட் :** அன்னப்பையில் நன்கு வேலை செய்யும்.

**ஜட்ரோபா :** உப்புதல், களகளப்பு, உறுமுதல், தண்ணீர் குடித்தால் உபாதிகள் அதிகமாதல். (மலத்தில் பார்க்க.) ஓக்காளம், வாந்தி,

**ஜஸ்டீஷியா ஆடாதோடா :** உப்புசம், கல்லீரலில் வலி, உறுமல் அபான வாயு அடைபட்டிருத்தல்.

**ஜெல்ஸீமியம் :** வயிற்றில் சூன்ய உணர்ச்சி.

**ஸபீனு :** உப்பியிருத்தல், கடபுடா சத்தம், நொந்த உணர்ச்சி, கீழே அமுக்கும் வலி. பிரசவ வலியை ஒத்த வலிகள்.

**ஸரஸபரில்லா :** பசிமந்தம், புளித்த அல்லது கசப்புள்ள ஏப்பம். ரொட்டி தின்ருல் எரிச்சல்.

**ஸல்பர் :** பசி உண்டு ஆனல் மிகக்குறைவாக அடிக்கடி உண்ணுதல், எப்போதும் தாக வரட்சை, உண்பது

குறைவு, தண்ணீர் குடிப்பது அதிகம். இனிப்பு பண்டங் களில் பிரியம் ஆனுல் இனிப்பு பண்டங்களும் பாலும் ஒத்துக் கொள்ளாது, பால் குடித்தால் வாயில் புளிப்பு நாற்றமடித்தலும், புளித்த ஏப்பம் வருதலும் பிரதிதினம் காலை 11-மணிக்கு பசியுடன் மயக்கம் வருவது போலிருத் தல், இம்மாதிரி உணர்ச்சி பிரதி ஆகார வேளைக்கு ஒரு மணி நேரம் முந்தியேற்படுதல். ஆகாரத்தின் பின் வயிற்றில் கனம், வலி, புளித்த எப்பம். வேளாவேளை யில் சாப்பிடாவிட்டால் தலைவலி ஏற்படுதல். அத்துடன் சரீரம் பலஹீனமேற்பட்டு படுக்க நேரிடல்.

**ஸாங்குனேரியா :** வயற்றில் எரிச்சலுடன் குமட்டல், சூன்ய உணர்ச்சி.

**ஸாம்புகஸ் :** பிசையும் வலி, காற்று உப்புசம் வயறு கனத் துடன் மார்பில் இறுக்க உணர்ச்சி.

**ஸிகூடா விரோஸா :** ஆகாரம் உட்கொண்டவுடன் வயிற்றில் வலி. அன்னப்பை பாகத்தில் சூடு, துடிப்புகள், வீக்கம், அன்னப்பை ஒரு கை முஷ்டியைப்போல் சுருங்கிக் கொள்ளுதல், வயிற்றில் வீக்கத்துடன் காக்கை வலிப்பு வயற்றில் நாக்குப்பூச்சிகள்.

**ஸிங்கம் மெடாலிகம் :** நெஞ்செறிவு ஏப்பம் விடும்போது முள்ளந் தண்டில் இறுக்க உணர்ச்சி. ஆகாரம் உட்கொண்ட வுடன் வாந்தி, ரத்த வாந்தி.

**ஸிஞ்ஜிபர் :** கல்லிருக்கும் உணர்ச்சி, உப்புசம், ஆகாரம் ஜீரணமாக மிகவும் தாமதப்படுதல்.

**ஸிபிலினம் :** காற்று உப்பிசம், அன்னப்பை ரணம்.

**ஸிம்பைடம் :** அன்னப்பை, ட்யூடினத்தில் ரணங்கள்.

**ஸிலிகா :** வயிற்றிலிருந்து மூளைக்கு ஏதோ வேகமாகச் செல்வது போன்ற உணர்ச்சி, எரிச்சல், நாடித் துடிப்பு போன்ற துடிப்புகள். அமுக்க உணர்ச்சி உஷ்ண ஆகாரங் களில் வெறுப்பு அதிகப் பசி, சிலசமயங்களில் பசி யின்மை. அதிக தாக வரட்சை, சாப்பிட்ட பின் புளித்த

ஏப்பங்கள். அன்னப்பை பாகத்தில் அமுக்கினுல் வலி, சிசுக்களுக்குத் தாய்ப்பால் கூட ஒத்துக்கொள்ளாமல் குடித்தவுடன் வாந்தியெடுத்தல், வயிற்றுப் போக்கு ஏற்படுதல்.

**ஸினேபிஸ் நைக்ரா:** முன்புறம் வளைந்தால் வயிற்றுவலி, நிமிர்ந்து உட்கார்ந்தால் சமனம்,

**ஸிஸ்டஸ்:** அன்னப்பை சில்லென்றிருக்கும் உணர்ச்சி.

**ஸீகேல்:** (விருப்பு, வெறுப்பு, ஏப்பம், குமட்டல், வாந்தி, பசி, தாகமிவைகளில் பார்க்க.) அதிக பலவீனம் அமுக்கும் உணர்ச்சி, வயிற்றுத் தசைகள் முறுக்கப்படுதல்.

**ஸீனு:** வயிற்று கோளாறுகளால் ஏற்படும் வலிப்புகள், நாக்குப் பூச்சிகள்.

**ஸெபீயா:** வயிற்றில் சூன்ய உணர்ச்சி, இது ஆகாரம் உட்கொண்ட பின்னும் சமனப்படுவதில்லை. சிறு சிறு வறட்டிருமல் வயிற்றிலிருந்து ஆரம்பிப்பதுபோலிருத்தல். சாப்பிட்டவுடன் விக்கல், ஏப்பம், வயிற்றில் கல் போட்டது போன்ற கன உணர்ச்சி. நடு வயிற்றிலும் சுமார் நான்கு அங்குல அகலங்களுக்கு ஒரு பில்ட்டு போட்டாற்போல் வலி, புளிப்புடன் உப்புசம் அடிக்கடி பசி அல்லது பசியின்மை. உணவை நினைக்கும்போதே அன்னப்பையில் நாடித்துடிப்புகள்.

**ஸெனஸியோ:** புளித்த ஏப்பம், ஓக்காளம், தொப்புளைச் சுற்றிலும் வலி ஆரம்பித்து வயிறு முழுதும் பரவுதல்.

**ஸைக்ளமென்:** அன்னப்பை, வயிற்றுக் கோளாறுகள்,

**ஸோரினம்:** (பசியில் பார்க்க) அழுகிய முட்டை போன்ற நாற்றமுள்ள ஏப்பம். வயிற்றுப் புளிப்பு, புளித்த ஏப்பங்கள்.

**ஸ்டாபிஸாக்ரியா:** ஆகாரம் உட்கொண்ட பிறகும் பசியிருப்பது போன்ற உணர்ச்சி, வயிறு தொளதொளத்து தொங்குதல்.

**ஸ்டானம்:** அடித்துப்போட்டது போன்ற வலி, வலிகளுக்கு அசைவதனால் சமனம். ஆனால் அதிக பலவீனத்தால் நடக்க முடியாமை.

**ஸ்பாஞ்சியா:** வயிற்றைச் சுற்றி துணியை யிறுக்கிக் கட்ட முடியாமை, வயிற்றில் ரண உணர்ச்சி.

**ஸ்பைஜீலியா:** குடலில் நாக்குப் பூச்சிகள்.

**ஹமாமெலிஸ்:** நடுக்கும், துடிக்கும் உணர்ச்சி.

**ஹயாஸ்யாமஸ்:** நொந்திருப்பதால் தொட்டால் வலி. எரிச்சல். அழற்சி.

**ஹீபர் ஸல்பர்:** வயிற்றுப் புளிப்பு. ஏப்பங்கள், வயிற்றில் வலி, ஆகாரம் உட்கொண்டவுடன் வலி. உப்புசம்.

**ஹெல்லிபோரஸ்:** அதிக ஆவலுடன் குளிர்ந்த தண்ணீரை மடக் மடக்கென்று குடித்தல். குடிக்கப்படும் தண்ணீர் வயிற்றில் போய் விழுஞ்சத்தங் கேட்டல். ஆகாரங் கொடுக்கப்படும் ஸ்பூனைத் தன்னறிவின்றிக் கடித்தல்.

**ஹைட்ராஸ்டிஸ்:** வயிற்றினுள்ளே யிழுக்கும் உணர்ச்சியுடன் மலபந்தம், நொந்த உணர்ச்சி. சூன்ய உணர்ச்சி, நாடித் துடிப்புகள், ரணங்கள். புற்றுகள்.

**ஹைபெரிகம்:** கல் போட்டது போன்ற உணர்ச்சி.

# அடிவயிறு

**அகேரிகஸ்:** துர்நாற்றம், இறைதல், அபானவாயு சூடாக விருத்தல்.

**அகோனைட்:** சரீரத்தை இரண்டாக வளைத்தல். வயிற்று வலி, அமுக்கினாலும் வலது புறம் படுத்தாலும் உபாதி அதிகம். வீக்கம், அதிஉணர்ச்சி. தொட்டால் சுடுதல், குடல் இறக்கம், ஒட்டிக்கொள்ளும் வியர்வை.

**அக்டியா ரஸிமோஸா:** அடிக்கடி வலி, உடலை யிரண்டாக மடித்துக் கொள்ளல், மலம் போன பின் அதிக வலி,

பொருமல், நிறைதல், குடலிரைச்சல் வதைக்கும் வலி, (கால்களின் கீழேயும் வலி.)

**அக்னஸ் காஸ்டஸ் :** அழுக்கினால் உணர்ச்சி, தூக்கத்தில் கடபுட என்று இறைதல், அபான வாயு உள்ளே அதிக மாக இருப்பது போலிருத்தல், உப்புசம் அதிகமாகிக் கொண்டேயிருத்தல், குடல் கீழ விழுந்துவிடும் போலிருத் தல், இதற்காக வயிற்றைத் தாங்கிக் கொள்ளல்.

**அபிஸ் கனடன்ஸிஸ் :** குடையும் சத்தம்.

**அபிஸ் நைக்ரா :** சரீரத் தளர்ச்சியால் அடிவயிற்றின் இடது புறத்தில் உருண்டையாக; அல்லது வெந்த முட்டை இருப்பது போன்ற உணர்ச்சி.

**அபிஸ் மெல்லிபிகா :** பருத்தல், விலாவெலும்பின் கீழ் வலி, இறுக்கம் மேலே செல்லும் வலி, அமுக்கினாலும் தும்மினா லும் வலி இருமினால் அடிவயிறு வெடித்து விடும்போன்ற பயம், நீர்சுரப்பு, குடலில் எரிச்சல், கொட்டும் வலி, குடலைச் சுற்றி பூந்தசை வளர்ச்சி, உள் அவயவ அழற்சி, வலதுபுறமிருந்து இடதுபுறம் செல்லும் வலி.

**அப்ரோடேனம் :** கடினமான உருண்டைகள் பல பாகங்களிலுந் தோன்றுதல், பலவீனம், மூலத்தாலேற்படும் வயிற்று வலி, வீக்கம், குடல் அமுங்கும் உணர்ச்சி.

**அமோனியா கார்ப் :** தூங்கி யெழுந்ததும் வலி. வீக்கம், சமனம். தொப்புளின் மேலிடதுபுறம் கனம், இடதுபுறம் படுக்க முடியாமை.

**அமோனியம் மூரியாடிகம் :** வலி துருத்தியிருத்தல், தொப்பூழைச் சுற்றி கசக்கும் வலி.

**அம்ப்ரா க்ரீஸியா :** நடு இரவில் இரைச்சல், வெட்டும் வலி, அடிவயிறு தொங்குதல். தண்ணீர் குடித்த பின்னும் சாப்பிட்ட பின்னும் அபானவாயு பரிதல், சில்லிட்ட உணர்ச்சி.

**அரேனியா டயாடிமா :** வலி, தண்ணீர் போன்ற மலம்.

**அர்ஜண்டம் நைட்ரிகம்:** அதிகமாக வெளித் துறுத்தியிருத்தல். கடபுடா சத்தம், பொருமல், ஆடையணிய சகிக்காமை.

**அர்ஜண்டம் மெடாலிகம்:** துறுத்துதல், குடைதல், பசி, வலித்தல்.

**அலுமினு:** வர்ண வேலை செய்பவர்களின் அடி வயிற்று வலி, உப்புசம் அல்லது காலையில் வலி, குனிந்து உட்கார்ந்தால் வலி அதிகம், பிற்பகலில் நடக்கும் போது அடிவயிறு ஒரு மூட்டைபோல் கீழே தொங்குதல்.

**அஸ்குலஸ் ஹீபோ:** நிறைந்தும் துடித்துக் கொண்டும் வலியுடனுமிருத்தல். எரிச்சல், ரணம், தொப்புளில் வலி, கடபுடா சத்தம், தொப்புளின் பக்கங்களில் வெட்டும் வலி, குடல்களில் பொருமல், வெட்டும் வலி.

**அனகார்டியம் ஓரியண்டேல்:** தொப்புளை சுற்றி வலி, குடலில் முளையைத் திணிப்பதுபோன்ற வலி.

**ஆண்டிமோனியம் க்ருடம்:** பித்தப்பை அழற்சியடைந்தும் கடினமாகவுமிருத்தல். பித்தக் கற்களாலேற்படும் வலி, அடி வயிறு துறுத்துதல், எரிச்சல், அபானவாயு உள்ளடக்கப்படுதல், குடைதல், இடது துடையிடுக்குக் கோளங்கள் கடினமாகவும் வலியுடனுமிருத்தல்.

**ஆண்டிமோனியம் டார்டாரிகம்:** நிறைய கற்களிருக்கும் உணர்ச்சி, கனம், வலி, வெட்டும் வலி, தொப்புளைச் சுற்றி வலி, உப்புசம். வலது அறைப் பூட்டில் எரிச்சலுடன் ரண வலி, அங்குமிங்கும் குடைதல், அடி வயிற்றில் இறுக்கும், அமுக்கும் உணர்ச்சி. சாப்பிட்டால் சிறிது நேரம் சமனப்படுதல்.

**ஆரம் ட்ரிபில்லம்:** குடைதல்.

**ஆரம் மூரியாடிகம்:** குடைதல், துறுத்துதல், உப்புசம், வலி, மலங்கழிக்கும்போது அதிகம். சிறுகுடலில் வலி.

**ஆரம் மூரி நேட்ரம்:** குளிர்ந்த உணர்ச்சி.

**ஆரம் மெடாலிகம்:** வலி, அடிக்கடி அபானவாயு பரிதல், மிகுந்த ஏக்கம். அடிவயிறு அடிக்கடி சுருங்குதல். பனிக்

கட்டிபோல் சில்லிட்ட கைகால்களுடன் அடி வயிற்றில் கனம். அடி வயிற்றின் அவயவக் கோளாறுகளால் அடி வயிறும் பொதுவாகச் சரீரம் முழுவதுமே நீர் வீக்கம்.

**ஆர்ஸனிகம் ஆல்பம்:** அடிவயிறு துறுத்தியிருத்தல், கடுமையான எரிச்சல், அறைப்பூட்டிலிருக்கும் கோளங்களில் வீக்கம்.

**ஆர்னிகா மோண்டானு:** உபாங்க நோய். (அப்பெண்டி ஸிடிஸ்) கடினமான வீக்கம். வலது மார்பெலும்புக் கூட்டுக்கு சற்றுக் கீழாக பிடிப்பு வலி, எழுந்து நிற்கும் போது சுவாசம் தடைபடல்.

**ஆலோ ஸொகோட்ரினு:** மந்தமான வலி, நிற்கும்போது அதிகம். முன்னே குனியும்போது சமனம். அடிவயிறு துறுத்துதல், அதிகமாகக்குடைதல், சத்தத்துடனிருத்தல், அபான வாயு அங்குமிங்குமசைவதால் அடிவயிறு வெடித்துவிடும் போலிருத்தல், சாப்பிட்ட பின்னும் மாதவிடாயின் போதும் அதிகரித்தல். அடிவயிற்றில் சத்தம் பக்கத்திலிருப்பவர்கட்கும் கேட்கும்.

**ஆஸிட் அஸடிக்:** வலி, கடபுடா சத்தம், வயிற்றுப் போக்கு, அடி வயிற்றில் நீர் சுரப்பு, மலபந்தமும் அடி வயிற்றில் காற்று புகுந்து இருப்பதால் நீர் வீக்கமும், முதுகு வலியை சமனப்படுத்த அடிவயிற்றை கீழே வைத்துப் படுத்தல்.

**ஆஸிட் ஆக்ஸாலிக்:** பிடிப்பு வலி, அபான வாயு சிரமத்துடன் வெளியாதல், அதைப்பற்றி நினைப்பதிலும் வலி அதிகமாதல், இளைப்பாறும்போது சமனம். சர்க்கரை தின்பதாலேற்படும் வயிற்றுவலி, அடிவயிற்றில் சிலவிடங்களில் வலி.

**ஆஸிட் நைட்ரிக்:** வலி உப்புசம், காலையிலும் மாலையிலும் உறுமல் சத்தம், கிள்ளுவது வெட்டுவதுபோல் வலி, நடக்கும் போது வயிற்றில் வலி, முன்புறம் குனிந்து கொண்டே நடந்தால் சமனம். எப்போதும் வலது பக்கத்து அடி வயிற்றில் வலியிருந்துகொண்டேயிருத்தல்.

**ஆஸிட் பாஸ்பாரிக் :** இரைச்சல், உறுமுதல், உப்பியிருத்தல்.

**ஆஸிட் பென்ஸாயிக் :** தொப்புளைச் சுற்றி வெட்டும் வலி, கல்லீரல் மலப்பையில் பிடிப்புவலி, இறுக்க உணர்ச்சி.

**ஆஸிட் ப்ளூவாரிக் :** இரண்டு மூன்று நாட்களுக்கு வயிற்றில் காற்று உப்புசம் ஏப்பம், அபானவாயு பிரிந்தால் சமனம்.

**ஆஸிட் மூரியாடிகம் :** அடிவயிறு உப்பி வீங்கி வலியுடனிருத்தல்.

**ஆஸிட் ஸல்ப்யூரிக் :** பலவீன உணர்ச்சி. இடுப்பில் இழுக்கும் உணர்ச்சி. குடலிறக்கம் ஏற்படும் போன்ற நிலைமை, முக்கியமாக இடதுபக்கக் குடலிறக்கம்.

**இக்னேஷியா :** அடிவயிற்றிலிருந்து தொண்டைக்குப் பந்து போன்ற வஸ்து செல்லுமுணர்ச்சியுடன் சங்காதோஷம்,

**ஐயோடியம் :** (கல்லீரல் பார்க்க.) அடிவயிறு துறுத்தி வீங்கியிருத்தல். சாப்பிட்டவுடன் வலிகள் திரும்பி வருதல்.

**ஐரிஸ் வர்ஸிகோலர் :** வெட்டும் வலி சரீரத்தை யிரண்டாக மடித்தால் சமனம்.

**ஓபியம் :** மண்ணீரல் பெருக்கம், வீக்கம், வெளித் துருத்துதல். இறுக்கிப்பிசையும் வலிகள். கெண்டையேறுதல். அடிவயிற்றில் வாயுவால் ஏற்பட்ட வீக்கம்.

**கந்தாரிஸ் :** எரிச்சல். துறுத்தியிருத்தல். வலி, மலங்கழிக்கும் போது வெட்டும் வலி.

**கம்போசியா :** உண்டதும் வலி, கிள்ளுவது போன்ற வலி, குடைதல், கடகடவென்று அடிவயிற்றில் ஓடுதல், தொப்புளில் வலி.

**கல்கேரியா ஐயோடைட் :** க்ஷயரோகிகளின் குடலழற்சி, காலராவினால் ஏற்பட்ட குடலழற்சி, அடிவயிறு வெளித் துறுத்துதல்.

**கல்கேரியா கார்பானிகா :** கடினம் துறுத்தியிருத்தல், பித்தக் கற்கள் வெளியாகும்போது ஏற்படும் வலியை இவ் வௌஷதம் நீக்கும், குழந்தைகளின் மணிக்குடல் கோளங்கள் கடினமாக வீங்கியிருத்தல், தடைப்பட்ட

உப்புசம், அடிவயிற்றின் வலப்பாகத்தில் உப்புசம் களகளப்பு சத்தம், ஆடைகளை இறுகக் கட்டமுடியாமை, பித்தக் கற்களால் ஏற்படும் வலி, அடிவயிறு பானை போலிருத்தல்.

**கல்கேரியா பாஸ் :** உட்சென்றும் தொள தொளவென்றும் இருக்கும் பொருமல் சாப்பிட்டவுடன் வலி,

**கல்கேரியா ப்ளோரிகா :** அடிவயிறு பொருமியிருத்தல்,

**கன்னபிஸ் இண்டிகா :** இரவில் குடல்களில் கடபுடா சத்தம். ஏப்பம் விடுவதால் சமனம். அடிவயிறு வீங்கியது போன்ற தோற்றம்.

**காக்குலஸ் :** நடக்கும்போது அடிவயிற்றில் கூரிய கற்களைக் கொண்டு தேய்ப்பதுபோன்ற உணர்ச்சி, துறுத்தியிருத்தல், குடையும் சத்தம், நள்ளிரவில் பொருமலுடன் வலி. அபான வாயு பரிவதால் யாதொரு நன்மையுமின்மை. இருமுவதாலதிகரித்தல். அரைப் பூட்டு சம்பந்த குடற் பிதுக்கநோய். அரைப் பூட்டில் ஏதோ அடைத்து வைத்திருக்கும் உணர்ச்சியும் அவை வெளியில் வந்து விடும்போலுமிருத்தல். பிடிவாத குணமுள்ள மலச் சிக்கலுடன் கூடிய தொப்புள் சம்பந்த குடற் பிதுக்கத்தில் நக்ஸ்வாமிகா கொடுக்கப்பட்டும் பயனேற்படாவிடில் இவ் வௌஷதம் கொடுக்கப்படலாம். ஒரே பக்கமாகப் படுப்பதால் சௌகர்யம். உப்புசம் வலி முதலியவைகளுள்ள குடற் பிதுக்கம்.

**காப்ஸிகம் :** அடிவயிறு வெடித்துப் போகுமென்று நினைக்குமளவு பருத்து விடுதல், வலி மார்பு வரை பரவுதல்.

**காமோமில்லா :** பெரிதாகுதல், தொப்புளுக்கருகே பிசையும் வலி, கீழ் முதுகில் வலி, கோபமேற்பட்டபின் கன்னங்கள் சிவத்தல், சூடான வியர்வை அடிக்கடி வலி, காணுதல், பித்த வலி.

**காம்போரா :** ஜலதோஷத்தால் அடி வயிற்றில் சில்லிப்பு, வெட்டும் வலி, சூடு, எரிச்சல்.

**கார்பன் ஸல்ப்:** இறுக்குதல், வயிற்றுப்போக்கேற்படும்போல் தோன்றுதல். குடைதல், அபான வாயு அதிகரிப்பதுபோல் அங்குமிங்கும் சென்று கொண்டிருக்கும், வீக்கம், வலி.

**கார்போ அனிமாலிஸ்:** துறுத்தியிருத்தல் கடின கொப்புளங்கள், நாற்றமுள்ள பதார்த்தங்கள் வெளியாதல்.

**கார்போ வெஜ்:** பலமான இரைச்சல் அதிக நாற்றமுள்ள அபான வாயு, வண்டி சவாரி செய்தால் வலி குடலிலேற் படும் மூல சம்பந்த உபாதிகள். உண்டபின் அதிகமாகப் பருத்தல். அபான வாயு வெளியாவதால் சமனம். ஆடையுடுத்த முடியாமை.

**காலின்ஸோனியா:** அடிப்பாகத்தில் வலி.

**காலீ கார்ப்:** (கல்லீரலில் பார்க்க.) அடி வயிறு துறுத்தியும் சில்லென்றுமிருத்தல். எழுந்திருக்க நேரும்போது வலது புறம் திருப்பிக்கொள்ள நேருதல்.

**காலீ க்ளோரிகம்:** உப்புசம்.

**காலீ பாஸ்:** அடி வயிற்றில் வீக்கம் மயக்கமடைதல்

**காலீ பைக்ரோ:** சாப்பிட்டவுடன் அடி வயிற்றில் வெட்டும் வலி, குடலில் நீடித்த குழிப் புண்கள், வலியுடன் அடி வயிறு சுருங்குதல்.

**காலீ ப்ரோமேடம்:** குடல் வெளியே தள்ளப்படும் உணர்ச்சி, தசைகள் முறுக்குதல், குதித்தல், அடி வயிற்றினுள்ளே சில்லிப்பு, அடி வயிறு உள்ளுக்கிழுக்கப்படுதல்.

**காலீ மூரியாடிகம்:** வீக்கம், வலி, உப்புசம்.

**காலீ ஸல்ப்:** தொட்டால் சில்லென்றிருத்தல், பிசையும் வலி.

**காலோஸிந்திஸ்:** அதிக வேதனை தரும் கடுமையான வெட்டும் வலி. அடி வயிற்றை அமுக்கிக்கொண்டும் உடம்பை இரண்டாக மடித்துக்கொண்டுமிருத்தல். கற்களைச் சேர்த்து அரைப்பது போலவும், வெடிப்பது போன்றும் உணர்ச்சி, குடல்களில் காயம்பட்டதுபோல் வலி. கோபத்தின் பின் இக்குறிகள் உண்டாதல், பிரதி தடவை

ஆகாரம், பானம் உட்கொண்ட பின்னும் வயிற்றுக் கடுப்புப்போல் மலம் வெளியாதல், பாகுபோன்ற மலம்.

**குப்ரம் மெடாலிகம் :** விரைப்பு, சூடு, தொட்டால் வலி உட் சுருங்கியிருத்தல், பச்சை நரம்புகளில் வலி, கடுமையாக விட்டு விட்டு வரும் வலி, குடல்கள் முறுக்கிக்கொள்ளும் வலிகள்.

**குர்ச்சி :** அடி வயிற்று உபாதிகள்.

**கோல்சிகம் :** பொருமல், பெரிதாகவிருத்தல், அமுக்கும் உணர்ச்சி, பிடிப்பு வலி வலிகள். வயிற்றுக்குச் சொல்லப்பட்ட மாதிரியாகவே அதிகமாகியும் சமன மாகியும் இருக்கும்.

**கோனியம் :** கல்லீரலிலும் அதன் சுற்றுப்புறங்களிலும் கடுமையான வலி. நீடித்த மஞ்சட்காமாலே, வலது பக்கத் தில் வலி. வெட்டும் வலி, வீக்கம் இறுகக் கட்டிய உணர்ச்சி.

**க்ராபைடிஸ் :** அடி வயிற்றில் குமட்டல் உண்டாகும் உணர்ச்சி உள்ளமுக்கப்பட்ட பொருமலால் அடி வயிற்றில் நிறைந்த கடின உணர்ச்சி, ஆடையைத் தளர்த்திவிட நேருதல். நாற்றமுள்ள அபான வாயு.

**க்ரோகஸ் ஸடீவா :** ஏதோ குதிப்பது போன்ற உணர்ச்சி.

**க்ரோடன் டிக்லியம் :** அடி வயிறு நிறைந்தும் வெளித் துறுத்தியுமிருத்தல். தொப்புளைச் சுற்றி வலி, இடது பக்கத்தில் குடைதல், களகளப்பு சத்தம்.

**க்வாய்கம் :** பொருமல், வலி, வயிற்றிலும் அடி வயிற்றிலும் எரிச்சல்.

**களமேடிஸ் எரெக்டா :** குதிக்கும் வலி, அசைவாலதிகமாதல்.

**செலிடோனியம் :** தொப்புள் பாகத்தில் வலி, வயிறு உப்பி வேதனையுடனிருத்தல், கடபுடா சத்தம் வெட்டும் வலி, வயிற்றை ஒரு கயிற்றால் கட்டியிருக்கும் உணர்ச்சி

**சைனு :** அதிக வாயு உப்புசத்தால் வலி, சரீரத்தை இரண்டாக மடிப்பதால் சமனம். வயிறு பெரிய பந்து போலிருத்தல்.

டபாகம்: இரைச்சல், திடீர் திடீரென்று வயிற்றுவலி, எரிச்சல், அலறுதல், குடல் முறுக்குதல், இறங்குதல்.

டயஸ் கோரியா: வயிற்றுவலி, திடீரென்று கைகால், முதுகு, மார்புக்கும் பாய்தல். அதிக அபான வாயுவுடன் வயிற்றில் இரைச்சல் வயிற்றில் பிசைவதுபோலவும், வெட்டுவது போலவும் வலி, முன்புறம் வளைந்தாலும் படுத்திருந்தாலும், வயிற்றுவலி அதிகமாகுதல். (கல்லீரலில் பார்க்க.)

டல்கமாரா: குளிரினுலேற்படும் வயிற்றுவலி, தொப்புளைச் சுற்றிலும் வலி, துடையிடுக்குகளிலிருக்கும் கோளங்களில் வீக்கம்.

டிஜிடாலிஸ்: வெட்டும் வலி, கல்லீரல் கெட்டியாகவும் வலியுடனுமிருத்தல்.

ட்யூபர்குலீனம்: அரையிடுக்கின் கோளங்கள் பெருத்தல், வயிறு பெருத்தல்.

தராக்ஸகம்: கல்லீரல் பெருத்து கரடு தட்டியிருத்தல், இடது பக்கத்தில் பிடிப்பு வலி, குடலில் நீர் கொப்புளங்கள் உடைவது போன்ற உணர்ச்சி. வயிற்று உப்புசம்.

தூஜா: வாயு உப்புசம், கழலைக் கட்டிகள் இருப்பது போன்ற உப்புசம், வயிற்றில் ஏதோ வஸ்து இருப்பது போன்ற உணர்ச்சி.

தெரிபிந்த்: அடிவயிறு முழுவதும் உஷ்ணமாகவும் வீங்கியும் வலியுடனுமிருத்தல். நீர்த்துவாரத்தில் எரிச்சல்.

நக்ஸ் மாஸ்சாடா: கடபுடா சப்தம். ஆகாரத்தின் பின் ஏராளமாக உப்பி விடுதல். மேல் பாகத்தில் கனம், தொப்புளிலும் அடி வயிற்றிலும் வெட்டுவது கிள்ளுவது போன்ற வலி. மலம் கழியும்போதும் கழிந்த பின்னும், மயக்கம் வருதல்.

நக்ஸ் வாமிகா: வயிற்று வலியால் சரீரத்தை மடித்தல். அமுக்குவதால் வலி அதிகமாதல் ஆகாரத்தின் பின் வாயு உப்புசம், வயிற்றினுள் மேலும் கீழும் அமுக்கப் படுதல், அதனுல் அடிக்கடி மலமும் மூத்திரம் விட

20

வேண்டி வருதல், வயிற்றுப்போக்குக்கு முன் தாங்க முடியாத வயிற்றுவலி, மலபந்தத்தால் ஏற்படும் குடலிறக்கம் கசப்பான வாந்தியுடனும், காற்று உப்புசத்துடனும் கூடிய குடலிறக்கம்.

**நேட்ரம் ஆர்ஸனிகம் :** உப்பிசம், கல்லீரலும் மண்ணீரலும் பெருத்தல், மலம் கழிவதற்கு முன்னும், வாயுவினுலும் வயிற்றுவலி.

**நேட்ரம் கார்பானிகம் :** கனமான உப்பி வலியுடனியிருத்தல், கல்லீரலிலும் மண்ணீரலிலும், பிடிப்பு வலிகள். புளித்த ஏப்பத்துடன் நெஞ்செரிவு.

**நேட்ரம் மூரியாடிகம் :** வீங்கியிருத்தல். கடபுடா சப்தம், சிறைப்படுத்தப்பட்ட அபான வாயு, மலேரியா சுரத்தின் பின்னேற்படும் நீரதைப்பு, எரிச்சலுடன் வலி.

**நேட்ரம் ஸல்ப் :** காற்று உப்பிசம், கடபுடா சப்தத்துடன் இங்கு மங்கும் புரளுதல், வலது பக்கத்து குடலில் காற்று அடைபட்டுப்போதல், அதனுல் வலி. வலது பக்கத்தில் குடலழற்சி, அப்பெண்டிஸிடிஸ் என்னும் உபாங்க அழற்சி, ஆரம்பத்தில் கொடுத்தால் நிச்சயமாக நிவர்த்தி செய்யும். வயிற்றின் வலது பக்கத்தில் ஈட்டியால் குத்துவது போன்ற வலி, தாங்கமுடியாத உப்புசம் முதலியவைகளுடன் வாந்தியெடுக்க வருதல், மாலே 4 மணி முதல் எட்டு மணி வரை அதிகம். ஆகாரம் உட்கொண்டவுடன் வயிறு உப்புதல்.

**பல்ஸடில்லா :** உறுமுதல், கடைதல், போன்ற சப்தங்கள் வாயு உப்புசத்துடன் வலி, மாதவிடாய்க் கோளாறுகளால் வலி, உப்பிசம், குளிரால் வலியும் பனிக்கட்டி பழங்கள் முதலியவை உட்கொண்டால் வயிற்றுப்போக்கும் உண்டாதல், அடி மார்பிலும் வயிற்றிலும் வலி, வெளிக்கு வருவது போலிருத்தல். மாதவிடாய் ஆரம்பித்து விடுமோ என்று நினேக்கும் வண்ணம் வயிற்றில் வெட்டும். குத்தும் வலி. வயிற்றிலும் இடுப்பிலும் கல்லிருப்பது போன்ற கனம்.

**பாப்டீஷியா :** உறுமுதல், உப்புசம், வலது அடிவயிற்றில் நொந்தவலி.

**பாரிடா கார்ப்:** கடினமாகவும், உப்பியுமிருத்தல், பானை போன்ற வயிறு, குழந்தைகளுக்குக் கைகால்களெல்லாம் இளைத்து வயிறு மட்டும் பெருத்திருத்தல்.

**பாரிடா மூரியாடிகா:** வலி எரிச்சல் பிசைவது போலிருத்தல், துடிப்பு, உப்புசம், கெட்டியான கல்லீரல்:

**பாஸ்பரஸ்:** ஏராளமான உப்பை உண்பதால் ஏற்பட்ட கோளாறுகள் எப்போதும் கடபுடா சத்தமிருந்து கொண்டேயிருத்தல். அமுக்கினால் பொறுக்க முடியாத வலி, உள்ளே சூன்ய வுணர்ச்சி, சில்லென்றிருத்தல், குத்துவலி மஞ்சட்காமாலை (கல்லீரலில் பார்க்க.)

**பிஸ்மத்:** அடி வயிற்றில் கிள்ளும் வலி, கடபுடா சப்தம்.

**பெர்ரம் மெடாலிகம்:** உப்பியுங் கெட்டியாகவுமிருத்தல், இரவுகளில் காற்று உப்புசத்தால் வலி. உறுமல்கள் கல்லீரல், மண்ணீரல் பருத்து வலியுடனிருத்தல்.

**பெல்லடோன்னா:** உப்புசம், தொட்டால் வலி, வயிற்றினுள்ளிருந்து ஏதோ கெட்டியான வஸ்து வெளியே அமுக்குவது போன்ற வலி, அதிக சப்தத்துடன்கூடிய இரைச்சல், கிள்ளுவது போன்ற வலிகள்.

**பைரோஜினியம்:** மலங்கழியும்போதும் நீர் பிரியும்போதும், தாங்க முடியாத கடுப்பு. உப்பியிருத்தல், கடபுடா சப்தம்.

**ப்ரையோனியா:** கல்லீரல் பாகங்கள் வீங்கி வலியுடனிருத்தல் எரிச்சலுடன் கூடிய வலி, தொடுவதினாலும், இருமுவதினாலும், சுவாசிப்பதினாலும், வலியதிகமாதல். வயிற்றின் சுவர்களெல்லாம் நொந்திருத்தல்.

**ப்ளம்பம்:** அதிக வயிற்றுவலி, சரீரத்திலெல்லா பாகங்கட்கும் செல்லுதல், வயிற்றின் சுவர்களைக் கயிற்றினால் முதுகுப் புறமிழுப்பது போலிருத்தல், வயிறு உள்ளுக்கிழுக்கப் பட்டிருப்பது போலிருத்தல்.

**ப்ளாட்டினா:** தொப்புளைச் சுற்றி வலி, இவ்வலி முதுகு வரை செல்லுதல், வயிற்றிலிருந்து கீழ்ப்பக்கமாக அமுக்கும் உணர்ச்சியுடன் வலி.

**மங்கானம்:** பிசைதல், உறுமுதல், உப்பியிருத்தல், மழைக் காலங்களில் அதிகரித்தல்.

**மூரக்ஸ்:** வயிற்றில் சூன்ய உணர்ச்சி. அடிவயிற்று உறுப்புகளெல்லாம் அமுக்கப்பட்டு வெளியே தள்ளப்படுவது போன்ற வுணர்ச்சி, இதனுல் எப்போதும் காலின்மேல் காலைப்போட்டு அமுக்கிக் கொள்ளுதல்.

**மெக்னீஷியா கார்ப்:** வயிற்றுவலி, பச்சை நிறமுள்ள மலப் போக்கினுலும் வெள்ளைப்பாட்டுப் போக்கினுலும் நிவர்த்தியாதல், வயிற்று உப்புசத்துடன் வலி, சரீரத்தை இரண்டாக மடிப்பதனுல் சமனம், வயிற்றில் கடபுடா சப்தம், அத்துடன் பிசைவது போன்ற வலியேற்பட்டுப் பச்சை நிறமான வயிற்றுப் போக்குடன் நிற்கும். குடலிறக்கம்.

**மெக்னீஷியா மூரியாடிகா:** இழுப்பது, கிழிப்பதுபோலுள்ள வயிற்று வலிகள், மாலை நேரங்களில் அதிகமாகவிருத்தல், வயிறு விண்ணென்று உப்பி அடிபட்டதுபோல் நொந்திருத்தல், குடலில் ஆங்காங்கு காற்றடைபட்டிருத்தல், வலதுபுறம் படுக்க முடியாமை, வயிற்றை அமுக்கினுலும் வலி.

**மெர்க்குரியஸ் சொலுபுலிஸ்;** கெட்டியாகவும் விண்ணென்று மிருத்தல், அமுக்கினுல் வலி.

**யூபடோரியம் பர்போலியேடம்:** விண்ணென்று உப்பியிருத்தல்.

**ரஸ்டாக்ஸ்:** எந்தப் பக்கத்தைக் கீழே வைத்துப் படுத்தாலும் அது நொந்திருப்பது போன்ற உணர்ச்சி, திரும்பிப் படுக்கும்போது அதிக வலி, முதன் முதலில் அசைய ஆரம்பிக்கும்போது வலி, தொட்டாலும் அமுக்கினுலும், துணி மேலே பட்டாலும் வலி, ஆகாரம் உட்கொண்டவுடன் வயிறு உப்பி விடுதல், வயிற்று வலி, இது சரீரத்தை இரண்டாகமடிப்பதனுலும் மல்லார்ந்துபடுத்துக் கால்களை மடக்கி வைத்துக் கொள்வதனுலும் சமனம், வயிற்றிலும் துடையிடுக்கிலுமிருக்கும் கோளங்கள் பருத்திருத்தல்.

**ரானங்குலஸ்:** வெட்டும் வலி, அமுக்கினுல் நொந்தவலி, காற்று உப்புசம், எரிச்சல்.

**ரோடொடெண்ட்ரன்:** இரைச்சல், நாற்றமுள்ள ஏப்பம், தொப்புளின் அடியில் குடலில் வலிகள்.

**லாக்களிஸ்:** வயிறு கெட்டியாக உப்பி காற்றுக்கொண்டு வலியுடனிருத்தல், துணியை வயிற்றில் கட்ட முடியாமை, வலது அடிவயிறும் இடது தொண்டையும் பாதிக்கப் பட்டிருத்தல். வயிறு சூடாகவும் தொட்டால் வலியுடனுமிருத்தல்.

**லாரோஸிராஸஸ்:** கடபுடா சப்தம், சில்லென்ற உணர்ச்சி. தொப்புளின் கீழே ஏதோ கனமிருப்பது போன்ற உணர்ச்சி, மாலை நேரங்களில் வயிற்றில் வலி. உப்பியிருத்தல்.

**லில்லியம் டிக்ரினம்:** கீழே அமுக்கும் உணர்ச்சி, அதனால் வயிற்றை தாங்கிக்கொள்ள வேண்டியிருத்தல், வயிற்றில் காற்று உப்பிசம், வயிற்றுப்போக்கு ஏற்பட்டுவிடும் போன்ற உணர்ச்சி, ஆனால் நீர் பிரிந்தால் இது சமனப் பட்டு விடுதல்.

**லைகோபோடியம்:** ஏதோ மேலும் கீழும்செல்வது போன்ற உணர்ச்சி, வலது பக்கத்தில் வலியாரம்பித்து நீர்ப்பை வரையில் சென்று அடிக்கடி நீர் பிரியவேண்டி வருதல், ஸ்திரீகளின் குடலிறக்கம்.

**வலேரியானு:** கல் போலுப்பியிருத்தல். வலி, நாக்குப்பூச்சி களாலேற்படும் கோளாறுகள்.

**வெராட்ரம் ஆல்பம்:** மலம் வெளியேறிய பின் வயிறு உள்ளே யிழுக்கப்படுதல். சூன்ய உணர்ச்சி, குடல் முறுக்கிக் கொள்ளுதல். சகிக்க முடியாத சங்கடம். இங்குமங்கும் ஓடுதல், சரீரத்தை வளைத்தல். வயிற்றையமுக்கிக்கொள்ளு தல், வயிற்றில் நெருப்பிருப்பது போல் எரிச்சல் வயிறு உப்பித் தொட்டால் வலியுடனிருத்தல். குடலில் பல முடிச்சுகளேற்பட்டு இறுக்குவது போன்ற வயிற்று வலி.

**ஸரஸபரில்லா:** பெரிய தொந்தி. கடபுடா சப்தம் சில் லென்ற உணர்ச்சியுடன் எரிச்சல். நொந்திருத்தல்.

**ஸல்பர்:** உப்புசம். முடிச்சுகளிருப்பது போன்ற உணர்ச்சி (உபாதி அதிகம் முன்புறம் குனிவதால்.) குடல் புரளும் உணர்ச்சி, இரைச்சல், குடலில் ஆங்காங்கு சிறைப்பட்ட

வாயு, மலபந்தம், தண்ணீர் குடித்தவுடனும், சாப்பிட்ட வுடனும் வயிற்றில் வலி.

**லிங்கம் மெட்டாலிகம் :** காற்று உப்புசம், வலி. கடபுடா சத்தம் (உபாதி அதிகம் மாலே, இரவுகளில்.)

**லிலிகா :** உஷ்ணம், கெட்டி, காற்று உப்புசம். வலி, மலபந்தம் மலம் வெளியேறும்போது வெட்டும் வலி, குடலில் அதிக இரைச்சல், துடையிடுக்குக் கோளங்களில் வீங்கிப்பருத் தல், உஷ்ணத்திஞல் எல்லா வலிகளும் சமனமடைதல், குழந்தைகளுக்கு வயிற்றுக் கோளாறுகளால் வயிறு பருத்திருத்தல், நாற்றமான அபான வாயு.

**லீகேல் கார்நூட்டம் :** கடும் அழற்சி, உப்புசம். தீ வைத்தது போலெரிச்சல், பல பாகங்களிலிருந்தும் ரத்தப் பெருக்கு. காற்று உறுமல், வலி, வயிறு முதுகில் சில்லிட்ட உணர்ச்சி, கீழே அமுக்கும் வலி, வெளிப்புறங்களில் சில்லிட்ட உணர்ச்சியும் உள்ளவயவங்களில் எரிச்சல் உணர்ச்சியும்.

**லீஞ :** விண்ணென்று உப்பியிருத்தல், பூச்சிகள் கடிப்பது போன்ற உணர்ச்சி, வயிற்றைக் கீழே வைத்துப் படுப்ப தால் சமனம்.

**ஸெபியா :** (கல்லீரலில் பார்க்க) வயிற்றில் ஏராள பழுப்பு நிறப் புள்ளிகள் தோன்றுதல். வயிற்று உறுப்புக்கள் தளர்ந்து தொங்கும் உணர்ச்சி, நடக்கும்போது கனமாக இருத்தல், உப்புசம். இரைச்சலுடன் தலேவலி.

**ஸெலீனியம் :** பெருத்திருத்தல்.

**ஸெனஸியோ :** தொப்பூழைச் சுற்றிலும் வலியாரம்பித்து வயிறு முழுவதும் பரவுதல், மலம் வெளியேறுவதால் சமனம்.

**ஸைக்ளமென் :** வலியுடன் உப்புசம், தொப்புளேச் சுற்றிலும் கிள்ளும் வலி, உப்பிசத்துடன் வலி, ஆகாரம் உட்கொண்டவுடன் இரைச்சலுடன் உப்புசம்.

**ஸ்டாபிஸாக்ரியா :** வீக்கம், வலி, அடிக்கடி மலம் கழிக்க அல்லது நீர் பிரியவேண்டும் போலிருத்தல்.

**ஸ்டானம் :** தொப்புளைச் சுற்றிலும் வெட்டும் வலி, கசப்பு ருசியுள்ள ஏப்பங்கள், பசியும் வயிற்றுப் போக்கும் வயிற்றையமுக்குவதனால் சமனம், வயிற்றில் ரணமிருப்பதுபோன்ற நொந்தவுணர்ச்சி.

**ஸ்பாஞ்ஜியா:** காலையிலும் மாலையிலும் உறுமுதல், அடிவயிற்று உறுப்புகள் மேல் பக்கமாக இழுக்கும் உணர்ச்சி.

**ஹமாமெலிஸ் :** அசுத்த ரத்தக் குழாய்கள் பருத்தல்.

**ஹயாஸ்யாமஸ் :** தொட்டால் வலி, வெடித்துவிடும் போன்ற உப்புசம்.

**ஹிபர் ஸல்பர் :** விண்ணென்று உப்பியிருத்தல், கடபுடா சப்தங்கள், துடையிடுக்கின் கோளங்கள் சீழ்ப்பிடித்தல்.

**ஹெல்லிபோரஸ் :** வயிறு நொந்திருத்தல், கடபுடா சப்தம். நீர் வீக்கம்.

**ஹைட்ராஸ்டிஸ் :** கல்லீரல் கோளாறுகள், மஞ்சட்காமாலை, பித்தக்கல் உபாதிகள்.

# ட்யூடனம்

**கார்டூஸ் மரியேனஸ் :** ட்யூடனத்தின் ஒரு பாகம் தடிப்பதாலும் கல்லீரலில் அதிக ரத்தம் சேருவதாலும், மேல் வயிற்றில் வலது பாகத்தில், நிறைந்த உணர்ச்சி.

**க்ராபைடிஸ் :** ட்யூடனத்தில் குழிப்புண் கள்.

**யூரேனியம் நைட்ரிகம் :** ட்யூடனத்தில் ரணங்கள்.

**ஸிம்பைடம் :** ட்யூடனத்தில் ரணங்கள்.

# குடல்

**அகோனைட் :** குடலழற்சி, குடலிறக்கம்.

**அக்டியா ரஸிமோஸா :** கால்களிலிருந்து குடல்வரை வலி.

**அக்னஸ் காஸ்டஸ் :** குடல் கீழே விழுந்துவிடும் போலிருத்தல், இதற்காக வயிற்றைத் தாங்கிக்கொள்ளல்.

**அபிஸ் மெல்லிபிகா:** குடலில் எரிச்சல், கொட்டும் வலி, குடலைச் சுற்றி பூந்தசை வளர்ச்சி, வலது புறமிருந்து இடதுபுறம் செல்லும் வலி.

**அப்ரோடேனம்:** குடல் அமுங்கும் உணர்ச்சி.

**அலுமினு:** பெருங்குடல் பலஹீனம்.

**அஸ்குலஸ் ஹீபோ:** குடல்களில் பொருமல், வெட்டும் வலி.

**அனகார்டியம் ஓரியண்டேல்:** குடலில் முளையைத் திணிப்பது போல் வலி.

**ஆரம் முரி:** சிறுகுடலில் வலி.

**ஆரம் முரியாடிகம் நேட்ரம்:** குடல், வயிற்றில் அதிக நீரை யுற்பத்தி செய்தல், அசையாவிடில் வயிறு, குடல்களில் எரிச்சல்.

**ஆரம் மெடாலிகம்:** மேல் வயிற்றில் வலது பாகத்தில் வெட்டும் வலி. எரிச்சல்.

**ஆஸிட் அஸடிக்:** மாதவிடாய் தடைப்பட்ட பின் குடல்களி லிருந்து ரத்தப் பெருக்கு.

**ஆஸிட் ஆக்ஸாலிக்:** வயிற்றிலும் குடலிலும் அழற்சி, குடலில் ஏற்படுங் கோளாறுகள்.

**ஆஸிட் பென்ஸாயிக்:** மலப்பையில் பிடிப்பு வலி.

**ஆஸிட் ஸல்ப்:** குடலிறக்கம் ஏற்படும் போன்ற நிலைமை, முக்கியமாக இடது பக்கக் குடலிறக்கம்.

**இக்னேஷியா:** அபானத்திலிருந்து மலப்பையின் மேல்புறமாக தைக்கும் வலிகள்.

**இபிகாக்உனு:** கீழ்க் குடலில் அழற்சி

**ஓபியம்:** குடல் சரிவர வேலை செய்யாததால் மலபந்தம். குடல் பக்ஷவாதம், சிறு குடலில் இறுக்க அமுக்கும் உணர்ச்சி.

**கல்கேரியா அஸடிகா:** மலப்பையில் அரிப்பு.

**கல்கேரியா ஐயோடைட்:** க்ஷயரோகிகளின் குடலழற்சி, காலரா வாலேற்பட்ட குடலழற்சி.

**கல்கேரியா கார்பானிகா :** குழந்தைகளின் மணிக்குடல் கோளங்கள் கடினமாக வீங்கியிருத்தல்.

**கன்னபிஸ் இண்டிகா :** இரவில் குடல்களில் கடபுடா சப்தம், ஏப்பம் விடுவதால் சமனம்.

**காக்குலஸ் :** அரைப்பூட்டு சம்பந்த குடற் பிதுக்க நோய். நக்ஸ்வாமிகா கொடுத்துப் பயனேற்படாத நிலைமை, உப்புசம், வலி, முதலியவைகளுடன் குடற் பிதுக்கம், தொப்புள் சம்பந்த குடற் பிதுக்க நோய், குடல்களை இரு கற்களின் நடுவில் வைத்து நசுக்குவதுபோல் கெண்டை வாங்குதல்.

**கார்போ வெஜி :** வண்டி சவாரி செய்தால் குடலில் வலி.

**காலின் ஸோனியா :** குடல் வலியுடன் தண்ணீர் போன்ற வயிற்றுப் போக்கு.

**காலீ கார்ப் :** சிரமமின்றி மலப்பை வெளித்தள்ளுதல்.

**காலீ பைக்ரோமிகம் :** குடல் குண்டிக்காய் அழற்சி, குடலில் நீடித்த குழிப்புண்கள்.

**காலீ ப்ரோமேடம் :** குடல் வெளியே தள்ளப்படும் உணர்ச்சி.

**காலோசிந்திஸ் :** குடல்களில் காயம்பட்டது போல் வலி,

**குப்ரம் மெடாலிகம் :** குடல் முறுக்கிக் கொள்ளுதல்.

**டபாகம் :** குடல் முறுக்குதல், இறங்குதல்.

**தராக்ஸகம் :** குடலில் நீர்க்கொப்புளங்கள் உடைவது போன்ற உணர்ச்சி.

**தாலியம் :** குடலிலும் வயிற்றிலும் வலி.

**தூஜா :** மலப்பையில் கடபுடா சப்தம், வலி.

**நக்ஸ்வாமிகா :** பெருங்குடலில் மண்ணீரல் பக்கத்தில் வாயு, கடபுடா சப்தம். மல பந்தத்தாலேற்படும் குடலிறக்கம். கசப்பான வாந்தியுடனும், காற்று உப்புசத்துடனும் கூடிய குடலிறக்கம்.

**நேட்ரம் ஸல்ப் :** வலது பக்கக் குடலில் காற்று அடைபடுவதால் வலி, வலது பக்கக் குடலழற்சி.

**பிஸ்மத் :** குடல் கோளாறுகள்.

**மெக்னீஷியா கார்ப் :** குடலிறக்கம்.

**மெக்னீஷியா மூரி :** குடலில் ஆங்காங்கு காற்று அடைபட்டிருத்தல்.

**ரோடோடெண்ட்ரன் :** குடலில் வலிகள்.

**லாக் கானினம் :** குடலிறக்கம்.

**லைகோபோடியம் :** ஸ்திரீகளின் குடலிறக்கம்.

**வெராட்ரம் ஆல்பம் :** குடல் முறுக்கிக் கொள்ளுதல், குடலில் பல முடிச்சுகளேற்பட்டு இறுக்குவது போன்ற வலி

**ஸல்பர் :** குடல் பிரளும் உணர்ச்சி, குடலில் ஆங்காங்கு சிறைப் பட்ட வாயு, இரைச்சல்.

**ஸிபிலீனம் :** மலப்பை வாதம். எனிமா கொடுப்பதால் வலி யுண்டாதல்.

**ஸிலிகா :** குடலில் அதிக இரைச்சல்.

**ஸீகேல் :** மலப்பை பக்ஷ வாதத்திலும், வயிற்றுப் போக்கிலும் அபானம் திறந்தேயிருத்தல்.

# கல்லீரல் & மண்ணீரல்

**அரேனியா டயாடிமா :** கல்லீரல் பருத்தல், ரத்தப் பெருக்கு

**அஸ்குலஸ் ஹிபோ :** கல்லீரல் பக்கத்திலும் கல்லீரல் ரத்தக் குழாய்களிலும் நிறைந்த உணர்ச்சி. கல்லீரல் ரத்தக் குழாய்களில் ரத்தத் தேக்கம், வயிற்றிருந்து கல்லீரலின் வலப்பாகத்தின் கீழ் வரை வலி, கல்லீரலில் நெருக்கமும் அதிக வலியுள்ள மூலமும்.

**ஆரம் மூரியாடிகம் :** கல்லீரல் பெரிதாகவும் கடினமாகவு மிருத்தல்.

**ஆர்ஸனிகம் ஆல்பம் :** ஏக்கத்துடன் த்ரையில் படுத்து உருளுதல்.

**ஆலோ சொகாட்ரீனு :** கல்லீரல் பக்கத்தில் எரிச்சல். சூடு அமுக்கம் விண் விண்ணென்றிருத்தல், வேதனை. கல்லீரலி லிருந்து மார்புக்குச் செல்லும் தைக்கும் வலி, சுவாசத் தடை.

**ஆஸிட் நைட்ரிக் :** நீடித்த கல்லீரல் கோளாறுகள், மஞ்சட் காமாலை. கல்லீரலும் மண்ணீரலும் ஏராளமாய் பருத்திருத்தல்.

**ஆஸிட் பென்ஸாயிக் :** கல்லீரல் மலப்பையில் பிடிப்பு வலி. இறுக்க உணர்ச்சிகள்.

**ஆஸிட் மூரியாடிகம் :** கல்லீரல் கோளாறுகளால் ஏற்படும் தலைச் சுற்றல். இடதுபுறமாகப் படுத்தால் சமனம்,

**ஐயோடியம் :** கல்லீரல், மண்ணீரல். பருத்தலுடன் ஏராள உமிழ் நீர் உற்பத்தி. முறைச் சுரம்.

**ஐரிஸ் வர்ஸிகொலர் :** கல்லீரல் கோளாறுகள்,

**ஓபியம் :** மண்ணீரல் பெருக்கம்.

**கார்டுஸ் மரியேனஸ் :** கல்லீரல் உபாதிகள். கல்லீரல் வியாதி களுடன் நீர் வீக்கம். கல்லீரல் வலியுடன் மார்பில் பிடிப்பு வலிகள். கல்லீரலில் அதிக ரத்தம் சேருவதால் மேல் வயிற்றில் வலப் பாகத்தில் நிறைந்த உணர்ச்சி.

**காலி கார்ப் :** கல்லீரல் பக்கமாகப் பிடிப்பு வலிகள். நீடித்த வலியுடன் கல்லீரல் கோளாறுகள்.

**காலீ பைக்ரோ :** கல்லீரலில் அசுத்த நீர்க்கட்டு ஏற்படுதல். கல்லீரல் மண்ணீரல் பிடிப்பு வலி. முள்ளந்தண்டுக்குப் பாய்தல். கல்லீரல் இறுக்கம்.

**கோனியம் :** கல்லீரலிலும், அதன் சுற்றுப்புறங்களிலும் கடுமையான வலி, நீடித்த மஞ்சட் காமாலை.

**சின்னினம் ஸல்ப்:** கல்லீரல் வலி. மலேரியா சுரத்தின் பின் மண்ணீரல் பெருத்தல்.

**செலிடோனியம்:** கல்லீரல் வலி மேல் பக்கம் அல்லது முதுகுக்குப் பாய்தல். வலி ஆகாரத்தால் சமனம். கல்லீரலில் அழற்சி, வலி. கடினமாக இருத்தல், அமுக்கினால் அதிகவலி. கல்லீரல் கோளாறுகளுடன் கூடிய நிமோனியா. டைபாய்டு சுரம், கல்லீரல் கோளாறுகளுக்கு முக்கியமான ஔஷதம். சரீரம், கண், மூத்திரம் மலம், இவைகளுடன் மஞ்சள் நிறம். வலது தோளெலும்பில் கீழ்பாகத்தில் விடாத வலி. இது முக்ய குறி, பிரதி தினம் மாலை 4 மணி முதல் 8 மணி வரை உபாதி அதிகம் வலது புறம்.

**சைனு:** கல்லீரலும் மண்ணீரலும் பெருத்து வீங்கியிருத்தல்.

**டயஸ்கோரியா:** கல்லீரலில் வலி ஆரம்பித்து வலதுமார்புக்குப் பாய்தல்.

**டிஜிடாலிஸ்:** கெட்டியாகவும் வலியுடனுமிருத்தல். கல்லீரல் பெருத்தல்.

**தாராக்ஸகம்:** கல்லீரல் பெருத்து கறடு தட்டி யிருத்தல்.

**தெரிடியன்:** கல்லீரல் பக்கத்தில் எரிச்சல். இடது புறத்தில் மண்ணீரலுக்கு வெளிப்புறத்தில் கொட்டும் வலி.

**நக்ஸ் வாமிகா:** கல்லீரல் வீங்கியும், கறடு தட்டியுமிருத்தல், அமுக்கினாலும் வலி, மஞ்சட்காமாலை, மூல உபத்ரவத்தில் ரத்தப் பெருக்கு நின்ற பின், அதனால் ஏற்படும் கல்லீரல் கோளாறுகள்.

**நேட்ரம் ஆர்ஸனிகம்:** கல்லீரலும் மண்ணீரலும் பருத்திருத்தல்.

**நேட்ரம் கார்பானிகம்:** கல்லீரலிலும் மண்ணீரலிலும் பிடிப்பு வலிகள்.

**நேட்ரம் முரியாடிகம்:** கல்லீரலிலும் மண்ணீரலிலும் வலி.

**நேட்ரம் ஸல்ப் :** கல்லீரலில் வலி, கல்லீரல் பாகத்தை கையால் அழுக்கினாலும் நடக்கும்போதும் வலி. கல்லீரல் பருத்து கெட்டியாக வீங்கியிருத்தல்.

**நைக்டாந்தஸ் :** பிடிப்பு வலி, அழுக்கினால் அதிகம்.

**பல்ஸடில்லா :** கல்லீரலில் குத்து வலி.

**பாப்டீஷியா :** கல்லீரலில் வலி.

**பாரீடா மூரியாடிகா :** கல்லீரல் கெட்டியாகஇருத்தல்.

**பாஸ்பரஸ் :** அன்னப் பையிலிருந்து கல்லீரல்வரை இழுப்பது போன்ற வலி, கல்லீரல் மண்ணீரலில் அழற்சி, கல்லீரல் கோளாறுகள், கெட்டியாக வீங்கி வலியுடனிருத்தல். மஞ்சட்காமாலை.

**பெர்பெரீஸ் வல்கேரிஸ் :** குண்டிக்காய்களில் வலியாரம்பித்து அங்கிருந்து கல்லீரல் மண்ணீரல் அன்னப்பை அக்குள்கள் முதலியவிடங்கட்குச் செல்லுதல்.

**பெர்ரம் பிக்ரிகம் :** கல்லீரல் கோளாறுல் மஞ்சட்காமாலை.

**பெர்ரம் மெடாலிகம் :** கல்லீரலும் மண்ணீரலும், பெருத்து வலியுடனுமிருத்தல்.

**பெல்லடொன்னா :** வலது பக்கமாய் படுத்தால் கல்லீரலில் வலி.

**போடோபில்லம் :** கல்லீரல் பாகத்தில் வலி.

**ப்ரையோனியா :** கல்லீரல் பாகத்தில் வீங்கி வலியுடனிருத்தல்.

**மங்கானம் :** கல்லீரல் கோளாறுகள்.

**மெக்னீஷியா கார்ப் :** கல்லீரல் கெட்டியாக இருத்தல் பிடிப்பு வலிகள்.

**மெக்னீஷியா மூரியாடிகா :** நடக்கும்போதும் வலது பக்கமாகப் படுத்தாலும், அதை அழுக்கினாலும், கல்லீரல் வலி. கல்லீரல் கெட்டியாக பருத்திருத்தல். மஞ்சட்காமாலை கல்லீரலிலிருந்து முதுகெலும்புக்கும், அன்னப்பைக்கும்

செல்லும் வலி, கல்லீரல் கோளாறுகளில், சிறு நீர், அல்புமென் சத்து வெளிப்படுதல். பாதங்கள் கால்கள் வயிறு முதலியவை வீங்குதல், ஒன்றிலும் தீராத மலபந்தம். கல்லீரலில் எரிச்சலுடன் பிடிப்பு வலிகள், அமுக்குவதனால் அதிகமாதல்.

**மெர்க்குரியஸ் டல்ஸிஸ்:** கல்லீரல் மண்ணீரல் அழற்சி.

**மெர்க்குரியஸ் ஸொலுபுலிஸ்:** கல்லீரல் பாகங்களை அமுக்கினால் வலி.

**ரானங்குலஸ்:** பிடிப்பு வலி.

**ரோஹிடாக்:** கல்லீரல் மண்ணீரல் பெருக்கம், கல்லீரல் வலி.

**லாக்கெஸிஸ்:** கல்லீரல் பெருத்திருத்தல், மஞ்சட்காமாலை,

**லாரோஸிராஸஸ்:** கல்லீரலில் ஏதோ ஒட்டிக்கொண்டிருப்பது போன்ற வலி, கல்லீரல் பாகம் உப்பியிருத்தல், ரணமிருப்பது போலவும், சிரங்கு உடைந்துவிடும் போலவும் வலி, கல்லீரல் கறடு தட்டியிருத்தல்.

**லெப்டாண்டிரா:** கல்லீரலிலிருந்து முள்ளந்தண்டு வரை வலி.

**லைகோபோடியம்:** கல்லீரல் கோளாறுகளாலேற்பட்ட வாயு உப்புசம், கல்லீரலில் ரத்தத் தேக்கத்தால் முதுகிலும் வலது பக்கத்திலும் வலி, கல்லீரல் கோளாரால் ஏற்பட்ட பாண்டு வீக்கம். குளிர்ந்த பானங்களை உட்கொண்டால் கல்லீரல் பாகத்தில் அமுக்க உணர்ச்சி, கல்லீரல் பாகத்தில் பிடிப்புகள் இருப்பது போன்ற உணர்ச்சி. அமுக்கும் வலி நிமிர்ந்து நிற்க முடியாமை. கல்லீரலில் நீடித்த அழற்சி. பித்தக் கற்களால் ஏற்படும் வலிகள். டைபாய்ட் நிமோனியா முதலிய ஜுரங்களில் கல்லீரல் பாதிக்கப் பட்டிருத்தல். கல்லீரல் கோளாறுகளில் நன்கு வேலை செய்யும் ஔஷதம்.

**ஜஸ்டிஷியா ஆடாதோடா:** கல்லீரலில் வலி.

**ஸல்பர்:** கல்லீரலில் பிடிப்புகள். வீங்கிப் பெருத்திருத்தல்.

**ஸிலிகா :** கல்லீரலில் சீழ்க் கட்டிகள்.

**ஸியனேதஸ் அமெரிகேனஸ் :** கல்லீரல், மண்ணீரல் பெருக்கம். கல்லீரலில் பிடிப்பு வலி. (தாய்த் திராவகத்தில் உபயோகம்.)

**ஸெபியா :** கல்லீரல் நொந்திருத்தல், (வலதுபுறம் கீழ் வைத்துப் படுத்தால் சமனம்) கல்லீரலில் பிடிப்புவலி, அழற்சி.

**ஸெனஸியோ :** கல்லீரல் பெருக்கத்தில் முதல் கட்டத்தில் நன்கு வேலை செய்யும்.

**ஹைட்ராஸ்டிஸ் :** கல்லீரல் கோளாறுகள், மஞ்சட்காமாலை.

# தொப்புள்

**அகேரிகஸ் :** பிடிப்பு வலி.

**அபிஸ் மெல்லிபிகா :** பிறந்த குழந்தையின் தொப்புள் ரணம். தொப்புள் வெளித் துருத்தியிருத்தல்.

**அப்ரோடேனம் :** தொப்புளிலிருந்து ரத்தங் கசிதல், (குழந்தை)

**அமோனியா மூரியாடிகம் :** சுற்றிலும் கசக்கும் வலி,

**அஸ்குலஸ்ஹிபோ :** தொப்புளில் வலி. தொப்புள் பக்கங்களில் வெட்டும் வலி.

**அனகார்டியம் ஓரியண்டேல் :** தொப்புளைச் சுற்றிலும் வலி. குடலில் முளையைத் திணிப்பது போன்ற உணர்ச்சி.

**ஆண்டிமோனியம் டார்டாரிகம் :** தொப்புளைச் சுற்றிவலி. உப்புசம்

**ஆரம் மூரியாடிகம் :** தொப்புளுக்கு கீழாக சிவந்த பருக்கள்.

**ஆர்ஸனிகம் ஆல்பம் :** தொப்புளை சுற்றி வலி. முதுகுப்புறமாகப் படுத்தால் வலி அதிகரித்தல்.

**ஆலோ ஸொகோட்ரினு :** தொப்புளைச் சுற்றி முறுக்குதல். தொப்புளில் துடிப்பு.

**ஆஸிட் ஆக்ஸாலிக்:** தொப்புளைச் சுற்றிலும் அடிப்பட்டது போன்ற வலி. இரவிலும் அசைவதாலும் சர்க்கரை தின்பதாலும் அதிகரித்தல். சாப்பிட்டவுடன் தொப்புளில் வலி.

**ஆஸிட் பாஸ்பாரிக்:** வலி,

**ஆஸிட் பென்ஸாயிக்:** தொப்புளைச் சுற்றி வெட்டும் வலி.

**காம்போசியா:** வலி. தொப்புளைச் சுற்றி கடுமையான பிடிப்பு வலி.

**காக்குலஸ்:** தொப்புள் சம்பந்த குடற் பிதுக்கம், (அடி வயிற்றில் பார்க்க)

**காட்மியம் ஸல்ப்:** வெட்டும் வலி. (மலத்தில் பார்க்க)

**காப்ஸிகம்:** சீதம் அல்லது ரத்தம் கலந்த மலத்துடன் தொப்புளைச் சுற்றி வலி.

**காமோமில்லா:** தொப்புளருகே பிசையும் வலி.

**கார்பன் ஸல்ப்:** தொப்புள் உள்ளிழுக்கப்படுதல். மலம் போவதற்கு முன்னும் பின்னும் வெட்டும் வலி.

**க்ரோடன் டிக்லியம்:** தொப்புளைச் சுற்றி பிடிப்பு வலி. சூடான பால் குடித்தால் சமனம், தொப்புளில் அமுக்கினால் வலி. இவ்வலி அபானத்திற்குச் செல்வதால் அபானம் வெளி வருதல்.

**செலிடோனியம்:** தொப்புள் பாகத்தில் வலி.

**டபாகம்:** தொப்புள் உள்ளிழுக்கப்படுதல்.

**டல்கமாரா:** தொப்புளைச் சுற்றி வலி.

**நக்ஸ்மாஸ்சாடா:** தொப்புளிலும், அடிவயிற்றிலும் வெட்டுவது கிள்ளுவது போன்ற வலி.

**ப்ளாட்டினா:** தொப்புளைச் சுற்றி வலி, முதுகு வரை செல்லுதல்.

**மங்கானம்:** சுவாசம் உள்ளிழுக்கப்படும்போது தொப்புளில் வலி.

**ரீயம் :** தொப்புளைச் சுற்றி உப்புதல். கல்போல் கடினமாக விருத்தல்.

**ரோடோடெண்ட்ரன் :** தொப்புளின் அடியில் ஏற்படும் குடல் வலிகள்.

**லாரோஸிராஸஸ் :** தொப்புளின் கீழே ஏதோ கனமிருப்பது போன்ற உணர்ச்சி.

**லைகபோடியம் :** வலது பக்கமாகப் படுத்தால் தொப்புளிலிருந்து கெட்டியான வஸ்து வலது பக்கத்தில் விழுவது போன்றவுணர்ச்சி.

**ஸபீனு :** தொப்புளில் விட்டுவிட்டேற்படும் துடிக்கும் உணர்ச்சி.

**ஸைக்ளெமென் :** தொப்புளைச் சுற்றி கிள்ளும் வலி.

**ஸ்டானம் :** தொப்புளைச் சுற்றிலும் வெட்டும் வலி.

# அபானம்

**அகேரிகஸ் :** மலங் கழித்த பின் எரிச்சல். (அபான வாயுவுடன் மலம் கழிதல்)

**அகோனைட் :** கொட்டும் உணர்ச்சி,

**அக்னஸ் காஸ்டஸ் :** அரிப்பு, வெடிப்பு, அபான வாயு.

**அபிஸ் மெல்லிபிகா :** நிறைந்த உணர்ச்சி, தோலுரிதல். திறந்தேயிருத்தல்.

**அபொஸினம் :** போக்கின்போது அபானம் வெளித்துருத்தியிருத்தல்.

**அமோனியம் கார்ப் :** பிடிப்பு வலி, மூலம்.

**அமோனியம் மூரியாடிகம் :** நடக்கும்போது அபானத்திற்கும் ஜனனேந்திரியத்துக்கும் நடுவில் கிழிக்கும் வலி. பிடிப்பு வலி, வயிற்றுப் போக்குடன் அபானத்தில் கொப்புளம், எரிச்சல், ரணம் மூலம், உண்டதும் அபானவாயுவுடன் வயிற்றுப் போக்கு,

**அம்ப்ரா க்ரிஸியா :** அரிப்பு. சாப்பிட்ட அல்லது தண்ணீர் குடித்தபின் அபானவாயு பரிதல்.

**அலுமினு :** வெட்டும் வலி. ரத்தம் வருதல். அபானத்திலும் மலப் பையிலும் ரண வலி,

**அஸ்குலஸ் ஹிபோ :** (மூலத்தில் பார்க்க) அரிப்பு, எரிச்சல், முளையிருக்கும் உணர்ச்சி. துர்நாற்றம், அபானவாயு பரிதல்.

**அனகார்ட்டியம் ஓரியண்டேல் :** அரிப்பு, மூலம்.

**ஆண்டிமோனியம் க்ருடம் :** மலச்சிக்கலில் அபானவாயு வெளியே வர முடியாமல் உள்ளமுக்கப்படல். (மூலத்தில் பார்க்க)

**ஆண்டிமோனியம் டார்ட்டாரிகம் :** எரிச்சல், பிடிப்பு வலி.

**ஆரம் ட்ரிபில்லம் :** எரிச்சலுடன் மலம் வெளியாதல், அபானத்தில் வெடிப்புகள்.

**ஆரம் மூரியாடிகம் :** எரிச்சல், ரத்தம் கொட்டும் மூலங்கள்.

**ஆரம் மெடாலிகம் :** அபானத்தில் பாலுண்ணிகள் போன்ற சதை வளர்ச்சி. (மூலத்தில் பார்க்க) நாற்றமுள்ள அபான வாயு,

**ஆர்ஸனிகம் ஆல்பம் :** எரிச்சல், தோலுரிதல், உஷ்ண ஒற்றிடங்களால் சமனம்.

**ஆர்னிகா மொண்டானு :** அழுகிய முட்டை நாற்றம்போல் அபானவாயு.

**ஆலோ ஸோகோட்ரினு :** அபானவாயு அங்குமிங்குமசைவதால் அடிவயிறு வெடித்துவிடும்போல் தோன்றுதல். மலங் கழிக்கத் தூண்டுதல். ஆனுல், அபானவாயு மட்டும் வெளியாதல். இதனுல் சற்று சௌகர்யம், அபானவாயு பிரியும்போது தன்னையறியாமல் மலமும் கழிதல். அபானத்தில் அரிப்பு, எரிச்சல், தூக்கம் வராமை, கனகனப்பு ரத்தத்துடன் அதிக அபானவாயு.

**ஆஸிட் ஆக்ஸாலிக்:** அபானவாயு சிரமத்துடன் வெளியேறுதல்.

**ஆஸ்ட் நைட்ரிக் :** மலம் வெளியேறிய பின் அபானத்தில் ஒன்றிரண்டு மணி நேரத்திற்கு எரிச்சல், வலி. (மிருதுவான மலம் வெளியேறிய பின்னும்) அபானத்தில் வெடிப்புகள். அபானத்திலும் மலப்பையிலும் அரிப்பு. நாற்றமுள்ள கசிவு இருந்துகொண்டேயிருத்தல்.

**ஆஸிட் பென்ஸாயிக் :** அபானத்தைச் சுற்றி அரிப்பு, நீர் கோர்த்த தடிப்புகள்.

**ஆஸிட் ப்ளுவாரிக் :** அபானவாயு பிரிந்தால் உபாதி சமனம் அரிப்பு.

**ஆஸிட் மூரியாடிகம் :** ஏராள அபானவாயு, அபானத்தில் கடுப்பு, எரிச்சல், கறுத்த ரத்தமாகவே மலப்பையிலிருந்து வெளியேறுதல், மூத்திரம் விடும்போது அபானம் அடித் தள்ளுதல்.

**ஆஸிட் ஸல்ப்யூரிக் :** மூலம் அபானத்தில் நீர் கசிந்துகொண்டேயிருத்தல்.

**இக்நேஷியா :** மலச்சிக்கலில்லாதபோது அபான வெடிப்புகள், உட்கார்ந்திருக்கும்போது வலி ஆரம்பமாதல். அபானத்திலிருந்து மலப்பையின் மேல்புறமாகத் தைக்கும் வலிகள், முயற்சியில்லாமலேயே வெளியாகும் நாற்றமுள்ள அபானவாயு. அபானத்தில் அரிப்பு. ஊறும் உணர்ச்சி, உள்ளிருந்து வெளிப் பக்கமாகக் கூர்மையான ஆயுதமிருக்கும் உணர்ச்சி.

**ஐரிஸ் வர்ஸிகோலர் :** மலம் கழித்த பின் அபானத்தில் எரிச்சல்.

**ஓலியாண்டர் :** அழுகிய முட்டை போன்ற நாற்றத்துடன் அபானவாயு பிரியும்போது மலம் தானுகவே வெளியாதல்.

**கம்போகியா :** அபானம் வெளித் தள்ளுதல், வேகமாக மலம் வெளியேறிய பின் அபானத்தில் எரிச்சல், மலப்பை வெளி வருதல், மாலையிலும் இரவிலும் அபானவாயு பரிதல்.

**கல்கேரியா அஸடிகா :** மலப்பையில் அரிப்பு.

**கல்கேரியா கார்ப் :** மலம் வெளியாகும்போது அபானத்தில் எரிச்சல்.

**கல்கேரியா பாஸ் :** நாற்றமுள்ள அபானவாயு, வயிற்றுப் போக்கு எரிச்சல், கொட்டும் வலி, ரணம்.

**கல்கேரியா ப்ளோரிகா :** வெடிப்பு, வலி, அரிப்பு. அபானம் சமீபமாக உண்டாகும் பவுத்திரச் சிரங்கு.

**கல்கேரியா ஸல்ப் :** பவுத்திரவுபாதிகளில் ஆசனவாய்ப் பக்கமாக வலியுள்ள சீழ்க் கட்டிகள்.

**கன்வலேரியா :** மலப்பையிலும் அபானத்திலும் வெட்டும் வலி.

**காக்டஸ் க்ராண்டி :** அபானத்தில் பளுவிருக்கும் உணர்ச்சி. (மலம், மூலத்தில் பார்க்க.)

**காப்ஸிகம் :** பிரதி தடவை இருமும்போது துர்நாற்றமுள்ள ஏராள அபானவாயு பரிதல். (மூலத்தில் பார்க்க) எரிச்சலுடன் ரத்தம் கலந்த வயிற்றுப் போக்கு.

**காமோமில்லா ;** அபானத்தில் ரணம். அதிக வலியுள்ள மூலங்கள்.

**கார்பன் ஸல்ப் :** எரிச்சல், அரிப்பு. மூலங்களில் வலி, அபானவாயு அதிகரித்திருப்பதுபோல் அங்குமிங்கும் சென்று கொண்டிருக்கும் வீக்கம், வலி.

**கார்போ அனிமாலிஸ் :** அபான வெடிப்பு.

**கார்போ வெஜிடபிலிஸ் :** அதிக நாற்றமுள்ள சூடான அபானவாயு. அபானவாயு வெளியாவதால் வயிறு, அடிவயிறு உபாதி சமனம், மூலம்.

**காலின்ஸோனியா :** அபானத்தைச் சுற்றி அரிப்பு.

**காலீ கார்ப் :** அபானத்தைச் சுற்றி அரிப்பு, குழி விழுந்த சிரங்குகள், எரிச்சல். மலப்பை சிரமமின்றி வெளித் தள்ளுதல், வலி.

**காலீ பைக்ரோ :** அபானத்தில் மூளையிருக்கும் உணர்ச்சி.

**காலீ மூரி :** அபானத்தில் அரிப்பைத் தரும் நாக்குப் பூச்சிகள்.

**காஸ்டிகம் :** அபானத்தில் ஒரு பக்கப் பக்ஷவாயு, வெடிப்பு, எரிச்சல், குழிப்புண், பெரிய மூலங்கள்.

**கோல்சிகம்:** மாலையில் அபானவாயு, துர்நாற்றம்.

**க்ராபைடிஸ்:** அபானத்தில் வெடிப்புகள், எரிச்சல், ரணம். அதிக நாற்றமுள்ள அபானவாயு.

**க்ரோடன் டிக்லியம்:** அபானத்தில் எரிச்சல், தொப்புளில் அழுக்கினால் வலி. இவ்வலி அபானத்துக்குச் செல்வதால் அபானம் வெளிவருதல்.

**சிமாபிலா:** ஆசனத்தில் ஓர் பந்து இருக்கும் உணர்ச்சி.

**செலிடோனியம்:** அபானத்தில் அரிப்பு,

**செனபோடியம்:** அபான எரிச்சலுடன் வயிற்றுப் போக்கு,

**டயஸ்கோரியா:** மலம் வெளியானபின் ஒரு கொத்து திராக்ஷை போல் மூலம் வெளிதள்ளுதல், அதிக அபானவாயு, வயிறு இரைச்சல்.

**டுக்ரியம்:** மாலை இரவு படுக்கையில் அபானத்தில் இடைவிடாத அரிப்பு, உபத்திரவம், நாக்குப்பூச்சிகளால் இரவில் அமைதியின்மை, மலம் வெளியேறியபின் மலப்பையில் ஊறுவது போன்ற உணர்ச்சி.

**டெல்லூரியம்:** மலம் வெளியேறியபின் அபானத்தில் அரிப்பு.

**ட்யூபர்குலீனம்:** அபானத்தில் அரிப்பு.

**துஜா:** அபானத்தில் எரிச்சல், பிடிப்புவலி, மூலங்கள், அபானத்தின் பக்கங்களில் சதை வளர்ச்சி, சிலைப்புகள், பாலுண்ணி, ரணம், கொப்புளங்கள்.

**நக்ஸ்வாமிகா:** அபானத்தில் கிழிக்கும் வலி, மூல முளைகள்.

**நேட்ரம் ஆர்ஸனிகம்:** மலம் வெளியேறிய பின் அபானத்தில் எரிச்சல், அபானத்தில் அரிப்பு.

**நேட்ரம் கார்ப்:** அபானத்தில் அரிப்பும், பூச்சிகள் ஊறுவது போன்ற உணர்ச்சியும்.

**நேட்ரம் பாஸ்:** அரிப்பு.

**நேட்ரம் மூரி:** அபானம் சுருங்கியிருத்தல் அதனால் ரத்தப் பெருக்கு, எரிச்சல், அபானம் ஈரமாகவிருந்துகொண்டே

யிருத்தல். ஆசனவாயைச் சுற்றிலும் படைகளேற்படல். குத்து வலியுடன் கூடிய மூல முளைகள். அபான வாயு வெளியேறும்போலிருத்தல். ஆனல் வாயுதான் போகுமா மலம் வெளியேறுமா என்ற சந்தேகம். சிறைபடுத்தப் பட்ட அபான வாயு.

**நேட்ரம் ஸல்ப் :** ரத்தங் கொட்டும் மூலங்கள் அபானவாயு ஏராளமாக வெளியேறுதல். அபானத்திலும் துடையிடுக்கிலும் பாலுண்ணிகள் போன்ற முளைகள் தோன்றுதல்.

**பாப்டீஷியா :** அபானத்தில் எப்போதும் ரணங்கள்.

**பாஸிலினம் :** நாற்றமுள்ள அபானவாயு.

**பாஸ்பரஸ் :** அபானம் திறந்திருத்தல், சுருங்கச் சக்தியற்றிருத்தல், அபானம் திறந்திருத்தலில் அபிஸ் மெல்லிபிகாவுக்கும் இதற்கும் வித்தியாசம் உண்டு. பாஸ்பரஸில் தாக வரட்சை உண்டு. அபிஸ்மெல்லிபிகாவில் தாக வரட்சை இருக்காது.

**பெட்ரோலியம் :** அபானத்தில் அரிப்பு, எரிச்சல், பலவீனம்.

**பெர்பெரீஸ் வல்கேரிஸ் :** அபானத்தில் எரிச்சல், பவுத்திரங்கள்.

**பெர்ரம் மெட்டாலிகம் :** அபானம் வெளித் தள்ளுதல், அபானத்தில் அரிப்பு, இது முக்கியமாகக் குழந்தைகளுக்குக் காணப்படும்.

**பெல்லடோன்ன :** ரத்தங் கொட்டும் மூலங்கள். அபானத்தில் வலி, எரிச்சல். அதனல் கால்களை அகட்டி வைத்துக் கொள்ள நேருதல். அபானம் சுருங்கியிருத்தல்,

**பேயோனியா :** வெடிப்பு, கடுப்பு வலி, அரிப்பு, எரிச்சல், வீக்கம். மூலம், மலங்கழித்தபின் பல மணி நேரம்வரை கடுப்பு. எரிச்சல் வலி, அபானத்திலிருந்து நீர் ஒழுகிக் கொண்டேயிருத்தல்.

**போடோபில்லம் :** மலங் கழிக்கும் போது அபானம் வெளித் தள்ளுதல்.

**போராக்ஸ் :** அபானத்தில் ரணம்.

**ப்ளம்பம்:** அபானம் அடைபட்டிருத்தல்.

**மங்கானம்:** அபானத்தில் கடுப்பு, சுருங்கியிருத்தல், ஏராள அபான வாயு.

**மில்லிபோலியம்:** வலியில்லாத ரத்தங்கொட்டும் மூலம்.

**மெடோரினம்:** அபானம், அடித்தள்ளுதல், அரிப்பு நீர் கசிதல்.

**மெர்க்குரியஸ் கரோஸிவஸ்:** அபானத்தில் தாங்க முடியாத எப்போதுங் கடுப்பு, எரிச்சல்.

**மெர்க்குரியஸ் ஸொலுபுலிஸ்:** அபானத்தில் எரிச்சல், வெளித் தள்ளுதல், மலங்கழித்த பின்னும் அபானத்தில் கடுப்பு.

**மெஸீரியம்:** பச்சைநிறமுள்ள நீர்போன்ற வஸ்து வெளியேறுதல்

**ரடானியா:** மலம் வெளியேறிய பின் தாங்க முடியாத வலி. எரிச்சல் முளையிருக்கும் உணர்ச்சி. அபானம் வெடித்தல், தீ பட்டதுபோல் எரிச்சல்.

**ரஸ்டாக்ஸ்:** அபானத்தின் கீழே அமுக்கும் உணர்ச்சி, வெடிப்புகள்.

**ரீயம்:** அபானம் சிவந்திருத்தல். மலங்கழித்த பின் அபானத்தில் கடுப்பு. பொதுவாக அபானத்தில் எரிச்சல்.

**ருடா:** மலம் வெளியேறுமுன் அபானம் வெளித்தள்ளுதல், அடிக்கடி மலம் வெளிவரும் போலிருக்கும், ஆனால் மலம் போகாமல் அபானம் வெளித் தள்ளுதல். பிடிப்பு வலியுள்ள மூலங்கள்.

**ருமக்ஸ்:** அபானத்தில் அரிப்பு.

**லாக் டிப்:** அபானத்தில் வெடிப்புகள்.

**லாக்கஸிஸ்:** அபானம் இறுக்கப்பட்டிருப்பதால் மலம் வெளியே தள்ளப்படாமை. அபானம் வெளித் தள்ளுதல்.

**லில்லியம் டிக்ரினம்:** அபானத்தில் எரிச்சல், மூலம்.

**லைகோபோடியம்:** இறுகிய மலம், வெளியேறும்போது அபானம் சுருங்கி வெளியே தள்ளுதல், வெளித் துறுத்திய மூலங்கள்.

**காலீ மூரி:** கீழ் முதுகிலிருந்து கால்களுக்கு மின்னல்போல் வலி, தாவுதல். அதனுல் படுக்கையைவிட்டு எழுந்து உட்கார நேரிடுதல்.

**காலோபில்லம்:** கால் கட்டைவிரல். அக்குள்களில் கடுமையான வலி, மணிக்கட்டுகளில் இசிப்பு, ஒவ்வொரு நிமிஷம் இடம் மாறிக்கொண்டேயிருக்கும் வலி.

**காலோஸிந்திஸ்:** இடுப்பிலிருந்து முழங்கால்கள் வரை வலி, இடது முழங்கால் மூட்டில் வலி.

**கால்மியா:** கை கால்களில் பலஹீனம், மறமறப்பு, குளிர்ந்த உணர்ச்சி, சுண்டு விரலில் வலி, கை, மூட்டு (வாதத்தில் பார்க்க.) இடுப்பில் இறுக்கும் வலி, முழங்கால்களுக்கும் கால்களுக்கும் பரவுதல், கால்களில் வலி. இசிவு,

**காஸ்டிகம்:** சிரமப்படாமல் நடக்க முடியாமை, வாத வலி, படுக்கைச் சூட்டால் சமனம், மெதுவாக நடக்கக் கற்றுக் கொள்ளுதல். இரவு கால்களில் அமைதியின்மை, முழங்கால் மூட்டுகளில் உடையும் சத்தம், விறைப்பு. புறங்கால்களில் அரிப்பு.

**குப்ரம் மெடாலிகம்:** உள்ளங்கால்களில் கெண்டை ஏறுதல். கால்களில் அதிகச் சோர்வு, உள்ளங்கால்களிலும், ஆடு தசைகளிலும் கெண்டையேறுதல், காக்கை வலிப்பில் குளிர் காற்று உணர்ச்சி, முழங்கால்களில் ஆரம்பித்தல், விரல்களிலிருந்தும் கால் கட்டைவிரல்களிலிருந்தும் வலிப்பு ஆரம்பித்தல்.

**கோல்சிகம்:** கைகளிலும், கால்களிலும், பாதங்களிலும் நீர் வீக்கம், ஒவ்வொரு மூட்டிலிருந்தும் முக்யமாகத் தோள் பட்டை, சப்பை இவைகளில் வலி. பாரிசவாயு சம்பந்த வலி, கால் கட்டை விரல்களைச் சொடுக்கினுல் அதிக வலி.

**கோனியம்:** தள்ளாடும் நடை, நடுக்கம், நடந்துகொண்டிருக் கும்போதே திடீரென்று பலம் குறைதல், கிழவயதில் ஷி கோளாறுகள், நாற்காலியில் காலைத்தூக்கி வைத்தால் சமனம், கனமாகவும். களைத்தும், பக்ஷவாயு பீடித்தும்,

நடுங்கிக்கொண்டுமிருத்தல், விரல்களும், கால் பெருவிரல்களும் மறத்தல்.

**க்ராபைடிஸ் :** கால்களின் வீக்கம். கால்களின் வளைந்த இடங்களிலும். அரையிடுக்குகளிலும் பச்சைப் புண்ணுயிருத்தல். விரல்களின் நடுவில் வெடிப்பு. கால்களில் வலி. துடைகளுக்கிடையே தோல் உரிந்து புண்ணுதல். கீழ்க் கால்களில் நீரதைப்பு. கட்டை விரல்கள் விறைப்பாகவும், குறுகியும் ஆதல். நகங்களில் வெடிப்பு, வலி, விரல் நுனிகளில் வெடிப்பு. கால்களில் நாற்ற வியர்வை.

**க்ரோடேலஸ் ஹாரிடஸ் :** கை கால் வீக்கம்.

**க்வாய்கம் :** காலின் பேரெலும்பு வளையக்கூடியதாக ஆகி விடுதல். இடது காலில் கெண்டை வாங்குதல். முழங்கால்களிலுள்ள நரம்பு குட்டையாகிவிடுதல். வலது கால் வீங்கியும், குறுகியும் இருத்தல். தலைவலி தவிர எல்லா வலிகளும் நடப்பது, உஷ்ணம் முதலியவைகளால் அதிகரித்தல். கை கால்கள் முடக்கம், விரைப்பு, இளைத்தல். வேலை செய்தபின் துடை, கை, கால்களில் அதிக ஓய்ச்சல். கீல் வாயு வாதம், கீழ் துடைகளில் பலஹீனம்.

**க்ளமேடிஸ் எரெக்டா :** பலஹீனம். கனம், களைப்பு, காய்ந்திருக்கும் உணர்ச்சி. அமுக்கப்பட்ட வெட்டையால் ஏற்பட்ட வாதம், விரல் மூட்டுக்களில் வீக்கம்.

**க்ளோனுயின் :** முழங்கால் பலஹீனம், இடது துடையில் மறத்த உணர்ச்சி, இடது முழங்காலில் குத்தும் வலி. அசைவதாலும் கால்களை நன்ருக நீட்டுவதாலும் சமனம். குளிர்ந்த கால்கள். துடிப்பு, களைப்பு, கை கால்கள் அமைதியின்மை. எழுந்திருந்து நடக்கவேண்டி வருதல்

**சிமாபிலா :** இடது கணுக்காலுக்குமேல் ஒரு நாடாவினுல் கட்டி இறுக்கும் உணர்ச்சி.

**செலிடோனியம் :** கால்களில் கீல்வாதம்.

**சைனு :** மூட்டுகளிலும், கை கால்களிலும் சுளுக்கு விழுந்தது போன்ற வலிகள். வலி மெதுவாகத் தொட்டால் அதிக

மாதல். நன்ருய் அமுக்குவதால் சமனம். கை கால்களில் கயிற்ருல் இருக்கியிருப்பது போன்ற உணர்ச்சி. மூட்டுகள் வீங்கியும், அதிக வலியுடனுமிருத்தல். அதிக பலஹீனம், நடுங்குதல், மறத்தது போன்றிருத்தல். அவயவங்களை அசைக்கப் பிரியமின்மை, காலையிலும் உட்கார்ந்திருக்கும்போதும் அதிகம்.

**டபாகம் :** தள்ளாடி நடத்தல், நடுக்கம், சில்லிடல். அமைதியின்மை, அதிக பலஹீனம்

**டயஸ்கோரியா :** துடை நரம்புகளில் வலி. வலது பக்கத்தில் அதிகம். உடையும் நகங்கள். தூக்கத்தில் இந்திரியஸ் கலிதத்தால் முழங்கால் பலஹீனம்.

**டல்கமாரா :** கால்கள் பனிக்கட்டிபோல் சில்லிடல். பாரிசவாதம். கீல்வாதம் தண்ணீரில் நடந்ததால் ஏற்படும் கீல்வாதம், நடப்பதால் சமனமாதல்.

**டிஜிடாலிஸ் :** பாதங்களில் நீர்சுரப்பு. கைகளும் கால்களும் சில்லிடல். விரல்கள் மறத்தல். சரீரம் முழுதும் நீர் சுரப்பு.

**டூக்ரியம் :** கால் கட்டை விரல்களின் நகங்கள் சரிவர வளராமை ரணங்கள், எலும்புகளில் வலி. நடப்பதால் சமனம்.

**டெல்லூரியம் :** வலது பக்கத் துடை நரம்பில் வலி. முழங்கால் மடங்குமிடத்திலுள்ள நரம்புகள் இழுத்துக்கொள்ளுதல்.

**ட்ரோஸிரா :** கால்களின் மூட்டுகளில் பிடிப்பு. கை கால்களில் வலி.

**ட்யூபர்குலீனம் :** கை கால்களிலும், மூட்டுகளிலும் இடம்விட்டு இடம் மாறும் வலிகள். பிடிப்புகள், அசைக்க முடியாமை. வலிகள் உஷ்ணத்தினல் சமனம். அசைவால் அதிகம் பிடிப்பு வலிகள்.

**தராக்ஸகம் :** அமைதியின்மை. முழங்கால்களில் நரம்பு சம்பந்த வலி அமுக்குவதால் சமனம். கை கால்களைத் தொடுவதால் வலி.

**தாலியம் :** பாரிசவாயு. நடுக்கல். எலெக்ட்ரிக்ஷாக் போன்ற வலிகள். ஈட்டிகள் குத்துவதுபோன்ற வலி. துடை நரம்பு வலி.

**துஜா :** தனது கால்கள் மரத்தினுலோ கண்ணுடியாலோ செய்யப்பட்டது போலும், நடந்தால் உடைந்துவிடும் போலும் தோன்றுதல். விரல்களின் நுனி வீங்கியும் சிவந்தும். ஸ்மரணையற்றுமிருத்தல். தசைகளில் துடிப்புகள். பலஹீனம். நடுக்கல்கள். நொறுங்கும் நகங்கள்.

**தெரிபிந்த் :** கால்களை நிமிர்த்தி நீட்டினுலும் அல்லது விரல்களால் அமுக்கினுலும் வலி யேற்படுதல்.

**நக்ஸ் மாஸ்சாடா :** கால்களில் பலஹீனம், மறத்துப்போதல். ஊசிகளால் குத்துவது போலிருத்தல். பாரிசவாயு போன்ற பலஹீனம், ஈர நப்புள்ள பருவங்களில் வலி அதிகரித்தல்.

**நக்ஸ்வாமிகா :** குத்துவலியுடன் பாரிசவாதம். காலை நேரங்களில் கை கால்களிலும், முதுகிலும் குளிர்ந்த உணர்ச்சி. கை கால்கள் நடுங்குவதாலும் பாதங்களில் குறுகுறுப்பான உணர்ச்சி. (இருதயத்தில் பார்க்க.)

**நாப்தலேன் :** துடை நரம்பு வலி. மறத்த உணர்ச்சி. (உபாதி அதிகம்.–படுத்திருத்தல், நடத்தல்) (உபாதி சமனம்:— நாற்காலியில் கால்களைத் தொங்கவிட்டு உட்காருதல்) கால் கட்டை விரலில் வாயு.

**நாஜா :** கை கால் ஊதிக் கனத்தல்.

**நேட்ரம் ஆர்ஸனிகம் :** நடக்கும்போது தலை சுற்றுதல், அசதி. கால் ஆடுதசைகளில், கெண்டையேறுதல், துடையிடுக்கில் தோலுரிதல், கைகளும், கால்களும் சில்லென்றிருத்தல். கால்களில் நீரதைப்பு மூட்டுகளில், பிடிப்புகள். அங்கு மிங்கும் தோன்றும் கீல் வாயு வலிகள்.

**நேட்ரம் கார்பானிகம் :** பலவிடங்களில் வலியுடன் நடக்கும்போது கீழே விழுவது போலிருத்தல். கால்களின் ஆடுதசைகளின் கெண்டையேறுதல், கீழ்க் கால் வீங்குதல்,

சிவந்திருத்தல் ரணங்கள். கணுக்கால்களில் பலஹீனம், பாதங்களின் அடிப்புறத்தில் வலி, குதிகால்களில் ரணம், கணுக்கால்களின் பலஹீனத்தால் நிற்கவும், நடக்கவும் முடியாமை.

**நேட்ரம் மூரியாடிகம் :** கணுக்கால்களில் பலஹீனம். தசைகள் தாறுமாருக இறுகிக் கொண்டு அதனுல் இழுத்துக் கொள்ளல், கை கால்களெல்லாம் தூங்கிவிட்டது போலிருத்தல்.

**நேட்ரம் ஸல்ப்யூரிகம் :** திடீரென்று எழுந்திருக்கும்போது இடது இடுப்பில் தாங்கமுடியாத வலி, இடது இடுப்பில் குத்துவது வெட்டுவது கிழிப்பது போல் வலி, பாதங்கள் சுரத்தல், முழங்கால் பிடிப்பு. இரவுகளில் இடுப்பில் அற்பமான வலி. காலையில் படுக்கையை விட்டு எழுந்த பின் சமனம்.

**நைக்டாந்தஸ் :** துடை நரம்புகளில் வாயு வலி, கீல் வாயு.

**பல்லாடியம் :** வலது சினைப்பையிலிருந்து துடைக்குச் செல்லும் குத்து வலி.

**பல்ஸடில்லா :** மாதவிடாய்க் காலங்களில் பாதங்களில் வீங்குதல். போக்கு நன்ருக வெளிப்பட்டால் சமனம். ரத்தவோட்டம் சரிவர இன்மை, உள்ளவயவங்களில் தாபிதம், சீழ் பிடிக்கும் போலிருத்தல், நோயுற்ற உறுப்புகள் இளைத்தல். உட்கார்ந்திருக்கும்போது கால்கள் மறத்துவிடுதல். அறையிடுக்குகளில் வலியுள்ள கட்டிகள்.

**பாப்டீஷியா :** இடுப்பிலும் கால்களிலும் இழுக்கும் உணர்ச்சி. முழங்கால்களிலும், கால்களிலும் பலஹீனம் கை கால்கள் தனித் தனியே பிரிந்து படுக்கையில் சிதறிக் கிடப்பதுபோன்ற உணர்ச்சி. இவைகளை ஒன்று சேர்க்கப் பாடுபாடுவதுபோல் கை கால்களை அடித்துக்கொள்ளல். இடது கையும் காலும் உணர்ச்சியற்றிருத்தல்.

**பாரிடா கார்ப் :** கால்களில் நாற்ற வியர்வை பாதங்களும் விரல்களும் நொந்திருத்தல், வயோதிகர்களின் மனக்குழப்பம் கை கால் நடுக்கல், இழுப்பது, கிழிப்பதுபோன்ற வலிகள்.

கீல்களில் பிடிப்புகள், குளிர் காலத்தில் அதிகரிக்கும் கீல்வாதம், அக்குளின் கோளங்கள் பருத்திருத்தல், கைகளிலும் கால்களிலும், முதுகிலும் பாலுண்ணிகள், முழங்கால்களில் திடீரென்று ஏற்படும் வலிகள், இரவுகளில் வெகுதூரம் நடந்ததால் ஏற்படும் வலியைப் போல் கடுப்பு வலிகள், துடைகளில் அடிபட்டது போல் வலி, குழந்தைகளுக்கு கால்கள் நன்ருக வளர்ந்திருந்தாலும், தாமதமாக நடக்கக் கற்றுக்கொள்ளுதல், துடையில் பிடிப்பு வலி, கால் நரம்புகள் குட்டையாக இருப்பது போன்ற இழுப்புகள், பாரிச வாயு போன்ற பலஹீனம். நடுக்கல்கள், பாதங்கள் மறத்திருத்தல்.

**பாரிடா மூரி:** பாதங்கள் வீங்குதல், நடுங்குதல், திடீரென்று கை அல்லது கால் இழுத்துக் கொள்ளுதல், (முக்கியமாய் இரவில்) (கையில் பார்க்க.) நடக்கும்போதே தள்ளாடுதல்.

**பாரிஸ்:** விரல்களில் சுரணையின்மை.

**பாஸ்பரஸ்:** முகம் கை கால்களில், நீர்ச் சுரப்பு முழங்கால்களில் வாயு பிடிப்புகள், முழங்கால்களிலிருந்து பாதங்கள் வரை வலி; மாலைகளில் பாதங்கள் வீங்குதல், அசைத்தால் கை கால்கள் வீங்குதல், சில்லென்றிருத்தல், கை கால்களில் பலஹீனத்தாலும், விரைப்பாக விருப்பதனுலும் நடக்கும்போது இடருதல், நீடித்த சுரத்தின் பின் கை கால்களில் வீக்கம், குத்துவலி, இடுப்பிலிருந்து முழங்கால்கள் வரை திருகுவது போன்ற வலி, இடுப்பெலும்புகளில் சொத்தை விழுதல். தாங்கமுடியாத வலி, தண்ணீர் போன்ற சீழ் வெளிப்படல், குனிந்து நிமிரும்போது இடுப்பில் வலி, நடக்கும்போது கள் குடித்ததுபோல் தள்ளாடுதல்.

**பிஸ்மத்:** கால்களிலும், கைகளிலும் கெண்டையேறுதல், சில்லென்றிருத்தல்.

**புபோ:** இடுப்பில் வலி, கால்களில் அசதி, கெண்டையேறுதல். நடக்கும்போது தள்ளாடுதல், எலும்புகள் வீங்குதல், மூட்டுகளில் ஒரு மூளையை வைத்து இறுக்குவதுபோன்ற உணர்ச்சி.

**பெர்பெரீஸ் வல்கேரிஸ் :** கால்களில் கீல்வாயு சம்பந்த வலி. குதி கால்களில் ரணப்பட்டதுபோல் வலி, சிறிது தூரம் நடந்தாலும் கால்களில் அதிக பலஹீனம்.

**பெர்ரம் மெடாலிகம் :** பாதங்கள் சில்லிப்பு. தலையில் சூடு, இடுப்பில் பிடிப்பு, இது மெதுவாக நடந்துகொண்டிருப்பதால் சமனம். இடுப்பு, மூட்டு, காலெலும்புகள். குதிகால்கள், உள்ளங்கால்களில் வலி. சரீர தாது நீர்கள் அதிகமாக வெளியேறிய பின் ஏற்படும் நீரதைப்பு

**பெல்லடோன்னு :** நடக்கும்போதே தள்ளாடுதல், வாதம், (மூட்டுகளில் பார்க்க.) அபானத்தில் வலி, எரிச்சலால் கால்களைக் கட்டி வைத்துக்கொள்ள நேரிடல், பிரதி தடவை அடியெடுத்து வைக்கும்போதும், விண் விண்னென்று தெறிக்கும் தலைவலி.

**பெல்லாண்ட்ரியம் :** நடக்கும்போது தளர்ந்து தள்ளாடுதல்.

**பைடொலக்கா :** பாதங்களில் ஆறாத ரணங்கள், குதிகால்களில் மந்த வலி. (வாதத்தில் பார்க்க.)

**பைரோஜினியம் :** கைகள், கால்கள். பாதங்கள் இவைகள் மறத்துப் போதல், காலையில் எழுந்தவுடன் அதிக பலவீனம், கை, கால் சில்லிட்டு உணர்ச்சியற்றிருத்தல்

**போடோபில்லம் :** இடுப்பில் வலி, வலது அக்குளில் வலி ஆரம்பித்து துடையின் உள் பக்கத்தின் வழியாக முழங்கால்களுக்குச் செல்லுதல், இடது பக்கப் பக்ஷவாதம்.

**போவிஸ்டா :** விண்ணென்றிருத்தல்.

**ப்ரையோனியா :** முழங்கால்களில் பிடிப்புகள், மூட்டுகள் சிவந்தும், வீங்கியும், உஷ்ணமாகவும். பிடிப்பு வலியுடனும் அசைவால் வலியதிகமாகிக் கொண்டும் இருத்தல். அமுக்கினுல் வலி சமனமாதல்.

**ப்ளம்பம் :** பக்ஷவாதம், துடைகளின் தசைகளில் வலி, ஆடு தசைகளில் கெண்டையேறுதல், பாதங்கள் வீங்கியிருத்தல் கை கால் சில்லென்றிருத்தல். வலது கால் கட்டை விரலில் பிரதியிரவிலும் வலி.

**ப்ளாட்டினு :** பக்ஷவாதம். துடைகள் கனமாகஇருத்தல். இவைகளில் கெட்டியாகத் துணியைச் சுற்றியிருப்பது போன்ற உணர்ச்சி கால்கள் பக்ஷவாயுவால் பீடிக்கப் பட்டது போலிருத்தல்.

**மங்கானம் :** கால்களில் பலஹீனம், பக்ஷவாதம். இரவுகளில் கால்களில் நோண்டுவது போன்ற வலிகள். தொட்டால் அதிக வலி. முழங்கால், கணுக்கால், மூட்டுகளில் அழற்சி. வீக்கம். இடது கால் பெருவிரலில் இரவுகளில் தாங்க முடியாத வலி.

**மெக்னீஷியா கார்ப் :** பொதுவாகச் சரீரம் முழுதும் இரவுகளில் கீல்வாத வலிகள், இவைகள் நடப்பதால் சமனம். அதிக மாக நடந்தால் காலில் இழுப்பது போன்ற வலிகளும், அமைதியின்மையும். இது கால்களையும், பாதங்களையும் அசைத்துக்கொண்டேயிருப்பதனுல் சமனம். விரல்களில் சிவப்பும். நீர் சுரப்பும், கால் கெண்டைச் சதைகளில் இரவுகளில் வலி.

**மெக்னீஷியா பாஸ் :** துடையின் இருபக்க நரம்புகளில் வலி.

**மெக்னீஷியா மூரியாடிகா :** பாதங்கள், கால்கள், வயிறு வீங்குதல். உட்கார்ந்துகொண்டிருக்கும்போது கால்களில் பல ஹீனம். கை கால்களில் இழுக்கும் வலி.

**மெடோரினம் :** இடுப்பைச் சுற்றிலும் வலி ஆரம்பித்துத் துடை களுக்குச் செல்லுதல். இரவு முழுதும் கால்களில் வலி. இதனுல் தூக்கமின்மை, கால்களை ஆட்டிக்கொண்டே யிருத்தல். கால்களின் ஆடுதசைகளிலும் உள்ளங்கால் களிலும் கெண்டையேறுல், மணிக்கட்டுகளில் வீக்கம்.

**மெபைடிஸ் :** கால்கள் எப்போதும் ஆடிக்கொண்டேயிருத்தல்.

**மெர்க்குரியஸ் ஸல்பேட் :** கால்களில் வீக்கம்.

**மெர்க்குரியஸ் ஸொலுபுலிஸ் :** இடுப்பிலும், முழங்காலிலும் குடைச்சல், வலி, பாதங்களில் சில்லென்ற வியர்வை கால்கள் நடுங்குதல். பாதங்கள் சுரந்திருத்தல்.

**யூபடோரியம் பர்போலியேடம் :** மணிக்கட்டுகள் உடைந்த அல்லது நசுக்கப்பட்டது போன்ற வலி. பாதங்கள்

கணுக்கால்கள் நீர் சுரப்பு. நடக்கும்போது வலது இடுப்பி லிருந்து குதிகால்வரை வலி, பாதங்கள் சில்லென்றிருத்தல். பாதங்களில் கடுப்பு, நடப்பதால் வலி அதிகம்.

யூஸ்டிலாகோ: துடையிலிருந்து முழங்காலுக்குப் பாயும் வலி. வயிற்றிலிருந்து துடை வழியாக முழங்காலுக்குப் பாயும் வலி.

ரஸ் டாக்ஸ்: அதிக நேரம் உட்கார்ந்திருந்தாலும், கால்களைத் தொங்கவைத்துக் கொண்டிருந்தாலும், பாதங்களும் கணுக்கால்களும் சுரந்து வருதல். எல்லா வலிகளும் மெதுவாக நடந்துகொண்டேயிருப்பதால் சமனம். அசையாமலிருந்தால் அசௌகர்யம்.

ரானங்குலஸ்: துடைகளில் இழுக்கும் வலி. கால் பலவீனம். பித்தவெடி, குதிகால் வெடிப்பு.

ரிஸிநஸ்: கால் தசைகளில் முறுக்கு வலி.

ரூடா: கை கால்களில் வலி, மூட்டுகள் வலித்தல். வலது மணிக்கட்டிலும், இடது பாதங்களிலும் கீல்வாதம், கால், முகம், கண் பக்ஷவாதம். பாதிக்கப்பட்ட பாகங்களில் குத்துவலி, எரிச்சல். இடுப்பு, துடை பலவீனம். நாற்காலியிலே உட்கார்ந்துவிட்டு எழுந்தவுடன் நடக்க முடியாமல் கால்கள் தள்ளாடுதல்.

ரோடோடெண்ட்ரன்: கால்களை ஒன்றின்மேலொன்றாக வைத்துக் கொண்டாலொழிய தூக்கம் வருவதில்லை. கைகளிலும் கால்களிலும் இழுக்கும் வலிகள். இவை இரவுகளிலும், மழைக் காலங்களிலும் அதிகமாக இருத்தல். அப்போது அங்கே ரத்தவோட்டம் நின்றுவிடுவது போன்ற உணர்ச்சி. முழங்கால்களில் வெண்மை நிறமுள்ள வீக்கம். முழங்கால்களுக்குக் கீழே சில்லிட்டிருத்தல். பாதங்கள் அடிக்கடி மறத்து விடுதல். கால்கள் கனமாக இருக்கும் உணர்ச்சி. அங்குமிங்கும் ஓடும் வலிகள். துடையில் இழுக்கும் வலிகள்.

லாக்கெஸிஸ்: இடது பக்கத் துடை நரம்பு வலிகள். பாதங்களிலும் விரல்களிலும் ஆறாத ரணங்கள். மூட்டுகளில் நீலநிற

முள்ள வீக்கங்கள். கால்களும் பாதங்களும் வீங்குதல். உள்ளங்கைகளும் கால்களும் இரவில் எரிதல்.

**லாரோஸிராஸஸ் :** உட்கார்ந்திருந்தால் கால்கள் மறத்துப் போதல். முழங்கால்களிலிருந்து பாதங்கள் வரை சில்லென்றும் ஈரப்பசையுடனுமிருத்தல்: சருமமும், பாதங்களும் சில்லென்று ஈரப்பசை யுடனுமிருத்தல்.

**லிதியம் கார்ப் :** வலது குதிகால் துடிப்பு. இடது பாகத்தின் நடுவிலிருந்து முழங்காலுக்கேறும் வலி.

**லேடம் பாலஸ்த்ரி:** கை கால்கள் வீங்கியிருத்தல். பாண்டு வீக்கம், பாதிக்கப்பட்ட பாகங்கள் முதலில் வீங்கி அதன்பின் இளைத்தல். பாதங்களில் எரிச்சல், கீல்வாதம். பாதங்களிலிருந்து மேல்நோக்கிப் பரவுதல். மாலையில், உள்ளங்கால்களில் உஷ்ணமான உணர்ச்சி. வியர்வை கசிதல். முழங்கால்வரை வீங்கியிருத்தல் அடிபட்டதாலேற்பட்ட நகச்சுற்றிகள். கணுக்கால் மூட்டில் சுளுக்கு விழுந்ததைப்போல் வலிகள். நடப்பதால் கீல்வாத வலிகள். குளிர்ந்த ஒற்றிடங்களாலும், தாராளமாகச் சிறுநீர், பிரிவதாலும் வலிகள் சமனம். காலை நேரத்தில் கால்கள் விரைப்பாகவிருத்தல், பாதங்களிலிருந்து மேல் நோக்கிச் செல்லும் வாதம், கணுக்கால்கள் வீங்குதல். பாதங்களும் உள்ளங்கால்களும் வலியெடுத்தல். படுக்கைச்சூடு, சகிக்கமுடியாமை. முழங்கால் மூட்டுகளில் வீக்கம். வலி சில்லென்றிருத்தல், அசைவு. உஷ்ணத்தால் வலி அதிகரித்தல்.

**லைகோபோடியம் :** இடுப்பிலிருந்து துடைகள் வரையில் வலி, முழங்கால்கள் விறைத்தும் வீங்கியுமிருத்தல். ஒரு கால் சில்லென்றும் மறு கால் உஷ்ணமாகவும், இருத்தல். கால்களின் அசுத்த ரத்தக் குழாய்கள் வீங்கிப் பருத்திருத்தல். பாதங்கள் சில்லென்றிருத்தல்-

**வலேரியானு :** இடுப்பிலும் துடைகளிலும் வலி, நின்று கொண்டிருந்தால் அதிக வலி, நடந்தால் சமனம். துடைகள் உடைந்துவிடும் போல் அவ்வளவு வலி, திடீர் திடீரென்று தூக்கிப் போடும் வலிகள். அசையாமலிருக்கும்

போது கை கால்களில் கிழிக்கும் வலி, அசைய ஆரம்பித்தால், மேலும் கீழும் ஏறி இறங்கும் இழுக்கும் வலிகள், கால்கள் ஆகாயத்தில் மிதப்பது போல் கனமற்ற உணர்ச்சி.

**வெராட்ரம் ஆல்பம்:** பக்ஷவாத பலஹீனம். வலிகள், கணுக்கால்களில் கெண்டையேறுதல், (கைகளில் பார்க்க).

**ஜட்ரோபா:** ஆடு தசைகளில் கெண்டையேறுதல், முறுக்கல், குளிர்ந்த தண்ணீரால் சமனம்,

**ஜெல்ஸீமியம்:** இழுக்கும் வலிகள், துடைகளிலிருந்து கட்டைவிரலுக்குச் செல்லும் வலிகள், நடந்தாலதிகரித்தல், கால்களில் சில்லென்ற உணர்ச்சி, சக்தியின்மை, இடுப்புக்குக் கீழே ஏற்படும் பக்ஷவாதம், கால்கள் சில்லென்றிருத்தல், கால்கள் கனமாக விருத்தல், நடக்கும்போது குடித்தவனைப் போல் நடத்தல்.

**ஸபீனு:** இரவுகளில் கால்களில் கடுப்பு வலி.

**ஸரஸபரில்லா:** கைகளும், பாதங்களும் நடுங்குதல், இரவில் எலும்பு வலிகள். (இரவு மழைக்காலங்களில் அதிகம்) அசையும்போது பிடிப்புகள், விரல்களில் ஆழமான வெடிப்புகள், துடை முழங்கால் பலஹீனம். பாதங்கள் சில்லென்றிருத்தல்.

**ஸல்பர்:** நடந்தால் கால்கள் கனமாகஇருக்கும் உணர்ச்சி, முழங்கால் மூட்டுகள் வீங்கியிருத்தல், கால்களிலேற்பட்ட நீடித்த ஆருத ஆழமுள்ள ரணங்கள், பாதங்களில் எரிச்சல், உள்ளங்கால்களில் எரிச்சல், கால்களை சில்லென்றிருக்கும் தரையில் வைத்துக்கொண்டால்தான் தூங்க முடியும், நிமிர்ந்து நடக்க முடியாமை, நடக்கும்போது தள்ளாடுதல், நிற்க முடியாமை.

**ஸாங்குநேரியா:** உள்ளங்கால் எரிச்சல், வலியுள்ள பாகத்தைத் தொட்டால், வலி நின்றுவிடுதல்.

**ஸாம்புகஸ்:** கைகள், பாதங்கள் உப்புதல்.

**ஸானிகுலா:** பாதங்களில் வியர்வை, உள்ளங்கால் எரிச்சல்.

**ஸிகூடா விரோஸா :** பலவிதமாக இழுக்கப்படுதல், அடிக்கடி கைகளிலும், கால்களிலும் திடீரென்று தூக்கிப் போடும் உணர்ச்சி.

**ஸிங்கம் பாஸ் :** கால்களை எப்போதும் ஆட்டிக்கொண்டே யிருத்தல்.

**ஸிங்கம் மெட் :** கால்கள் எப்போதும் ஆடிக்கொண்டேயிருத்தல். இரவுகளில் பாதங்கள் சில்லென்றிருத்தல், ஒரு பக்கம் அல்லது இருபக்க பக்ஷவாதம்.

**ஸிபிலீனம் :** துடை நரம்புகளில் வலி.

**ஸிலீகா :** நகங்களின் கோளாறுகள், பாதங்களில் (நாற்றத்துடன்) வியர்வை, சில்லென்றிருத்தல், விரல்களின் நுனியில் நகச்சுற்று ஏற்படுவதுபோல் வலி, முழங்கால்களில் இறுக்கிக் கட்டி இழுப்பதுபோல் வலி, பாதங்களின் அடிப்பாகங்கள் நொந்திருத்தல், குதிகால்களில் சதையைத் தின்னும் இரணம்.

**ஸிஸ்டஸ் :** முழங்கால்களில் வெண்மையான வீக்கம், பாதங்கள் சில்லென்றிருத்தல், இரணங்களைச் சுற்றியும் கறடுதட்டிய வீக்கங்கள்.

**ஸீகேல் :** சில்லிடல், வெளுத்தல், மறத்தல், உணர்ச்சியின்மை. சுடுதண்ணீர்ஊற்றியது போல் இடுப்புக்குக் கீழ் பக்ஷவாதம் விரல்களில் அழுகிய ரணங்கள், இடுப்புக்குக்கீழ் பக்ஷ பாதம் அல்லது ஒரு கைகால் பக்ஷவாதம், நோயுற்ற பாகங்களில் பூச்சிகள் ஊறும் உணர்ச்சி. மறத்தல், சில்லிடல், நடக்கும்போது தள்ளாடுதல். தலை கனமாக விருக்கும் உணர்ச்சி. கால்களில் குறுகுறுத்த உணர்ச்சி. நாடித்துடிப்புகள் பலமாகவிருத்தலால் நடக்க முடியாமை.

**ஸீமெக்ஸ் :** கால்களை நீட்ட முடியாமை, முழங்கால்களில் முடக்கம்.

**ஸெபியா :** கால்களில் பலஹீனம், பிடிப்பு. வேலைசெய்யும்போது கால்கள் மறத்தல், எல்லா உறுப்புகளிலும் இழுப்புகள், துடிப்புகள், சுண்டெலியோடும் உணர்ச்சி. (கைகளில் பார்க்க) உபாதி சமனத்திற்கு எப்போதும் கால்களை

ஒன்றின்மேலொன்றாகப்போட்டு அமுக்கி வைத்துக் கொள்ளுதல். புணர்ந்த பின் பெண் குறியில் வரண்ட உணர்ச்சியால் நடக்க முடியாமை, நடக்கும்போது அடி வயிறு கனத்தல்.

**ஸெலீனியம்:** கை கால் இளைத்தல். நடுக்கல், நோயுற்ற பாகங்கள் இளைத்தல்.

**ஸைக்ளமென்:** முழங்கால்களில் பலஹீனம், நடக்கும்போதும், நிற்கும் போதும் குதிகால்களில் வலி, எரிச்சல்

**ஸோரினம்:** துடை நரம்புகளில் வலி, நீடித்த கீல்வாதம், நகங்களைச்சுற்றிச் சீழ் பிடித்தல்.

**ஸ்குவில்லா:** கைகளும், பாதங்களும் சில்லிப்பு.

**ஸ்டாபிஸாக்ரியா:** விரல்களின் எலும்புகளில் அழற்சி, நுனிகள் மறத்துப்போயிருத்தல். நொந்த வலி, பலஹீனம்.

**ஸ்டானம்:** துடை முழங்கால்களில பலவீனம், கனம், உடனே உட்காரவேண்டிவருதல். துணிகளை உடுத்திக் கொள்ளும் போது பலதடவை உட்காரவேண்டி வருதல். மாலை நேரங்களில் கைகளும் கணுக்கால்களும் வீங்குதல். கை கால்களின் பக்ஷவாத பலவீனம், கனம். நடக்க முடியாமை.

**ஸ்டிக்டா:** முழங்கால்களில் அழற்சியுடன் கீல்வாதம், கால்கள் காற்றில் பறப்பது போன்ற வுணர்ச்சி, கை கால்களில் வீக்கம், இறுக்க வுணர்ச்சி: வலிகள் தாங்க முடியாமல் பிதற்றிக் கொண்டேயிருத்தல், இரவுகளில் கால்களும் பாதங்களும் துடித்தல், ஆடிக்கொண்டேயிருத்தல், இதனால் கைகளால் அமுக்கி வைத்துக் கொள்ள நேரிடல்.

**ஸ்ட்ரமோனியம்:** நடக்கும்போது தள்ளாடுதல், கைகள் அசைந்துகொண்டும், கால்கள் அசையாமலுமிருத்தல். துடிப்புகள். நடுக்கல்கள் கால்கள் சில்லிடல், இருட்டில் நடக்க யத்தனித்தால் தலை சுற்றுதல்.

**ஸ்பாஞ்ஜியா:** வலது கட்டை விரலில் முறுக்கும் வலி, இது பகற்காலங்களில் அதிகம், மாதவிடாய்க் காலத்தில் கால்களில் இழுக்கும் உணர்ச்சி, கால்களில் மரமரப்பு.

**ஸ்பைஜீலியா :** மூட்டுகளில் பிடிப்பு வலி, குத்து வலி.

**ஹீபார் ஸல்பர்:** நகச்சுற்றி, நகங்கள் கெட்டிப்பட்டும், உடையும் தன்மையுள்ளதாகவுமிருத்தல். பாதங்களில் வெடிப்புகள்.

**ஹெலோனியாஸ் :** முதுகு, கால்களில் அசதி.

**ஹெல்லிபோரஸ் :** ஒரு கையும், ஒரு காலும் ஒரே மாதிரியாக அசைந்து கொண்டேயிருத்தல், (வலிப்பில் பார்க்க.) கால்கள் மேலேயிறுக்கப்பட்டிருத்தல், கால்கள் சுரந்திருத்தல், திடீரென்று பாதங்கள் வீங்குதல், விரல்களின் இடுக்கில் கொப்புளங்கள், எப்போதும் ஒரு கையும் ஒரு காலும் ஆடிக்கொண்டே யிருத்தல், நடக்கும்போது தள்ளாடுதல். கை, கால், இதர உறுப்புக்கள் தன்னுணர்வின்றி அசைதல்.

**ஹைட்ரோகோடைல் :** யானைக்கால்.

**ஹைபெரிகம் :** இடுப்பில் பிடிப்பு. கால்களில் கெண்டையேறுதல். விரல்களின் நுனிகளில் வலி. கை கால்களில் பூச்சிகள் ஊறும் உணர்ச்சி. அடிபட்டதாலேற்படும் உபாதிகள்.

# வலது கால்

**அக்னஸ் காஸ்டஸ் :** வலது கால் கனம்.

**அர்ஜண்டம் மெடாலிகம் :** வலது முழங்காலில் வாதம்.

**க்வாய்கம் :** வீங்கிக் குறுகியிருத்தல்.

**டயஸ்கோரியா :** வலது துடை நரம்புகளில் வலி.

**டெல்லூரியம் :** வலது துடை நரம்பில் வலி.

**ப்ளம்பம் :** வலது கால் கட்டைவிரலில் பிரதி இரவிலும் வலி.

**யூபடோரியம் பர்போலீயேட்டம் :** நடக்கும்போது வலது இடுப்பிலிருந்து குதிகால்வரை வலி.

**ரூடா :** வலது மணிக்கட்டிலும், இடது பாதங்களிலும் கீல்வாதம்.

**லிதியம் கார்ப் :** வலது குதிகால் துடிப்பு.

**ஸ்பாஞ்சியா :** வலது கட்டைவிரலில் முறுக்கும் வலி.

# இடது கால்

**அகேரிகஸ்:** இடது காலில் அதிக வலி. பெரிய எலும்பு உடைந்து விடும் போலிருத்தல். பக்ஷவாதம்.

**அகோனைட்:** மறத்தல்.

**அக்டியா ரஸிமோஸா:** நடுக்கம். ஒழுங்கின்றி யசைதல். கால் நிலைத்திராமை.

**அபிஸ் மெல்லிபிகா:** இடது முழங்காலில் வலி.

**அம்ப்ரா க்ரிஸியா:** இடது கால் நீலம் பூரித்தல்.

**அஸ்குலஸ் ஹிபோ:** இடது கையும், காலும் கனத்தும் வீங்கியு மிருத்தல்.

**காக்டஸ் க்ராண்டி:** நீர் வீக்கம்.

**காப்ஸிகம்:** இளைத்தல்.

**கார்போ அனிமாலிஸ்:** இடது துடையில் பலஹீனம்.

**காலீ ஐயோ:** இடது இடுப்பில் வலி, இடது துடை நரம்பு களில் வலி.

**காலோஸிந்தீஸ்:** இடது முழங்கால் மூட்டில் வலி.

**க்வாய்கம்:** கெண்டை வாங்குதல்.

**க்ளோனுயின்:** இடது துடையில் மறத்த உணர்ச்சி. இடது முழங்காலில் குத்தும் வலி.

**சிமாபிலா:** இடது கணுக்காலுக்குமேல் ஒரு நாடாவால் கட்டியிறுக்கும் உணர்ச்சி.

**பாப்டீஷியா:** இடது கையும் காலும் உணர்ச்சியற்றிருத்தல்.

**போடோபில்லம்:** இடது பக்கப் பக்ஷவாதம்.

**மங்கானம்:** இடது கால் பெருவிரலில் இரவுகளில் தாங்க முடியாத வலி.

**ரூடா:** இடது பாதங்களிலும் கீல்வாதம்.

**லாக்கெஸிஸ்:** இடது பக்கத் துடை நரம்பு வலிகள்.

**லீதியம் கார்ப்:** இடது பாதத்தின் நடுவிலிருந்து முழங்காலுக்கேறும் வலி.

# துடை.

**அம்ப்ரா க்ரீஸியா:** துடைகளின் மத்தியில் ரணவலி, வலது துடை குறுகிய உணர்ச்சி.

**அலுமினு:** அரிப்பு, எரிச்சல், சொரிவதால் சமனம்.

**அஸ்குலஸ் ஹிபோ:** துடையின் அசுத்த ரத்தக் குழாய்கள் பெருத்தல்.

**ஆண்டிமோனியம் டார்ட்டாரிகம்:** இடுப்பிலும் துடைகளிலும் வாதவலி.

**ஆரம் முரியாடிகம்:** குண்டியிலும் துடைகளிலும் கொப்புளங்கள், துடைகளில் விண்ணென்று வலி.

**ஆரம் மெடாலிகம்:** துடை எலும்புகள் வீங்கியிருத்தல்.

**இபிகாக் உனு:** கெண்டையேறுதல், வலது மூத்திரக்காயிலிருந்து குத்துவலியாரம்பித்து கீழே துடை வரையிலும், பிறகு முழங்கால் வரையிலும் செல்லுதல்.

**காக்குலஸ்:** காயம்பட்ட உணர்ச்சி.

**கார்போ அனிமாலிஸ்:** இடது துடை பலஹீனம்,

**காலீ ஐயோ:** இடது துடை நரம்புகளில் வலி.

**காலீ கார்ப்:** துடையில் வலி,

**க்ராபைடிஸ்:** துடைகளுக்கிடையே தோல் உரிந்து புண்ணுதல்.

**க்வாய்கம்:** வேலை செய்தபின் துடை, கை, கால்களில் அதிக ஓய்ச்சல். துடைகளில் பலவீனம்.

**க்ளோனுயின்:** இடது துடையில் மறத்த உணர்ச்சி.

**டயஸ்கோரியா :** துடை நரம்புகளில் வலி, வலது பக்கத்தில் அதிகம்.

**டெல்லூரியம் :** வலது துடை நரம்பில் வலி.

**தாலியம் :** துடை நரம்பு வலி.

**நாப்தலீன் :** துடைநரம்பு வலி, மறத்த உணர்ச்சி, (கால்களில் பார்க்க.)

**நேட்ரம் ஆர்ஸனிகம் :** துடையிடுக்கில் தோலுரிதல்.

**நைக்டாந்தஸ் :** துடை நரம்புகளில் வாயு வலி. கீல்வாயு வலி.

**பல்லாடியம் :** வலது சினைப்பையிலிருந்து துடைக்குச் செல்லும் குத்துவலி.

**பாரிடா கார்ப் :** அடிபட்டதுபோல் வலி, பிடிப்பு வலி.

**போடோபில்லம் :** வலது அக்குளில் வலியாரம்பித்துத் துடையின் உள் பக்கத்தின் வழியாக முழங்காலுக்குச் செல்லுதல்.

**ப்ளம்பம் :** துடைகளின் தசைகளில் வலி.

**ப்ளாட்டினு :** துடைகள் கனமாக இருத்தல், கெட்டியாகத் துணியைச் சுற்றியிருப்பது போன்ற உணர்ச்சி.

**மெக்னீஷியா பாஸ் :** துடையின் இரு பக்க நரம்புகளிலும் வலி.

**மெடோரினம் :** இடுப்பைச் சுற்றிலும் வலியாரம்பித்துத் துடைகளுக்குச் செல்லுதல்.

**யூஸ்டிலாகோ :** வயிற்றிலிருந்து துடை வழியாக முழங்காலுக்குப் பாயும் வலி.

**ரானங்குலஸ் :** துடைகளில் இழுக்கும் வலி,

**ரூடா :** துடை பலவீனம்.

**லாக்கெஸிஸ் :** இடது பக்கத்துத் துடை நரம்பு வலிகள்.

**லைகோபோடியம் :** இடுப்பிலிருந்து துடைகள் வரை வலி,

**வலேரியானு:** இடுப்பிலும் துடைகளிலும் வலி. நின்று கொண்டிருந்தால் அதிக வலி. நடந்தால் சமனம். துடைகள் உடைந்து விடும் போல் அவ்வளவு வலி.

**ஜெல்ஸிமியம்:** துடைகளிலிருந்து கட்டை விரலுக்குச் செல்லும் வலி. நடந்தாலதிகரித்தல்.

**ஸரஸபரில்லா:** பலவீனம்.

**ஸிபீலினம்:** துடை நரம்புகளில் வலி.

**ஸோரினம்:** துடை நரம்புகளில் வலி.

**ஸ்டானம்:** பலஹீனம், கனம்.

# முழங்கால்

**அக்னஸ் காஸ்டஸ்:** முழங்கால் சில்லிப்பு.

**அபிஸ் மெல்லிபிகா:** முழங்கால் சில்லிப்பு, இடது முழங்காலில் வலி.

**அப்ரோடனம்:** வயிற்றுவலியமுக்கப்பட்டதால் முழங்கால் வாதம்.

**அர்ஜண்டம் மெடாலிகம்:** நடக்கும்போது முட்டி தட்டுதல், வலது முழங்காலில் வாதம், முழங்கால்களிலும் அக்குளிலும் வீக்கம்.

**அனகார்டியம் ஓரி:** முழங்காலில் விரைப்பு, களைப்பு.

**ஆரம் மூரியாடிகம்:** முழங்கால் தள்ளாடுதல்.

**ஆரம் மெட்டாலிகம்:** முழங்கால் தள்ளாடுதல்.

**ஆர்னிகா:** நின்றுகொண்டிருக்கும்போது முழங்கால் மூட்டுகள் திடீரென்று வளைதல், முழங்கால்களில் வாத வலி, அடிபட்டது போல் வலி.

**ஆர்ஸனிகம் ஆல்பம்:** முழங்கால் மூட்டுகளில் வலி. கரப்பான், தேமல், படர்தாமரை.

**ஆஸிட் ஆக்ஸாலிக் :** களைத்துப்போனதுபோல் தோன்றுதல்.

**ஆஸிட் நைட்ரிக் :** பிடிப்பு.

**இபிகாக் உனு :** குத்துவலி, (துடையில் பார்க்க.)

**ஓலியாண்டர் :** நிற்கும்போது நடுங்குதல்.

**காக்குலஸ் :** நடக்கும்போது தள்ளாடுதல்.

**காக்டஸ் க்ராண்டி :** முழங்காலிலிருக்கும் வாதம் இதயத்தை பிடித்தல்.

**காப்ஸிகம் :** வின்ணென்றிருத்தல்.

**கார்ப்போ வெஜ் :** முழங்கால்களுக்கு கீழே சில்லிப்பு.

**காலீ ஐயோ :** கில்வாத வீக்கம்.

**காலோஸிந்திஸ் :** இடுப்பிலிருந்து முழங்கால் வரை, இடது முழங்கால் மூட்டில் வலி.

**கால்மியா :** இடுப்பில் இறுக்கும் வலி, முழங்கால், கால்களுக்கும் பரவுதல்.

**காஸ்டிகம் :** முழங்கால் மூட்டுகளில் உடையும் சத்தம்,

**குப்ரம் மெடாலிகம் :** காக்கை வலிப்பில் குளிர்காற்று உணர்ச்சி, முழங்கால்களில் ஆரம்பித்தல்.

**க்வாய்கம் :** நரம்பு குட்டையாகிவிடுதல்.

**க்ளோனுயின் :** பலவீனம், இடது முழங்காலில் குத்தும் வலி. அசைவதாலும் கால்களை நன்ருக நீட்டுவதாலும் சமனம்.

**டயஸ்கோரியா :** தூக்கத்தில் இந்திரியஸ்கலிதத்தால் முழங்கால் பலவீனம்.

**டெல்லூரியம் :** முழங்கால் மடங்குமிடத்திலுள்ள நரம்புகள் இழுத்துக்கொள்ளல்.

**தராக்ஸகம் :** முழங்கால்களில் நரம்பு சம்பந்த வலி, அழுக்குவதால் சமனம். கை கால்களைத் தொடுவதால் வலி.

**பாப்டீஷியா :** முழங்கால்களிலும் கால்களிலும் பலவீனம்.

**பாரிடா கார்ப்:** திடீரென்று ஏற்படும் வலிகள். இரவுகளில் வெகுதூரம் நடந்ததாலேற்படும் வலியைப்போல் கடுப்பு வலிகள்.

**பாஸ்பரஸ்:** முழங்கால்களில் வாயுப் பிடிப்பு, முழங்கால்களிலிருந்து பாதங்கள் வரை வலி. இடுப்பிலிருந்து முழங்கால்கள் வரை திருகுவலி.

**போடோபில்லம்:** வலது அக்குளில் வலியாரம்பித்துத் துடையின் உள்பாகத்தின் வழியாக முழங்கால்களுக்குச் செல்லுதல்.

**மங்கானம்:** முழங்கால், கணுக்கால் மூட்டுகளில் வீக்கம் அழற்சி.

**மெர்க்குரியஸ் ஸொலுபுலிஸ்:** இடுப்பிலும், முழங்காலிலும் குடைச்சல் வலி.

**யூஸ்டிலாகோ:** வயிற்றிலிருந்து துடை வழியாக முழங்காலுக்குப் பாயும் வலி.

**ரோடோடெண்ட்ரன்:** முழங்கால்களில் வெண்மை நிற வீக்கம். முழங்கால்களுக்குக் கீழே சில்லிடல்.

**லாரோஸிராஸஸ்:** முழங்கால்களிலிருந்து பாதங்கள் வரை சில்லென்றும் ஈரப் பசையுடனுமிருத்தல்.

**லிதியம் கார்ப்:** இடது பாகத்தின் நடுவிலிருந்து முழங்காலுக்கேறும் வலி.

**லேடம் பாலஸ்திரி:** முழங்கால் மூட்டுகளில் வீக்கம் வலி. சில்லென்றிருத்தல், அசைவு, உஷ்ணத்தால் வலியதிகரித்தல்.

**லைகோபோடியம்:** விறைத்தல். வீங்கியிருத்தல்.

**ஸாரஸபரில்லா:** பலவீனம்.

**ஸல்பர்:** மூட்டுகள் வீங்கியிருத்தல்.

**ஸிலிகா:** முழங்கால்களில் இறுக்கிக் கட்டி இழுப்பது போல் வலி.

ஸிஸ்டஸ் : வெண்மையான வீக்கம்.

ஸீமெக்ஸ் : நீட்ட முடியாமை, முழங்கால்களில் முடக்கம்.

ஸைக்ளமென் : பலவீனம்.

ஸ்டானம் : பலவீனம், கனம்.

ஸ்டிக்டா : அழற்சியுடன் கீல்வாதம்.

# கால் மூட்டுகள்

அமோனியா கார்ப் : நடக்கும் போது மூட்டுகளில் வலி.

அர்ஜண்டம் மெடாலிகம் : மூட்டுகளில் ரணவலி.

அஸ்குலஸ் ஹிபொ : மூட்டுகளில் விரைப்பு வாதம். உஷ்ணத்தால் சமனம்.

ஆர்னிகா : முழங்கால் மூட்டுகள் நின்று கொண்டிருக்கும்போது வலித்தல்.

கார்டூஸ் மரியேனஸ் : இடுப்பு மூட்டில் வலிகள்.

கார்பன் ஸல்ப் : மூட்டுகளில் நீடித்த வாதம்.

காலோ ஸிந்திஸ் : இடது முழங்கால் மூட்டில் வலி.

காஸ்டிகம் : முழங்கால் மூட்டுகளில் உடையும் சத்தம்

க்ளமேடிஸ் எரெக்டா : விரல் மூட்டுகளில் வீக்கம்.

சைனு : மூட்டுகள் வீங்கி அதிக வலியுடனிருத்தல்.

ட்ரொஸிரா : மூட்டுகளில் பிடிப்பு,

ட்யூபர்குலீனம் : இடம் விட்டு இடம் மாறும் வலிகள்.

நேட்ரம் ஆர்ஸனிகம் : மூட்டுகளில் பிடிப்புகள்.

பாரிடா கார்ப் : கீல்களில் பிடிப்புகள், குளிர் காலத்தில் அதிகரிக்கும் கீல்வாதம்,

புபோ : ஒரு முனையைவைத்து இறுக்குவது போன்ற உணர்ச்சி

**பெர்ரம் மெடாலிகம்:** இடுப்பு மூட்டில் வலி.

**ப்ரையோனியா:** சிவந்து வீங்கி உஷ்ணமாகவும், பிடிப்பு வலியுடனும் அசைவால் வலியதிகமாகிக் கொண்டும் இருத்தல், அமுக்கினால் வலி சமனமாதல்.

**மங்கானம்:** முழங்கால், கணுக்கால் மூட்டுகளில் அழர்ச்சி, வீக்கம்.

**ரூடா:** மூட்டுகளில் வலி.

**லாக்கெஸிஸ்:** மூட்டுகளில் நீல நிற வீக்கங்கள்.

**லேடம் பாலஸ்திரி:** கணுக்கால் மூட்டில் சுளுக்கு விழுந்தது போன்ற வலிகள், முழங்கால் மூட்டுகளில் வீக்கம், வலி. சில்லென்றிருத்தல், அசைவு. உஷ்ணத்தால் வலி அதிகரித்தல்.

**ஸல்பர்:** முழங்கால் மூட்டுகள் வீங்கியிருத்தல்.

**ஸ்பைஜீலியா:** பிடிப்பு வலி, குத்து வலி.

# கணுக்கால்.

**சிமாபிலா:** இடது கணுக்காலுக்கு மேல் ஒரு நாடாவால் கட்டி இறுக்கும் உணர்ச்சி.

**நேட்ரம் கார்பானிகம்:** கணுக்கால்களில் பலஹீனம். இதனால் நிற்கவும் நடக்கவும் முடியாமை.

**நேட்ரம் பாஸ்:** கணுக்கால்களில் அரிப்பு.

**நேட்ரம் மூரியாடிகம்:** கணுக்கால்களில் பலஹீனம்,

**மங்கானம்:** கணுக்கால் மூட்டுகளில் வீக்கம், அழர்ச்சி,

**யூபடோரியம் பர்போலியேடம்:** கணுக்கால்களிலும், பாதங்களிலும் நீர் சுரப்பு.

**ரஸ் டாக்ஸ்:** அதிக நேரம் உட்கார்ந்திருந்தாலும், கால்களைத் தொங்க வைத்துக் கொண்டிருந்தாலும், பாதங்களும் கணுக்கால்களும் சுரத்தல்.

**லேடம் பாலஸ்திரி:** கணுக்கால் மூட்டில் சுளுக்கு விழுந்தது போன்ற வலிகள்.

**வெராட்ரம் ஆல்பம்:** கணுக்கால்களில் கெண்டையேறுதல்.

**ஸ்டானம்:** மாலை நேரங்களில் கைகளும், கணுக்கால்களும் வீங்குதல்.

# பாதம்.

**அபிஸ் மெல்லிபிகா:** வீக்கம்.

**ஆண்டிமோனியம் க்ரூடம்:** நடக்கும்போது பாதங்கள் மிருதுவாகவும் வலியுடனுமிருத்தல்.

**ஆஸிட் நைட்ரிக்:** பாதங்களில் நாற்ற வியர்வை.

**ஓலியாண்டர்:** மறமறத்த பாதங்கள்.

**காக்டஸ் க்ராண்டி:** நீர் வீக்கம்.

**காமோமில்லா:** இரவில் பாரிசவாயுவால் பலஹீனம்.

**கார்டுஸ் மரியேனஸ்:** நீர் வீக்கம். ஆடுதசைகளிலும் பாதங்களிலும் கெண்டையேறுதல்.

**கோல்சிகம்:** நீர் வீக்கம்.

**டிஜிடாலிஸ்:** பாதங்களில் நீர் சுரப்பு.

**நக்ஸ் வாமிகா:** குறுகுறுப்பான உணர்ச்சி.

**நேட்ரம் கார்பானிகம்:** அடிப்புறத்தில் வலி.

**நேட்ரம் ஸல்ப்:** பாதங்கள் சுரத்தல்.

**பல்ஸடில்லா :** மாதவிடாய்க் காலங்களில் பாதங்கள் வீங்குதல். போக்கு நன்றாக வெளிப்பட்டால் சமனம்.

**பாரிடா கார்ப் :** பாதங்களும், விரல்களும் நொந்திருத்தல், மறத்திருத்தல்.

**பாரிடா மூரி :** வீங்குதல், நடுங்குதல்.

**பாஸ் பரஸ் :** முழங்கால்களிலிருந்து பாதங்கள் வரை வலி. மாலை நேரங்களில் பாதங்கள் வீங்குதல்.

**பெர்ரம் மெடாலிகம் :** சில்லிப்பு.

**பைடொலக்கா :** ஆறுத ரணங்கள்.

**பைரோஜினியம் :** மறத்துப்போதல்.

**ப்ளம்பம் :** பாதங்கள் வீங்கியிருத்தல்.

**மெக்னீஷியா கார்ப் ;** கால்களையும் பாதங்களையும் அசைத்துக் கொண்டேயிருப்பதால் வலி சமனம்.

**மெக்னீஷியா மூரியாடிகா :** பாதங்கள், கால்கள், வயிறு வீங்குதல்.

**மெர்க்குரியஸ் ஸொலுபுலிஸ் :** பாதங்களில் சில்லென்ற வியர்வை. சுரந்திருத்தல்.

**யூபடேரியம் பர்போலியேடம் :** பாதங்கள், கணுக்கால்களில் நீர் சுரப்பு. பாதங்கள் சில்லென்றிருத்தல், கடுப்பு, நடப்பதால் வலி அதிகம்.

**ரஸ்டாக்ஸ் :** அதிக நேரம் உட்கார்ந்திருந்தாலும், கால்களைத் தொங்க வைத்துக் கொண்டிருந்தாலும், பாதங்களும் கணுக்கால்களும் சுரத்தல்.

**ரூடா :** இடது பாதங்களில் கீல்வாதம்.

**ரோடோடெண்ட்ரன் :** அடிக்கடி மறத்தல்.

**லாக்கஸிஸ் :** பாதங்களிலும், விரல்களிலும் ஆரூத ரணங்கள். பாதங்கள் வீங்குதல்,

**லாரோஸிராஸஸ் :** முழங்கால்களிலிருந்து பாதங்கள் வரை சில்லென்றும் ஈரப்பசையுடனுமிருத்தல்.

**லிதியம் கார்ப் :** இடது பாதத்தின் நடுவிலிருந்து முழங்காலுக்கேறும் வலி.

**லேடம் பாலஸ்திரி :** பாதங்களிலிருந்து மேல் நோக்கிப் பரவும் கீல் வாதம். பாதங்களில் வலி.

**லைகோபோடியம் :** பாதங்கள் சில்லென்றிருத்தல்.

**ஸரஸபரில்லா :** கைகளும் பாதங்களும் நடுங்குதல். பாதங்கள் சில்லென்றிருத்தல்.

**ஸல்பர் :** பாதங்களில் எரிச்சல்.

**ஸாம்புகஸ் :** கைகளும், பாதங்களும் உப்புதல்.

**ஸானிகுலா :** வியர்வை.

**ஸிங்கம் மெட்டாலிகம் :** இரவுகளில் பாதங்கள் சில்லென்றிருத்தல்.

**ஸிலிகா :** நாற்ற வியர்வை அடிப் பாகங்கள் நொந்திருத்தல்.

**ஸிஸ்டஸ் :** சில்லென்றிருத்தல்.

**ஸ்க்வில்லா :** பாதங்களில் சில்லிப்பு.

**ஸ்டிக்டா :** இரவுகளில் கால்களும் பாதங்களும் துடித்தல்.

**ஹீபார் ஸல்பர் :** பாதங்களில் வெடிப்புகள்.

**ஹெல்லிபோரஸ் :** திடீரென்று பாதங்கள் வீங்குதல்.

# குதிகால்

**அமோனியம்கார்ப் :** காலையில் குதிகாலில் வலி

**அலூமினு :** அடியெடுத்துவைக்கும்போது குதிகாலில் மரமரப்பு.

**காலீ பைக்ரோ :** நடக்கும்போது குதிகால்களில் வலி.

**நேட்ரம் கார்ப் :** குதிகால்களில் ரணம்.

**பெர்பெரீஸ் வல்கேரிஸ் :** ரணம்பட்டதுபோல் வலி.

**பெர்ரம் மெட்டாலிகம் :** வலி.

**பைடொலக்கா :** மந்த வலி.

**யூபடோரியம் பர்போலியேட்டம் :** நடக்கும்போது வலது இடுப்பிலிருந்து குதிகால்வரை வலி.

**ரானங்குலஸ் :** வெடிப்பு, பித்தவெடி.

**லீதியம்கார்ப் :** வலது குதிகால் துடிப்பு.

**ஸைக்ளெமென் :** நடக்கும்போதும், நிற்கும்போதும் குதிகால்களில் வலி, எரிச்சல்.

# கால் விரல்கள்

**அகோனைட் :** கட்டை விரல் ஆடுதல்.

**அமோனியா கார்ப் :** கட்டை விரல் சிவத்தல்.

**அயிலாந்தஸ் :** கட்டை விரல்களிலும், விரல் நகங்களிலும் பெரிய கொப்புளங்கள் அல்லது வேர்க்குரு போல் வெடித்தல்.

**அலுமினு :** கட்டைவிரல்களில் அரிப்பு, சிவத்தல்.

**அல்லியம் ஸீபா :** இடது நடு விரலிலும் கட்டை விரலின் மிருது வான பாகங்களிலும் வலி.

**ஆண்டிமோனியம் க்ரூடம் :** கட்டை விரல்களில் முட்கள் உண்டாதல்.

**ஆண்டிமோனியம் டார்ட்டாரிகம்:** விரல் நுனிகள் உணர்ச்சியற்றுக் கடினமாக காய்ந்திருத்தல்

**ஆரம் மூரியாடிகம் :** பெருவிரலிலும் வலி, சிவப்பு, நடக்கும் போது கட்டை விரலில் வெட்டும்வலி

**ஆர்ஸனிகம் ஆல்பம் :** கட்டைவிரலில் குழிப்புண்.

**ஆஸிட் நைட்ரிக் :** சேற்றுப்புண்.

**ஆஸிட் பென்ஸாயிக் :** கட்டைவிரல்களில் ஆரூத ரணங்கள்.

**கார்போ வெஜீ :** கட்டைவிரல் சிவந்து வீங்குதல்.

**காலீ கார்ப் :** விரல்களின் நுனியில் வலி, வலியுடன் கட்டை விரலில் அரிப்பு.

**காலோபில்லம் :** கட்டைவிரல், அக்குளில் கடுமையான வலி.

**கால்மியா :** சுண்டுவிரலில் வலி.

**குப்ரம் மெடாலிகம் :** விரல்களிலிருந்தும் கட்டைவிரல்களி லிருந்தும் வலிப்புகள் ஆரம்பித்தல்.

**கோல்சிகம் :** கட்டைவிரலைச் சொடுக்கினுல் அதிகவலி.

**கோனியம் :** விரல்கள், பெருவிரல், மறத்தல்.

**க்ராபைடிஸ் :** விரல்களின் நடுவில் வெடிப்பு, கட்டைவிரல்கள் விரைப்பாகவும், குறுகியுமிருத்தல். நகங்களில் வெடிப்பு, வலி, விரல் நுனிகளில் வெடிப்பு.

க்ளமேடிஸ் எரெக்டா : விரல் மூட்டுகளில் வீக்கம்.

டிஜிடாலிஸ் : விரல்கள் மறத்தல்.

டூக்ரியம் : கட்டை விரல்களின் நகங்கள் சரிவர வளராமை.

தூஜா : விரல்களின் நுனி வீங்கி சிவந்து ஸ்மரணையற்றிருத்தல்

நாப்தலேன் : கட்டைவிரலில் வாயு.

பாரிடா கார்ப் : பாதங்களும் விரல்களும் நொந்திருத்தல்.

பாரிஸ் : விரல்களில் சுரணையின்மை

ப்ளம்பம் : வலது கால் கட்டை விரலில் பிரதியிரவிலும் வலி.

மங்கானம் : இடது கால் பெருவிரலில் இரவுகளில் தாங்க முடியாத வலி.

மெக்னீஷியா கார்ப் : விரல்களில் சிவப்பும், நீர்ச்சுரப்பும்.

லாக்கஸிஸ் : பாதங்களிலும் விரல்களிலும் ஆருத ரணங்கள்.

லேடம் பாலஸ்திரி : அடிப்பட்டதாலேற்பட்ட நகச்சுற்றிகள்.

ஜெல்ஸிமியம் : துடைகளிலிருந்து கட்டை விரலுக்குச் செல்லும் வலிகள். நடந்தாலதிகரித்தல்.

ஸரஸபரில்லா : விரல்களில் ஆழமான வெடிப்புகள்.

ஸிலிகா : நகங்களின் கோளாறுகள், விரல்களின் நுனியில் நகச்சுற்றி ஏற்படுவதுபோல் வலி. நுனிகளில் வெடித்தல்.

ஸீகேல் : விரல்களில் அழுகிய ரணங்கள்.

ஸோரினம் : நகங்களைச் சுற்றிச் சீழ் பிடித்தல்.

ஸ்டாபிஸாக்ரியா : எலும்புகளில் அழற்சி, விரல் நுனிகள் மறத்துப் போயிருத்தல், நொந்த வலி, பல்ஹீனம்.

**ஸ்பாஞ்ஜியா :** வலது கட்டை விரலில் முறுக்கும் வலி.

**ஹீபார் ஸல்பர் :** நகங்கள் கெட்டிப்பட்டு உடையும் தன்மை யுடையனவாக விருத்தல். நகச்சுற்றி.

**ஹெல்லிபோரஸ் :** விரல்களின் இடுக்கில் கொப்புளங்கள்.

**ஹைபெரிகம் :** நுனிகளில் வலி.

# கால் மணிக்கட்டுகள்.

**அப்ரோடேனம் :** வயிற்று வலியமுக்கப்பட்டதால் மணிக்கட்டு வாதம்.

**காலோபில்லம் :** மணிக்கட்டுகளில் இசிப்பு.

**மெடோரினம் :** வீக்கம்.

**யூபடோரியம் பர்போலியேடம் :** மணிக்கட்டுகள் உடைந்த அல்லது நசுக்கப்பட்டதுபோன்ற வலி.

**ருடா :** வலது மணிக்கட்டிலும், இடது பாதங்களிலும் கீல் வாதம்.

# உள்ளங்கால்

**அபிஸ் மெல்லிபிகா :** உள்ளங்கால் வீக்கம், விரைத்தல்.

**அயிலாந்தஸ் :** உள்ளங்கால்களில் எரிச்சல்.

**அலூமினு :** உள்ளங்கால்கள் மிருதுவாகவும் வீங்கியுமிருத்தல்.

**ஆண்டிமோனியம் க்ரூடம் :** முட்கள் உண்டாதல், தடித்தல்.

**ஆரம் மெடாலிகம் :** அரிப்பு.

**ஆர்ஸனிகம் ஆல்பம் :** உள்ளங்கால்களில் குழிப்புண்.

**கல்கேரியா கார்ப் :** இரவில் உள்ளங்கால்களில் எரிச்சல்.

**கல்கேரியா ஸல்ப் :** அரிப்பு, எரிச்சல்.

**காமொமில்லா :** இரவில் எரிச்சல்.

**கார்போ வெஜி :** நரம்பிழுப்பு.

**காலீ கார்ப் :** வலி.

**குப்ரம் மெடாலிகம் :** உள்ளங்கால்களில் கெண்டையேறுதல்.

**புபோ :** உள்ளங்கால், உள்ளங்கையில் கொப்புளங்கள்.

**பெர்ரம் மெடாலிகம் :** வலி.

**மெடோரினம் :** கால்களின் ஆடுதசைகளிலும் உள்ளங்கால்களிலும் கெண்டையேறுதல்.

**ரானங்குலஸ் :** பித்தவெடி.

**லாக்கெஸிஸ் :** உள்ளங்கைகளும் கால்களும் இரவில் எரிதல்.

**லேடம் பாலஸ்திரி :** வலி.

**ஸல்பர் :** உள்ளங்கால்களில் எரிச்சல்.

**ஸாங்குநேரியா :** எரிச்சல்.

**ஸானிகுலா :** எரிச்சல்.

# எலும்புகள்

**அரேனியா டயாடிமா :** கைகால் எலும்பு வலி.

**அர்ஜண்டம் மெடாலிகம் :** மூக்கெலும்புகள் குட்டையாதல். எலும்புகள் மிருதுவாகவும் வலியுடனுமிருத்தல்.

**அஸபோட்டிடா :** எலும்பு வலி. எலும்புகளில் குழிப்புண். மூக்கின் எலும்புகள் உருக்குலேதல்.

**அஸ்குலஸ் ஹிபோ :** அடிமுதுகிலும் அல்லது ஆசனவெலும்பு களிலும் சப்பை யெலும்புகளிலும் வலி. நடந்தாலும் குனிந்தாலும், உட்கார்ந்துவிட்டு எழுந்திருந்தாலும் வலி அதிகமாதல்.

**ஆரம் மூரியாடிகம் :** மூக்கெலும்புகளில் கிழிக்கும் வலி.

**ஆரம் மெடாலிகம் :** வலது முழங்கை எலும்பில் வலி. விரலெலும்பு மூட்டுகளில் குடைதல். முன்கை யெலும்பு களும் துடையெலும்புகளும் வீங்குதல். முக வெலும்பு களில் அழற்சி. கன்னவெலும்புகள் அழுகுதல். மூக்கின் சிறு எலும்புகள், அழுகுதல் மூக்கின் வலது பக்க எலும் பைத் தொட்டால்வலி. தலையெலும்புகள் அழுகுதல். எலும்பு வலி. அழுகிய சிறு எலும்புகளில் வலி (மூக்கு, வாயின் மேற்புறம் மார்பு முதலியவிடங்களில்.)

**ஆர்னிகா மொண்டானு :** எலும்பில் வலியுடன் ஜுரம்.

**ஆஸிட் நைட்ரிக் :** ஸிபிலிஸ் நோயால் நாக்கின் எலும்புகள் பாதிக்கப்படுதல். காதுகளின் எலும்புகள் துவண்டு போதல். தாடையெலும்புகள் உளுத்தல். எலும்புகளில் சொத்தை விழுதல். மண்டை யோடுகள் உளுத்துப் போதல்.

**ஆஸிட் பாஸ்பாரிக் :** நீண்ட வெலும்புகளில் வலி. அசைவால் அதிகம்.

**ஆஸிட் ப்ளூவாரிக் :** (முகவெலும்புகளில்) சொத்தை விழுதல்.

**இபிகாக் உனு :** எலும்பு வலி.

**கல்கேரியா கார்பானிகா :** முள்ளந்தண்டும் காலின் பேரெலும் பும் வளைந்து விடுதல். பின் கழுத்தில் விறைப்பும், எலும்பு நொறுங்குவது போன்ற சத்தமும். கழுத்திலும் முதுகிலும் உள்ள முள்ளெலும்புகளில் வீக்கம். எலும்பு கள் வளைந்து விடுதல். நீள எலும்புகள் காயம்பட்ட உணர்ச்சி. சிறு வெலும்பு மூட்டுகளில் பிடிப்புகள். எலும்பு வளர்ச்சிக்கு வேண்டிய உப்பு இன்மை. எலும்பு கள் வளராமை.

**கல்கேரியா பாஸ்:** எலும்புகளின் கோளாரான வளர்ச்சி. மேல் தாடை எலும்புகளின் வலப் பாகத்திலிருந்து இடது பாகம் செல்லும் வலி, கை கால்களில் முறிந்த எலும்புகள் ஒன்று சேராமை. எலும்பு வியாதிகள்.

**கல்கேரியா ப்ளோரிகா:** எலும்பு உபாதிகள். சிறுவெலும்புகள் அழுகுதல். தாடை எலும்புகள் கல்போல் கடினமாக இருத்தல்.

**கல்கேரியா ஸல்ப்:** மூக்கின் எலும்புகள் அழுகுதல்

**கல்கேரியா ஹைபோ பாஸ்:** எலும்பு உபாதியுடன் சீழ்க்கட்டிகள்.

**கார்ப்ளிகம்:** வலது சப்பை எலும்புகள் அழுகுதல்.

**கார்போ வெஜி:** எலும்புகளிலும் கைகால்களிலும் எரிச்சல் வலி.

**காலீ ஐயோ:** மூக்கின் எலும்புகள் அழுகிவிடுதல். அதிக எலும்பு வலிகள்.

**காலீ பைக்ரோமிகம்:** எலும்புகளினூடே சஞ்சரிக்கும் வலி. குளிரால் அதிகரித்தல். எலும்புகளில் ரணவலி, அடிபட்டது போலிருத்தல். அதிகக் களைப்பு. கண்களின் கீழுள்ள எலும்புகளில் வலி. மண்டைத் தோலிலும் எலும்புகளிலும் வலி.

**காலோபில்லம்:** எலும்புகள் அசாதாரண விரைப்புடன் இருத்தல்.

**கால்மியா:** இருதயத்துக்கு மேல் பக்கமாக மார்பு வழியாகத் தோள்பட்டை எலும்புகளுக்குப் பாயும் வலி.

**கோனியம்:** எலும்புகள் அழுகவாரம்பித்தல்.

**க்வாய்கம்:** மூக்கு எலும்புகளில் வலி. வலது தாடை எலும்பிலும் கன்னவெலும்பிலும் பிடிப்பு வலி. மாலை 6 மணி முதல் விடியற்காலை 4 மணி வரை அதிகரித்தல். காலின் பேரெலும்பு வளையக்கூடியதாக ஆகிவிடுதல்.

**செலிடோனியம்:** வலது தோள்பட்டை எலும்பின் கீழ்ப் பாகத்தில் வலி.

**செனபோடியம் :** இடது தோள்பட்டை எலும்பின் கீழ் வலி.

**டயஸ்கோரியா :** மார்பெலும்பில் வலியாரம்பித்து கைகளுக்குச் செல்லுதல்.

**டூக்ரியம் :** எலும்புகளில் வலி. நடப்பதால் சமனம்.

**நக்ஸ் மாஸ்சாடா :** விலாவெலும்புகளில் வலி.

**நேட்ரம் கார்ப் :** தோள்பட்டை எலும்புகளில் சில்லிப்பு.

**நேட்ரம் ஸாலி :** எலும்புகளில் வலி.

**பாரிடா கார்ப் :** எலும்புகளில் கறடு தட்டுதல். எலும்புக் கட்டிகள்.

**பாஸ்பரஸ் :** எலும்புகள் வீங்குதல். இடுப்பு எலும்புகளில் சொத்தை விழுதல். தாங்கமுடியாத வலி. தண்ணீர் போன்ற சீழ் வெளிப்படுதல். கீழ்த்தாடை எலும்புகள் உளுத்துப் போதல்.

**புபோ :** கை கால் எலும்புகள் வீங்குதல்.

**பைடோலக்கா :** கர்ப்ப காலத்தில் எலும்புகளில் வலி. நடுக்கலுடன் ஜுரம்.

**மங்கானம் :** எலும்புகளில் அழற்சிகள். எலும்புகளில் வலிகள்.

**மெடோரினம் :** இடுப்பு எலும்பு முள்ளந்தண்டுக் கோளாறுகள். ஸ்திரீகளின் இடுப்பெலும்புக் கோளாறுகள்.

**மெர்க்குரியஸ் ஸொலுபுலிஸ் :** தாடை எலும்புகளில் சொத்தை விழுதல். மூக்கெலும்புகள் பாதிக்கப்படுதல்.

**மெஸீரியம் :** இரவுகளில் எலும்பு வலி.

**யூபடோரியம் பர்போலியேடம் :** மலேரியா, இன்புளூயன்ஸா போன்ற ஜுரங்களில் எலும்புகளிலும் தசைகளிலும் ஏற்படும் வலியை உடனே நிறுத்தும். எலும்புகளில் தாங்கமுடியாத வலி.

**ரஸ்டாக்ஸ் :** அழற்சி, வீக்கங்கள்.

**ரூடா :** எலும்புகளில்வலி எலும்புகளுக்கும் தசை நார்கட்கும் ஏற்பட்ட அடிகளாலுண்டாகும் கோளாறுகள்.

**லாக்கெஸிஸ் :** மூக்கின் எலும்பு வீங்கி வலியுடனிருத்தல்.

**லிதியம் கார்ப் :** எலும்பு தசை நரம்புகளில் வலி.

**லைகோபோடியம் :** எலும்புகள் உளுத்து விடுதல். இரவுகளில் எலும்பில் வலி.

**வலேரியானு :** காக்கிக்ஸ் என்னும் வாலெலும்பில் வலி.

**ஸபீனு :** இடுப்பு எலும்புகள் தனித்தனியாக ஆய்விடுதல்போல் வலி. நீள எலும்புகளில் இழுக்கும் வலிகள்.

**ஸரஸபரில்லா :** எலும்பு வலிகள். இரவிலும் மழைக் காலத்திலும் அதிகரித்தல். முதுகு முன்னெலும்பிலிருந்து வலி ஆரம்பித்து இடுப்பின் வழியாகத் துடைகளுக்குச் செல்லுதல்.

**ஸல்பர் :** மார்பெலும்பு வலி.

**ஸாங்குநேரியா :** மார்பெலும்புக்கு அடியில் வலி.

**ஸிபிலினம் :** முள்ளெலும்புகள் சொத்தை விழுதல், நீண்ட எலும்புகளில் கடுமையான வலி.

**ஸிம்பைடம் :** அடிபடுதல், எலும்பு வரை ஊடுருவிச் செல்லும் ரணங்கள். முறிந்த எலும்புகள் மறுபடி கூடாமை.

**ஸிஸ்டஸ் :** கீழ்த்தாடை எலும்புகள் பாதிக்கப்படல். கீழ்த்தாடை எலும்பு சொத்தை விழுதல். முள்ளெலும்பின் கீழ் பாகத்தில் வலி.

**ஸைக்ளமென் :** சளி பிடித்திருக்கும்போது மூக்கெலும்புகளில் வலி.

**ஸ்டாபிஸாக்ரியா :** விரல்களின் எலும்புகளில் அழற்சி.

**ஸ்டில்லிங்கியா :** மேக சம்பந்த எலும்பு வலி, இரவு ஈரகப்புள்ள மழைக் காலங்களில் வலிகள் தாங்குதல்.

**ஸ்பைஜீலியா :** தாடை எலும்புகளில் நம நமவென்ற வலி.

**ஹீபர் ஸல்பர் :** எலும்புகள் சொத்தை விழுதல். மூக்கு எலும்பில் வலி.

# கோளங்கள்

**அர்ஜண்டம் நைட்ரிகம் :** கழுத்துக் கோளங்கள் கடினமாதல். காதுக் கோளங்களிலும் தொண்டைக் கோளங்களிலும் இழுக்கும் வலி.

**அஸபோட்டிடா :** கோளங்கள் கடினமாகவும், வீங்கியும் துடிப்புட னுமிருத்தல், சரீரம் ஊதுதல்.

**ஆண்டிமோனியம் க்ரூடம் :** இடது துடையிடுக்கில் உள்ள கோளங்கள் கடினமாகவும், வலியுடனுமிருத்தல்.

**ஆரம் ட்ரிபில்லம் :** தாடைக் கோளங்களில் வீக்கம். இடது பக்கத்தில் அதிகம்.

**ஆரம் மூரியாடிகம் :** தாடைக் கோளங்களில் வீக்கம்.

**ஆரம் மெடாலிகம் :** அக்குள் கோளங்களில், கழுத்துக் கோளங்களில் வீக்கம், நிறைந்த நாடியுடன் தாடைக் கோளங்களில் வீக்கம், காதுக் கோளங்கள் வீங்குதல், தொட்டால் வலி.

**ஆர்ஸனிகம் ஆல்பம் :** அரைப் பூட்டிலிருக்கும் கோளங்கள் வீங்குதல்.

**ஆஸிட் அஸடிக் :** கீழ்த் தாடையிலிருக்கும் கோளங்கள் வீங்குதல்.

**ஆஸிட் கார்பாலிக் :** கழுத்துக் கோளங்களில் வீக்கம்.

**ஆஸிட் நைட்ரிக் :** கழுத்துக் கோளங்கள் வீங்குதல். அரையிடுக்கின் கோளங்கள் வீங்கிச் சீழ் பிடித்தல். கழுத்தைச் சுற்றிலுமிருக்கும் கோளங்கள் பருத்தல், வீங்கியிருத்தல்.

**இக்னேஷியா :** நன்றாக சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போதே சரீர இளைப்பும் கோளங்கள் பருத்தலும்.

**ஐயோடியம் :** ஸ்தனக் கோளங்களைத் தவிர மற்ற கோளங்களெல்லாம் வீங்கிக் கடினமாகவிருத்தல். கழுத்துக் கோளங்கள் பருத்துக் கடினமாகவிருத்தல். தாடைக் கோளங்கள் வீங்குதல். சரீரம் இளைத்துக் கொண்டிருக்கையில் கோளங்கள் மட்டும் பருத்தல்

**கல்கேரியா ஐயோடைட் :** கீழ்த் தாடைக் கோளங்கள், உமிழ் நீர்க் கோளங்கள் அழற்சியடைதல். ஸ்தனங்களில் கட்டிகள், கோளங்களில் கடுமையான துள்ளும் வலி. கபவாத சுரத்தில் நிணநீர்க் கோளங்கள் பெருத்தல்

**கல்கேரியா கார்ப் :** கோளங்கள் (முக்கியமாக நிணநீர்க் கோளங்கள்) பெருத்தல். கழுத்துக் கோளங்களில் கடின வீக்கம். கீழ்த் தாடைக் கோளங்கள் வலியுடன் வீங்கிக் கடினமாகவிருத்தல் .உமிழ்நீர்க் கோளங்களில் வீக்கம். குழந்தைகளின் மணிக்குடல் கோளங்கள் கடினமாக வீங்கியிருத்தல். அரையிடுக்கு கழுத்துக் கோளங்களில் வீக்கம்.

**கல்கேரியா ப்ளோரிகா :** கழுத்துக் கோளங்கள் கடினமாதல். கல் போன்ற கடினமாகவுள்ள கோளங்கள்.

**கல்கேரியா ஸல்ப் :** கோளங்களில் மந்தமான வீக்கம்.

**காப்ஸிகம் :** கோளங்களில் வீக்கம். (முக்கியமாக காது கோளங்களில்)

**காமோமில்லா :** கீழ்த் தாடைக் கோளங்களும், காதுக் கோளங்களும் வீங்குதல்.

**கார்பன் ஸல்ப் :** கை கால் நீர்ச் சுரப்பு. பொதுவான சரீர இளைப்பில் நிணநீர் கோளங்கள் மட்டும் படுத்துக் கொண்டேயிருத்தல்.

**கார்போ அனிமாலிஸ் :** கழுத்திலுள்ள கோளங்கள் கடினமாக வீங்கி அழற்சி, எரிச்சல் வலிகளுடனிருத்தல். அக்குளிலும் அரைப் பூட்டிலுமுள்ள கோளங்கள் கடினமாதல், கோளங்

கள் கடினமாக வீங்கி அழற்சி. அழற்சி, எரிச்சல் வலியுடனிருத்தல். காதுக் கோளங்கள் வீங்கி வலியுடனிருக்கும் செவிடு. அக்குள் அரையிடுக்கு ஸ்தனங்கள் முதலிய விடங்களிலுள்ள கோளங்கள் வீங்கிக் கடினமாக அசுத்தம் நிறைந்திருத்தல். பழுப்பு நிறமாக மாறுதல்.

**காலி ஐயோடேட்டம் :** தொண்டையின் பக்கங்களிலுள்ள கோளங்கள் வீங்கியும் பருத்துமிருத்தல். நிணநீர்க் கோளங்களில் இவ்வௌஷதம் வேலை செய்யும்.

**காலீ மூரி :** கோளங்களில் வீக்கம், காதுகளில் கீழ்க் கோளங்களில் வீக்கம், கழுத்திலும் முகவாய்க் கட்டையிலுமுள்ள கோளங்கள் வீங்குதல்.

**கொரால்லியம் ரூப்ரம் :** இடது பக்கத் தாடைக் கோளங்கள் வீங்கி வலித்துக் கொண்டிருத்தல். இது விழுங்கும் போதும் தலையை முன்புறமாகக் குனியும்போதும் அதிகரித்தல்.

**கோனியம் :** கோளங்கள் பருத்தல்.

**க்ராபைடிஸ் :** கோளங்களில் வீக்கம், கடினமடைதல்.

**க்ரிஸோட் :** கோளங்கள் பருத்தல்.

**க்ளமேடிஸ் எரெக்டா :** கோளங்களில் சூடு, வலி, வீக்கம் அடிவயிற்றுக்கும் துடைக்கும் இடைப்பாகத்திலுள்ள கோளங்களில் வீக்கம், கடினமடைதல்.

**சிமாபிலா :** நிணநீர்க் கோளங்களில் உபாதிகள்.

**சைலு :** கோளங்கள் கறடுதட்டிப் பருத்திருத்தல்.

**டல்கமாரா :** காதுகளின் அடியிலுள்ள கோளங்கள், துடையிடுக்குகளிலுள்ள கோளங்கள் வீங்குதல். குளிரினால் கோளங்கள் வீங்குதல்.

**டாரண்டுலா குபன்ஸிஸ் :** ஸ்தனங்களில் கறடு தட்டிய கட்டிகள்.

**ட்யூபர்குலீனம் :** அரையிடுக்கின் கோளங்கள் பெருத்தல்.

**ட்ரோஸிரா :** க்ஷய ஸம்பந்த கோள வீக்கங்கள்.

**தூஜா :** கோளங்களில் கிழிக்கும் வலிகள்.

**நக்ஸ் வாமிகா :** காதுகளுக்குக் கீழேயுள்ள கோளங்களில் வீக்கம் அதனுல் ஆகாரத்தை விழுங்கும்போது கொட்டும் வலிகள்.

**நேட்ரம் கார்ப் :** அறையிடுக்கிலுள்ள கோளங்கள் வீங்குதல், காதுகளின் கீழ்க்கோளங்கள் பருத்தல். இவை நிரந்தரமாகப் பருத்திருத்தல். கழுத்தின் பக்கங்களிலுள்ள கோளங்கள் வீங்குதல். கோளங்கள் பெருத்தலுங் கறடு தட்டிக் கொள்ளலும்.

**நேட்ரம் மூரி :** கழுத்தின் இருபக்கக் கோளங்களும் வீங்கிப் பருத்திருத்தல். அக்குள் கோளங்கள் பருத்திருத்தல்.

**நேட்ரம் ஸல்ப் :** அக்குள் கோளங்கள் வீங்கிப் பருத்திருத்தல்.

**பாடியாகா :** முகம், அக்குள் அரையிடுக்குக் கோளங்கள் பருத்திருத்தல், வீங்குதல், கறடு தட்டுதல்.

**பாப்டீஷியா :** இடது துடையிடுக்குக் கோளங்கள் பருத்திருத்தல், வீங்குதல்.

**பாரிடா கார்ப் :** அக்குளின் கோளங்கள் பருத்திருத்தல், வலது பக்கக் கழுத்துக் கோளங்கள் வீங்குதல், கறடு தட்டுதல்.

**பாரிடா மூரியாடிகா :** காதுகளின் கீழேயுள்ள கோளங்கள் பருத்திருத்தல், நிணநீர்க் கோளங்களின் கோளாறுகள்.

**பாஸிலினம் :** அரையிடுக்குக் கோளங்கள் பருத்தல்.

**பெர்பெரீஸ் அக்யூபோலியம் :** கரடு தட்டுகள். கோளங்கட்குப் புஷ்டியைக் கொடுக்கும் குணம் இவ்வௌஷதத்திற்கு உண்டு.

**பேர்ரம் ஐயோடேட்டம் :** வீங்குதல், கட்டிகள்.

**பைடோலக்கா :** கழுத்து வலது பக்க கோளங்கள் கெட்டியாக வீங்கியிருத்தல். காதுகளுக்குப் பக்கத்திலிருக்குங் கோளங்கள் வீங்குதல்.

**ப்ரோமியம்:** தொண்டை, கழுத்துக் கோளங்கள் கல்போல் கெட்டியாதல். பெருத்த கோளங்களுள்ள கணைச்சூட்டுக் குழந்தைகள். கோளங்கள் வீங்கிக் கெட்டியாதல். ஆனால் சீழ் பிடிப்பதில்லை.

**மங்கானம்:** காதின் இடது பக்கம் உள் கோளம் வீங்கிச் சிவத்தல்.

**மெக்னீஷியா மூரியாடிகா:** கோளங்கள் பருத்தல்.

**மெடோரினம்:** கோளங்கள் பருத்தல்.

**மெர்க்குரியஸ் ஐயோ ப்ளேவஸ்:** சரீரத்தில் முக்கியமாகத் தொண்டையில் வலது பக்கக் கோளங்கள் கருங்கல் போலாதல். கறடு தட்டுதல். அநேகமாக எல்லா கோளங்களும் வீங்குதலும், கழலைக் கட்டிகளுடனிருப்ப பதும், வலது ஸ்தனம் நீல நிறமாக வீங்குவதும் அல்லது பக்க அக்குள் கோளம் பருத்தலும்.

**மெர்க் ஐயோ ரூபர்:** இடது பக்கத்துக் கோளங்கள் பாதிக்கப் படல். இடது டான்ஸில் அழற்சி வீக்கம்.

**மெர்க்குரியஸ் கரோஸிவஸ்:** ஸ்தனங்களில் கோளங்கள் பருத்தல்

**மெர்க்குரியஸ் ஸொலுபுலிஸ்:** அரையிடுக்குக்கோளங்கள் வீங்கிச் சீழ் பிடித்தல். தாடைக் கோளங்கள் பருத்திருப்பதால் வாயைத் திறக்க முடியாமை. உள்ளுக்குள் குளிருடன் கோளங்கள் வீங்கிச் சீழ் பிடித்தல். ஏராள மஞ்சள் நிறச் சீழ் உற்பத்தியாதல்.

**ரஸ் டாக்ஸ்:** காதுகளுக்கும் கீழ்த்தாடைக்கும் அடியில் இருக்கும் கோளங்கள் பருத்தல். வயிற்றிலும் துடையிடுக்கிலும் இருக்குங்கோளங்கள் பருத்தல். காதின் பக்கத்திலுள்ள கோளங்களும் தாடையின் கீழ்க்கோளங்களும் பருத்திருத்தல்.

**லாக்கெஸிஸ்:** இடுப்பில் கோளங்கள் வீங்கியிருத்தல். அக்குள் கோளங்கள் வீங்கிப் பருத்திருத்தல். கழுத்தின் பக்கத்திலிருக்கும் கோளங்கள் வீங்கியிருத்தல்.

**லாபிஸ் ஆல்பஸ்:** கோளங்கள் பாதிக்கப்படல், கெட்டிப்படல்.

**ஸைகோபோடியம் :** அக்குள் கோளங்கள் பருத்திருத்தல்.

**ஸல்பர் :** துடையிடுக்கின் கோளங்கள் வீங்கி, வலியுடனிருத்தல், மலம் வெளியேறுவதன்முன் வயிற்றில் அலைச்சல்.

**ஸிபிலினம் :** கழுத்துக் கோளங்கள் பெருத்தல்.

**ஸிலிகா :** துடையிடுக்கின் கோளங்கள் வீங்கிப் பருத்திருத்தல்.

**ஸிஸ்டஸ் :** காதுகளின் கீழேயுள்ள கோளங்கள் வீங்கி, காதுகளிலிருந்து நாற்றமுள்ள சீழ் வெளிப்படல், கோளங்களில் வேலை செய்யக்கூடிய ஔஷதம். கோளங்களில் வீக்கம், கறடு தட்டல், அழற்சி, சீழ் பிடித்தல், ரணம், நீடித்த ரணம்.

**ஸெபீயா :** தாடைகளின் கீழ்க் கோளங்கள் வீங்குதல்.

**ஸோரினம் :** தாடைக் கோளங்கள் வீங்கியிருத்தல். தொட்டால் வலி. கழுத்துக் கோளங்கள் வீங்கி வலியுடனிருத்தல் அவைகளிலிருந்து தலைக்குச் செல்லும் வலி.

**ஸ்டில்லிங்கியா :** க்ஷயரோக சம்பந்த ரணங்கள். கோளங்கள் பெருத்தல்.

**ஸ்பாஞ்ஜியா :** தாடையின் கோளங்கள் வீங்குதல், கோளங்கள் பருத்துக் கரடு தட்டுதல், கோளங்களில் வேலை செய்யவல்லது, கழுத்துக் கோளங்கள் பருத்திருத்தல். இடதுபக்கத்துத் துடையிடுக்குக் கோளங்கள் பருத்து வீங்கியிருத்தல், கோளங்கள் வீங்கியும் கெட்டிப்பட்டுமிருத்தல்.

**ஹீபர் ஸல்பர் :** கோளங்கள் அழற்சியுறுதல், அதன் பின் சீழ் பிடித்தல், கழுத்துக் கோளங்கள் விங்கியிருத்தல், துடையிடுக்குக் கோளங்கள் சீழ் பிடித்தல்

# சரீரம்

**அகேரிகஸ் :** பயந்த சுபாவம், குறைந்த ரத்தவோட்டமுள்ள கிழவர்கள், மெலிந்த சரீரம், தாமதமாகப் பேசவும் நடக்கவுமாரம்பிக்கும் குழந்தைகள்.

**அகோனைட் :** ரத்தபுஷ்டியுள்ள சரீரம் (கெட்டியான நாடி உள்ள குழந்தைகள்).

**அக்டியா ரஸிமோஸா :** வாத சரீரம். சங்காதோஷம், ஆண், பெண், குழந்தைகள், மாதவிடாய் நிற்குங் காலம், அதிக வேலையால் நரம்பு தளர்ச்சி. குழந்தைகளின் பல் முளைக்குங் காலம்.

**அக்னஸ் காஸ்டஸ் :** வயோதிகர்கள், அகாலத்தில் கிழத்தன்மை யடைந்த சரீரம், பால்யத்தில் கெட்ட நடத்தை, முஷ்டி மைதுனம், இவைகளாலேற்பட்ட கோளாறுகள்.

**அபிஸிந்தியம் :** குழந்தைகள், சிறுவர்கள். வயோதிகர்கள் (வலிப்பு).

**அபிஸ் மெல்லிபிகா :** பொறுமைக் குணமுள்ள ஸ்திரீகள்.

**அபோஸினம் :** அதிக தாகமுள்ள பாண்டு, அதிக ரத்தம் வெளியேறிய பின் நீர் சுரப்புள்ள சரீரம்.

**அப்ரோடேனம் :** ஆண், குழந்தைகள்.

**அமோனியாகம் :** சரீரம் முழுதும் துடித்தல்.

**அமோனியம் கார்ப் :** குழந்தை, கிழவர்களின் ஆஸ்த்மா, மிருதுவானகொளகொளத்த தசை. கிழவர்களின் ப்ராங்கைடிஸ், பருத்த சோம்பல் குணமுள்ள ஸ்திரீகள்.

**அமோனியம் மூரி :** கொழுத்த. மந்த சுபாவமுள்ள மனிதர்கள், பருத்த சரீரம், இளைத்த கால்கள்.

**அம்ப்ரா க்ரிஸியா :** குழந்தை, மெலிந்தவுடல், வயோதிகத்தனம், உடலுழைப்பால் நரம்பு தளர்ச்சி, சோகை சரீரமுள்ள ஸ்திரீகள்.

**அயிலாந்தஸ் :** பித்த சரீரம், பருமனான சரீரம், சரீரத்தளர்ச்சியுடன் ராமக்கண் அம்மை.

**அர்ஜண்டம் நைட்ரிகம் :** சரீரம் முழுதும் துடித்தல், உருக்குலைந்த உலர்ந்த சரீரம், குழந்தைகள்.

**அர்ஜண்டம் மெடாலிகம் :** உயர்ந்த மெலிந்த சரீரம். கோப குணம். சரீரம் வெளுத்தல், இளைப்பு, பலஹீனம்.

**அலுமன் :** கிழவர்கள். நீடித்த ஜுரங்களில் அவஸ்தைப் பட்டவர்கள்.

**அலுமினு :** கிழவர்களின் சரீர இளைப்பு, சிசுக்கள், பக்குவ மடையும் காலப் பெண்கள்.

**அவீனு ஸடீவா :** மன, நரம்புத் தளர்ச்சியடைந்த சரீரம்.

**அஸபோடிடா :** சரீரம் ஊதுதல்.

**அஸ்குலஸ் ஹிபொ :** சரீரம் முழுதும் துடிப்பு.

**ஆண்டிமோனியம் க்ரூடம் :** கொழுப்பு சத்து அதிகமாகுதல்' கிழவர்கள், குழந்தைகள், வாதரோக சரீரம்.

**ஆண்டிமோனியம் டார்ட்டாரிகம் :** உடம்பு முழுவதும் நடுக்கல் குழந்தைகள், கிழவர்கள்.

**ஆரம்முரி நேட்ரம் :** அதிக ரத்தவோட்டம். நீடித்த மஞ்சட் காமாலை, பலஹீனம்.

**ஆரம் மெடாலிகம் :** அடி வயிற்றின் அவயவக் கோளாறுகளால் பொதுவாகச் சரீரம் முழுதும் நீர் வீக்கம். சரீரத்தி னுள்ளே சூன்ய உணர்ச்சி. சரீரம் முழுதும் களைப்பு. ஸ்தூல சரீரம். வயோதிகம், கிரந்தி, பாதரஸ மருந்துகள் உட்கொண்டவர்கள்.

**ஆர்னிகா :** சரீரம் முழுவதும் இசிவு, வலி, அடிபட்டதனுல் ஏற்பட்ட உபாதிகள்.

**ஆர்ஸனிகம் ஆல்பம் :** சூடான ஊசிகளைச் சரீரத்தில் குத்துவது போன்ற எரிச்சலும், கடுக்கும் வலியும். சரீரத்தில் பிண நாற்றம், இளைப்பு, நீரதைப்பு.

**ஆஸிட் அஸடிக் :** ரத்தசோகை, காயங்கள், ஆபரேஷன் செய்த பின், மயக்க மருந்துகள் கொடுத்த பின் அதிர்ச்சி, வெளுத்தல், மெலிதல், பலஹீனம், அதிகக் களைப்பு. உள்ளிருக்கும் நரம்புகள் வெளியே தெரிதல். சரீரம் முழுதும் தளர்ச்சி, நீர் வீக்கம்.

**ஆஸிட் ஆக்ஸாலிக்:** சரீரம் முழுவதிலும் சுண்ணும்புச் சத்து இருத்தல். வாத சரீரம் உள்ளவர்களின் அதிக நாடித் துடிப்பு. அதைப்பற்றி நினைத்தாலே அதிகமாதல்.

**ஆஸிட் கார்பாலிக்:** சரீரம் முழுவதும் குளிர்ந்த வியர்வை.

**ஆஸிட் நைட்ரிக்:** விரைவாகச் சரீரம் இளைத்தல். பலஹீனம். மேகநீர் சரீரம். ஏற்கனவே அதிக ரஸமருந்து உண்டவர்கள்.

**ஆஸிட் பாஸ்பாரிக்:** சரீரத்தின் தாது நீர்கள் ஏராளமாக வெளிப்பட்ட பின் ஏற்படும் பல கோளாறுகளுக்கு நல்ல ஔஷதம். உழைப்பின் பின்னும் மனவெழுச்சியாலும் சரீர தாது நீர்கள் அதிகமாக வெளியேறிய பின்னும், சரீரம் நடுங்குதல், பொதுவாகச் சரீரம் இளைத்தல் அல்லது ஒவ்வொரு பாகங்கள் இளைத்தல். ஏற்கனவே பலமுள்ளவர்களாக இருந்து, தற்காலம் வியாதியால் பீடிக்கப்பட்டவர்கள் தன் வயதுக்கிருக்கவேண்டியதைவிட அதிக உயரமாகவும் ஆனால் ஒல்லியாகவுமிருத்தல்.

**ஆஸிட் பிக்ரிக்:** சரீரம் தளர்ந்து விடுதல். சரீரம் முழுதும் பலஹீன உணர்ச்சி. கன உணர்ச்சி, அசதி.

**ஆஸிட் பென்ஸாயிக்:** குழந்தைகள், கிழவர்கள். ஸைக்கோஸிஸ் சரீரம்.

**ஆஸிட் ப்ளுவாரிக்:** அகாலத்தில் கிழடு தட்டல், வயோதிகர்கள். மேக நீரும் அதற்காக உட்கொண்ட ரத்த சம்மந்த ஔஷதங்களின் விஷமும் ஒன்று சேர்ந்த கோளாறுகள், உஷ்ண சரீரம்.

**ஆஸிட் ஸல்ப்யூரிக்:** சரீரம் புளிப்பு நாற்றமடித்தல், நடுங்குதல், பலஹீனம்.

**இக்னேஷியா:** நன்ருகச் சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போதே சரீரம் இளைத்தலும், கோளங்கள் பருத்தலும்.

**இபிகாக் உனு:** சரீரம் விரைப்பாக இருத்தல்.

**எதூஸா ஸைனபியம்:** குழந்தைகளுக்கு மிகவும் பயன்படும் ஔஷதம். பெரியவர்களின் அஜீர்ணம், மலப்போக்கு.

**ஐயோடியம் :** வாடுதல், இளைத்தல். கருத்த மயிர். மஞ்சள் அல்லது பழுப்பு நிற சருமம்.

**கல்கேரியா அஸடிகா :** இளைப்பு

**கல்கேரியா ஆர்ஸனிக் :** சரீர, மன பலஹீனம். சரீரம் காற்று போல் லேசாக இருக்கும் உணர்ச்சி.

**கல்கேரியா ஐயோடைட் :** அதைப்பான சரீரம், பெண்கள் மலக் கோளாறுகளில், இளைத்த உடம்பும் கைகளும், குழந்தைகள்.

**கல்கேரியா கார்ப் :** அதிக பருமன். கொழுத்த தொளதொளத்த சரீரம். உட்காரும்போதும் நிற்கும்போதும் உடம்பைச் சிறிதும் வளைக்காமல் விரைப்பாக வைத்துக்கொள்ளுதல். எப்போதும் களைப்பு. உணவின் சத்து உடம்பில் சேராமை.

**கல்கேரியா பாஸ் :** மெலிந்த ஒற்றைநாடி சரீரம். ரத்தசோகை. இளைத்துக்கொண்டேயிருக்கும் தன்மை. சரீரம் முழுதும் தளர்ச்சி. வெகு சீக்கிரமாக இளைக்க ஆரம்பித்தல். எலும்புக் கோளாறுன வளர்ச்சி.

**கல்கேரியா ப்ளோரிகா :** கல்கேரியா சரீரம்,

**கல்கேரியா ஸல்ப் :** சரீரத்துக்கு நல்ல ஆரோக்யத்தை அளித்து, முஷ்டி மைதுனம், அமித போகம், இவைகளாலேற்பட்ட கோளாறுகளை அறவே ஒழிக்கும்.

**கல்கேரியா ஹைபோபாஸ் :** குழந்தைகள், வயது வந்தவர்கள் இளைப்பு.

**காகுலஸ் :** இளைப்பு, இரத்தசோகை, சரீரத்தைக் கிள்ளினுல் ஒரு நிமிஷம் கழித்த பிறகுதான் கத்துதல் அடர்த்தியான மயிர் இல்லாத ஸ்திரீகள்.

**காட்மியம் ஸல்ப் :** சரீரத்தை அசைப்பதில் வெறுப்பு.

**காப்ஸிகம் :** கொழுத்து, விகாரமான அழுக்கடைந்த மந்த குணமுள்ள சரீரம். குழந்தைகள் அழுக்கடைந்து விகாரமாகவும் மாறுதல்.

**காமோமில்லா :** ஸ்திரீகள் கோப குணம்.

**காம்போரா :** பனிக்கட்டிபோல் சில்லிடல். காயங்களாலேற் பட்ட அதிர்ச்சி.

**கார்பன் ஸல்ப் :** மிதமீறிய கள் குடித்ததால் உருக்குலைந்த சரீரம்.

**கார்போ அனி :** அசுத்த ரத்தமதிகரித்த வயதான மனிதர்கள் உருக்குலைந்த சரீரம். சரீரத்துக்கு வேண்டிய அளவு சூடின்மை.

**கார்போவெஜி :** சரீரம் முழுதும் நீலம் பூரித்து, பனிக்கட்டி போல் சில்லிடல். இன்றியமையாத நீர் பதார்த்தங்கள் வெளியேறினதால் ஜீவ பலம் குன்றிய நிலைமை மந்த குணம், பருத்த உடல். வியாதியில் அடிபட்டு உடம்பு முழுதும் தேராதிருப்பவர்கள்.

**காலாடியம் :** சரீரத்தின் ஒரு சில இடங்களில் மட்டும் சில்லிப்பு.

**காலி கார்ப் :** இரட்டைநாடி சரீரமுள்ள வயதானவர்கள். க்ஷயரோகம் ஏற்படுவதற்கு முன்பிருக்கும் சரீரநிலைமை பொதுவாக நீரதைப்பு ஏற்படும் தன்மை.

**காலீ நைட்ரிகம் :** திடீரென்று சரீரம் முதுவதும் நீர் வீக்கம்.

**காலீ பாஸ் :** வியாதியால் பலஹீனப்பட்டவர்கள், சிறுவர்கள்.

**காலீ பைக்ரோமிகம் :** கொழுப்பு சதைப் பிடிப்புள்ள சரீரம்.

**காலோட்ரோபிஸ் :** மாமிசம் குறைந்தாலும் சரீரம் பருத்துக் கொண்டேயிருத்தல்.

**காலோபில்லம் :** ஸ்திரீகள் சரீரத்தின் பல பாகங்களுக்குப் பரவும் வலிப்பு போன்ற வலிகள்.

**காலோ ஸிந்திஸ் :** உடம்பு பருக்கும் சுபாவமுள்ளவர்கள், ஸ்திரீகள்.

**காஸ்டிகம் :** மெலிந்த, ஒல்லியான, ரத்தசோகையுள்ள, உறுதியான தசைநார்களற்ற சரீரம். வாத சரீரம்.

**கோனியம் :** கிழ சரீரம், சரீரம் முழுதும் அடிப்பட்டது போன்ற பொதுவான வலி.

**க்ராபைடிஸ் :** குறும்பு குணமுள்ள சிறுவர்கள், பருத்த சரீரம். பருக்கும் இயல்புள்ள சரீரங்கள்.

**க்ரிஸோட் :** சிறுவர்கள் உயரமான மெலிந்த சரீரம், கிழடு தட்டிய முகம், சுருங்கிய சருமமுள்ள சிறுவர்கள்.

**க்ரோடேலஸ் ஹாரிடஸ் :** ஸ்திரீகள், கிழவர்கள் மஞ்சள் நிற சரீரம், சரீரம் முழுதும் நடுக்குதல், சிறு பிரயாசையிலும் அதிகக் களைப்பு.

**க்வாய்கம் :** சரீரத்தைச் சிறிதளவு அசைக்கவும் பயம், வம்ச பரம்பரையாக உருக்குலைக்கும் வியாதிகளான க்ஷயம், கீல்வாயு, வாதம் போன்ற உபாதிகள்.

**க்ளமேடிஸ் எரெக்டா :** பொதுவான இளைப்பு.

**சிமாபிலா :** மிகப் பெரிய ஸ்தனங்களையுடைய ஸ்திரீகள், புருஷர்கள்.

**சின்னினம் ஆர்ஸனிகம் :** மலேரியா போன்ற கொடிய நோய்களின் பின் பலஹீனமடைந்த சரீரம்.

**சைனு :** முக்யமான தாது நீர்கள் அதிகமாக வெளியேறியபின் பலஹீனமடைந்த சரீரம். ரத்த சோகையால் சரீரம் வீங்குதல், சரீரம் லேசாக ஊதியிருத்தல்.

**டபாகம் :** சரீரம் சில்லிடல், இளைப்பு, ரத்த சோகை.

**டிஜிடாலிஸ் :** சரீரம் முழுதும் நீர் சுரப்பு.

**ட்ரோஸிரா :** புருஷர்கள், குழந்தைகள்.

**துஜா :** ஸைகோஸிஸ், சிலேஷ்ம சரீரம், அதிசீக்கிரத்தில் களைப்பு, சரீரம் இளைத்தல், ஆண் பெண் குழந்தைகள்.

**தேரிடியன் :** க்ஷயரோக சம்பந்த சரீரம், சரியாக நிர்ணயிக்கப் பட்ட ஔஷதங்கள் வேலை செய்யாத சரீரங்கள், சத்தம், சரீரம் முழுதும் முக்கியமாக பற்களிலும் ஊடுருவிப் பாய்வது போலிருத்தல்.

**நக்ஸ்வாமிகா :** மெலிந்த ஒற்றை நாடி சரீரம்.

**நேட்ரம் ஆர்ஸனிகம் :** பொதுவாக அதிகக் களைப்பு, அதிசீக்கிரத்தில் சளி பிடித்தல், நீடித்த ரணம், முதலில் தடித்த சரீரமாயிருந்தவர்கள் வரவர இளைத்துக்கொண்டே வருதல், முதலில் சரீரத்தில் சதைப் பிடிப்பு அதிகமுண்டாவது போலிருந்து, அதன் பின் சரீரமிளைத்தல்.

**நேட்ரம் கார்ப் :** பித்த வாயு உபாதி, எப்போதும் ஏப்பம் விட்டுக் கொண்டேயிருத்தல், எப்போதும் புளித்த வயிறு உடையவர்கள், கீல்வாயு சம்பந்தப்பட்டவர்கள். அதிசீக்கிரத்தில் குளிர் தாக்குதல், ரத்த சோகை, கூனல் முதுகு. பிரதி பருவ மாறுதலிலும் உபாதிகள் தோன்றுதல். எப்போதும் குளிராகவேயிருத்தல், இளைத்த சரீரம்.

**நேட்ரம் பாஸ் :** சிலேஷ்ம சரீரம், வெட்டை சூட்டு சரீரம், குழந்தைகள்.

**நேட்ரம் மூரி :** நல்ல புஷ்டியுள்ள ஆகாரங்களை நன்றாக சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போதே சரீரம் இளைத்துக் கொண்டிருத்தல், சரீரம் இளைப்பு, தொள தொளப்பு, நடுக்கல், நாடித் துடிப்பு.

**நேட்ரம் ஸல்ப் :** சிலேஷ்ம சரீரம்; வெட்டை சூட்டு சரீரம்.

**பல்ஸடில்லா :** பெண், க்ஷயம் ஏற்படும் போல் இருக்கும் சரீரங்கள், பெண் தன்மை அதிகமாயுள்ள ஆண்கள்.

**பாப்டீஷியா :** சரீரத்தில் அதிக பலஹீனம், மல மூத்திராதிகள் பிண நாற்றமடித்தல், உடல் முழுதும் நொந்த வலி.

**பாரிடா கார்ப் :** சரீரமும் புத்தியும் சரிவர வளராமை, சித்திரக் குள்ளன் போல் சரீரம் வளராமல் இருத்தல், அவயவங்கள் வயதுக்குத் தக்க வளர்ச்சியடையாமை. வயோதிகர்கட்கு ஏற்படும் பல கோளாறுகள். அகாலத்தில் கிழமாதல், சரீரமும் அவயவங்களும் இளைத்தல். ஆனால் வயிறு மாத்திரம் பருத்தல், வயதான கொழுத்த சதையுள்ளவர்கள் சரீரம் முழுதும் கனமாக இருத்தல்: எப்போதும் குளிர் இருந்துகொண்டே யிருத்தல்.

**பாரிடா மூரியாடிகா:** சரீரம் கனமாயிருத்தல், வயதானவர்கள் வளர்ச்சியில்லாதவர்கள்.

**பாஸிலினம்:** கிழவர்களின் சுவாசாசயக் கோளாறுகள்.

**பாஸிப்ளோரா:** உட்காரமுடியாத பலஹீன சரீரம்.

**பாஸ்பரஸ்:** உயரமும் ஒல்லியுமான க்ஷயரோக சரீரம் சரீரம் நாளுக்கு நாள் உயரமாகவே வளர்ந்துகொண்டு போதல், எல்லாதசைகளும் தளர்ந்திருத்தல். பலஹீனத்தால் நடுக்கல்கள் சரீரம் முழுவதிலுமோ அல்லது சிற்சில இடங்களிலோ எரிச்சல், அதிக ரத்தப் பெருக்குள்ள சரீரங்கள், ஒரு சிறிய காயத்திலிருந்தும் ஏராளமான ரத்தப் பெருக்கு, நரம்புத் தளர்ச்சியுள்ள பலஹீன வாலிபர்கள், சரீரம் அதிவேகமாக இளைத்தல், சிறு உழைப்பிலும் சரீரம் முழுதும் நடுங்குதல், ரத்த சோகையுடன் உயரமாக வளருதல்.

**பெட்ரோலியம்:** சரீரம் இளைத்தல்.

**பெர்ரம் பாஸ்:** ரத்த சோகை. பலஹீனம். அகோனைட்டுக்கும் ஜெல்ஸிமியத்துக்கும் நடுவான நிலைமை.

**பெர்ரம் மெடாலிகம்:** ரத்த சோகை, அதிக பலஹீனம், சரீரம் இளைத்தல், பாண்டு ரோகம், ரத்தத்தில் சிவப்பு செபிகள் குறைவாக இருத்தல், உதடுகள் முகம் காதுகள், இவை வெளுத்தல், சரீரத்தின் எல்லா பாகங்களுக்கும் ரத்தம் சரிவர செல்லாமை, ரத்த சோகையுடன் சரீரத்தின் எல்லாப் பூந்தசைகளும் வெளுத்திருத்தல். நாளுக்கு நாள் சரீரம் இளைத்துக்கொண்டே போதல். பல அவயவங்களிலிருந்தும் ரத்தப்பெருக்கு.

**பெர்பெரீஸ் அக்யூபோலியம்:** சரீரத்துக்கும் கோளங்களுக்கும் புஷ்டியை உண்டாக்கும். நீடித்து உண்டால் சரீர நிறத்தையே அழகு படுத்தும்.

**பைடோலக்கா:** சரீரத்தின் தசைகள் கரைந்து இளைத்துப் போதல்.

**போடோபில்லம்:** பித்த சரீரிகளுக்கு அடிக்கடி தேவைப்படும் ஔஷதம் இடது பக்க பக்ஷவாதம்.

**ப்ரோமியம் :** பெருத்த கோளங்கள் உள்ள கணைச்சூட்டு குழந்தைகள்.

**ப்ளம்பம் :** திடீரென்றும் வேகமாகவும் சரீரம் இளைத்தல்.

**ப்ளாட்டா ஓரியாண்டாலிஸ் :** இரட்டைநாடி சரீரம்.

**மெக்னீஷியா கார்ப் :** தன் சரீரத்திலிருந்து புளிப்பு நாற்றம் கிளம்புவது போன்ற உணர்ச்சி. எப்போதும் சரீரம் சில்லென்றிருத்தல். அசதி, க்ஷயரோக சரீரம். சரீரம் இளைத்திருத்தல். இரவுகளில் சரீரம் மூழுதும் கீல்வாத வலிகள்.

**மெக்னீஷியா பாஸ் :** சரீரத்தின் பல பாகங்களிலும் முறுக்கும் வலி. குழந்தைகளின் பல் முளைக்கும் காலம்.

**மெக்னீஷியா மூரியாடிகா :** சரீரம் முழுதும் கடுப்பு வலிகள்.

**மெடோரினம் :** மேகச்சூட்டு சரீரம். ஆண், பெண், குழந்தைகள் சரீரம் நடுங்குதல். மேகரோகிகளுக்குப் பிறந்த குழந்தைகளின் வளர்ச்சி தடைபடுதல்.

**மெபைடிஸ் :** அதிகக் குளிரும் சரீரத்துக்கு ஒத்துக்கொள்ளுதல். எப்போதும் கால்கள் ஆடிக்கொண்டேயிருத்தல்.

**மெர்க்குரியஸ் ஸொலுபுலிஸ் :** துர்நாற்றம், முதலில் இளைப்பு, பின் நீர் சுரப்பு. இரவில் உபாதி அதிகம். ஸிபிலிஸ் சரீரம்

**மெஸீரியம் :** சரீரம் உறுப்புகள் கனமில்லாமல் நெட்டி போலிருக்கும் உணர்ச்சி. எல்லா உறுப்புகளிலும் உயிரற்ற உணர்ச்சி.

**மைகேல் :** எப்போதும் தன்னிச்சையின்றி சரீரம் முழுதும் ஆடிக்கொண்டேயிருத்தல்.

**மைரிகா :** அதிக பலஹீனம். மஞ்சட்காமாலை.

**மோஸ்சஸ் :** முழு சரீரமும் நடுங்குதல்.

**யூபடோரியம் பர்போலியேட்டம் :** சரீரம் முழுவதும் நொந்த வலி. தாங்காமல் முனகுதல். குளிர்ந்த தண்ணீர் உட்கொண்டால் சரீரம் குலுக்குதல்.

**யூரேனியம் நைட்ரிகம் :** அதிக இளைப்பு, பலஹீனம்.

**யூஸ்டிலாகோ:** மெலிந்த ஸ்திரீகள்.

**ரஸ்டாக்ஸ்:** சரீரம் முழுதும் கடுப்பு வலி. அடிபட்டதுபோல் வலி. அசைந்து கொண்டேயிருத்தல்.

**ரானங்குலஸ்:** பிரதி பருவ மாறுதல்களிலும் ஆகாரம் உட்கொண்ட பின்னும், மாலையிலும் சரீரம் முழுதும் அடித்துப்போட்டதுபோன்ற வலி.

**ருமக்ஸ்:** க்ஷயரோக சரீரம்.

**ரோடோடெண்ட்ரன்:** கீல்வாத சரீரம்.

**ரோஹிடாக்:** சரீரம் முழுதும் முட்களால் குத்தும் உணர்ச்சி.

**லாக்கெஸிஸ்:** இளைத்த சரீரம். கறுப்பு நிறம், பித்த உபரி சரீரம் (மாதவிடாய் நிற்குங்காலம்). அதி உணர்ச்சி. இடது பாகம் பாதிக்கப்படுதல் அல்லது இடது புறமிருந்து வலது புறம் செல்லும் நோய்கள்.

**லாக்டிப்ளோ:** பால் ஒத்துக்கொள்ளாத சரீரம் (உயர்ந்த வீரியம்)

**லாரோஸிராஸஸ்:** சரீரம் சில்லிட்டு நீல நிறமாகி விடுதல். சரீரம் சில்லென்றிருத்தல். எவ்வளவு சூடான ஒற்றிடங்கள் கொடுத்தாலும் சமனமேற்படாமை. உஷ்ணமும் சில்லிப்பும் மாறிமாறியேற்படுதல்.

**லிதியம்கார்ப்:** சரீரம் முழுதும் அடித்துப்போட்டது போலிருத்தல், விரைத்திருத்தல். இடது பக்கத்தில் வலி, இடது பக்க உபாதிகள். ஆண் பெண்.

**லேடம் பாலஸ்திரி:** சரீரம் முழுதும் வீங்குதல். பாண்டு வீக்கம், சரீரம் சில்லென்றிருத்தல்.

**லைகோபோடியம்:** ஒற்றைநாடி சரீரம், வயதுக்குமேற்பட்ட கிழத்தோற்றம். தேய்ந்த சரீரம், குழந்தைகள், முன் கோபம், வெடுவெடுப்பு. இடுப்புக்கு மேலே மாத்திரம் சரீரமிளைத்தல். வலது பக்கத்தில் வேலை செய்யும் ஔஷதம்.

**லொபீலியா இன்ப்ளேட்டா:** பலமிழந்த சரீரம், பலஹீனம்

**வலேரியானு:** சில சமயங்களில் சரீரமே காற்றில் மிதப்பது போன்ற உணர்ச்சி.

**வெராட்ரம் விரைட் :** சரீரம் துடித்தல்.

**ஜட்ரோபா :** சரீரம் சில்லிடல்.

**ஜஸ்டீஷியா :** சரீரத்தை உருக்குலைக்கும் நோய்கள். பலஹீனம்.

**ஜெல்ஸிமியம் :** ரத்தசோகை, மெலிந்த நாடி, பயந்த சுபாவம். சரீரம் முழுதும் பலஹீனம்.

**ஸபடில்லா :** தளர்ச்சியுற்ற தசை. சிவந்த நிறம். செம்பட்டை மயிருள்ள சரீரம். லாக்கெஸிஸ்போல் இடது புறமிருந்து வலது புறம் செல்லும் உபாதிகள்.

**ஸபீனு :** கன உணர்ச்சி. அதிக அசதி, சோம்பல், தொள தொளத்த சரீரம்.

**ஸரஸபரில்லா :** வயதுக்கு முன் கிழமாதல், ஸிபிலிஸ், ஸைக்கோஸிஸ், பாதரஸ ஔஷதங்களால் பீடிக்கப்பட்ட சரீரம். கர்ப்பத்திலேயே ஸிபிலிசுடன் பிறந்தவர்கள்.

**ஸல்பர் :** ஸோரா விஷத்தை அடியுடன் அகற்றும். சரியான ஔஷதங்களும் வேலை செய்யாத சரீரம்.

**ஸாம்புகஸ் :** சரீரம் நடுங்குதல். ஏற்கனவே சதைப் பிடிப்புடனிருந்தவர்கள், திடீரென்று இளைத்து விடுதல். க்ஷய ரோக சரீரம் கணைச்சூட்டால் இளைத்தல்.

**ஸிகூடா :** திடீரென்று சரீரம் விரைத்தல் தூக்கிப் போடுதல். பலவிதமாகவும் பயங்கரமாகவும் இழுக்கப்படுதல்.

**ஸிபிலினம் :** ஸிபிலிஸ் சரீரம். செம்பு நிறப் படைகள்.

**ஸிலிகா :** எப்போதும் சில்லென்றிருத்தல். சக்தியின்மை, சரீரம் இளைத்தல், நடுக்கல். சரீரத்தில் வலி. நிற்க முடியாத பலஹீனம். சளி பிடித்தல்.

**ஸீகேல் :** பலஹீன சரீரம்.

**ஸீனு :** சரீரத்தில் பல பாகத்திலும் துடிப்புகள்.

**ஸெபீயா :** மெல்லிய உயர்ந்த ஒற்றை நாடியான இடுப்பெலும்பு உயர்ந்து குறுகிய வெளுத்த முகமும், குழி விழுந்த கண்களுமுள்ள ஸ்திரீகள், வண்ணாத்திகள், அதிகமாகத் தண்ணீரில் நிற்பவர்கள்.

**ஸெலீனியம் :** சரீரம் இளைத்தல், நீடித்த நோய்களின் பின்னும் அதிபோகம், முஷ்டிமைதுனம், இவைகளின் பின் கோளாறுகள்.

**ஸோரினம் :** சரீரம் இளைத்தல். பலஹீனம், ரத்த சோகை, சரீரம் சற்று உஷ்ணமானால் உடனே அரிப்பு, சரியான ஔஷதங்களும் வேலை செய்யாமை, ஸோரா சரீரம், குழந்தைகள்.

**ஸ்குவில்லா :** முழுதும் அசதி, அதிக பலவீனம், புருஷர்கள் அடிக்கடி கை கால்களை நீட்டிக் கொண்டு சோம்பல் முறித்தல்.

**ஸ்டாபிஸாக்ரியா :** கோபமோ மனவெழுச்சியோ ஏற்பட்டால் சரீரம் முழுதும் நடுங்குதல்.

**ஸ்டானம் :** சரீரம் இளைத்தல், மனமும் சரீரமும் பலமிழந்திருத்தல்.

**ஸ்டில்லிங்க்யா :** மேகரோகத்தில் அதிக ரஸமருந்துகள் உண்டு, சரீரம் கெட்ட நிலைமை.

**ஸ்பாஞ்ஜியா :** சரீரத்தின் கீழ்பாகத்தில் மறத்த உணர்ச்சி, சரீரத்தின் பல பாகத்தில் முளையிருக்கும் உணர்ச்சி, சரீரம் கனமாக இருக்கும் உணர்ச்சி.

**ஹீபர் ஸல்பர் :** சில்லிப்பான சரீரம், சகிப்புத் தன்மை குறைவு. வலிகளைத் தாங்க முடியாமை, குளிர் காற்று மேலே படுவது சகிக்க முடியாமை. சரீரத்தில் இதர வஸ்துக்கள் தங்குதல்.

**ஹெலோனியாஸ் :** ரத்தசோகையுள்ள ஸ்திரீகள், அதிக பலஹீனம்.

**ஹெல்லிபோரஸ் :** சில்லிடல், சரீரத்தின் எல்லா உணர்ச்சிகளும் அற்றுவிடும் நிலைமை.

**ஹைட்ராஸ்டிஸ் :** இளைப்பு, பலஹீனம், இளைத்த சரீரிகளைக் கொழுக்க வைக்க உபயோகப்படும். கிழவர்களின் காசபேதம்.

# சருமம்

**அகேரிகஸ் :** மன உழைப்பால் அரிப்பு, சரீர உழைப்பால் அரிப்பு சமனம். நெற்றியில் பரு. சருமத்தில் பனிக்கட்டி போன்ற ஊசி குத்தும் உணர்ச்சி, மஞ்சட்காமாலை, எரிச்சல், சருமம் தளர்ச்சி அடைதல், உஷ்ணத்தால் சருமம் அரிப்பு, சிவத்தல்.

**அகோனைட் :** சிவப்பு, பளபளப்பு, சூடு, வீக்கம், கடுமையான வலி, அங்குமிங்கும் வேடிக்கையாகக் குத்தும் வலி, சின்னம்மைக் கொப்புளம்.

**அக்னஸ் காஸ்டஸ் :** மூக்கிலிருந்து மேல்நோக்கி இடது கன்னத்தில் பரவும் அக்கி, சருமத்தில் பொதுவாக அரிப்பு, மஞ்சள் நிறம்.

**அபிஸ் கனடென்ஸிஸ் :** சில்லிடல்.

**அபிஸ் மெல்லிபிகா :** சிலசமயம் தீப்பற்றி எரிவதுபோல் எரிச்சல், சில சமயம் ஊசிகளால் குத்துவதுபோல் அக்கி கொட்டுதல், எரிச்சல், வீக்கம், முதலில் வலதுபுறம், பிறகு இடதுபுறம். சருமம் சிவப்பு, சூடு, வெளுத்து மெழுகு போலாதல், கருத்த நீலநிறம், கறுப்பு. தாகமில்லாத நீர்ச்சுரப்பு, ராஜ பிளவைகள்.

**அபோஸினம் :** தாக வரட்சையுடன் பாண்டு வீக்கம், அதிக ரத்தம் வெளியேறினபின் ஏற்படும் நீர்ச் சுரப்பு.

**அமில் நைட்ரேட் :** தலையில் சூடு.

**அமோனியம் கார்ப் :** நெற்றி, முகவாய், வாயைச் சுற்றி சிறு கொப்புளங்கள், கைகளில் வீக்கம், உள்ளங்கையில் தோல் உரிதல், விரல் நுனி அழற்சி, நகச்சுற்றி, கால் கட்டை விரல் சிவத்தல், வீக்கம், வலி, வெளிவரும் நீர் அதிக நாற்றம், கறுப்பு ரத்தம், சொரிந்த பின் அரிப்பு: ரத்தம் வருதல், சொரிந்தால் அரிப்பு சமனம். குளித்த பின் முகத்தில் சிறு புள்ளி.

**அமோனியா மூரி:** வலது புறம் பிடரியில் அரிக்கும் சிறு கொப்புளங்கள், பல பாகங்களிலும் அரிப்பு, (மாலையில்) கரப்பான் சிரங்கு, சின்னம்மை.

**அம்ப்ராக்ரி:** சருமம் முழுதும் அரிப்பு, எரிச்சல், மறமறப்பு, ரத்த ஓட்டக்குறைவு.

**அயிலாந்தஸ்:** சிவந்தபுள்ளி அடையான வேர்க்குரு போன்ற கட்டிகள். வெடிப்புகள், மங்கிய முகம், நெற்றி அழுகின மாமிச நாற்றம். அமுக்கினல் சிவப்பு. வெடிப்பு, மறைதல்.

**அர்ஜண்டம் மெடாலிகம்:** கடைசி விலா எலும்புப் பக்கத்தில் கொப்புளம்.

**அர்ஜண்டம் நைட்ரிகம்:** படுக்கைப் புண், அக்கிபோலிருத்தல்.

**அலுமின:** வறண்டிருத்தல் தடிப்பு, சுருக்கம். அரிக்கும் சிரங்குகள், ஊரும் உணர்ச்சி.

**அனகார்டியம் ஓரியண்டேல்:** உள்ளங்கையில் தோல் உரிதல். அரிப்பு, எரிச்சல், கொட்டும் வலியுள்ள சிரங்குகள்.

**அஸபோடிடா:** குழிப்புண்கள், நீல நிறமாக எரிச்சலுடன் ஓரங்கள் உயர்ந்தும் இருத்தல், தொட்டால் வலி விரைவில் வருதல். ஏராளமான மெல்லிய நாற்றமுள்ள அதிக சீழ் வருதல். எலும்புகளில் குழிப்புண்.

**ஆண்டிமோனியம் க்ரூடம்:** கட்டிகள், கொப்புளங்கள், பருக்கள் கன்னங்களில் ஆருத சீழ்க் கட்டிகள். வலியில்லாத படுக்கைப் புண்கள்.

**ஆண்டிமோனியம் டார்ட்:** அமுக்கப்பட்ட வைசூரி, துடை, ஆண், பெண்குறி அவைகளுக்கருகில் கொப்புளத்துடன் சிரங்குகள். பிறகு இவ்விடங்களில் நீலச்சிவப்பு நிற மடைதல், அம்மை தோன்றுவது அமுக்கப்படுவதால், வலிப்புகள் வருதல். கொப்புளங்கள்.

**ஆரம் ட்ரிபில்லம்:** இடதுபுறம் அதிக உபாதிகள், அரிப்பு, ராமக்கண் என்னும் அம்மை.

**ஆரம் மூரியாடிகம்:** உதடுகளில் ஏற்படும் பருக்கள். மூக்கின் இடதுபுறம் ஆழமான குழிப்புண். மணிக்கட்டுகள் வீங்குதல் தொப்புளின் அடிப்பாகத்தில் சிவந்த நிறப்

பருக்கள், கால் பெருவிரல்களில் சிவப்பு நிறம். குண்டி, துடைகளில் கொப்புளங்கள், நெற்றியில் ஏற்படும் அரிப்பு, காதின் பின் பொறுக்குத் தட்டுதல்.

**ஆரம்மெடாலிகம்:** கல்லீரல் இதய உபாதிகளில் அமுக்கினுல் குழி விழும் நீர் வீக்கம், கால் வீக்கம்.

**ஆர்ஸனிகம் ஆல்பம்:** உயர்வான ஓரங்கள் உள்ள குழிப்புண். கறுத்த கட்டி தட்டிய வஸ்து வெளிவரல். காரமாக அழுகிய சதைபோல் நாற்றத்துடனிருத்தல். முழங்கால் களில் கரப்பான், முகம், உதடு, புற்றுகள். படர்தாமரை, தேமல் வரட்சி. சீதளத்தால் அதிகரிக்கும் அரிப்புள்ள சொறிகள், ரத்த சோகை, தோல் உரிதல், சுருக்கம், பொருக்கு, நாற்றம், சீழ், உள்ள சொறி சிரங்குகள், தலையில் கொள்ளுபோன்ற பொருக்குகள், ராஜபிளவை.

**ஆர்னிகா மொண்டானு:** சருமத்தின் கீழ் நீலப் புள்ளிகள். பழுப்பு நிறப் புள்ளிகள், சதை அழுகுதல், மிருதுவான பாகங்களில் ஏற்படும் வீக்கங்கள், கொஞ்சம் பழுத்த கட்டிகள், கொப்புளங்கள்.

**ஆலோ ஸொகோட்ரினு:** அடி வயிற்றில் பருக்கள், கால்கள் அரிப்பு. சருமம் சூடாக இருத்தல். (ஆனுல் சுரம் இருக்காது.)

**ஆஸிட் அஸடிக்:** மிருது, வெண்மை, உள்ளிருக்கும் நரம்புகள் வெளியே தெரிதல். நீர்க்கோர்வையில் மெழுகுபோன்ற சருமம்.

**ஆஸிட் ஆக்ஸாலிக்:** ரத்தத்தில் கரியமிலவாயு கலந்ததனுல் ஏற்பட்ட விகாரமான சருமம்.

**ஆஸிட் நைட்ரிக்:** ஸ்தனங்களில் கட்டிகள். அபானத்திலும் கடைவாயிலும் ரத்தம் வரும் வெடிப்புகள். தொட்டால் ரத்தங்கொட்டும் ரணங்கள். புற்றுகள், நீடித்த சீழ் பிடித்த கட்டிகள்.

**ஆஸிட் பாஸ்பாரிக்:** மயிர் உதிர்தல், நோயுள்ள பக்கம் கறுப்பாதல், கிழம்போல் சுருக்கம் விழுந்த சருமம்.

**ஆலிட் பிக்ரிக்:** தலையின் பின்புறம் காதுக்குள் சிரங்குகள். பெண் குறியில் அரிப்பு.

**ஆலிட் பென்ஸாயிக்:** முகத்தில் செம்புநிறத் தேமல் படைகள். மணிக்கட்டு, முழங்கால்களில் வீக்கம், கால் கட்டை விரலில் ஆருத ரணம்.

**ஆலிட் ஸல்ப்:** அடிபட்ட காயங்கள் அழுகி ரணம் ஆதல், மார்பு, முகத்தில் திடீரென்று எரிச்சல் உண்டாதல். சருமத்தை கிள்ளுவதுபோன்ற உணர்ச்சி. பழைய வடுக்கள், சீழ்ப் பிடித்தல் பிளவை கட்டி, படுவன், ரணம், உபாதி பாகத்தைக் கீழே வைத்துப் படுத்தால் சமனம்.

**ஆலிட் ப்ளூவாரிக்:** கால் ரணங்களில் அதிக சீழ் வருதல், ரணங்கள் வலியுடனுமிருத்தல் குளிர்தாக்கினுல் சமனமடைதல். உஷ்ணத்தால் அதிகரித்தல்.

**இக்னேஷியா:** அரிப்பு. சொரிந்தால் சமனம். ஆனுல், மற்றோரிடம் அரிப்பு உண்டாதல்.

**இபிகாக்உனு:** சொரிசிரங்குகள் அமுக்கப்படுதல் (குறிகளை அனுசரித்து)

**எக்கினேஷியா:** ரத்தத்தில் விஷங்கலத்தல். பாம்பு முதலிய விஷ ஜந்துக்களின் கடிகள். ராஜப்பிளவை.

**எதூஸா ஸைனுபியம்:** (குழந்தைகளுக்கு) நீலம் அல்லது கறுத்த புள்ளிகள் சரீரம் முழுதும் இருத்தல்.

**ஐயோடியம்:** உலர்ந்த சருமம். கருப்பு, மஞ்சள் அல்லது பழுப்பு நிற சருமம்.

**ஐரிஸ் வர்ஸிகோலர்.** தலையிலும் முகத்திலும் வாயைச்சுற்றிலுங் கொப்புளங்கள் (இரவுகளில் உபாதி அதிகம்).

**ஒலியாண்டர்:** தலைத் தோலில் காதுகளின் பின் சொரி சிரங்குகள். அரையிடுக்கிலும் கழுத்திலும் அரித்தல். உடுத்தியிருக்கும் வஸ்திரங்களைக் களைந்தால் அதிக அரிப்பு உண்டாதல்.

**ஒபியம்:** நீர் அதைப்பால் ஏற்பட்ட வீக்கம். சருமம் சிவந்திருத்தல்.

**காந்தாரிஸ் :** சீழ், நீர்க் கொப்புளங்கள். அரிப்பு, எரிச்சல், அக்கி கொப்புளங்கள். நெருப்பு சுட்ட புண், அதிக சூடான, கடின அல்லது திரவப்பொருள்கள் பட்டதால் வெந்த புண்கள்.

**கல்கேரியா ஐயோடைட் :** வறண்ட கறுத்த சருமம் களைத்தல்.

**கல்கேரியா கார்பானிகா :** மஞ்சள் நிறம், சுருங்குதல், உலர்தல், சில்லிடல், உலர்ந்த பொறுக்குகள். மஞ்சள் நிறச் சீழும், மிகச்சிறிய காயங்களிலும் சீழ் வருதல். கட்டிகள், பொருக்குகள் உள்ள படைகள், கடி, படர் தாமரை.

**கல்கேரியா பாஸ் :** அக்குளில் குழிப் புண்கள். பீஜம் வீங்குதல். அரிப்பு. நகங்களைச் சுற்றி வலி. குளிர்ந்த பருவங்களில் அதிகமாதல்.

**கல்கேரியா ப்ளோரிகா :** பவுத்திரம். ஆழமான குழிப் புண், கழலைக்கட்டி, சீழ்க் கட்டி. நகச்சுற்றி, முழங்கால் பள்ளத்தில் வீக்கம். கட்டி. சிசுக்களின் தலையில் ரத்தக் கட்டிகள், வீக்கம். கன்னத்தில் கெட்டியான வீக்கம். அபானம், உள்ளங்கை வெடித்தல். கோளங்கள் கடின மடைதல். பச்சை நரம்பு புடைத்திருத்தல். ஸ்தனங் களில் முடிச்சுகள்.

**கல்கேரியா ஸல்ப் :** உள்ளங்கால்களில் எரிதலும் அரிப்பும். அக்குளில் சீழ்க் கட்டிகள், சிராய்தல், வெட்டுக் காயங்கள் ஆறுமை, சீழ்க்கொள்ளுதல். மஞ்சள் நிறமான நாற்ற முள்ள பொறுக்குகள். சீழ், மஞ்சள் நிறப் பொருக்குக ளுள்ள சரும நோய்கள். கிள்ளினால் ரத்தம் வரக்கூடிய மயிர்க்காலின் கீழே ஒன்றுமேயில்லாத பருக்கள். சிரங்குக் கட்டிகளின் ஏராள சீழ் ஒன்றன்பின் ஒன்றாகச் சீழ்க் கட்டிகள் தோன்றிக்கொண்டே இருத்தல். நீர் சுரந் திருக்கும் கட்டிகள். வாய் திறந்திருக்கும் குழிப் புண்கள்.

**கல்கேரியா ஹைபோபாஸ் :** நீடித்த உடையாத சீழ்க்கட்டிகள். குறைந்த வீரியங்களில் கொடுத்தால் ஆபரேஷன் செய்ய அனுகூலமாக இருக்கும். எலும்பு வியாதிகளுடன் சீழ்க் கட்டிகள்.

**கன்னபிஸ் இண்டிகா:** மூத்திரகோசத்தில் தோல் உரிதல்.

**காக்குலஸ்:** சரீரத்தைக் கிள்ளி ஒரு நிமிஷம் கழிந்த பின், உணர்ச்சி தெரிதல். கைகள் மாறி மாறி மறத்துப் போதல். சில சமயங்களில் சில்லிப்பும் சூடும் மாறி மாறி வருதல்.

**காபியா க்ருடா:** சிவத்தல், வரட்சி.

**காப்ஸிகம்:** ஸ்தனங்களைப் போன்ற உருவத்தில் பழுத்த சீழ்க் கட்டிகள். சருமத்தில் இரத்தச் சுரப்பு, கசகசப்பு, தொளதொளப்பு, சில்லிப்பு. சொரிந்தால் அதிகமாகும் அரிப்பு.

**காம்போரா:** காலராவில் முகம் நீலமடைதல், சுருங்குதல், சில்லிடல். சின்னம்மை இறங்கும் காலத்தில் சில்லிட்ட, வெளுத்த முகம்.

**கார்டுஸ் மரியேனஸ்:** அசுத்த ரத்தக் குழாய் தடிப்பு. குழிப் புண், மஞ்சட்காமாலை, வெளுத்த சருமம்.

**கார்பன் ஸல்ப்:** உணர்ச்சியின்மை, எரிச்சல், அரிப்பு, குழிப் புண். சிறு காயங்களிலும் சீழ் பிடித்தல். பனி வெடிப்பு. எறும்பு ஊறும் உணர்ச்சி. தலையில் பொறுக்கும், கசகசப்பும் உள்ள சொரி சிறங்குகள், மூக்கில் சிறு கொப்புளம். கெட்ட சதை வளர்தல். புற்று நோயைத் தடுக்கும்.

**கார்போ அனிமாலிஸ்:** எரிச்சல், வலியுடன் செம்பு நிறச் சினைப்புகள். கொப்புளங்களைச் சுற்றி நீல நிறம். அக்கி போன்ற வீக்கம். நெடுநாட்களாக ஆருத ரணங்கள்; மூடாத குழிப்புண்கள். சீழ் பிடிக்காத எரிச்சல், வலியுள்ள கட்டிகள்.

**கார்போ வெஜ்:** நீலம், சில்லிப்பு, அரிப்பு (மாலை படுக்கைச்சூடு இவைகளால் உபாதி அதிகம்), கசகசப்பு, சூடான வியர்வை, படுக்கைப் புண் இதில் ரத்தப் பெருக்கு. நெற்றி, முகத்தில் பரு. சரும உபாதிகளின் பின் காதில் சீழ் வருதல். வெளிக் காதில் தோல் உரிதல். பலஹீனத்தால் மயிர் உதிர்தல். ஆருத குழிப் புண் எரிச்சல், வலி.

**காலண்டுலா :** புதுக்காயம், வெட்டுக் காயம், ஆறாத காயங்கள், சீழ் வடியும் குழிப் புண்கள், அக்கி முதலியவைகள் (Ex. Q. வெளி உபயோகத்திற்கும். Q. உள்ளுக்கும் கொடுத்தால் நல்ல பலன் தரும்.)

**காலாடியம் :** ஜனனேந்திரியங்களில் அரிப்பு. தித்திப்புள்ள வியர்வையால் ஈ எறும்பு மொய்த்தல். பூச்சிக் கடிகள். அவைகளால் ஏற்படும் எரிச்சல், அரிப்பு. காசநோயும் சரும அரிப்பும் மாறி மாறி வருதல். எரிச்சலுள்ள அக்கி, சரும அழற்சிகள். எரியும் உணர்ச்சி.

**காலீ ஆர்ஸனிகம் :** சரும நோய்கள், உஷ்ணம், ஆடைகளைக் களையும்போதும், நடக்கும்போதும் அரிப்பு. உடலில் வாதரோகத்தாலேற்பட்ட முடிச்சுக்கள்.

**காலீ ஐயோடேட்டம் :** சருமம் பூராவும் எரிச்சல், வீக்கங்கள், நீர் சுரப்புகள்.

**காலீ கார்ப் :** கடுகு பற்று போட்டதுபோல் எரிச்சல்.

**காலீ க்ளோரிகம் :** ஜுரத்தில் கை கால் சில்லிடல்.

**காலீ நைட்ரிகம் :** திடீரென்று ஏற்படும் நீர் சுரப்பு.

**காலீ பைக்ரோமிகம் :** பரு, வட்டமான ஓரமுள்ள குழிப் புண், பிசுக்கென்று ஒட்டிக்கொள்ளும் வஸ்து வெளிவரும் எரிச்சல், வலியுள்ள பெரியம்மை போன்ற கொப்புளங்கள். ஆண் குறியில் உண்டாகும் புண்கள், கொப்புளங்கள்.

**காலீ ப்ரோமேடம் :** பூந்தசைகளில் உணர்ச்சியின்மை (கண், தொண்டை, சருமம்.) முகப்பரு, கொப்புளங்கள் அரிப்பு. மார்பு தோளில் அதிகம், நீடித்த அழற்சியுள்ள பொருக்குத் தட்டும் சரும உபாதிகள்.

**காலீ மூரி :** முகப்பரு, கெட்டியான வெண்மை நிறப் பொருள் நிரம்பிய சிறு கொப்புளங்கள், பாலுண்ணிகள்.

**காலீ ஸல்ப் :** நீடித்த சரும அழற்சி, பொருக்கு, அக்கி எரிச்சல், அரிப்பு, கடி நோய், படர்தாமரை.

**காலோட்ராபிஸ்:** சருமத்தில் ரத்த ஓட்டக்குறைவு, கிரந்தி,யானைக் கால், குஷ்டம். தசை கடினமாகவும் உறுதியாகவும் ஆதல்.

**காலோபில்லம் :** கருப்பை மாதவிடாய்க் கோளாறுகளில் சருமம் சுபாவ நிறம்மாறி வேறு நிறம் அடைதல்.

**கால்மியா :** சருமத்தில் தித்திப்புள்ள வியர்வை. ஈ, எறும்பு மொய்த்தல். பூச்சிக் கடியால் எரிச்சல், கடுப்பு. சரும உபாதியில் அரிப்பும், காசமும் மாறி மாறி வருதல். அக்கிபோன்ற சரும அழற்சி, எரிதல்.

**காஸ்டிகம் :** காதின் பின்புறமும் துடையின் நடுப்பாகமும் ரண உணர்ச்சி. மடிப்பு விழுந்த சதைகள், மூக்கு, விரல் நுனி களில் ரத்தம் கசியும் பெரிய பாலுண்ணிகள். ஆறாத சுட்ட புண்கள், சுட்டதினால் ஏற்பட்ட வலி முதலிய உபாதிகள்.

**கூப்ரம் ஆர்ஸனிகம் :** உலர்ந்த சருமமும் குளிர்ந்த வியர்வையும் மாறி மாறி ஏற்படல்.

**கூப்ரம் மெடாலிகம் :** கடினம், நீலநிறம், எலும்பு மூட்டுகள் சருமம் சுருங்கிய இடங்கள் இவைகளில் அரிப்பு. குழிப் புண்கள்.

**கொரால்லியம் ரூப்ரம் :** ஆண்குறி நுனி, நுனித் தோலில் கிரந்திப் புண்கள் ரத்தம் கொட்டும் குழிப்புண்கள்.

**கோக்கஸ்காக்டி :** பாண்டு மகோதரம். (மூத்திரக் குறைவு)

**கோபைவா :** மலச் சிக்கல், சுரத்துடன் சரீர முழுதும் முக்ய மாக முகத்தில் சிவந்த சினப்புகள்.

**கோனியம் :** அடிபட்ட இடங்கள் கெட்டியாதல். அக்குள் கோளங்களில் வலி. கைகளில் கீழே மரத்த உணர்ச்சி மஞ்சள் நிற சருமம். நகம் விரல் மஞ்சளாக இருத்தல். கோளங்களின் வழியாகப் பறந்து செல்லும் பிடிப்பு வலிகள் வியாபித்தல். கட்டிகள் பருக்கள், கட்டிகள் வலி பொருக்காமல் அலறுதல். நாற்றமுள்ள சீழும் தண்ணீ ரும் வலியுமுள்ள குழிப்புண்கள். சருமத்தில் எரிச்சல், துர்நாற்றம். இரவிலும் காலையிலும் வியர்வை. கண்

களை மூடியதும் தூங்க ஆரம்பித்ததும் வியர்வை. இரவில் உபாதி அதிகம்.

**க்ராபைடிஸ் :** சொரி சிரங்குகளால் பாதிக்கப்படாத பாகங்கள், கரடு முரடாகவும் இடைவிடாமல் காய்ந்துகொண்டும், கடினமாகவும் இருத்தல். பரு, கொப்புளங்கள் சிரங்குகளிலிருந்து ஒட்டும் தன்மையுள்ள நீர் கசிதல். கை கால்களின் வளைந்த இடங்களிலும் அரை இடுக்குகளிலும், கழுத்திலும், காதுகளின் பின் புறத்திலும் பச்சைப்புண். ஆரோக்கியம் கெட்ட சருமம், சிறு சிராய்ப்புகளும் சீழ்க் கொள்ளுதல். குழிப்புண்களிலிருந்து மெல்லிய தேன் போன்று ஒட்டுந் தன்மையுள்ள நீர் கசிதல். கோளங்கள் கடினம், வீக்கம், வாத நோய் சம்பந்த கட்டிகள். ஸ்தனக் காம்புகளிலும், வாயிலும், அபானத்திலும், விரல்களின் நடுவிலும் வெடிப்பு. மூகத்தில் அக்கி எரிச்சல். கொட்டும் வலி. கால்களில் வீக்கம். சரும உபாதிகளுடன் நீடித்த கொறகொறப்பு

**க்ரிடேஜஸ் :** காற்று அல்லது தண்ணீர் பட்டால் எரியக்கூடிய சிவந்த சொரி சிரங்குகள்.

**க்ரோடன் டிக்லியம் :** மடிப்பு விழுந்த சருமம். அரிப்புடன் கூடிய கர்ப்பான், பரு, கொப்புளங்களில் ஊரும் உணர்ச்சி குறியிலும் பீஜத்திலும் அரிப்பும் எரிச்சலுமுள்ள கரப்பான். இடது துடையில் விதைக்கு நேராக தொட்டாலும், நடந்தாலும் அதிகமான வலியுடன் கூடிய கசகசப்புடன் சிவந்து அழற்சிபோன்றிருத்தல்.

**க்ரிஸோட் :** ஸ்திரீகளின் மர்ம ஸ்தானங்களில் எரிச்சல், அரிப்பு, பெண்குறியில் கிரந்திப்புண், கீழ் உதட்டில் பயறு போன்ற பருக்கள். யோனியில் சதை வளர்ச்சிகள், சிறு காயங்களிலிருந்து அதிக ரத்தப் பெருக்கு.

**க்ரோடேலஸ் ஹாரிடஸ் :** மஞ்சள் நிறமடைந்த சருமம் ரத்த வியர்வை, பழுப்பு அல்லது மங்கின நீல நிறப் புள்ளிகள்.

**க்ளமேடிஸ் எரெக்டா:** தேய்பிறையில் காய்ந்ததுபோலவும் வளர் பிறையில் அழற்சியடையும் சொரி சிரங்குகள். கை, பிடரிக் கழுத்து, பிடரியில் நீர் கசியும் அதிக அரிப்புள்ள

படை கரப்பான், சருமம் தளர்ச்சியடைதல். (உபாதி அதிகம்:— சீதள ஸ்நானம் படுக்கைச்சூடு. அமாவாசை)

**சிமாபிலா:** கோளங்கள் பெரிதாகி வீங்குதல், மேக ரோக ரணம், கழலைக்கட்டிகள்.

**செலிடோனியம்:** மஞ்சட்காமாலை, அரிப்புகள், முகம், சருமம், மஞ்சள் நிறமடைதல்.

**சைனு:** மெதுவாகத் தொட்டால் வலி அதிகம். நன்ருக அமுக்கினுல் வலி சமனம். அதிக வியர்வையுடன் சில்லிப்பு, ஒரு கை, கத கதப்பு மறு பனிக்கைகட்டி போலிருத்தல். சரீரம் லேசாக ஊதியிருத்தல். கோளங் கள் கறடுதட்டிப் பருத்திருத்தல்.

**டல்கமாரா:** மாதவிடாய்க்குப் பதில் கொப்புளம், படை, உண் டாதல், மழை அல்லது சீதள காலங்களில் உண்டாகும் சரும உபாதிகள். பனிக் காலங்களில் கொப்புளம், படை, கோளங்கள் வீக்கம், சினப்புகள், சொரிந்தால் ரத்தம் வருதல். கை, முகம், மர்ம ஸ்தானங்களில் கொப்பளித்தல்.

**டாரண்டுலா குபன்ஸிஸ்:** சரீரம் உப்புதல், சிவந்த பருக்கள். ராஜபிளவை. வயோதிக காலங்களில் ஏற்படும் ரணங்கள். அழுகிய ரணங்கள். ஸ்தனங்களில் கறடான கட்டிகள், அழற்சியும் வலியும் அதிகமுள்ள கட்டிகள்.

**டுக்ரியம்:** நகச் சுற்றி, கால் கட்டை விரல் நகங்கள் சரிவர வளராமை, ரணங்கள்.

**டெல்லூரியம்:** இடுப்பின் கீழ் அதிகமாகவும் அல்லது உடல் முழுவதும் படைகள். நாற்றமுள்ள நீர் வெளியாதல், இரவில் அரிப்பு அதிகம். கொப்புளம், பரியாரிப்படை, படைகள், காதுகளின் பின்புறம் படைகள்.

**ட்யூபர்குலீனம்:** சிவந்த சருமம், பூச்சிகள் ஊறும் உணர்ச்சி இரவில் அதிகமாக அரிக்கும் படைகள்.

**தராக்ஸகம்:** அஜீர்ணம் அல்லது பித்தத்தால் சருமம் மஞ்சள் நிறமடைதல்.

**துஜா:** புற்று கட்டி, சதை வளர்ச்சி, சினைப்புகள், ரணங்கள், பால் பரு. பஞ்சுபோன்ற மிருதுவான கட்டிகள். கொப்புளம், பிளவை, ஆண்குறி முன்புறம் அல்லது தோலில ரணம். யோனியில் சதைவளருதல். பாலுண்ணி போன்ற சினைப்புகள், கை புஜங்களில் படர்தாமரை, மூடிய பாகங்களில் உண்டாகும் படைகள். சொரிந்தால் அதிகரித்தல் அபானம், ஆண் பெண் குறிகளின் பக்கங்களின் ரணம். அம்மை குத்தியதால் ஏற்பட்ட உபாதிகள் நாற்றமுள்ள தித்திப்பு வியர்வை. (களிம்பு அல்லது Ex. Q. பாலுண்ணிகளின் வெளிப்பிரயோகத்திற்குப் பயனளிக்கும்.)

**தெரிபிந்த்:** மகோதரம், பூந்தசைகளில் ரத்தம் கசிதல், சுருங்கி வெளுத்த முகம்.

**நகஸ்வாமிகா:** அரிப்பு. எரிச்சல், மஞ்சள் நிறம், அஜீரணத்தால் சிறு சினப்புகள், நெற்றியில் வீக்கம், வலி.

**நேட்ரம் ஆர்ஸனிகம்:** பூச்சி ஊறும் உணர்ச்சி, எரிச்சல், செதில் போன்ற பற்றுக்கள். மெல்லிய வெண்மையான பொருக்குகள் பொருக்கை எடுத்தபின் சருமம் சிவப்பு நிறமடைதல். சருமம் சற்று உஷ்ணமானுல் அரிப்பு அதிகமாதல். பொருக்குகளை எடுக்காவிடின் அரித்தல்.

**நேட்ரம் சார்பானிகம்:** நெற்றியில் மஞ்சள் நிறத் தேமல் படைகள் பூச்சிகள் ஊரும் உணர்ச்சி, அரிப்பு, பாலுண்ணிகள் ரணமாதல். சிறு கொப்புளங்கள் படையாக மாறுதல். அக்குள், விரல் இடுக்குகளில் படைகள் வீக்கமும் சிவந்த நிறமும் உள்ள படைகள், படைகளில் வெண்மையான நீர் வடிதல் கொப்புளங்களினுள் பச்சை நிறச் சீழ் இருத்தல், குதிகால்களில் ரணங்கள்.

**நேட்ரம் பாஸ்:** கணுக்கால்களில் அரிப்பு.

**நேட்ரம் மூரியாடிகம்:** ஆசனவாயைச் சுற்றி படைகள். விரல்களில் தோல் உரிதல், வெடிப்பு, அரிப்பு, குத்தல், சருமம் உலர்ந்தது போலும் எண்ணெ தடவியது போலும் ஊதியும் இருத்தல். மயிர்க்கால் ஓரங்களில் படைகள், கீல்மூட்டுகளின் இடுக்குகளில் சிறு கொப்புளங்கள், படைகள்.

**நேட்ரம் ஸல்ப்:** முகத்தில் அரிக்கும் படைகள், உதடுகளில் சிறு கொப்புளங்கள். காய்தல், உலர்தல். தாடைகளில் பரு, எரிச்சல், சுக்லகோளம், பீஜம் வீங்குதல், ஆண்குறிப் பாகங்களில் அரிப்பு, மஞ்சட்காமாலை, கொப்புளம், அதிக மான நீரைக் கக்கும் படை. சொறி, உடுத்திய ஆடை களைக் களைந்தால் அரிப்பு உண்டாதல்.

**பல்ஸடில்லா**, அரிப்பு, எரிச்சல், சினைப்பு, அதே சமயத்தில் வயிற்றுப் போக்கு, வெளுத்த சருமம், (சின்னம்மை, டைபாய்ட் குறிகளுடன்), தர்மாமீடரில் ஜுரம் தெரி யாது. ஆனால், தொட்டால் சரீரம் உஷ்ணமாகவே யிருக்கும்.

**பாரிடா கார்ப்:** காதில் சொரி சிரங்குகள்.

**பாரிடா மூரியாடிகா:** எரிச்சலுள்ள ரணம், அரிப்பு சொரிசிரங்கு படை.

**பாஸிலினம்:** கழுத்தின் கோளங்கள் வலியுடன் பருத்திருத்தல். படைகள், தலை, கண், இமையில் படை

**பாஸ்பரஸ்:** சிறு சிராய்ப்புகளிலிருந்தும் அதிக ரத்தம் வெளிப்படுதல், மஞ்சள் நிறச் சீழ் வெளிவரும் கட்டிகள். எரிதல், கொட்டும் வலி, குழிப்புண், மூட்டுகளைச் சுற்றி நீர்க் கொப்புளங்கள், காய்ந்த செதில்கள், வெண்மையான சிறு கொப்புளங்களுள்ள படை, சதை வளர்ச்சிகளில் ரத்தம் கொட்டுதல், கந்தக நாற்ற வியர்வை.

**புபோ:** உள்ளங்கால், உள்ளங்கைகளில் கொப்புளங்கள், உணர்ச்சி இல்லாத படைகள், சிறிய காயங்களும் சீழ் பிடித்தல், ராஜப் பிளவை, எரிச்சல், அரிப்பு.

**பெட்ரோலியம்:** காதுகளின்பின், கைகள், அக்குளில், படைகள், அரிப்பு, எரிச்சல். கெட்டியான ஒட்டுந்தன்மையுள்ள நீர், நீடித்த நீர் வடியும் படைகள், சிறிய ரணங்களும் சீழ் பிடித்து படருதல். குழிப்புண். ஓரங்களில் உயரமாகச் சதை வளருதல். கோடையில் சமனம். குளிர் காலத்தில் உபாதி அதிகம்.

**பெர்பெரீஸ் அக்யூபோலியம் :** முகப் பரு, செதில்களுள்ள படைகள். ஸிபிலிஸ் இரண்டாம் நிலைமை. சரும உபாதிகள். கோளங்கள் கறடு தட்டுதல். பருபோன்ற கொப்புளங்கள் வலி தலையிலிருந்து முகம், கழுத்திற்குப் பரவுதல். அரிப்பு (நீடித்து உண்டால் சரும நிறத்தை அழகு படுத்தும்).

**பெர்பெரீஸ் வல்கேரிஸ் :** எரிச்சல், அரிப்பு. சொரிந்தால் அதிகமாதல். குளிர்ந்த வஸ்துக்களைத் தடவுவதால் சமனமாதல் சிறு சினப்புகள் சரீரம் முழுதும் உண்டாதல். கை அபானத்தைச் சுற்றி படைகள்.

**பெர்ரம் ஐயோடேட்டம் :** கோளங்கள் வீங்குதல், கட்டிகள்.

**பெர்ரம் மெடாலிகம் :** வெளுத்த சருமம், திடீரென்று சருமம் சிவத்தல். அமுக்கினால் குழி விழும் தன்மை.

**பெல்லடோன்னு :** சூடு, எரிச்சல், சிவந்த வீக்கம், தொட முடியாத தெறிக்கும் வலி (குறிகளை அனுசரித்து ராஜப் பிளவை ஆரம்பத்திலும்; எல்லா அழற்சிகளும் நல்ல சிவந்த நிறத்துடன் ஆரம்பித்தல், சருமம் சிவத்தல். உஷ்ணம், துணியால் மூடிய பாகங்களில் மட்டும் வியர்வை.)

**பேயோனியா :** அபானத்தில் அரிப்பு, வெடிப்பு, எரிச்சல், கடுப்பு வலி, ரணம். நைட்ரிக் ஆசிட்டால் பலன் உண்டாகாத நிலமை.

**பைடோலக்கா :** பாதங்களில் ஆறுத ரணம். அடிக்கடி சீழ்க் கட்டிகள் உண்டாதல். மேக அரையாப்புக் கட்டிகள். மெஷினுல் வெட்டி எடுத்ததுபோன்ற ரணம், சீழ்பிடித்த கட்டிகளை துரிதமாகப் பழுக்க வைக்கும்.

**பைரோஜினியம் :** சீழ்க் கட்டிகள் தோன்றல். அதிக எரிச்சலுள்ள ரணங்கள், கட்டிகள். அதிகமாக வீங்கும் சிறு காயங்கள். அதிசீக்கிரத்தில் படுக்கைப் புண்கள் ஏற்பட்டுவிடல்.

**போராக்ஸ் :** சுருக்கம், வெளுத்த சருமம். சிறு காயத்திலும் சீழ் பிடித்தல். சருமத்தில், நெற்றியில், கையில் சிலந்தி

வலை ஒட்டியிருக்கும் உணர்ச்சி. இதனால் அடிக்கடி துடைத்துக் கொண்டேயிருத்தல்.

**பேரவிஸ்டா :** துடை, முழங்கால் வளையுமிடம், சிவந்த செதில் படை, பருக்கள் அரிப்பு, எரிச்சல். கோடையில் அதிகமாதல். மனவெழுச்சியில் சரீரம் முழுதும் மயிர்கள் விரைத்தல். உஷ்ண காலங்களில் பரு, படை அதிகரித்தல்.

**ப்ரையோனியா :** ஊதியிருத்தல். வெளுப்பு அல்லது மஞ்சள் நிறம். வலி, உஷ்ணம். சருமத்தில் கீழே நீரதைப்பு.

**ப்ரோமியம் :** கொப்புளம், பரு, சினப்புகள், முகம், கைகளில் சிரங்கு, தொண்டை, கழுத்து கோளங்கள் கெட்டியாதல்.

**ப்ளம்பம் :** மஞ்சள் நிற சருமம். மஞ்சட்காமாலை. கை கால்களில் பச்சை நிற நரம்புகள்.

**ப்ளாண்டாகோ :** வேர்க்குரு, எரிச்சல், அரிப்பு.

**மங்கானம் :** கணுக்கை மூட்டு, முழங்கால் மூட்டு, உள்ளங்கை, வெடிப்பு, ரணம், உள்ளங்கை அரித்தல், சிவத்தல்.

**மெக்னீஷியா கார்ப் :** உள்ளங்கை வெடித்தல், விரல்கள் நீர் சுரத்தல், சிவத்தல். சருமமும் பூந்தசையும் உலர்ந்து அரித்தல். புளிப்பு நாற்றம். சொரிந்தால் அரிப்பு சமனமாதல்.

**மெர்க்கூரியஸ் ஐயோடேடஸ் ரூபர் :** அரையாப்புக் கட்டி, தொட்டால் வலியும், பொருக்குகளும், சிறு வெடிப்புகளும், சீழ் வெளிப்படுதலும் உள்ள சிறிய கொப்புளங்கள். ஜனனேந்திரியங்களில் உண்டாகும் மேக ரணம்.

**மெர்க்கூரியஸ் டல்ஸிஸ் :** காது ரணம். மஞ்சட்காமாலை.

**மெர்க்கூரியஸ் ஸல்பேட் :** மார்பில் நீர் அதைப்பு.

**மெர்க்குரியஸ் ஸொலுபிலிஸ் :** வட்டமான செம்பு நிறத் தேமல் போன்றபடை, மேகரணம். சீழ் பிடிக்கும் கட்டிகள். மஞ்சள் நிறமுள்ள காரமான சீழ் பிடித்த நெருங்கிய பொருக்குகள் உள்ள சிறிய கொப்புளங்கள். மஞ்சள் நிற சருமம். அதிக வியர்வை. சீழ்க் கட்டிகள் உலர்ந்த சருமம்.

**மெஸீரியம் :** சொரசொரப்பு, தோல் உரிதல். கைகளின் தோல் சிவந்து சொர சொரப்பாய் இருத்தல். படுக்கைக்குப் போனவுடனும், உஷ்ண அறைக்குச் சென்றவுடனும் சரீரத்தில் அரிப்பு. முகத்தில் நீரை வெளியேற்றும் படைகள். பொருக்குகளின் அடியில் சீழ், முதுகு, மார்பு, துடை, தலை முதலிய இடங்களில் மீன் செதில் போன்ற படைகள்.

**மைரிகா :** பூந்தசைகள் உலருதல், ஒட்டிக் கொள்ளுதல். சருமம் மஞ்சள் நிறமடைதல், மஞ்சட்காமாலை.

**யூரேனியம் நைட்ரிகம் :** சருமம் பூந்தசை உலருதல்.

**யூர்டிகா யூரன்ஸ் :** அதிக அரிப்பு, எரிச்சல், சூடுபட்டதுபோல் ஊசி முனை போன்ற கொப்புளம். உபாதியுள்ள இடத்தை தடவிக் கொண்டேயிருத்தல். பீஜம், பெண் குறி அரித்தல்.

**ரடானியா :** தீ பட்டது போன்ற எரிச்சல், அபானத்தில் வெடிப்பு, ஸ்தனக் காம்பு வெடித்தல்.

**ரஸ் டாக்ஸ் :** வெண்மை நிற சீழ் கொப்புளங்களுடன் படைகள். விதை வீக்கம், அரிப்பு. விதை துடையிடுக்கில் படை. அடிப்பாகம் சிவந்த வெண்மையான கொப்புளங்கள். சருமம் கெட்டியாகி தடித்தல். பெரிதான நீர்க் கொப் புளங்கள். டைபாய்ட் குறிகளுள்ள சிவந்த பெரியம்மைக் கொப்புளங்கள். நாற்றமுள்ள நீரும் பொருக்குகளும் உள்ள படைகள்.

**ரானங்குலஸ் :** முகத்தில் நீர்க் கொப்புளம், எரிச்சல், பித்தவெடி. நீல நிறமான (தீ சுட்டது போன்ற) கொப்புளங்கள். எரிச்சலுள்ள ரணங்கள், கொம்பு போல் சதை வளர்தல். உள்ளங்கையில் தீ சுட்டது போன்ற கொப்புளங்கள்.

**ரீயம் :** தினம் குளித்தாலும் புளிப்பு நாற்றமடித்தல்.

**ரூமக்ஸ் :** குளிர் காற்று, துணிகளைக் களைதலால், அரித்தல்.

**லாக்கஸீஸ் :** மெல்லிய துணியும் படமுடியாமை, அரிப்பு. மஞ் சள் அல்லது சிவந்த கொப்புளம், ஆறாத அழுகும் ரணங்

கள். புண்களின் ஓரம் சிவந்தோ, கருத்தோ இருத்தல். காயங்களில் நிற்காத அதிக ரத்தப்போக்கு. உள்ளங்கை, உள்ளங்கால் எரிச்சல். மூட்டுகள், கால் பாதம் வீக்கம், ராஜப்பிளவை, ஓரங்கள் நீல நிறமாக இருத்தல். தொடு உணர்ச்சி அதிகம். பாதிக்கப்பட்ட பாகங்கள் நீல நிறமாக இருத்தல்.

**லாபிஸ் ஆல்பஸ் :** கட்டி, ரணம், கோளம் கெட்டியாதல், பெருத்தல். புற்றுநோயில் புண் உண்டாகுமுன் முதல் நிலைமையில் பலன் தரும்.

**லாரோஸிராஸஸ் :** சருமமும் பாதங்களும் சில்லென்றும் ஈரப் பசையுடனும் இருத்தல்.

**லிதியம் கார்ப் :** வறண்ட கறடு முறடான பரியாரிப் படை.

**லேடம் பாலஸ்திரி :** கூர்மையான வஸ்துக்களால் குத்தப்பட்ட உபாதிகள். பூச்சிகள் கொட்டுதல். ரத்தக் கட்டிகள்.

**லேகோபோடியம்|:** இரத்தம் கொட்டுகிற, தொட்டால் எரிச்சலுள்ள ரணங்கள்(கருப்பத்தில்ஸ்தனக் காம்பு வெடித்தல்.)

**வாரியோலினம் :** பெரியம்மை, அம்மை பரவி வரும் காலத்தில் இவ்வௌஷதம் வராமல் தடுக்கச் செய்யும். சுரம் ஆரம் பித்ததும் கொடுத்தால் வராமல் தடுக்கும். வீரியம்30, 200.

**ஸல்பர் :** ஸோரா. அரித்தல். சொரிதல், எரிதல்: பிடரி உள்ளங்கை, உள்ளங்கால் எரிதல். குளிப்பதில் வெறுப்பு. தலைப்பொட்டு, மயிர் உதிருதல் ரணம். கண்ணைச் சுற்றி நீலநிற வளையம். வலது காதிலிருந்து முகம் முழுவதும் பரவும் அக்கி, ஆண்குறி நுனி சிவத்தல், வீக்கம் தோல் பின்னுக்கிழுக்க முடியாமை. குறிகளில் துர்நாற்றம். பீஜங்களில் ரணம். பெண்குறி எரிச்சல். உள்ளங்கை விரலில் இடுக்குகளில் வெடித்தல். கால்களில் நீடித்த ஆறாத ரணம். தசையின் நீர் சுரப்பு. சிறு காயங்களிலும் சீழ் பிடித்து ரத்தங் கொட்டுதல், சொரிந்தால் எரிதல். குளித்தாலும் படுக்கைச் சூட்டாலும் அரிப்பு. எல்லா வெளித் துவாரங்களும் சிவத்தல், கொட்டும் துடிக்கும்

வலியுள்ள அக்கி, வெளியுறுப்புகளில் நீர் சுரத்தல், சரீரத்தில் எந்த பாகத்தில் நீர்சுரப்பு இருந்தாலும் வற்றவைக்கும்.

**ஸரஸபரில்லா:** அகாலத்தில் கிழத்தன்மை, ஸிபிலிஸ் ஸைகோஸிஸ், பாதரஸ மருந்துகளால் பீடிக்கப்படுதல், ஸிபிலிஸ், சுருங்கிய சருமம், சூரிய உஷ்ணம் பட்டால் அரிப்பு, சினப்பு, கோடைகாலத்தில் உதடு, முகத்தில் கொப்புளங்கள். முகம் சிவந்தும் நிறம் மாறியும் இருத்தல். நெற்றியில் அரித்தல், பீஜம் துடையிடுக்கில் படைகள், மாதவிடாய் நாட்களில் நெற்றியில் அரிக்கும் படை. விரல்களில் ஆழமான வெடிப்பு, வறண்ட சிவந்த பரு, அசுத்த ரத்தக் குழாய் பெருத்தலால் ரணம். ரத்த ஓட்டக் குறைவால் நீல நிறத்தேமல், சுருங்கிய மடிப்புள்ள சருமம்.

**ஸாங்குனேரியா:** இரவில் உள்ளங்கால், உள்ளங்கை எரிதல்.

**ஸானிகுலா:** சிசுக்களின் சருமம் கிழடு தட்டுதல். எண்ணை தடவியது போல் ஆபாசமாகவும், பழுப்பு நிறமாகவும் இருத்தல். தூக்கத்தில் கழுத்துப் பிடரியில் அதிக வியர்வை, உள்ளங்கால் எரிதல்.

**ஸிகூடா வீரோஸா:** பொருக்குடன் நெருங்கிய சிறு கொப்புளங்கள், தலையிலும் முகத்திலுமிருத்தல்.

**ஸிங்கம் மெடாலிகம்:** அரையாப்பு கட்டிகள், காதின் கீழ் அமுக்கப்பட்டதால் விரை வீக்கம், பலஹீனத்தால், அம்மை அமுக்கப்பட்டதால் ஏற்படும் மூளைக் கோளாறுகள், மூட்டுகளில் அரிப்பு.

**ஸிங்கம் ஸல்ப்:** சரும உபாதிகள். வெளுத்த மஞ்சள் நிறம்.

**ஸிபிலினம்:** மண்டைத் தோலில் படைகள். முகத்தில் செம்பு வர்ணப் படைகள். சருமத்தில் சிவந்த பழுப்பு நிறப் படைகள். கை கால்களில் தீருத ரணங்கள்.

**ஸிலிகா:** கிழடு தட்டிய, வெளுத்த, மெழுகு தடவியது போன்ற, சருமம், பிளவை, சிரங்கு, நீடித்த சீழ் கட்டி, ரணம், வலியற்ற வீங்கிய கோளம், மூட்டுகளில் சீழ் கட்டிகள், பழைய வடுக்களில் திடீரென்று வலித்தல், விரல் நுனி வெடித்திருத்தல்.

**ஸிஸ்டஸ் :** கோளங்கள் கறடு தட்டுதல். அழற்சி, வீக்கம், சீழ், ரணம், நீடித்த ரணம், உதடு வெடித்தல், படை, கொப்புளங்கள் இல்லாமல் சரீரம் முழுதும் அரித்தல்.

**ஸீகேல் :** சுருக்கம், சில்லிடல், உலருதல், உணர்ச்சியின்மை, இளைப்பு போர்த்திக்கொள்ள முடியாமை, குளிர்ச்சி குளிர் காற்ருல் உபாதி சமனம். சிரங்குகள், பச்சை நிற சீழ்க் கட்டிகள், படுவன்கள்.

**ஸெலீனியம் :** சரும மடிப்புகளில் அரிப்பு.

**ஸெபியா :** முகம், கன்னத்தில் மஞ்சளான சேணம்போட்டது போல் படைகள், உதடுகளில் படை, தாடையின் கீழ்க் கோளங்கள் வீங்குதல். முகம் கைகளில் அரிப்பு, அரைக் கடி படை.

**ஸைஸிஜியம் ஜம்போலனம் :** நீர் ரோக ரணம் (மது மேகம்) சருமத்தில் ஆருத ரணங்கள் இடுப்பின்மேல் சிறு வேர்க் குரு. அதிக அரிப்பு, சிவப்பு.

**ஸோரினம் :** சருமப்படை, படுக்கை சூட்டால் அரிப்பு, தலையில் சிரங்கு, படைகள், கொப்புளங்கள், மயிர் ஒன்ருேடொன்று ஒட்டிக்கொள்ளுதல், காதின் பின்புறம் படை, சிறு கொப்புளம், கீழ் உதட்டின் உள்ளே கொப்புளங்கள், கீல் வாதம், நகங்களை சுற்றி சீழ் பிடித்தல், படை இல்லாத அரிப்பு, வெடித்த சருமம் எண்ணை தடவியது போல் இருத்தல், நாற்ற வியர்வை, குளிர் மழையில் உபாதி அதிகம். விரல் இடுக்கு மூட்டுகளின் மடிப்பில் அரிப்பு, குளித்தபின்னும் சரீரத்தில் துர்நாற்றம், கோடையிலும் கம்பளியால் வழக்கமாக போர்த்திக் கொள்ளல். குளிர் காற்று சகிக்காமை. அழுக்கு படிந்தது போன்ற சருமம், நாற்றமுள்ள நீர் வெளியேறுதல், சரீரம் உஷ்ணமானுல் உடனே அரிப்பு. ரத்தம் வருமளவும் சொரிதல்.

**ஸ்க்வில்லா :** அமுக்கப்பட்ட மூத்திர வியாதியால் ஏற்பட்ட பாண்டு வீக்கம், எரிச்சலுள்ள சொரி சிரங்குகள்.

**ஸ்டாபிஸாக்ரியா :** காதின் பின்புறம், தலையில், நீரைக் கக்கும் இடம் விட்டு இடம் மாறும் படைகள். காலி பிளவர் போன்ற வளர்ச்சிகள், பாலுண்ணிகள்.

**ஸ்டில்லிங்க்யா:** அதிகரச மருந்துகள் உண்டபின், மேகரோக ரணங்கள், கொருக்கு, க்ஷயரணங்கள், கோளம், பருத்தல்.

**ஸ்ட்ரமோனியம்:** பெரியம்மையில் கொப்புளம் ஏற்படுமுன் முக வீக்கம்.

**ஸ்பாஞ்ஜியா:** அரிக்கும் படை, தொட்டால் சருமத்தில் வலி, கெட்டியான கோளங்கள்.

**ஹீபார் ஸல்பர்:** மஞ்சள் நிறமாதல். அரிப்பு, எரிச்சல். வலி எடுக்கும் படைகள், சகிக்கும் தன்மையின்மை, ரணத்தின் அருகில் முத்துகள் போன்ற கொப்புளம், காதின் மேலும் பின்னும் படைகள், மேலுதடு வீக்கம், கிரந்தி, ரஸ மருந்துகள் உண்டும், தீராதவை, துடையிடுக்கு ரணம், படை, நகம் கெட்டியாதல், உடைதல், நகச்சுற்றி பாதங்களில் வெடிப்பு வலி, அரிப்பு எரிச்சலுள்ள படைகள், சரும உபாதிகள், சிறு காயங்களிலும் சீழ் பிடித்தல். ரணங்களில் ரத்தம் நாற்றமுள்ள சீழ் வருதல். சரீரத்தில் இதர வஸ்துக்கள் இருந்தால் அவைகளைச் சுற்றி சீழ் பிடிக்கவைத்து அவ்வஸ்துக்களை வெளியேற்றி புண்ணையும் ஆற்றிவிடும்.

**ஹெல்லீபோரஸ்:** திடீரென்று ஏற்படும் பாண்டு வீக்கம்.

**ஹைடிராஸ்டிஸ்:** தலையில் மயிர்க்கால் ஓரத்தில் படைகள். நாக்கில் ரணம், நுனி வெடித்தல், பெரியம்மையில் மேல் பூசலாம், பெரியம்மை கொப்புளம் போன்ற படைகள், புற்றுகள்.

**ஹைட்ரோகோடைல்:** சருமத் தடிப்பு, ராஜ பிளவை, புற்று, யானைக்கால், தசைகள் அழுகுதல், அக்கிப் படை. குஷ்ட ரணங்கள்.

**ஹைபெரிகம்:** காயங்களில் அதிக ரத்தம் வெளியேறிய பின் கோளாறுகள், தலையில் வியர்வை, கை, முகத்தில் நீர் கசியும் படை, பழைய ரணம், பழைய வடுக்கள் புண்ணுதல், நாய் முதலிய ஜந்துக்கள் கூரிய பற்களால் கடித்தல், ஆபரேஷன் செய்தபின் உண்டாகும் வலி.

# தசைகள்

**அகேரிகஸ்:** முகத் தசைகள் முறுக்கிக் கொள்ளல்.

**அகோனைட்:** அதிவிரைப்பான தசை நார்கள்.

**அக்டியா ரஸிமோஸா:** தசை வலி, வாதம், முகத்தசை ஆடுதல்.

**அபிஸிந்தியம்:** தசைகளில் நடுக்கம்.

**அப்ரோடனம்:** வீங்குமுன் இருக்கும் வாத அழற்சி.

**அமோனியம் கார்ப்:** தசைகள் மிருது, கொளகொளத்தல், இளைத்தல்.

**அமோனியம் முரி:** தசைகள் சுருங்குதல்.

**அம்ப்ரா க்ரிஸியா:** முறுக்குதல், கெண்டை வாங்குதல்.

**அயிலாந்தஸ்:** தசைகளில் அதிகத் தளர்ச்சி.

**அஸ்குலஸ் ஹிபோ:** காலையிலும், அசைவதனாலும், தூங்கியெழுந்தவுடனும் தசைகளில் ரணவலி.

**ஆரம் மெடாலிகம்:** இடுப்புப் பாகத் தசைகள் விரைப்பாக விருத்தல்.

**ஆலோஸோகோட்ரினு:** தசைகளில் பாரிச வாயு போன்ற இழுப்பு.

**ஆஸிட் ஆக்ஸாலிக்:** தசைகளில் பலஹீனம், பிடிப்பு வலி. தசைகளில் முறுக்குதல்.

**ஆஸிட் நைட்ரிக்:** சரீரம் இளைத்தல்.

**ஆஸிட் பாஸ்பாரிக்:** பொதுவாகச் சரீரம் இளைத்தல் அல்லது ஒவ்வொரு பாகங்கள் இளைத்தல். தசைகள் பலஹீனப் பட்டிருத்தல்.

**இக்னேஷியா:** நடுக்கம், பலவித தசைகளும் முறுக்கிக் கொள்ளுதல்.

**ஐயோடியம்:** தசைகள் முறுக்கிக் கொள்ளுதல்.

**ஓலியாண்டர்:** தசைகள் பலஹீனமாகவும் குறுகியுமிருத்தல்.

**கல்கேரியா ஹைபோபாஸ்:** தசைகளில் சக்தியின்மை.

**காட்மியம் ஸல்ப்:** தசைகளில் வலிப்பு, கைகளில் தூக்கிப் போடுதல், உட்கார்ந்திருந்தாலும் சாப்பிட்டாலும் சமனம்.

**காப்ஸிகம்:** தளர்ந்த தசைநார்கள்.

**காமோமில்லா:** முகத்தசைகளிலும், நாக்கிலும் குதிப்பு.

**காம்பொரா:** தசைகள் முறுக்கிக் கொள்ளுதல்.

**கார்டூஸ் மரியேனஸ்:** வாத ரோகமும், தசைகளில் குதிப்பும், ஆடுதசைகளிலும் பாதங்களிலும் கெண்டை யிழுப்பு.

**கார்போ வெஜ்:** தசைகளில் வலுவின்மை.

**காலீ பாஸ்.** தசைகள் அழுகவாரம்பித்தல்.

**காலீ ப்ரோமேடம்:** முறுக்குதல், குதித்தல்.

**காலோட்ரோபிஸ்:** தசைகள் கடினமாகவும் உறுதியாகவுமாதல்.

**கலோஸிந்திஸ்:** தசைகளில் கெண்டையேறுதல், முறுக்குதல் சுருங்குதல்.

**காஸ்டிகம்:** முன் கை தசைகளில் பலஹீனம், தசைநார்கள் குறுகுதல்.

**குப்ரம் ஆர்ஸலிகம்:** நள்ளிரவின் பின் ஆடுதசைகளில் கெண்டையேறுதல்.

**குப்ரம் மெடாலிகம்:** தசைகளில் குதிப்பு, முறுக்குதல், உள்ளங் கால்களிலும் ஆடுதசைகளிலும் கெண்டையேறுதல், காலராவில் அடிவயிற்றிலும் ஆடுதசைகளிலும் தசைகள் முறுக்குதல். பயந்த கோளாறுகளில் முகத்தசைகள் குதித்தல்.

**க்ளமேடிஸ் எரெக்டா:** தசைகளும், சருமமும் தளர்ச்சியடைதல். தசைகள் துடித்தல், முறுக்கிக் கொள்ளுதல்.

**டூக்ரியம்:** திடீரென்று வலது மணிக்கட்டுக்குக் கொஞ்சம் மேலேயுள்ள தசைகளில் வெட்டுவது போன்ற வலி.

**ட்யூபர்குலீனம்:** மூக்கில் சதையடைப்பு, தொண்டையிலிருக்கும் கோளங்கள் பெருத்தல், அடிக்கடி வந்து கொண்டிருந்த தலைவலி திடீரென்று நின்று, அதன்பின் சரீரம் இளைக்க ஆரம்பித்தல்.

**துஜா:** தசைகளில் துடிப்புகள், தாங்க முடியாத வலி (ஸைக்கோஸிஸ்).

**நாஜா:** தசைகளில் நடுக்கல், கீல்வாதம்.

**நேட்ரம் ஆர்ஸனிகம்:** முதலில் தடித்த சரீரமாயிருந்தவர்கள் வரவர இளைத்துக்கொண்டே போதல், முதலில் சரீரத்தில் சதைப் பிடிப்பு உண்டாவது போலிருந்து அதன்பின் சரீரம் இளைத்தல்.

**நேட்ரம் கார்ப்:** தசைகளும், கைகளும், கால்களும் துடித்தல். வியர்வை. முகம் வெளுத்து சரீரம் இளைத்தல். தொள தொளத்த தசைகள்.

**நேட்ரம் மூரி:** உலர்ந்து போயும் இளைத்தும் இருத்தல். நல்ல புஷ்டியுள்ள ஆகாரங்களை நன்ருகச் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போதே சரீரம் இளைத்துக்கொண்டே போதல். தசைகள் தாறுமாருக இருகிக் கொண்டு அதனுல் கை கால்கள் இழுத்துக் கொள்ளல்.

**நேட்ரம் ஸல்ப்:** அதிகக் களைப்பு. பலஹீனம்.

**பாடியாகா:** வாதம், அசையும்போது தசைகளில் வலி.

**பாப்டீஷியா:** கழுத்து, முதுகு, இடுப்பிலுள்ள தசைகள் விரைத்திருத்தல். நொந்திருத்தல், அமைதியின்மை. அதிக பலஹீனம்.

**பாரிடா மூரியாடிகா:** பலஹீனம், தசைகள் தளர்ந்திருத்தல் தன்னிச்சைப்படி தசைகளை அசைக்க முடியாமை, மனச் சோர்வு. தசைகளில் பலஹீனம்.

**பாஸ்பரஸ்:** எல்லாத் தசைகளும் தளர்ந்திருத்தல்.

**பெல்லடோன்ன:** தசைகள் சரியானபடி வேலை செய்யாமை,

**பைடோலக்கா:** சரீரத்தின் தசைகள் கரைந்து இளைத்துப் போதல். சீழ் பிடித்த கட்டிகளைத் துரிதமாகப் பழுக்க வைக்கும்.

**ப்ரையோனியா:** ஒவ்வொரு தசையிலும் வலி. இவ்வௌஷதத்தின் வலி, பிடிப்பு வலி கிழிக்கும் வலி. அசையாமலிருந்தால் சமனம். அசைந்தால் அதிகரித்தல்.

**ப்ளம்பம்:** சிறுகச்சிறுக தசைகள் தளர்ந்து விடுதல்.

**மெக்னீஷியா மூரியாடிகா:** சங்காகுணசம்பந்த இழுப்புகள், வயிற்றிலிருந்து ஆரம்பிப்பது போல் வெட்டி வெட்டி யிழுக்கும் வலிப்புகள். சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போதே மயக்கம் வருதல். குமட்டலும் நடுக்கலும். கோளங்கள் பருத்தல்.

**மெர்க்குரியஸ் ஸொலுபுலிஸ்:** தசைகள் இஷ்டப்படி அசைந்து கொடுக்காமை.

**ரானங்குலஸ்:** துடித்தல், கோபம், பயம் ஏற்பட்டால் சரீரம் நடுங்குதல். மூச்சுத் திணறல் உண்டாதல். தசைகளைச் சம்மட்டியால் அடிப்பது போன்ற வலி.

**ரிஸிநஸ்:** கால் தசைகளில் முறுக்கும் வலி.

**ரீயம்:** முகம், கைகளில் தசைகள் துடித்தல்.

**ரூடா:** கீழே விழுந்தபின் அல்லது அடிபட்ட பின் உண்டாகும் வலி போன்ற கடுப்பு வலி, கை கால் மூட்டுகளில் அதிக வலி. எலும்புகள், தசைநார்கள் அடிபட்ட கோளாறுகள்.

**லாக்கெஸிஸ்:** பாதிக்கப்பட்ட பாகங்கள் நீல நிறமாக இருத்தல்.

**லித்தியம் கார்ப்:** எலும்பு, தசை, நரம்புகளில் வலி.

**லேடம் பாலஸ்திரி:** நோயுற்ற பாகங்கள் சூம்புதல்.

**லைகோபோடியம்:** நோயுற்ற பாகங்களில் புச்சிகள் ஊறும் உணர்ச்சி, தசைகள் மாறி மாறிச் சுருங்குதல், நீளுதல். எல்லா உறுப்புகளும் பலஹீனப்பட்டு, மந்தமாக இருத்தல். பக்ஷவாதம்.

**ஜட்ரோபா:** தசைகளில் கெண்டையேறுதல் (குளிர்ந்த தண்ணீரில் வைத்தால் சமனம்.)

**ஜெல்ஸிமியம்:** தசைகள் பூரணமாகத் தங்கள் சக்தியை யிழந்து விடுதல். பக்ஷவாதம். தசைகளை யசைக்க முடியாமை. நடுக்கல்கள். தான் நினைக்கும்படி தசைகளையும் உபயோகிக்க முடியாமை.

**ஸபடில்லா:** தளர்ச்சியுள்ள தசைகள்.

**ஸரஸபரில்லா:** தசைகள் தளர்ந்து விடுதல். பலஹீனம்.

**ஸிங்கம் மெடாலிகம்:** தூக்கத்திலும் விழித்திருக்கும்போதும் தசைகள் துடித்தல், தூக்கத்தில் சரீரத்தில் பல தசைகள் துடித்தல், வாதத்தில் பார்க்க.

**ஸிபிலினம்:** தசைகள் சுருட்டிக் கொள்ளுதல்.

**ஸீகேல்:** துடிப்புகள், திடீரென்று பலமிழந்திருத்தல், தாறுமாறாக விருத்தல். சிரங்குகள். சீழ்கட்டிகள், படுவன். பச்சை நிறச் சீழ்.

**ஸீமெக்ஸ்:** தசைநார் குறுகிய உணர்ச்சி. நீட்ட முடியாமை.

**ஸெலீனியம்:** ஆடுதசை, குதிகால்களில் கெண்டையேறுதல்

**ஸ்டானம்:** அசையாமலிருக்கும்போது கைகளின் தசைகள் வெட்டி யிழுத்தல்.

**ஸ்ட்ரமோனியம்:** அசதி, படுத்தேயிருத்தல். தசைகள் இஷ்டப்படி அசையாமை.

**ஹமாமெலிஸ்:** அசுத்த ரத்தக்குழாய்கள் சுருட்டிக்கொண்டு ரணப்படுதல்.

**ஹயாஸ்யாமஸ்:** கழுத்தின் தசைகள் முறுக்கிக் கொண்டு தலைகோணலாக இழுக்கப்பட்டிருத்தல்.

**ஹெல்லிபோரஸ்:** தசைகள் திடீரென்று தளர்ந்து விடுதல். வலிப்பு, துடிப்புகள்.

**ஹைட்ரோகோடைல்:** அழுகுதல், ரணம், துடிப்பு.

**ஹைபெரிகம்:** தசைகளில் துடிப்பு.

# பூந்தசைகள்

**அகோனைட் :** வாயின் பூந்தசைகளில் பிரகாசமான சிவந்த ரத்தந்தோய்ந்திருத்தல்.

**அர்ஜண்டம் நைட்ரிகம் :** பூந்தசைகளில் குழிப் புண்கள். சுவாசாசயப் பூந்தசைகளில் அழற்சி.

**அஸ்குலஸ் ஹிபோ :** காய்ந்த பூந்தசை மெம்ரேன்கள் வீங்குதல்.

**ஆரம் ட்ரிபில்லம் :** பூந்தசைகளில் வெடிப்பு.

**ஆஸிட் நைட்ரிக் ;** வாயின் பூந்தசைகள் வீங்கி யிருத்தல். ரணங்கள் குத்துவலி. பூந்தசைகள் அழுகுதல். ரத்தப் பெருக்கு.

**கந்தாரிஸ் :** இருதயத்தைச் சுற்றியிருக்கும் பூந்தசைப் பையில் அழற்சி, மயக்கம் வரும் தன்மை. வாயின் பூந்தசைகளில் அழற்சி.

**கல்கேரியா அஸடிகா :** பெண்குறியிலிருந்து பூந்தசைகள் கொண்ட வஸ்து வெளியாதல்.

**காப்ஸிகம் :** குழகுழப்பான பூந்தசைகளில் அழற்சி.

**கார்போ வெஜி :** பூந்தசைப் பாகங்களிலிருந்து ரத்தப் பெருக்கு ஏற்படுதல்.

**காலீ பைக்ரோமிகம் :** வயிறு, குடல், சுவாச மார்க்கம் முதலிய இடங்களிலும், மற்றும் பல இடங்களிலுமுள்ள பூந்தசைகள் பாதிக்கப்படுதல்.

**காலீ ப்ரெரமேடம் :** பூந்தசைகளில் உணர்ச்சியின்மை.

**க்ளமேடிஸ் எரேக்டா :** மூத்திரத்தில் நுண்ணிய பூந்தசைகள் காணப்படுதல்.

**சிமாபிலா :** கலங்கிய கம்பிபோன்ற பூந்தசைகளுடன் மூத்திரம் பிரிதல்.

**டல்கமாரா :** ஈரகப்புள்ள பருவங்களில் ஏற்படும் பூந்தசைக் கோளாறுகள்.

**தெரிபிந்த் :** எல்லாப் பூந்தசைகளிலும் ரத்தம் கசிந்துகொண்டிருத்தல். சுவாச உறுப்புகளின் பூந்தசைகள் காய்ந்திருத்தல்.

**நேட்ரம் ஆர்ஸனிகம் :** மூக்கின் பூந்தசைகள் வீங்கியிருத்தல். எல்லாப் பூந்தசைகளும் பாதிக்கப்படுதல்.

**நேட்ரம் கார்ப் :** நரம்புகள், மூக்கு, கண், வயிறு, கல்லீரல் முதலியவைகளிலுள்ள பூந்தசைகளில் நன்கு வேலை செய்யும்.

**நேட்ரம் மூரி :** பூந்தசைகளிலிருந்து உற்பத்தியாகும் நீர் குறைவாகவும், பட்ட இடங்களைப் புண்ணாக்குவதாகவும் இருக்கும். பூந்தசைகள் காய்ந்திருத்தல்.

**பெர்ரம் பாஸ் :** பூந்தசைகளில் அழற்சியும் மாறுபாடும் ஆரம்பிக்கும் காலம்.

**பெர்ரம் மெட்டாலிகம் :** ரத்தசோகையுடன் சரீரத்தின் எல்லாப் பூந்தசைகளும் வெளுத்திருத்தல்.

**ப்ரையோனியா :** எல்லாப் பூந்தசைகளும் காய்ந்திருத்தல்.

**மெக்னீஷியா கார்பானிகா :** பூந்தசைகள் உலர்ந்திருத்தல்.

**மெர்க்குரியஸ் ஸொலுபுலிஸ் :** வாயின் பூந்தசை பஞ்சுபோலாதல்.

**மைரிகா :** எல்லாப் பூந்தசைகளும் உலர்தல், வறளுதல். பிசுக்கென்று ஒட்டிக்கொள்ளுதல்.

**யூரேனியம் நைட்ரிகம் :** பூந்தசை உலர்தல்.

**ஹெல்லிபோரஸ் :** வலிப்பின் பின் எல்லாப் பூந்தசைகளும் வெளுத்து விடுதல்.

**ஹைட்ராஸ்டிஸ் :** பூந்தசையிலிருந்து சளிப்போக்கு. ரணம் ஏற்படும் நிலைமை.

# நகம்

அபிஸ் மெல்லிபிகா: தடிப்பான நகச்சுற்றி.

அமோனியம் கார்ப்: நகச்சுற்றி.

அயிலாந்தஸ்: விரல் நகங்களில் கொப்புளங்கள். வேர்க்குரு போல் வெடித்தல்.

அலுமினு: நகச்சுற்றி.

ஆண்டிமோனியம் க்ரூடம்: விரல் நகங்கள் வளராமை. நகத்தினடியிலிருக்கும் தோல் வலியுள்ளதாக இருத்தல். நகத்தில் வெடிப்பு.

ஆஸிட் ப்ளூவாரிக்: நகங்கள் அதிசீக்கிரமாக வளர்ந்து உடைதல்.

கல்கேரியா பாஸ்: நகங்களைச் சுற்றிலும் வலி.

கல்கேரியா ப்ளோரிகா: நகச்சுற்றி.

கோனியம்: நகம், விரல் மஞ்சளாக இருத்தல்.

க்ராபைடிஸ்: விரல் நகங்கள் கனமாகவும் கருப்பாகவும் கரடு முறடாகவும் மாறுதல். வெடிப்பு, வலி.

டயஸ்கோரியா: உடையும் நகங்கள்.

டுக்ரியம்: நகச்சுற்றி, கால் கட்டை விரல்களின் நகங்கள் சரிவர வளராமை.

நேட்ரம் மூரியாடிகம்: நகங்கள் உலர்ந்திருத்தல்.

நேட்ரம் ஸல்ப்: நகச்சுற்றி.

லேடம் பாலஸ்திரி: அடிபட்டதாலேற்பட்ட நகச்சுற்றிகள்.

ஸிலிகா: நகங்களில் கோளாறுகள். விரல்களின் நுனியில் நகச்சுற்றி ஏற்படுவதுபோல் வலி.

**ஸோரினம்** : நகங்களைச் சுற்றி சீழ் பிடித்தல்.

**ஹீபார் ஸல்பர்** : நகங்கள் கெட்டிப்பட்டு உடையும் தன்மை யுடையனவாக விருத்தல்.

## நரம்புகள்

**அகோனைட்** : நரம்புகளில் குளிர்ந்த தண்ணீரை ஊற்றும் உணர்ச்சி.

**அக்டியா ரஸிமோஸா** : அதியுணர்ச்சியால் அழுகைவருவதுபோல் தலைவலி. அதிக வேலையாலுண்டாகும் நரம்புத் தளர்ச்சி.

**அபிஸிந்தியம்** : பொதுவான பாரிசவாதம், வலிப்பு.

**அப்ரோடேனம்** : வாதம் ஒரு பக்க பக்ஷவாதம், மறத்த உணர்ச்சி, பலவீனம், வேலை செய்தால் நடுக்கம். பாதிக்கப்பட்ட முள்ளந்தண்டு.

**அமோனியம் கார்ப்** : ரண வலி.

**அம்ப்ரா க்ரிஸியா** : நரம்பு உபாதியுள்ள குழந்தைகள்.

**அயிலாந்தஸ்** மூளையிலிருந்து கை கால்களுக்கு மின்சார விசை போன்ற உணர்ச்சி ஓடுதல், தளர்ச்சி, களைப்பு.

**அர்ஜண்டம் நைட்ரிகம்** : காக்கை வலிப்பு, பயத்தால் ஏற்பட்ட கோளாறுகள். கை கால்கள் நடுங்குதல்.

**அர்ஜண்டம் மெடாலிகம்** : காக்கை வலிப்பு, காலையில் பல ஹீனம், நரம்புகளில் அதிக வலி.

**அலுமினு** : பேசமுடியாத அளவுக்கு பலஹீனம், மயக்கம், சோர்வு அதனுல் உட்காரவும், படுக்கவும் நேரிடல், கை கால்கள் தானுகவே அசைதல், இஷ்டப்படி அசைக்க முடியாமை, முள்ளந்தண்டுக் கோளாறுகளாலேற்பட்ட பாரிச வாயு.

**அவினு ஸடீவா** : நரம்புத் தளர்ச்சி, நரம்புச் சோர்வு. சிணைப் பை உபாதியால் நரம்புக் கோளாறுகள்.

**அஸ்குலஸ் ஹிபோ :** நரம்பு சம்பந்த ஓடும் வலிகள், கூர்மை யாகவும் சுடுவது போலவும், கிழிப்பது போலவும் வலி.

**ஆண்டிமோனியம் க்ரூடம் :** சத்தங் கேட்டதும் விழித்துக் கொள்ளல்.

**ஆரம் மெடாலிகம் :** ஒரே களைப்பு (காலையில்) குடையும் வலிகளால் வியாதியஸ்தர் கதறுதல், படுக்கையை விட்டு எழுந்திருந்து நடத்தல், அதிக நரம்புபலஹீனம், அசுத்த ரத்தக் குழாய் பெருக்கம்.

**ஆர்ஸனிகம் ஆல்பம் :** நரம்பு சம்பந்த வலி, மயக்கம், சரீர பலம் திடீரென்று குறைதல், அமைதியின்மை, கோபம்.

**ஆர்னிகா மொண்டானு :** களைத்த உணர்ச்சி, பலம் அதிவேகமாகக் குறைதல்.

**ஆலோ ஸொகோட்ரினு :** அசுத்த ரத்தக் குழாய்கள் பருத்தல்.

**ஆஸிட் அஸடிக் :** உள்ளிருக்கும் நரம்புகள் வெளியே தெரிதல்.

**ஆஸிட் நைட்ரிக் :** அதிக பலவீனம்.

**ஆஸிட் பிக்ரிக்** நரம்புத் தளர்ச்சி. நரம்புகள் வலுவிழத்தல்.

**ஐயோடியம் :** முறுக்குதல், நடுக்குதல், அதிக பலவீனம்.

**ஓலியாண்டர் :** வர்ண வேலை செய்பவர்களின் பாரிச வாதம். கை கால்கள் விரைப்பு, சில்லிப்பு, நடுக்கம், முக்யமாய் சரீரத்தின் மேற்பாகத்திலும் இக்குறி அதிகமாயிருத்தல்.

**ஓபியம் :** அசைவு. (பயம், புது மனிதர்கள் நெருங்கிவந்ததாலேற்பட்ட அழுகை) முதலியவைகளால் ஏற்பட்ட நரம்புப் பிடிப்பு.

**கல்கேரியா ஐயோடைட் :** பச்சை நரம்புகள் சுருட்டிக் கொள்ளுதல்.

**கல்கேரியா ப்ளோரிகா :** பச்சை நரம்புகள் புடைத்தல்.

**காக்குலஸ் :** களைப்பு, நிற்கவும், உரக்க பேசவும் முடியாத பலவீனம். உட்கார்ந்திருக்கும்போதே தூங்குதல், காலையில் படுக்கையை விட்டு எழுந்தவுடன் காக்கை வலிப்பு, பிறகு ஜுரம்.

**காக்டஸ் க்ராண்டி :** பொதுவான பலவீனம், களைப்பு, அதிக மனச்சோர்வு, தூக்கமின்மை, மயக்கம்.

**காப்பியா க்ருடா :** முகத்தில் நரம்பு சம்பந்த இழுப்பு வலிகள். (உபாதி சமனம்:—குளிர்ந்த ஒற்றிடங்களால்.)

**காம்பொரா :** உள் அவயவங்களில் நடுக்கம், (வலிப்பில் பார்க்க) விட்டு விட்டு வரும் நரம்பிழுப்புகள்.

**கார்பன் ஸல்ப் :** அதிக ரத்தத் திரட்சி. பாரிச வாயு.

**கார்போ அனிமாலிஸ் :** பலவீனம், சக்தியின்மை, களைப்பு.

**கார்போ வெஜி :** உள்ளங்காலில் நரம்பிழுப்பு.

**காலீ ஐயோடேட்டம் :** இடதுபக்கத் துடை நரம்புகளில் வலி

**காலீ பாஸ் :** நரம்பு உபாதிகளுக்கு சிறந்தது. நரம்பு பலவீனம், சரீர மனச் சோர்வு, சிறுவர்களுக்குச் சிறந்தது.

**காலோஸிந்திஸ் :** நரம்பு சம்பந்த வலிகள், அமுக்கினால் கிட்ட தட்ட சமனமடைதல்.

**கால்மியா :** நரம்பு சம்பந்த முதுகு வலி, நரம்பு சம்பந்த வலிகள் மறமறப்புடன் கீழ் நோக்கிப் பரவுதல்.

**குப்ரம் மெடாலிகம் :** அடி வயிற்றின் பச்சை நரம்புகளில் வலி.

**க்வாய்கம் :** முழங்கால்களிலுள்ள நரம்பு குட்டையாகி விடுதல். கை கால் முடக்கம். விரைப்பு, இளைப்பு. வெளியாகும் பதார்த்தங்கள் நாற்றமுள்ளவை.

**க்ளமேடிஸ் எரெக்டா :** பலவிடங்களிலும் நரம்பு சம்பந்தமான வலிகள்.

**சின்னினம் ஆர்ஸனிகம் :** நரம்புக் கோளாறுகளினால் தூக்கமின்மை.

**சின்னினம் ஸல்ப் :** முகத்தில் நரம்பு வலி. (முகத்தில் பார்க்க.)

**டபாகம் :** நரம்புத் தளர்ச்சி.

**டயஸ்கோரியா :** வலது துடை நரம்புகளில்வலி. அன்னப்பையில் நரம்பு சம்பந்த வலி.

**டாரண்டுலா ஹிஸ்பானியா:** நரம்பு சம்பந்த பலவிதக் கோளாறுகள்.

**டெல்லூரியம்:** வலது பக்கத் துடை நரம்பில் வலி. முழங்கால் மடங்குமிடத்திலுள்ள நரம்புகள் இழுத்துக் கொள்ளுதல்.

**ட்யூபர் குலீனம்:** வலி, அடித்துப் போட்டது போன்ற வலி. கண் விழிகளிலும் எலும்புகளிலும் வலி, மாலையில் பலஹீனம். அடிக்கடி மயக்கம். சிறிது நடந்தபின் பலஹீனம்.

**தராக்ஸகம்:** முழங்கால்களில் நரம்பு சம்பந்த வலி. அமுக்கு வதால் சமனம்.

**தாலியம்:** நரம்பு பலஹீனத்தால் நடக்கும்போது தள்ளாடுதல். ஒரு பக்கமாக விழுந்து விடுவோமோ என்ற பயம்.

**தெரிடியன்:** நரம்புகளில் அதியுணர்ச்சி.

**நக்ஸ் மாஸ்சாடா:** நடுக்கல்களும் நரம்புப் பிடிப்புகளும். நடந்து கொண்டிருக்கும்போதே தள்ளாடுதல், கீழே விழுதல். திடீரென்று மயக்கமாதல். நடுக்கல்களுடனும் இழுப்பு களுடன் பாரிசவாயு. சங்காதோஷத்தில் தலை முன்னிழுக் கப்படுதல். பல் கிட்டுதல். இருதயம் கைகளால் அமுக்கப் படுவது போல இறுக்கம். தொண்டை அடைப்பு, மயக்கம் வருதல்.

**நக்ஸ் வாமிகா:** திடீரென்று ஏற்படும் அதிர்ச்சியால் அஜீரணம். மஞ்சட்காமாலை, வலிப்புகள் முதலியவை ஏற்படுதல்.

**நாப்தலின்:** துடை நரம்பு வலி. மறத்த உணர்ச்சி.

**நாஜா:** மூளை, முள்ளந்தண்டு, நரம்பு, ஸ்தனங்கள், இருதயம், சுவாசகோசங்களையும் இயக்கும் நரம்புக்கோளாறுகள்.

**நேட்ரம் ஆர்ஸனிகம்:** நரம்பு சம்பந்தமான அமைதியின்மை, அசதி. துடை நரம்பில் வலிகள்.

**நேட்ரம் கார்ப்:** நரம்புகள் கலகலத்துப் போயிருத்தல், நரம்பு களில் நன்ருக வேலை செய்யும். சிறு உழைப்பிலும் அதிக பலஹீனம்.

**நேட்ரம் மூர்:** காலையில் அதிக பலஹீனம்.

**நேட்ரம் ஸல்ப்:** அதிகக் களைப்பு, பலஹீனம்.

**நைக்டாந்தஸ்:** துடை நரம்புகளில் வாயு, வலி.

**பல்ஸடில்லா:** குறிகள் அடிக்கடி மாறிக்கொண்டே இருத்தல் (வலிப்பில் பார்க்க.)

**பாப்டீஷியா:** அமைதியின்மை, அதிக பலஹீனம்.

**பாரிடா கார்ப்:** கால் நரம்புகள் குட்டையாக இருப்பது போன்ற இழுப்புகள். ரத்தக் குழாய்கள் உடைந்ததால் பக்ஷவாதம், ஞாபக மறதி.

**பாரிடா மூரியாடிகா:** நரம்பு, மோட்டார் நரம்புக் கோளாறுகளில் வேலை செய்யும் ஔஷதம்.

**பாஸிப்ளோரா:** (சரீரத்தில் வலியில்லாமல்) நரம்புக் கோளாரால் தூக்கமின்மை

**பாஸ்பரஸ்:** சுளுக்குகள். இதற்கு நரம்புகளைப் பலப்படுத்தும் சக்தியுண்டு. கண் நரம்புகள் சக்தியிழந்திருத்தல். நரம்புத் தளர்ச்சி.

**புபோ:** நரம்பு ஸ்தானங்களிலும் சருமத்திலும் வேலை செய்யும் ஔஷதம்.

**ப்ளம்பம்:** ஆங்காங்கு தோன்றும் நரம்பு வலிகள், நரம்புக் கூட்டத்தில் வேலை செய்யும். நரம்பு இழுத்துக் கொள்ளுதல். குடையும் வலிகள்.

**மங்கானம்:** பலஹீனம், நடுக்கல்கள்.

**மெக்னீஷியா கார்பானிகா:** காக்கை வலிப்பு. நின்றுகொண்டே இருக்கும்பொழுது திடீரென்று கீழே விழுதல். ஆனால் பிரக்ஞை இழப்பதில்லை. எல்லா நரம்பு ஸ்தான வலிகளும் மெதுவாக நடந்து கொண்டேயிருப்பதனால் சமனப்படுதல்.

**மெக்னீஷியா பாஸ்:** துடையில் இருபக்க நரம்புகளில் வலி.

**மெர்க்குரியஸ் ஸொலுபுலிஸ்:** சிறிய உழைப்பாலும் நடுக்கல்கள். பலவீனம்.

**மோஸ்சஸ்:** நரம்புக் கோளாரால் ஏற்படும் உபாதிகள், விக்கல்.

**ரஸ் டாக்ஸ்:** சுளுக்குகளில் ஆர்னிகா கொடுக்கப்பட்டபின் பயன்படும்.

**ரானங்குலஸ்:** மாலையிலும், மழை பெய்யும்போதும், குளிர் காற்றிலும் நரம்பு வலிகள் ஏற்படுதல்.

**லாரோஸிராஸஸ்:** ஜீவசக்தியற்றுப் போதல் (முக்கியமாக மார்பு உபாதிகளில்) நரம்பு பலவீனம், தளர்ச்சி, வாதம் அடைதல்.

**லித்தியம் கார்:** எலும்பு, தசை, நரம்புகளில் வலி.

**லைகோபோடியம்:** பக்ஷவாதம்.

**வலேரியானு:** நரம்புகளில் அதியுணர்ச்சி, திடீரென்று தூக்கிப் போடுதல், இழுத்தல். நரம்பு சம்பந்த நோய்கள், சங்கா தோஷம் காக்கை, வலிப்பு.

**வெராட்ரம் ஆல்பம்:** நடுக்கல், தூக்கிப்போடுதல்.

**வெராட்ரம் விரைட்:** நரம்பு ஸ்தானங்களில் நன்கு வேலை செய்யும் ஔஷதம்.

**ஸபடில்லா:** முறை ஜுரத்தில் அதிக பலஹீனம். பயந்ததா லேற்படும் கோளாறுகள், துடிப்புகள், வலிப்புகள், நாக்குப் பூச்சிகளாலேற்படும் நரம்புக் கோளாறுகள்.

**ஸரஸபரில்லா:** இடுப்பிலிருந்து விரை நரம்புகள் வரை வலி.

**ஸல்பர்:** திடீரென்று சரீரத்தின் பல பாகங்களிலுள்ள நரம்புகள் இழுத்துக் கொள்ளுதல்.

**ஸிங்கம் பாஸ்:** பைத்தியம், பலஹீனம், பக்ஷவாதம் போன்ற எல்லா நரம்பு ஸ்தான நோய்களுக்கும் (3x வீரியத்தில் தினம் 2 வேளை சுமார் ஒரு வருடம் கொடுக்கவேண்டும்.)

**ஸிங்கம் மெடாலிகம்:** ஒரு இடத்தின் நரம்புகள் பக்ஷவாதத்தால் பீடிக்கப்படல். வேறு இடத்தில் அதியுணர்ச்சி.

**ஸிங்கம் வெலிரினு :** நரம்புத் தலைவலி.

**ஸிபிலினம் :** நரம்பு, எலும்பு மூட்டுகளில் வலி.

**ஸீகேல் :** துடிப்புகள் தாறுமாருக இருத்தல். திடீரென்று பலமிழத்தல்.

**ஸீட்ரான் :** நரம்பு ஸ்தான வலி, முறை வைத்து வருதல்.

**ஸெலீனியம் :** அதிக அசதி. எப்போதும் படுத்துக்கொண்டே இருக்க பிரியம், திடீரென்று பலவீனமேற்படுதல், கை கால்களில் நடுக்கல். கோடை காலத்தில் அதிக பலவீனம். சரீரம் இளைத்தல்.

**ஸெனகா :** கண்களின் நரம்புக் கோளாறுகள்.

**ஸைக்ளேமென் :** அதிக பலவீனம், முக்கியமாக முழங்கால்களில்.

**ஸ்டாபிஸாக்கிரியா :** பலவீனம், வலிப்பு. பக்ஷவாதம், கைகள் நடுங்குதல். மனவெழுச்சியாலும் கோபத்தாலும் சரீரம் முழுதும் நடுங்குதல்.

**ஸ்டானம் :** வேலை செய்வதற்கும் பேசுவதற்கும், படிப்பதற்கும் முடியாத அவ்வளவு பலவீனம். இடதுபக்க பக்ஷவாதம். சிறிய உழைப்பின் பின்னும் நடுக்கல்கள். வயிற்றிலும் மார்பின் அடிப் பாகத்திலும், வலியுடன்கூடிய சங்கா தோஷம், காக்கை வலிப்பு

**ஸ்டிக்டா :** இரவுகளில் கால்கள், பாதங்கள் துடித்தல், ஆடிக் கொண்டேயிருத்தல்.

**ஸ்ட்ரமோனியம் :** அசதி, படுத்தே இருத்தல், வலிப்பு.

**ஸ்பைஜிலியா :** நரம்புகளில் வெட்டும் வலி, புழுக்கள் ஊறும் உணர்ச்சி. குத்துவலி, கிழிக்கும் வலி, எரிச்சல், வலிகள் சமனப்பட்ட பின்னும் சிவந்திருத்தல், இரவுகளில் அமைதியின்மை, தொடுவதால் வலி அதிகமாதல், சில்லென்றிருத்தல்.

**ஹமாமெலிஸ் :** வெயின்கள் தடித்தல்.

**ஹீபார் ஸல்பர் :** முக நரம்புகளில் வலி.

**ஹைபெரிகம்:** நரம்புகள் அடிபடுதல், விரல்கள் நசுங்குதல், கூரான ஊசி முதலியவைகளினுல் குத்தப்பட்டதால் பாதிக்கப்பட்ட நரம்புக் கோளாறுகள். கூரிய பற்களுடைய விஷ ஜந்துக்களால் கடிக்கப்பட்டு நரம்புகள் பாதிக்கப்படுதல். ஆபரேஷன் செய்தபின் ஏற்படும் வலிகள்.

# மோட்டார் நரம்புகள்

**அக்டியா ரஸிமோஸா:** மோட்டார் நரம்பு சம்பந்த நோய்கள்.

**காஸ்டிகம்:** மோட்டார் நரம்புக் கோளாறுகளுடன் கண்ணில் பூ விழுதல்.

**நாஜா:** மோட்டார் நரம்புக் கோளாறுகள்

**பாரிடா மூரியாடிகா:** மோட்டார் நரம்புகளின் சக்திக் குறைவு.

**மங்கானம்:** ரத்தசோகை அல்லது மோட்டார் நரம்பு சம்மந்த நோய்கள்.

**மைகேல்:** மோட்டார் நரம்பு பாதிக்கப்பட்டதால் வாத ரோகம்.

**ஜெல்ஸிமியம்:** மோட்டார் நரம்புகள் அதிகமாக பாதிக்கப் படுதல்.

# மயிர்

**அம்ப்ரா க்ரிஸியா:** தலை மயிர் உதிர்தல்.

**அயிலாந்தஸ்:** (கால்) மயிர்க்கூச்சலெடுத்தல்.

**அலூமினு:** தலை மயிர் உதிர்ந்து கொண்டிருத்தல். இமை மயிர் உதிர்தல்.

**ஆர்ஸனிகம் ஆல்பம்:** தலை மயிரைத் தொட சகிக்காமை. மயிர் உதிர்தல்.

**ஆஸிட் நைட்ரிக்:** தலை மயிர் உதிர்தல். ஆண்குறி சமீபமாக உள்ள மயிர் உதிர்தல்.

**ஆஸிட் பாஸ்பாரிக் :** தலைமயிர் காலத்திற்கு முன் நரைத்தல், உதிர்தல். ஆண்குறி சமீபமாகவுள்ள மயிர் உதிர்தல்.

**ஆஸ்ட் ப்ளுவாரிக் :** தலைமயிர் சடை விழுதல். புதிதாக முளைக்கும் மயிர் இலகுவில் அறுந்து விடுதல்.

**ஐயோடியம் :** கறுத்த மயிர்.

**கந்தாரிஸ் :** தலையைச் சீவிக்கொள்ளும்போது மயிர் உதிர்தல்.

**கல்கேரியா ஸல்ப் :** கிள்ளினால் ரத்தம் வரக்கூடிய மயிர்க்கால்களின் கீழே யொன்றுமே யில்லாத பருக்கள்.

**காட்மியம் ஸல்ப் :** குளிர்ந்த தண்ணீர் குடிப்பதால் தலைமயிர்க் கூச்சலெடுத்தல்,

**கார்பன் ஸல்ப் :** தலை மயிர் கொட்டுதல்.

**கார்போ வெஜி :** (தலை)மயிர்கால்களில் சுலபமாக மயிர் உதிர்தல்.

**காலீ கார்ப் :** தலை மயிர் மிகவும்காய்ந்து, உதிர்ந்து கொண்டிருத்தல்

**க்ராபைடிஸ் :** தலையில் மயிருள்ள இடங்களில் அரிப்பு.

**டிஜிடாலிஸ் :** தலை மயிரைப் பிய்த்துக் கொண்டு வீறிட்டலறுதல்.

**தூஜா :** தலை மயிர் உதிர்தல்.

**நேட்ரம் முரி :** மீசை மயிர் உதிர்தல், மயிர்க்கால் ஓரங்களில் படைகள்.

**பெர்ரம் மெடாலிகம் :** மயிர்க்கால்கள் நொந்திருத்தல்.

**போவிஸ்டா :** மனவெழுச்சியில் சரீரம் முழுதும் மயிர் விரைத்தல்.

**மெக்னீஷியா கார்ப் :** தலை மயிர் உதிர்தல்.

**மெர்க்கூரியஸ் ஸொலுபுலிஸ் :** தலையின் பக்கங்களிலும் மயிர் உதிர்தல்.

**ரஸ் டாக்ஸ் :** தலை மயிர் உதிர்ந்து விடுதல்.

**லைகோபோடியம் .** தலை மயிர் உதிர்தல், நரைத்தல்.

**ஸல்பர் :** தலை மயிர் உதிர்தல். மயிர்க்கால் ரணமாயிருத்தல்.

**ஸிபிலினம் :** தலை மயிர் உதிர்தல்.

**ஸெபியா :** தலை மயிர் உதிர்தல்.

**ஸெலீனியம் :** தலை மயிர் உதிர்தல்.

**ஸோரினம் :** தலை மயிர் ஒன்றோடொன்று ஒட்டிக் கொண்டிருத்தல்.

**ஹீபர் ஸல்பர் :** தலை மயிர் உதிர்தல்.

**ஹைட்ராஸ்டிஸ் :** முன் தலையில் மயிர்க்கால் ஓரங்களில் படைகள்.

# மூட்டுகள்

**அகோனைட் :** இடது இடுப்பு மூட்டில் கிழிக்கும் வலி, மணிக்கட்டில் பக்ஷவாதம்.

**அக்டியா ஸ்பைகாடா :** சிறு எலும்பு மூட்டுகளில் அதிகமான வாதம், சிறு களைப்பிலும் மூட்டுகள் வீங்குதல், தொட்டால் அதிக வலி.

**அக்னஸ் காஸ்டஸ் :** விரல் மூட்டு வீக்கம், மூட்டு அழற்சி, சிறு கழலைக் கட்டிகள்.

**அப்ரோடேனம் :** விரைப்பு, குத்துவலி, வாதம்.

**அமோனியம் கார்ப் :** சுளுக்கு போன்ற வலி, அதிக சில்லிப்பு, நடந்தால் சமனம். நிணநீர்க் கோள வீக்கம், அரிப்பு.

**அமோனியம் மூரியாடிகம் :** உட்கார்ந்தால் அதிகமாகும் தோள் பட்டை மூட்டு வாதம், சந்து வாதம், அக்குள் கோள வீக்கம்.

**அஸ்குலஸ் ஹிபோ :** மூட்டுகள் விரைப்பாகவும், வாத முள்ளவையாகவும், உஷ்ணத்தால் சமனமடைபவையாகவுமிருத்தல்.

**ஆண்டிமோனியம் க்ரூடம் :** முழங்கை மூட்டுகளில் அசைக்கும் போது முறிதல்.

**ஆண்டிமோனியம் டார்ட்டாரிகம்:** எல்லா மூட்டுகளிலும் நீர் வீக்கம். குளிர்ச்சியான ஈர நப்புள்ள காலங்களில் அதிக மாதல்.

**ஆரம் மூரியாடிகம்:** இடது தோள்பட்டையில் கிழிக்கும் வலி. விரல் மூட்டுகள் விரைப்பாகஇருத்தல். முழங்கால்கள் தள்ளாடுதல். மணிக்கட்டுகளில் வீக்கம் அரையிடுக்கில் அடிபட்டது போன்ற உணர்ச்சி, குனிந்தால் அதிகமாதல்.

**ஆரம் மெடாலிகம்:** இடது தோள்பட்டையில் குடைதல். மூட்டுக்கு மூட்டு தாவிக்கொண்டே இருக்கும் வலி, கடைசியில் இருதயத்தில் தங்குதல்.

**ஆர்ஸனிகம் ஆல்பம்:** முழங்கால் மூட்டுகளில் வலி.

**ஆர்னிகா மொண்டானு:** நின்றுக்கொண்டிருக்கும்போது முழங் கால் மூட்டுகள் திடீரென்று வளைதல். அசையும்போது முழங்கால் மூட்டுகளில் பக்ஷவாயு சம்பந்த வலி.

**ஆஸிட் ஆக்ஸாலிக்:** பலவீனமான இடுப்பு, அரைப்பூட்டு கால் கள் முதலியவைகளுடன் முள்ளந்தண்டு உபாதிகள், விரல் எலும்புகள் சேருமிடங்களில் அழற்சி வலி, வலது மணிக் கட்டில் சுளுக்கு முழங்கால்கள் களைத்துப்போனதுபோல் தோன்றுதல்.

**ஆஸிட் நைட்ரிக்:** மூட்டுகளில் படக்கென்ற சத்தம், விரல்களின் மூட்டுகளில் வீக்கம், குத்துவலி.

**ஆஸிட் பாஸ்பாரிக்:** மூட்டுகளில் பிடிப்பும் கெண்டையேறு தலும்.

**ஆஸிட் பென்ஸாயிக்:** இடுப்பு சில்லென்றிருத்தல், கை கால்மூட்டு களில் கீல்வாதம், மணிக்கட்டு, முழங்கால் வீக்கம், வலி.

**இபிகாக் உனு:** மூட்டுகள் மறத்திருக்கும் உணர்ச்சி.

**ஐயோடியம்:** மூட்டுகளில் நீடித்த வாதம், இரவுகளில் வலி, வீக்கமின்மை, குளிர்ச்சியால் சமனம்.

**ஐரிஸ் வர்ஸிகோலர்:** மூட்டுகளில் வலி, அடிக்கடி மாறிக் கொண்டேயிருத்தல்.

**கல்கேரியா கார்ப் :** சிறு எலும்பு மூட்டுகளில் பிடிப்புகள்.

**கல்கேரியா பாஸ் :** (இரவுகளில்) மூட்டுகளில் வாதவலி, குளிர்ந்தப் பருவங்களிலதிகரித்தல்.

**கல்கேரியா ப்ளோரிகா :** விரலெலும்பு மூட்டுகள் வாதத்தால் வீங்குதல்.

**கல்கேரியா ஸல்ப் :** அக்குளில் சீழ்க் கட்டிகள், மூட்டுகளில் வாதம், சப்பை மூட்டு நோய்.

**காக்குலஸ் :** மூட்டுகளில் நொறுங்கும் சத்தம்.

**காக்டஸ் :** மூட்டுகளில் கடுமையான அழற்சியுடன் கூடிய வாதரோகம், முதன் முதலில் கைகளில் ஆரம்பித்தல்.

**கார்டுஸ் மரியேனஸ் :** இடுப்பு மூட்டில் வலி, எழுந்தாலும், குனிந்தாலும், அசைந்தாலும் அதிக வலி, வலது தோள் பட்டையின் கீல் வலி.

**கார்பன் ஸல்ப் .** இடுப்புச் சந்து வாதம், மூட்டுகளில் நீடித்த வாதம், மூட்டுகளில் வலி ஏற்படுதல்.

**கார்போ அனிமாலிஸ் :** அக்குளிலும் அரைப்பூட்டிலும் உள்ள கோளங்கள் கடினமாதல், நடக்கும்போது அக்குளில் பலவீனம். கொஞ்சம் கனமான சாமான்களைத் தூக்கினலும் கூட மூட்டுகளில் சுளுக்கேற்படல்.

**கார்போ வெஜ் :** மூட்டுகளில் பலவீனம்.

**காலீ ஐயோ :** இடது இடுப்பில் வலி, முழங்கால்களில் கீல்வாத வீக்கம். இடது தோள்பட்டையில் அடிபட்டதுபோல் வலி.

**காலீ கார்ப் :** இடுப்பு எலும்பு மூட்டுகளிலும், துடையிலும் அபானத்திலும் வலி, இடுப்பில் கடுமையான திடீரென்று ஏற்படும் வாத சம்பந்த வலிகள், மணிக்கட்டு மூட்டுகளில் கடுமையான வலி.

**காலீ பைக்ரோமிகம் :** இடது பக்க இடுப்புச் சந்து வாதம், எல்லா மூட்டுகளிலும் வலி, வீக்கம், விரைப்பு, உடையும் சத்தம்.

**காலீ மூரி :** மூட்டுகளில் வீக்கம், அசையும்போது மாத்திரம் வலி தென்படல் அல்லது அதிகரித்தல்.

**காலோபில்லம் :** சிறு எலும்பு மூட்டுகள் பாதிக்கப்படுதல், இடம் மாறிக் கொண்டிருக்கும் வலிகள்.

**காலோஸிந்திஸ் :** இடுப்பு மூட்டுகள் ஒரே சமயத்தில் நழுவுதல். மூட்டுகளில் விரைப்பு, தசை நார்கள் சுருங்குதல். மறத்த உணர்ச்சி. இடது முழங்கால் மூட்டில் வலி.

**கால்மியா :** சிவந்து சூடாக வீங்கியிருத்தல். இடுப்பில் இறுக்கும் வலி முழங்கால்கட்கும் கால்கட்கும் பரவுதல். வலி பல மூட்டுகளை ஒரே சமயத்தில் பிடித்துசீக்கிரமாகப் போய்விடுதல்.

**காஸ்டிகம் :** மறத்த உணர்ச்சியுடன் இடதுபக்க இடுப்புச் சந்து வாதம், மூட்டுகளில் கிழிக்கும் வலி, எரிச்சல், முழங்கால் மூட்டுகளில் உடையும் சத்தம். விரைப்பு, பலவீனமான அக்குள்கள்.

**கோல்சிகம் :** கை கால், பாதங்களில் நீர் வீக்கம், ஒவ்வொரு மூட்டிலிருந்தும் முக்கியமாகத் தோள்பட்டை சப்பையில் வலி. பாரிசவாயு சம்பந்த வலி.

**க்வாய்கம் :** மூட்டுகளில் வீக்கம், வலி, சூட்டைத் தாங்க முடியாமை, மூடக்கம். விரைப்பு.

**க்ளமேடிஸ் எரெக்டா :** விரல் மூட்டுகளில் வீக்கம், அமுக்கப் பட்ட வெட்டை நோயால் ஏற்பட்ட வாதம்.

**சைனு :** மூட்டுகளில் சுளுக்கு விழுந்தது போன்ற வலி. மூட்டு கள் வீங்கியும் அதிக வலியுடனுமிருத்தல். மெதுவாகத் தொட்டால் வலியதிகம், நன்ருக அமுக்கினுல் வலி சமனம். காலையிலும் உட்கார்த்திருக்கும்போதும் அதிகம் (வாதத்தில் பார்க்க.)

**டபாகம் :** இடுப்பு, தோள்பட்டை எலும்புகளில் வலி.

**டயஸ்கோரியா :** குனிந்தால் இடுப்பு வலி அதிகம். மூட்டுகளில் பிடிப்பு வலி.

**டல்கமாரா :** மூட்டுகள் வீங்கி வலியுடனிருத்தல், கீல் வாதம்.

**டிஜிடாலிஸ் :** மூட்டுகளில் குத்து வலி.

**ட்யூபர்குலீனம் :** கை கால்களிலும் மூட்டுகளிலும் இடம் விட்டு இடம் மாறும் வலிகள், பிடிப்புகள், அசைக்க முடியாமை. வலிகள் உஷ்ணத்தினுல் சமனம். அசைவினுல் அதிகம், பிடிப்பு வலிகள்.

**ட்ரீல்லியம் :** இடுப்பும் முதுகும் துண்டு துண்டாக விழுந்து விடுவது போன்ற வலி (பெண்களுக்கு). இறுகிக் கட்டினுல் சமனம்.

**ட்ரோஸீரா :** இடுப்பு மூட்டுகளில் வலி.

**துஜா :** மூட்டுகளில் தாங்க முடியாத வலி. (ஸைகோஸிஸ்).

**நைக்டாந்தஸ் :** கீல் வாயு.

**நேட்ரம் ஆர்ஸனிகம் :** மூட்டுகளில் பிடிப்பு.

**நேட்ரம் மூரி :** தோள்பட்டை மூட்டில் வலி.

**பல்ஸடில்லா :** தோள்பட்டை மூட்டில் வலி.

**பாப்டீஷியா :** பிடிப்புகளுடன் விரைத்திருத்தல்.

**பாரிடா கார்ப் :** (கால்) கீல்களில் பிடிப்புகள்.

**பாஸ்பரஸ் :** மூட்டுகள் லகுவாகத் தளர்ந்துவிடுதல்.

**புபோ :** மூட்டுகளில் ஒரு முளையை வைத்து இறுக்குவது போன்ற உணர்ச்சி.

**பெர்ரம் மெடாலிகம் :** தோள்பட்டை மூட்டுகளில் கீல்வாயு பிடிப்பு, இடுப்பில் பிடிப்பு, மெதுவாக நடந்துகொண்டிருப்பதால் சமனம்.

**பெல்லடோன்னு :** மூட்டுகள் சிவப்பாகவும் பளபளப்பாகவும், எரிச்சலுடனும் வீக்கத்துடனுமிருத்தல்.

**போடோபில்லம் :** இடுப்பில் வலி, வலது அக்குளில் வலியாரம்பித்துத் துடையின் உட்பாகத்தின் வழியாக முழங்கால்களுக்குச் செல்லும் வலி. இடது பக்க பக்ஷவாதம்.

**போவிஸ்டா:** குனிந்து நிமிர்ந்ததும் இடுப்பு விரைத்திருத்தல்.

**ப்ரையோனியா:** முழங்கால்களில் பிடிப்புகள். மூட்டுகள் சிவந்தும் வீங்கியும், உஷ்ணமாகவும், பிடிப்பு வலியுடனும், அசைவினுல் வலி அதிகமாகிக் கொண்டுமிருத்தல்.

**மங்கானம்:** மூட்டுகளில் அழற்சிகள். இரவுகளில் கால்களிலும் மூட்டுகளிலும் நோண்டுவது போன்ற வலிகள். தொடுவதால் வலிகள், முழங்கால், கணுக்கால் மூட்டுகளில் அழற்சி, வீக்கம்.

**மெர்க் ஸொலு:** மூட்டுகளில் கீல்வாத வீக்கங்களும் வலியும். இரவில் அதிகம். வியர்வையால் பயன் இன்மை.

**யூபடோரியம் பர்பூரியம்:** தலை சுற்றலுடன் பிடரிவரை வலி. இடுப்பில் கனமான உணர்ச்சி, பிடிப்பு.

**யூரேனியம் நைட்ரிகம்:** மாதவிடாயில் இடுப்பு வலி.

**ரஸ் டாக்ஸ்:** மூட்டுகளில் நன்கு வேலை செய்யும் ஔஷதம். மூட்டுகளில் கீல்வாதப் பிடிப்புகள்.

**ரர்னங்குலஸ்:** தோள்பட்டை மூட்டுகளில் பிடிப்பு வலிகள்.

**ருடா:** மூட்டுகளில் வலி. மூட்டுகள் விலகுதல். பலக் குறைவு உட்காரும்போதும் குனியும்போதும் இடுப்பில் பிடிப்பு வலி. இடுப்பு வலி.

**ரோடோடெண்ட்ரன்:** காற்று, மழை காலத்தில் மூட்டுக்கு மூட்டு செல்லும் கீல்வாத வலிகள், வீக்கம்.

**ரோபினு:** அன்னப்பை, தோள்பட்டை நடுவில் எரிச்சல்.

**லாக் கானினம்:** கீல்வாதத்தில் மூட்டுகள் மாறிமாறி பாதிக்கப் படுதல்.

**லாக்கெஸிஸ்:** மூட்டுகளில் நீல நிறமுள்ள வீக்கங்கள்.

**லிதியம் கார்ப்:** வலது தோள்பட்டை மூட்டில் வலி.

**லேடம் பாலஸ்திரி:** முழங்கால் மூட்டுகளில் வீக்கம், வலி, சில்லென்றிருத்தல். மூட்டுகளில் வலி. அசைவாலும், உஷ்ணத்தாலும் அதிகரித்தல். எரிச்சலுள்ள பாகங்களைக்

குளிர்ந்த தண்ணீரில் வைப்பதால் சமனம், மூட்டுகளில் படக்படக்கென்ற சப்தம்.

**லைகோபோடியம் :** வலது தோள்பட்டை மூட்டிலும், இடது இடுப்பிலும் கீல்வாதப் பிடிப்புகள்.

**ஸபீனு :** மூட்டுகளில் கீல்வாத வீக்கம், வலிகள். உபாதி அதிகம். உஷ்ண அறைகளில் அதிகமாதல். குளிர் காற்றில் சமனமாதல். உழைப்பின் பின் பாரிசவாயு சம்பந்த குத்து வலிகள். வலியுள்ள பாகங்கள் சிவந்து பளபளப்பாக இருத்தல். இடுப்பின் அடிப்பாகத்திலிருந்து அடி வயிற்றின் அடிப்பாகம்வரை வலி.

**ஸல்பர் :** முழங்கால் மூட்டுகள் வீங்கியிருத்தல். உட்கார்ந்து விட்டு எழுந்திருக்கும்போது இடுப்பில் வலி, இடுப்பில் பிடிப்பு.

**ஸிபிலினம் :** வலி. தோள்பட்டைகளில் கீல் வாதம்.

**ஸ்ட்ரமோனியம் :** மூட்டுகளில் சீழ்க் கட்டிகள்.

**ஸ்பாஞ்சியா :** இடது தோள்பட்டை மூட்டில் பிடிப்புகள், துடிப்புகள்.

**ஸ்பைஜீலியா :** மூட்டுகளில் பிடிப்பு வலி, குத்துவலி.

**ஹைபெரிகம் :** இடுப்பில் பிடிப்பு. தோள்பட்டைகளில் வலி.

# ரத்தம்

**அகேரிகஸ் :** குறைந்த ரத்தவோட்டமுள்ள கிழவர்கள். அசுத்த ரத்தக் குழாய்கள் தடித்தல்.

**அகோனைட் :** ரத்தக் கொதிப்பு.

**அமில் நைட்ரேட் :** ரத்தம் தலைக்கேறல்.

**அஸபோடிடா :** அசுத்த ரத்தக் குழாய்களில் அதிக ரத்தத் தேக்கம்.

**அஸ்குலஸ் ஹிபோ :** அசுத்த ரத்தக் குழாய்களில் நிறைந்த உணர்ச்சி. கல்லீரலில் ரத்தக்குழாய் நிறைந்த உணர்ச்சி

யும், ரத்தம் தேங்குதலும். இருதயம், தலை, சருமம் ஆகிய வற்றில் அளவுக்கு மீறிய ரத்தம் இருப்பது போன்ற உணர்ச்சி.

**ஆரம் மெடாலிகம் :** அசுத்த ரத்தக்குழாய் பெருத்தல்.

**ஆலோ ஸொகோட்ரினு :** தலை, மார்பு முதலியவற்றில் அதிகரத்தத் தேக்கம். அசுத்த ரத்தக்குழாய்கள் பருத்தல்.

**ஆஸிட் ஆக்ஸாலிக் :** ரத்தவேகம் குறைதல். ரத்தத்தில் கரிய மிலவாயு கலப்பதால் சருமத்தின் நிறம் விகாரமடைதல்.

**ஆஸிட் பிக்ரிக் :** ரத்தம் சுயத்தன்மை யிழத்தல்.

**ஆஸிட் ப்ளூவாரிக் :** அசுத்த ரத்தக்குழாய் புடைப்புகள்.

**இபிகாக்உனு :** குமட்டலுடன் சரீரத்தின் எந்தப் பாகத்தி லிருந்தாவது ரத்தப்பெருக்கேற்படுதல். மூக்கிலிருந்தும், இருதயத்திலிருந்தும், பெண்குறியிலிருந்தும் பிரகாச ரத்தப்பெருக்கு.

**எக்கினேஷ்யா :** ரத்தத்தில் விஷக் கலப்பு.

**எரிகரான் :** ரத்தப் பெருக்கு. ஸ்திரீகளின் மூத்திரப் போக்கில் ரத்தம் போதல். மலத்துடன் ரத்தம் போதல்.

**ஐயோடியம் :** சூடான ரத்தம்.

**ஓலியாண்டர் :** கைகளிலுள்ள அசுத்த ரத்தக்குழாய்கள் வீங்குதல்.

**கல்கேரியா ஆர்ஸனிகம்:** (காலராவில் சரீரத்தில் நீர் குறைவதால் ரத்தவோட்டம் தடைபடல். ரத்தம் கட்டி தட்டுவதால் இருதயத்தில் வலி) ரத்தமய மூத்திரம். கருப்பை புற்றில் எரிச்சலும் நாற்றமுள்ள ரத்தப் பெருக்கு.

**கல்கேரியா ஹைபோபாஸ் :** தலை, கழுத்து, கைகளில் அசுத்த ரத்தக்குழாய்கள் கயிறுபோல் பருத்தல்.

**கன்வலேரியா :** அசுத்த ரத்தக்குழாய்களில் ரத்தத் தேக்கம்.

**காக்டஸ் க்ராண்டி :** ரத்த வோட்டம் விட்டுவிட்டும் ஒழுங்கற்று மிருத்தல். ரத்தப் பெருக்கு. ரத்த வாந்தி.

**கார்டுஸ் மரியேனஸ்:** அசுத்த ரத்தக்குழாய்கள் தடித்தல். ரத்தத் திரக்ஷியுடன் தலைவலி.

**கார்பன் ஸல்ப்:** அசுத்த ரத்தக்குழாய் தடித்துத் தொங்குவது போலிருத்தல்.

**கார்போ அனிமாலிஸ்:** அசுத்த ரத்தம் அதிகரித்தல்.

**கோரல்லியம் ரூப்ரம்:** வாய், மூக்கிலிருந்து ரத்தம் கொட்டுதல்.

**கோனியம்:** சுத்த ரத்தக்குழாய்கள் தடித்தல்.

**க்ராபைடிஸ்:** மலப்பையில் அசுத்த ரத்தக்குழாய்கள் தடித்தல்.

**க்ரிஸோட்:** சிறு காயங்களிலிருந்து ரத்தம் பெருகுதல். அதிக ரத்தம் வெளியாதல்.

**க்ரோகஸ் ஸடீவா:** எந்தவிடத்திலிருந்தும் ஏற்படும் கருத்த கட்டி தட்டிய நீளமான கருப்புக் கயிறு போன்ற தொங்கிக் கொண்டிருக்கும் ரத்தப் பெருக்குக்கு மிகச் சிறந்தது.

**க்ரோடேலஸ் ஹாரிடஸ்:** சரீரத்தில் எந்த இடத்திலிருந்து கடுமையாக ரத்தப்பெருக்கு ஏற்பட்டாலும் பயன்படும் ரத்தமயமான வியர்வை, டைபாய்டு ஜுரத்தில் மூக்கிலிருந்து ரத்தம் கொட்டுதல். பிரசவ ஜுரத்தில் கறுத்த நாற்றமுள்ள கட்டி தட்டாத ரத்தக் கசிவு.

**சின்னினம் ஆர்ஸனிகம்:** கொடிய வியாதிகளின் பின் ரத்த ஓட்டக் கோளாறுகளுக்குச் சிறந்த டானிக்.

**சின்னினம் ஸல்ப்யூரிகம்:** ரத்தத்தில் சிவப்புக் கெபிகள் குறைவு.

**டாரண்டூலா குபன்ஸிஸ்:** கடுமையான சீழ் வியாதிகளில் ரத்த ஓட்டத்தில் சீழ் கலப்பதால் ஏற்படும் ஜன்னி.

**ட்ரில்லியம்:** சரீரத்தின் எந்தப் பாகத்திலிருந்தும் ஏற்படும் நல்ல சிவந்த ரத்தப் பெருக்கு. நாசியிலும், பல்லெடுத்த பின்னும் ரத்தப் பெருக்கு. ரத்த வாந்தி. வயிற்றுக் கடுப்பு. வலியில்லாத ரத்தங்கலந்த மலப்போக்கு. ரத்தந் தோய்ந்த கபம். இருமினுல் ரத்தம் வருதல். பெண்களுக்கு அசைவால் ரத்தப் பெருக்கு அதிகரித்தல். மாதவிடாய்க் கோளாறுகள்.

**நலப்ஸீ புர்ஸா பெஸ்டோரிஸ் :** நீடித்த விடாத ரத்தப் பெருக்கு. கருத்த கட்டி தட்டிய ரத்தம், மூக்கு, நீர்த்துவாரம், யோனி, குண்டிக்காய்களிலிருந்து ரத்தப் பெருக்கு.

**தூஜா :** ஜுரத்தில் மாலை நேரங்களில் ரத்த திரக்ஷி. ரத்தக் குழாய்கள் வெடித்தல்.

**தெரிபிந்த் :** மலத்திலும் கோழையிலும் ரத்தக் கலப்பு. மூத்திரத்தில் ரத்தக் கெபிகள், ரத்தக் கலப்பு.

**நக்ஸ் வாமிகா :** இரவுகளில் உமிழ் நீருடன் ரத்தம் கலந்து வெளிப்படல்.

**பாஸ்பரஸ் :** சரீரத்தினுள்ளே ரத்தப் பெருக்கு. சிறு சிராய்ப்புகளிலிருந்தும் அதிக ரத்தம் வெளிப்படுதல்.

**புபோ :** (பெண்களுக்கு) கால்களின் ரத்தக் குழாய் பருத்தல்.

**பெட்ரோலியம் :** அசைவு, வண்டிகளில் செல்வதால் ரத்த வோட்டம் அதிகரித்தல். உஷ்ணமான காற்றில் சமனமாதல்.

**பெர்ரம் மெடாலிகம் :** ரத்தத்தில் சிவப்புக் கெபிகள் குறைவாக இருத்தல். உதடுகள், முகம், காதுகள் இவை வெளுத்தல். சரீரத்தின் எல்லா பாகங்கட்கும் ரத்தம் சரிவர செல்லாமை. பல அவயவங்களிலிருந்தும் ரத்தப் பெருக்கு.

**ப்ளம்பம் :** ரத்தத்தில் வேலை செய்யும் ஔஷதம்.

**மில்லிபோலியம் :** முகம், தலை, மார்பு, ரத்தத்தேக்கம், மூக்கு, மூத்திரப்பை, சுவாச கோசம், மலப்பை, ஸ்திரிகளின் ஜனனேந்திரியங்கள் இவைகளிலிருந்து ரத்தப் பெருக்கு. ரத்தங் கொட்டும் மூலம். மார்பிலிருந்து ரத்தம் தலைக்கேறுதல். ரத்தமாகத் துப்புதல்.

**மெக்னீஷியா மூரியாடிகா :** ஸமுத்ர ஸ்நானம் செய்தால் இருமலில் ரத்தம் வெளியேறுதல்.

**மெலிலோடஸ் :** தலை, கண், முகம், மூக்கு, காதுகளில் ரத்தத் தேக்கம். ரத்தப் பெருக்கு.

**யூரேனியம் நைட்ரிகம்:** ரத்த அமுக்கம்.

**விஸ்நஸ்:** தலை, பிடரியில் ரத்தத் தேக்கம்,

**ரோஹிடாக்:** பசியை விருத்தி செய்து, ரத்தத்தை சுத்தி செய்யும்.

**லாரோஸிராஸஸ்:** ரத்த வோட்டம் மிகவும் பலஹீனமாக இருத்தல். இருதய வால்வுகள் சரிவர மூடாமல் ரத்தம் வெண்ட்ரிகிளிலிருந்து ஆரிகிளுக்குப் பின்னோக்கி ஓடுதல்.

**லேடம் பாலஸ்த்ரி:** ரத்தத் தேக்கத்துடன் ரத்தம் கக்குதல். ஏதோ ஒரு குறிப்பிட்ட இடத்தில் வலியும், அந்த இடத்திலிருந்து ரத்தம் வருவதுபோன்ற உணர்ச்சியும் நல்ல சிவந்த நுரைத்த ரத்தம் வெளியேறுதல். கீல்வாதமும் ரத்தம் கக்குதலும் மாறிமாறி ஏற்படுதல்.

**ஸபீனு:** ரத்தக் குழாய்கள் துடித்தல். கீல்வாதமும் ரத்தப் பெருக்கும் மாறிமாறி ஏற்படுதல்.

**ஸரகா இண்டிகா:** ரத்தம் கக்குதல்.

**ஸல்பர்:** ரத்த ஓட்டம் தாறுமாருக இருத்தல். அதாவது ஓரிடத்தில் அதிகமாகவும் மற்ருேரிடத்தில் குறைவாகவுமிருத்தல்,

**ஸாங்குநேரியா:** அசுத்த ரத்தக்குழாய்கள் பருத்து, வலியுடனிருத்தல். ரத்தம் வேகமாக மேலே ஏறும் உணர்ச்சி. தலையிலுள்ள அசுத்த ரத்தக் குழாய்கள் தடித்திருத்தல்.

**ஸிங்கம் பாஸ்:** அதிக ரத்தப் பெருக்கால் ஏற்பட்ட காக்கை வலிப்பு.

**ஸீகேல் கார்நூட்டம்:** ரத்தக் கெபிகள் கரைந்து, தண்ணீர் போலாகி ரத்தப் பெருக்கேற்படுதல்.

**ஸோலிடாகோ:** குண்டிக்காய்களின் ரத்தத் தேக்கம். மூத்திரத்தில் ரத்தமும், அல்புமென் சத்து. கறுத்தமாசு வெளியேறுதல்.

**ஸ்ட்ரோண்டியா கார்ப்:** முகம் சிவந்து ரத்தக்குழாய் துடித்தல். ஆபரேஷன் முதலிய ரத்தப் போக்கின் பின் ஏற்படும் கோளாறுகள்.

**ஸ்பாஞ்சியா:** அசுத்த ரத்தக்குழாய்கள் பருத்திருத்தல். எஓர்ட்டாவில் கோளாறுகள். இருதயத்தின் வால்வுகள் சரிவர வேலை செய்யாமை. ரத்தம் பின்னேக்கி ஓடுதல்.

**ஹமாமெலிஸ்:** அசுத்த ரத்தக்குழாய்களில் ரத்தத் தேக்கம். கடுமையான ரத்தம் ஒழுகிக்கொண்டேயிருத்தல். வெயின்கள் தடித்திருத்தல். மூக்கிலிருந்து ரத்தம் வெளியேறினல் தலையிலேற்பட்ட ரத்தத் தேக்கம் சமனமாதல். கட்டி தட்டிய கருத்த ரத்தம் மூக்கிலிருந்து ஒழுகிக்கொண்டே யிருத்தல். கருத்த ரத்தம் வாந்தி யெடுக்கப் படல். மலத்தில் கீல் போன்ற ஏராள ரத்தக்கலப்பு. ரத்தம் கொட்டும் மூலங்கள். டைபாய்டு சுரத்தில் மலப்பையிலிருந்து ரத்தம் வெளியேற்றப் படுதல். ரத்தங் கலந்த மூத்திரம். ஸ்திரீகளினுருப்புகளிலிருந்து நல்ல சிவந்த ரத்தம் வெளியேற்றப்படுதல். ரத்தங் கக்குதல். ரத்த வாசனையுடன் குறுகுறுத்த இருமல். அசுத்த ரத்தக் குழாய்கள் சுருட்டிக்கொண்டு ரணப்படுதல்.

**ஹைட்ரோகோடைல்:** ரத்தத்தைச் சுத்தி செய்யும் சக்தியுள்ளது.

# வியர்வை.

**அகோனைட்:** வயிற்றில் ஒட்டிக்கொள்ளும் வியர்வை.

**அக்டியா ரஸிமோஸா:** கைகளில் சில்லிட்ட வியர்வை.

**அபிஸ் மெல்லிபிகா:** சில சமயம் வியர்வை, சில சமயம் வரட்சி, தலையில் வியர்வை.

**அபோஸினம்:** வியர்வை குறைதல்.

**அமோனியம் கார்ப்:** இருதய உபாதிகளில் குறைந்த வியர்வை. ஜுரத்தில் காலையில் மூட்டுகளில் கீழ்ப்பாகங்கள் வியர்த்தல். விடாத வியர்வை.

**அமோனியா மூரி:** காலில் அதிக நாற்றமான வியர்வை. (ஜுரத்தில் அதிக வியர்வை. அதிகாலையில் படுக்கையி

லும் நள்ளிரவின் பின்னும் தலை, உள்ளங்கை, உள்ளங் கால்களில் வியர்வை)

**அர்ஜண்டம் நைட்ரிகம்:** ஜுரத்தில் காலையிலும் இரவிலும் வியர்வை.

**அர்ஜண்டம் மெடாலிகம்:** ஜுரத்தில் அடிவயிற்றிலும் மார்பிலும் நள்ளிரவிலும் வியர்வை.

**அஸபோடிடா:** தலையில் சில்லிப்பான வியர்வையும் முண்டுகளும்.

**ஆண்டிமோனியம் ஆர்ஸனிகம்:** அதிக வியர்வை.

**ஆண்டிமோனியம் டார்ட்டாரிகம்:** சரீரத்தின் மேற்பாகத்தில் குளிர்ந்த வியர்வை. முகத்தில் குளிர்ந்த வியர்வை.

**ஆர்ஸனிக் ஐயோடைட்:** இரவுகளில் வியர்வை (கபவாத ஜுரம்)

**ஆஸிட் அஸடிக்:** அபரிமித வியர்வை. வயிற்றுக் கோளாறு. அஜீர்ணத்தில் ஆகாரம் சாப்பிட்டதும் நெற்றியில் வியர்வை. ஜுரத்தில் வியர்வையும் உஷ்ணமும் தோன்றி மறைதல். அபரிமித வியர்வை. இரவில் அதிக வியர்வை.

**ஆஸிட் ஆக்ஸாலிக்:** பிசுபிசுப்பான வியர்வை. முகம், கை கால்களில் சில்லிப்பான வியர்வை. பலஹீனம். மயக்கத்தையுண்டாக்கும் வியர்வை.

**ஆஸிட் நைட்ரிக்:** பாதங்களில் நாற்ற வியர்வை. க்ஷயத்தில் இரவுகளில் அதிக வியர்வை (ஜுரத்தில் விடியற்காலையில் வியர்வை, புளிப்பு அல்லது மூத்திர நாற்றம்).

**ஆஸிட் பாஸ்பாரிக்:** விடியற்காலையில் வியர்வை.

**ஆஸிட் பென்ஸாயிக்.** சாப்பிடும்போது அதிக வியர்வை. நெற்றியில் சில்லிட்ட வியர்வை.

**ஆஸிட் மூரி:** வலது புறமாகப் படுத்தால் சரீரம் முழுதும் உடனே வியர்த்தல்.

**இக்நேஷியா:** ஆடைகளை நனைக்கும் வியர்வை.

**இபிகாக்உனு:** நெற்றியில் வியர்வை.

**எதுஸா ஸைனுபியம்:** வயோதிகர்கட்கு அஜீர்ணத்தாலேற்படும் வியர்வை.

**ஐயோடியம்:** பேசினாலும் வியர்வை யேற்படுதல்.

**காந்தாரிஸ்:** ஜுரத்தில் அசைந்தால் வியர்வை.

**கம்போகியா:** அபானம் வெளித் தள்ளுதலுடன் குளிர்ந்த வியர்வை.

**கல்கேரியா அஸடிகா:** பிரதி தினம் காலையில் வியர்வை. இரவில் வியர்வை.

**கல்கேரியா ஐயோடைட்:** இரவில் வியர்வை.

**கல்கேரியா கார்பானிகா:** தலையில் வியர்வை. சரீரத்தில் சில இடங்களில் மட்டும் வியர்வை. நெற்றியில் குளிர்ந்த இடத்தில் படுத்தாலும் தலையணை வியர்வையால் நனைந்து விடுதல். இரவில் வியர்த்தல். கைகால்கள் சதா சில்லென்றும் வியர்த்துக்கொண்டுமிருத்தல்.

**கல்கேரியா ஹைபோ பாஸ்:** பொழியும் வியர்வை. இரவில் வியர்வை.

**காட்மியம் ஸல்ப்:** முகத்தில் குளிர்ந்த வியர்வை.

**காமோமில்லா:** இரவில் வியர்வை. நெற்றியிலும் தலையிலும் சூடான கசகசத்த வியர்வை. ஆகாரம் அல்லது பானம் உட்கொண்ட பின் வியர்வை.

**காம்பொரா:** வாந்தியுடன் முகத்தில் குளிர்ந்த வியர்வை. (பிரசவ ஜுரம்) ஜுரத்தில் சில்லிப்பு, கசகசப்புடன் களைப்புண்டாக்கும் வியர்வை.

**கார்பன் ஸல்ப்:** முகத்தில் குளிர்ந்த வியர்வை,

**கார்போ வெஜ்:** முகத்தில் குளிர்ந்த வியர்வை. சில்லென்றிருத்தல். சூடான வியர்வை.

**காலாடியம்:** சரீரத்தில் தித்திப்புள்ள வியர்வையால் ஈ, எறும்பு மொய்த்தல். ஆண் குறியில் வியர்வை கசிதல்.

**காலீ ஐயோடைடம் :** இரவில் அதிக வியர்வை.

**காலோஸிந்தீஸ் :** மூத்திர நாற்றம் போன்ற வியர்வை.

**குப்ரம் ஆர்ஸனிகம் :** குளிர்ந்த வியர்வையும், உலர்ந்த சருமமும் மாறிமாறி ஏற்படல்.

**கோல்சிகம் :** ஏராள புளிப்பு வாடையுள்ள வியர்வை. (கை கால்களில்) வியர்வையைத் தடைப்படுத்தியதால் ஏற்பட்ட கோளாறுகள்.

**கோனியம் :** கண்களை மூடியதும் வியர்வை. தூங்கவாரம்பித்ததும் வியர்வை. இரவிலும் காலையிலும் எரிச்சல். நாற்றத்துடன் வியர்வை. கைகளில் வியர்வை.

**க்ராபைடிஸ் :** கால்களில் நாற்ற வியர்வை.

**க்ரோடேலஸ் ஹாரிடஸ் :** ரத்த மயமான வியர்வை.

**க்ளோனுயின் :** முகத்தில் வியர்வை

**சின்னினம் ஸல்ப்யூரிகம் :** (ஜுரத்தில்) பலஹீனப்படுத்துமளவு அதிக வியர்வை.

**செனபோடியம் :** ஜுரத்தில் உஷ்ண வியர்வை.

**சைனு :** மூக்கு மாத்திரம் வியர்த்தல். தனித்தனி அவயவங்களில் வியர்வை. இரவில் பலஹீனப்படுத்தும் வியர்வை. சிறிய உழைப்பிலும் வியர்வை.

**டபாகம் :** சில்லிப்பான வியர்வை விதை, ஆண் குறியில் நாற்றமுள்ள வியர்வை.

**டயஸ்கோரியா :** விதை, ஆண் குறியில் நாற்றமுள்ள வியர்வை.

**டிஜிடாலிஸ் :** ஜுரத்தில் குளிர்ந்த வியர்வை.

**தராக்ஸகம் :** இரவில் அதிக வியர்வை (ஜுரத்தில் தூங்க ஆரம்பித்ததும் அதிக வியர்வை )

**துஜா :** அதிக நாற்றம், தித்திப்பு. ஜுரத்தில் துணியில்லாமல் திறந்திருக்கும் பாகங்களில் மட்டும் வியர்வை, தூங்கும்போது தலை தவிர மற்ற பாகங்களில் வியர்வை அதிக வியர்வை தேன்போல் தடித்து, புளித்து வாசனையுடனிருத்தல். மாதவிடாய் ஆரம்பிப்பதின்முன் ஏராள வியர்வை.

**தெரிபிந்த் :** கை கால்களில் சில்லிப்புடன் வியர்வை.

**நாஜா :** உள்ளங்கைகளில் வியர்வை.

**நேட்ரம் ஆர்ஸனிகம் :** நெற்றியில் மாத்திரம் வியர்வை (ஜுரத்தில் வியர்வையே உண்டாவதில்லை. அப்படி யுண்டானலும் வியர்வை ஜுரத்தை நிவர்த்தி செய்வதில்லை. வியர்வை யிருக்கும்போதுகூட, தன் போர்வையை அகற்ற இஷ்டப்படாமை.

**நேட்ரம் கார்ப் :** (ஜுரத்தில்) சரீரம் சூடாகவிருக்கும்போதே குளிர்ந்த வியர்வை. (காலையில்) வலி வந்தால் வியர்வை.

**நேட்ரம் பாஸ் :** புளிப்பு நாற்ற வியர்வை.

**நேட்ரம் மூரி :** தலைவலியுடன் வியர்வை. ஆனால் வியர்வையால் சமனமாகாமை. தொடைக்கும் பீஜத்துக்குமிடையில் கசகசப்பு. சாப்பிடும்போது முகத்தில் வியர்வை. சாப்பிட்ட பின் வியர்வை அதிகம்.

**பல்ஸடில்லா :** ஜுரத்தில் சரீரத்தில் ஒரு பாகத்தில் மட்டும் வியர்வையதிகம்.

**பாரிடா கார்ப் :** பீஜங்களில் அதிக வியர்வை. கால்களில் நாற்ற வியர்வை.

**பாஸ்பரஸ் :** தலையிலும், உள்ளங்கைகளிலும் வியர்வை. இரவிலும் காலையிலும் அதிக வியர்வை. சருமக் கோளாறுகளில் கந்தக நாற்ற வியர்வை.

**புபோ :** முகத்தில் எப்போதும் வியர்வை கசிதல்.

**பெட்ரோலியம்:** நள்ளிரவில் குளிர் உணர்ச்சியின் பின் ஏராள வியர்வை.

**பெர்ரம் பாஸ்:** ரத்தசோகையும் பலஹீனமுள்ளவர்கட்கு இரவில் ஏற்படும் வியர்வை.

**பெர்ரம் மெடாலீகம்:** க்ஷயரோகத்தில் அதிக வியர்வை.

**பெல்லடோன்ன:** போர்த்திய இடத்தில் மட்டும் வியர்வை.

**பைரோஜனியம்:** (ஜுரத்தில் வியர்வை; எவ்வளவு வியர்த்தாலும் அதனுல் வியாதி படியாமை. குளிருடன் கலந்த உஷ்ணம்.) முகத்தில் சில்லிட்ட வியர்வை.

**போடோபில்லம்:** (ஜுரத்தில்) அதிக வியர்வை. குழந்தைகளுக்குத் தூக்கத்தில் தலையில் மட்டும் வியர்வை.

**போவிஸ்டா:** ஜுரத்தில் விடியற்காலையில் மார்பில் அதிக வியர்வை.

**ப்ரையோனியா:** சிறிய உழைப்பின் பின்னும் புளிப்பு நாற்ற வியர்வை, (ஜுரத்தில்)

**ப்ரோமியம்:** அதிக பலஹீனத்துடன் ஏராள வியர்வை.

**மெக்னீஷியா கார்ப்:** (ஜுரத்தில்) இரவில் வியர்வை. [புளிப்பு நாற்றம். பொதுவாக புளிப்பு நாற்ற வியர்வை,

**மெடோரினம்:** (ஜுரத்தில்) இரவில் வியர்வை.

**மெர்குரியஸ் கரோஸிவஸ்:** (ஜுரத்தில்) இரவில் சரீரம் முழுதும் வியர்வை.

**மெர்குரியஸ் ஸொலுபுலீஸ்:** உபாதியை சமனப்படுத்தாத ஏராள வியர்வை. தலையில் அதிக வியர்வை. துணியில் வியர்வை பட்டால் மஞ்சளாக மாறுதல். பாதங்களில் சில்லென்ற வியர்வை. இரவில் அதிக வியர்வை. அதிக வியர்வையால் படபடப்பு, குமட்டல், பாதங்களில் சில்லென்ற வியர்வை.

**யூரேனியம் நைட்ரிகம் :** ஆண்குறியில் கசகசத்த வியர்வை.

**ரீயம் :** முகத்தில்குளிர்ந்த வியர்வை வியர்வைபட்டால் துணிகள் மஞ்சள் நிறமடைதல்.

**ரோஹிடாக் :** உடலில் மேல்பாதியில் மட்டும் வியர்வை.

**லாக்கஸிஸ் :** அசைவால் அதிக வியர்வை. பசுமஞ்சள் நாற்றம்

**லைகோபோடியம் :** சிறிய உழைப்பாலும் அதிக வியர்வை.

**லோபீலியா இன்ப்ளேட்டா :** சில்லிட்ட வியர்வை.

**வெராட்ரம் ஆல்பம் :** நெற்றியில் சில்லிட்ட வியர்வை.

**வைதியா :** இரவு முழுதும் வியர்வை.

**ஸபடில்லா :** தலையில் சில்லிட்ட வியர்வை.

**ஸல்பர்** அக்குளில் நாற்ற வியர்வை. (ஜுரத்தில்) காலை நேரங்களிலும், இரவுகளிலும் புளிப்பு நாற்றமடிக்கும் வியர்வை. மார்பிலிருந்து ரத்தத் தேக்கம் மேலே ஏற வியர்வையை யுண்டாக்குதல்.

**ஸாம்புகஸ் :** விழித்துக் கொண்டிருக்கும்போது ஏராள வியர்வை. ஆனால் தூங்க ஆரம்பித்ததும் சருமம் உலர்ந்து உஷ்ணமாயிருத்தல். இக்குறி க்ஷயரோகத்திலிருக்குமாயின் க்ஷயரோகத்தையும் நிவர்த்தி செய்யும். (ஜுரத்தில்) தூக்கத்தில் வியர்வையின்மை. விழிப்பில் அதிக வியர்வை.

**ஸானிகுலா :** தூக்கத்தில் தலையணையை நனைக்கும் வியர்வை. பிடரிக்கழுத்தில் அதிக வியர்வை. பாதங்களில் நாற்ற வியர்வை.

**ஸிங்கம் மெடாலிகம் :** பாதங்களில் வியர்வை. நெற்றியில் குளிர்ந்த வியர்வை.

**ஸிலீகா :** தூங்க ஆரம்பித்ததும் வியர்வை. கை, பாதம், அக்குளில் நாற்றமுள்ள வியர்வை. தலையில் அதிக வியர்வை, தூங்கும் போது, தலை, முகம், கழுத்தில் ஏராள

புளித்த நாற்ற வியர்வை. இருமுவதால் தலையில் வியர்வை. ஜுரத்தில் இரவிலும், விடியற்காலையிலும் அதிக வியர்வை.

**ஸினேபிஸ் நைக்ரா:** மேல் உதடு, நெற்றியில் வியர்வை.

**ஸிஸ்டஸ்:** வியர்வை ஏற்பட்டால் தலைவலி அதிகமாதல். (ஜுரத்தில்) சூடான அறையில் வியர்வை. இரவில் அதிக வியர்வை.

**ஸீகேல்:** ஆண்குறியில் ஏராள வியர்வை உற்பத்தியாகி ஒழுகுதல். சில்லிட்ட வியர்வை.

**ஸீமெக்ஸ்:** தலை, மார்பில் அதிக வியர்வை. வியர்வையால் நோய் சமனம்.

**ஸெலீனியம்:** சரீரத்தில் ஒவ்வொரு பாகங்கள் மட்டும் வியர்த்தல். முக்கியமாக முகத்தில் மட்டும் வியர்வை.

**ஸைக்ளமென்:** (ஜுரத்தில்) இரவில் தூங்கும்போது சரீரம் வியர்த்தல்.

**ஸோரினம்:** எப்போதும் வியர்வை. டைபாய்டு போன்ற கடுமையான நோய்களின்பின் அதிகத் துர்நாற்றம்.

**ஸ்க்வில்லா:** ஜுரமும் வியர்வையுமின்மை.

**ஸ்பாஞ்ஜியா:** நெற்றியில் குளிர்ந்த வியர்வை.

**ஸ்பைஜீலியா:** மல்லாந்து படுத்தால் குளிர்ந்த வியர்வை. படபடப்பு.

**ஹீபர் ஸல்பர்:** ஜுரத்தில் எப்போதும் வியர்வை துர்நாற்றம்.

**ஹெல்லிபோரஸ்:** நெற்றியில் குளிர்ந்த வியர்வையும் சுருக்கமும்.

**ஹைட்ராஸ்டிஸ்:** அடிக்கடி குளிர்ந்த வியர்வையுடன் மயக்கம்.

**ஹைபெரிகம்:** ஏராளமான வியர்வையால் மந்தாரகாசம் சமனப்படுதல்.

---

முதற்பாகம் முற்றிற்று

தற்சமயம் அச்சிலிருக்கும் இப்புத்தகத்தின்
## இரண்டாம் பாகத்தில் வரும் விஷயங்களின்
# சில தலைப்புகள்

அடிபடல்
அப்பெண்டிஸிடிஸ்
அம்மை
அஜீரணம்
இந்திரியஸ்கலிதம்
நபும்ஸகத்துவம்
போகம்
முஷ்டிமைதுனம்.
மேக வெட்டை
ஆபரேஷன்
ஆஸ்த்மா
இருமல்
உணர்ச்சி
ஏப்பம்
கக்குவாய் இருமல்
கட்டிகள்
கபம்
கனவுகள்
கழலைக்கட்டிகள்
காலரா
கிறு கிறுப்பு
குமட்டல்
குழந்தைகள்
குழிப்புண்
குஷ்டம்
சுவாசம்
சுளுக்கு
சூரிய இடி
சோகை
தலைவலி

தாகம்
தீ சுட்ட உபாதிகள்
தும்மல்
தூக்கம்
தொழில்
நாக்குப்பூச்சிகள்
நீரிழிவு (மதுமேகம்)
பசி
படுத்தல்
பலஹீனம்
பாண்டுவீக்கம்
பித்தம்
புற்று
கருப்பம்
பிரசவ வலிப்புகள்
பிரசவ வேதனை
பிரசவத்திற்குப் பின்
பிரசவ ஜுரம்
பெண்களின் காம இச்சை
மாதவிடாய்
மூத்திர உபாதிகள் (பெண்)
வெள்ளைப்பாடு
ஹிஸ்டீரியா
பைத்தியம்
ப்ராங்கைடிஸ்
ப்ளூரஸி
மஞ்சட்காமாலை
மயக்கம்
மரணக் களைப்பு
மலம்

Printed at the Homoeopathy Press, Kumbakonam.